# கீதா மகரந்தம்

## சுவாமி வித்யா பிரகாசானந்தா

தமிழாக்கம்:

பேராசிரியர். கே. சர்வோத்தம ராவ்



திருமலை திருப்பதி தேவஸ்தானம் வெளியீடு.

# கீதா மகரந்தம்

[ சுவாமி வித்யா பிரகாஸானந்தா ]

## மூன்றாம் பகுதி

**(6, 7, 8, 9 அத்தியாயங்கள்)**

தமிழாக்கம் :

பேராசிரியர். கே. சர்வோத்தம ராவ்




திருமலை திருப்பதி தேவஸ்தானம்,

திருப்பதி.

**GITA MAKARANDAM - Vol. III**

By
**SWAMY VIDYAPRAKASHANANDA**

*Tamil Translation*
Dr. K. SARVOTHAMA RAO

T.T.D. Religious Publication Series No. 575



First Edition : 2000

Copies : 2000

Price :

Cover Page : Sri P. Narayanagiri Dattu

*Published by*
**Dr. I.V. Subba Rao,** I.A.S.,
Executive Officer,
Tirumala Tirupati Devasthanams,
Tirupati - 517 507

*Printed at*
Keerthi Offset
103, Prakasam Road, Tirupati

# பதிப்புரை

''எதனைத் தின்றால் பித்தம் தெளியும்'' என்ற நிலையில் மனிதன் இன்று விளங்குகின்றான். ஆம், பிரச்சனைகளே அவனது வாழ்க்கையாக விளங்கிவிட்டது. எது பிரச்சனை? பிரச்சனைகளுக்கு யார் காரணம்? பிரச்சனைகள் தீர வழி என்ன? எனும் கேள்விகளை மனிதன் ஒருநாளும் நடுவுநிலையில் நின்று தன்னைக் கேட்டுக் கொண்டதில்லை. அதுபோது அவனே அவனுக்கு ஒரு பிரச்சனையாகத் திகழ்கின்றான்! அவ்வாறின்றி ஒருமுறை அமைதியாக அவன் தன்னைப்பற்றி அறிந்துகொள்ள முயற்சித்தானாயின் வாழ்க்கை அவனுக்கு ஒரு பூந்தோட்டமாக விளங்கிவிடும். அன்பு, இரக்கம், தியாகம், பொறுமை, கடமை, நேர்மை எனும் பண்புக்கூறுகள் அவனுள் இல்லாவிட்டால், அவற்றை தன்னுள் வளர்த்துக்கொள்ளாவிட்டால், பொறாமை, கோபம், ஏமாற்றம், தோல்வி ஆகியனவே அவனிடம் குடிகொள்ளும். இதனால் உறவுகள் கசந்திடும்; காண்பனவும், கேட்பனவும் எரிச்சலையே தரும். இறுதியில் இவற்றின் விளைவாக அவன் பிறர்க்கும் தனக்கும் பிரச்சனைகளின் மொத்த உருவமாக இருந்திடுவான்.

ஏதோ மனிதனின் பிரச்சனைகள் இந்த யுகத்தில் மட்டுமே ஏற்பட்டன என்பது இல்லை. உலகம் தோன்றியது முதல், அவனுள் ஆசைகள் பிறந்தது முதல், அவ் ஆசைகளை அடக்கத் தவறியது முதல் பிரச்சனைகள் தோன்றின என்றே கூறவேண்டும். ஆம் ஆசைகளை அடக்கத்தவறியதால் கடமையை மறந்தான்; கோபத்தைத் துறக்க மறந்ததால், பெருமையை இழந்தான்; அன்பினைக் காட்டத் தவறியதால் வன்முறைக்கு வழி தந்தான். இதனால் தவறுகளை செய்து கொண்டே போக, சுயநலத்திற்கு அடிமையாகி தீவிரவாதத்திற்குத் துணையாகி ஏமாற்றங்களுக்கு இருப்பிடமாகி இறுதியில் அவன் ஒரு 'சமூக பிரச்சனை'யாக விளங்கிவிட்டான்.

அத்தகு மனிதனை திருத்திடும் வகையில் அவனுள் இறை நம்பிக்கையினையும், தன்னம்பிக்கையினையும், கடமை உணர்வினையும் விளங்கச் செய்து அவனுக்குத் தியாகத்தின் பெருமையினையும், அன்பின் அருமையினையும், தொண்டின் சீர்மையினையும், ஆன்றோர் மற்றும் சான்றோர் நட்பின் அவசியத்தையும் உணர்த்தி அவன் தன் பிறவி பயனுள்ளதாகத் திகழவே அக்கண்ணபெருமான்'கீதை' எனும் வாழ்க்கை இலக்கண அமுதினை, போர்க்களத்தில் கடமையை மறந்து, பாசத்திற்கும் இடையில் அகப்பட்டு அமைதி இழந்து, குழப்பத்தின் உச்சியில் இருந்த அர்ச்சுனனுக்கு உபதேசிக்கும் முகத்தான், நமக்கு அளித்துள்ளான்.

அத்தகு பெருமைமிகு கீதைக்குக் காலம் காலமாக ஆசார்யர்களும், அடியார்களும் அறிஞர்களும் பல மொழிகளில் பல விளக்கவுரைகளை வழங்கி அக்கீதைக்கு உயர்வு தந்து தங்களை இனங்காட்டிக் கொண்டனர்.

இனிப்பு என்றாலே நமக்கு உடன் நினைவுக்கு வருவது தேன் ஆகும். பல மலர்களிலிருந்து சேகரித்துப் பெறப்படும் தேன் ஒரு மருந்தாகவும் பயன்படுகிறது. அதை உண்பதற்கு வயது வரம்பில்லை அத்தகு தேனாக – இந்து சமயத்தேனாக – ஒப்பற்ற ஆன்மீகத்தேனாக – வாழ்க்கை இலக்கணத் தேனாக கீதைக்கு ஓர் அருமையான விளக்கவுரையினை'கீதா மகரந்தம்' எனும் தலைப்பில், திருப்பதி அடுத்துள்ள திருக்காளத்தி நகரை ஒட்டி ஓடிடும் ஸ்வர்ணமுகி நதிக்கரையில் அமைந்துள்ள ஸ்ரீசுகப்பிரம்ம ஆஸ்ரமத்தின் ஸ்தாபகரும், அதன் தலைவருமாக விளங்கி ஒப்பற்ற சமயத்தொண்டினைத் தன் இறுதி மூச்சு உள்ள வரை மேற்கொண்டு, அண்மையில் மறைந்த ஸ்ரீவித்யா பிரகாஸானந்த சுவாமிகள் நமக்கு வழங்கி அதனால் படித்து அறிந்து நாம் உயர்ந்திட , நமக்கு ஓர் அரிய வாய்ப்பினை நல்கியுள்ளார். அவர்தம் மூல நூலான இத்தெலுங்கு கீதா மகரந்தத்தினை டாக்டர் எம். சர்வோத்தமராவ் அவர்கள் தமிழில் தெளிவாகவும், எளிமையாகவும் மொழிபெயர்த்து தமிழர்களின் 'கீதா தாகத்' தினை தீர்த்து வைத்துள்ளார் எனில் அது மிகையாகாது. இந்நூலுக்கு நூலாசிரியர் தந்துள்ள முன்னுரையே ஒரு நூல் அளவில் வெளியிடும் அளவிற்கு கீதையின் பெருமையும், சிறப்பும் பரக்கப்பேசப் பெற்றுள்ளன. கீதை எனும் மாளிகையின் அடித்தளமாக சுவாமிகளின் முன்னுரை அமைந்துள்ளது.

வேதங்களின் சாரமாகத் திகழ்ந்திடும் கீதையின் பெருமை பேசும் இக்கீதா மகரந்தம் எனும் இந்நூலினை திருப்பதி தேவஸ்தானம் தன் வெளியீடாக வெளிக்கொணர்வதில் மிகவும் பெருமிதம் கொள்கிறது. இந்நூலின் முதல் இரண்டு பகுதிகள் ஏற்கெனவே வெளிவந்துள்ளன. தற்போது 6, 7, 8, 9 அத்தியாயங்கள் கொண்ட மூன்றாம் பகுதியாக இந்நூல் வெளிவந்துள்ளது. ஒவ்வொரு தமிழர் வீட்டிலும் இருக்க வேண்டிய இந்நூலினை அனைவரும் பெற்றுப் பயன்பெறுவார்களேயாயின் அதுவே தி.தி. தேவஸ்தானம் தனது சமய நூல் வெளியீட்டுப் பணியில் தன்னை அர்ப்பணித்துக் கொண்டதில் முழு வெற்றி அடைந்துள்ளது என்றே கருதும்.

**செயலாட்சித்தலைவர்,**

**திருமலை திருப்பதி தேவஸ்தானம்.**

ஓம்

# ஸ்ரீ பகவத் கீதை

## ஆறாம் அத்தியாயம்

## ஆத்ம ஸம்யமயோகம்

### இவ்வத்தியாயத்தின் பெயர் விளக்கம்

இவ்வத்தியாயத்தின் பெயர் 'ஆத்ம ஸம்யமயோகம்'. இதனையே 'தியான யோகம்' என்றும் சொல்வர். இங்கு 'ஆத்மா' என்ற சொல்லிற்கு சரீரம், இந்திரியங்கள், மனம், புத்தி இவை அனைத்தும் என்பது பொருள். இவையனைத்தையும் கட்டுப்படுத்துதல் எங்ஙனம் என்ற வழிமுறைகளைப் பற்றி இவ்வத்தியாயத்தில் கூறப்படுவதால் இதற்கு ஆத்ம ஸம்யம யோகமென்ற பெயர் ஏற்பட்டது.

### இவ்வத்தியாயத்தின் முக்கிய விஷயங்கள்

*நிஷ்காம கர்மயோகத்தினைப் பற்றிய அறிமுகம், யோகியின் இலட்சணங்கள் (1 முதல் 4 வரையான சுலோகங்கள்)*
*ஆன்மாவினை மீட்டல், இந்திரியங்களை வென்ற ஞானியின் தன்மை (5 முதல் 10 சுலோகம் வரை)*
*தியானயோக முறை (11 முதல் 32 சுலோகம் வரை)*
*மனக்கட்டுப்பாட்டைக் குறித்த விசாரணை (33 முதல் 36 வரை)*
*யோகத்திநின்றும் வழுவியனது கதி, தியான யோகத்தின் மகிமை - (37 முதல் 47 வரை)*

## முன் அத்தியாயத்திற்கும் இவ்வத்தியாயத்திற்குள்ள தொடர்பு

*5 ஆவது அத்தியாயத்தின் ஆரம்பத்தில் கர்ம ஸந்நியாசம் (ஞான யோகம்) சிறந்ததா, கர்மயோகம் சிறந்ததா என்ற அர்ஜுனனின் வினாவிற்கு ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா இரண்டும் சிறந்தவையே யென் றும், ஆயின் சாதகர்களுக்கு முதன் முதலில் கர்ம யோகமே எளிதாகப் பின்பற்ற இயலும் என்பதால் அதுவே சிறந்தது என்றும் கூறி, அவ்வி ரண்டு வழிகளைப் பற்றியும் விரிவாக ஆராய்ந்து இறுதியில் அவ்வி ரண்டிற்கும் உதவக் கூடிய தியான யோகம் (ஆத்ம சம்ய மயோகம்) குறித்து ஒருவாறு குறிப்பிட்டார். ஆயின் அங்கு அதனைப் பற்றி விரிவாகக் கூறவில்லை. ஆகையினால் இவ்வாறாவது அத்தியாத் தினை முழுமையாகத் தியானயோகத்தினைப் பற்றி விவரமாக விளக்குதற்கு என ஒதுக்கினார். தியான யோகத்தினைப் பற்றி நன்கு விளக்குவதற்கெண்ணி கீதாச்சாரியன் சில வாக்கியங்களில் முதன்மு தலில் நிஷ்காம கர்ம யோகத்தினைப் பற்றிக் கூறி இவ்வாறாக இவ் வத்தியாயத்தினைத் தொடங்குகிறார்.*

### ஸ்ரீ பகவானுவாச

*அனாச்ரிதஹ் கர்ம பலம் கார்யம் கர்ம கரோதி யஹ்!*
*ஸ ஸந்யாஸீ ச யோகீ ச ந நிரக் நிர் ன சாக்ரியஹ (1)*

### சொற்பொருள்

*யஹ் - எவன், கர்மபலம் - கர்ம பலனை, அனாச்ரிதஹ் - கருதாது, கார்யம் - செய்ய வேண்டிய, கர்ம - கர்மத்தினை, கரோதி - செய்கிறானோ, ஸஹ் - அவன், ஸந்யாசி - சந்நியாசியும், யோகீச யோகியும் (பவதி - ஆகிறான்), நிரக்னிஹ் அக்னிஹோத்ரத்தை விட் டவன், ந - அல்லன், அக்ரியஹச - கர்மத்தை விட்டவனும், ந - (சந்நியாசியோ, யோகியோ) அல்லன்.*

### கருத்துரை

*எவன் தான் செய்ய வேண்டிய காரியங்களை கர்ம பலனைக் கருதாது செய்கின்றானோ, அவனே சந்நியாசியும், யோகியும் ஆவான். அக்னி ஹோத்திரத்தை நிறுத்தியவனும், கர்மத்தை விட்ட வனும் சந்நியாசியோ, யோகியோ அல்லன்.*

**விளக்கம்**

சந்நியாசியென்றால் அக்னி ஹோத்திரத்தை விட்டவனும், காஷாயம் அணிந்தவனும் மட்டுமேயென்று சிலர் எண்ணுவர். இன்னும் சிலர் யோகியென்றால் கர்மாக்களை அனைத்தையும் விடுத்துத் தனிமையில் மலைக்குகை ஏதேனுமொன்றில் இருப்பவன் என்றும் எண்ணுவர். ஆயின் இவையனைத்தும் வெளிச் சின்னங்களே. இவை மட்டுமே இருந்துவிட்டால், சந்நியாசியோ, யோகியோ ஆகார். உள்ளே வாசனைகள் நசித்துப் போதல் வேண்டும். பற்று (Attachment) நீங்குதல் வேண்டும். பலனைக் கருதுதல் கூடாது. வெளியில் மட்டுமின்றி மாற்றம் உட்புறத்தும் நிகழவேண்டும். அப்போதே அவர்கள் சந்நியாசியென்றோ, யோகி என்றோ சொல்லத்தகுந்தவர் ஆவார் என்று பகவான் இங்கு நன்கு உபதேசிக்கிறார்.

செய்யத் தகுந்த கர்மாக்களையே செய்தல், அவற்றையும் பலனைக் கருதாது செய்தல், சந்நியாசி, யோகி இவர்களின் இலட்சணம் என்கிறார். எனவே கர்மாக்களை முழுமையாகச் செய்யாமல் சோம்பி, தவத்தில் ஈடுபட்டு தனிமையில் வீணாகக் காலம் கடத்துவதோ, அல்லது காஷாயத்தை மட்டும் அணிந்து, அக்னி ஹோத்திரத்தை நிறுத்திவிட்டு, தேசமெங்கும் திரிவதோ செய்பவர் ஒருகாலும் சந்நியாசியோ, யோகியோ ஆகார் என்று இச்சுலோகம் மிகத் தெளிவாகக் கூறுகின்றது. சந்நியாசத்திற்கு சின்னம் கர்ம பலனைத் தியாகம் செய்வதேயாகும். பற்றற்ற தன்மையே யோகிக்கான அடையாளம். எனவே ஒருவன் உண்மையில் சந்நியாசியா அல்லவா என்று தெரிவதற்கு அவர்களது நடைமுறையைக் கண்டால் போதும். இங்கு இரண்டு விஷயங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

*செய்யத் தகுந்த காரியங்களையே ('கார்யம் கர்ம') செய்தல்*

*அதனையும் பலனைக் கருதாது செய்தல்*

அதர்மக் காரியங்களை, சாஸ்திரங்களுக்கு எதிரான காரியங்களை, பாவகாரியங்களை எக்காலத்தும் செய்தல் தகாது. தர்மகாரியங்களையே, சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டவைகளையே, புண்ய காரியங்களையே செய்தல் வேண்டும். இதுவே மிக உன்னதமான நடைமுறை. அவ்வாறு நடந்து கொள்பவனே உண்மையான சந்நியாசி. அங்ஙனம் நடப்போன் கிருகஹஸ்தன் ஆயினும் சந்நியாசியே யாவான். சந்நியாசிகள் அடையும் நற்பலன்களை அவனும் அடைவான். சந்நியாசியாவதற்கு ஏதோவொரு குறிப்பிட்ட வர்க்கமோ,

ஜாதியோ, மதமோ தேவையென்று சொல்லப்படவில்லை. மேற் சொன்ன நல் இலட்சணங்கள் இரண்டும் (தர்மம், நிஷ்காமம்), இருப் பின் மாத்திரம் போதும் என்று சொல்லப்பட்டது.

**வினா :** சந்நியாசி என்றால் யார்? யோகி யார்?

**விடை :** செய்யத் தகுந்த காரியங்களைப் பலனைக் கருதாது செய்ப வனே சந்நியாசி; வெறும் அக்னிஹோத்ரம் செய்வதை விட்டவன் அல்லன். அத்தகைய இலட்சணங்கள் உடையவனே யோகி, வெறும் கர்மங்களை மட்டும் துறந்தவன் அல்லன்.

**முன்னுரை**

மேற்சொல்லப்பட்ட சந்நியாசம், யோகம் இரண்டும் ஒன்றே என்கிறார்

*யம் ஸந்யாஸமிதி ப்ராஹுர் யோகம் தம் வித்தி பாண்டவ*
*ந ஹ்யஸந்ய ஸ்தஸங்கல்போ யோகீ பவதி கஸ்சன* (2)

**சொற்பொருள்**

*பாண்டவ!* - அர்ஜுனா! *யம்* - எதனை, *ஸந்யாஸம் இதி* - சந்நியாசமென்று, *பாஹுஹ்* - சொல்கிறார்களோ, *தம்* - அதனை, *யோகம் (இது)* - யோகமென்று, *வித்தி* - அறிக, *ஹி*- ஏனெனில், *அஸந்யஸ்த ஸங்கல்பஹ* (பலனில் ஆசை, குரோதம், காமம் முத லான) சங்கல்பத்தைத் துறவாதவன் - *சஸ்சன* - எவனும், *யோகீ* - யோகி, *ந பவதி* - ஆகான்.

**கருத்துரை**

அர்ஜுனனே! எதனைச் சந்நியாசம் என்கிறார்களோ அதனையே யோகம் என்றறிக, ஏனெனில் (காமம் முதலான) சங்கல்பங்களைத் துறவாதவன் எவனும் யோகியாவதில்லை.

**விளக்கம்**

ஞானயோகி ஆத்மா, அநாத்மா விசாரணையால் தேகம் முத லான காட்சிப் பொருள்களைக் குறித்த சங்கற்பங்களைத் துறந்து ஆன்மாவிலேயே நிலைத்திருக்கும் சித்தத்தைக் கொண்டிருப்பான். கர்மயோகி கர்த்தருத்துவத்தை விடுத்து, பலனைக் கருதாது, 'நான், எனது' என்ற சங்கல்பங்களை விடுத்து ஈசுவரார்ப்பண புத்தியுடன் கர்மங்களைச் செய்துவருவான். தியான யோகி வெளியுலகச் செயல்

களை விடுத்து உள்முகமாக பரமாத்மாவை எண்ணி தியானத்தில் எப்போதும் ஈடுபட்டிருப்பான். பக்தியோகி பரமாத்வைத் தவிர ஏனைய பொருள்களின் மேல் ஆசையின்றி, அவற்றைக் குறித்த எண் ணமின்றி, தெய்வ சிந்தனையுடன் இருப்பான். இவ்வாறாக, அனைத்து யோகங்களிலும் காட்சிப் பொருள்களின் மேல் ஆசை யின்றி, அவற்றைக் குறித்த எண்ணமின்றி, தெய்வ சிந்தனையுடன் இருப்பான். இவ்வாறாக, அனைத்து யோகங்களிலும் காட்சிப் பொருள்களின் மீதான சங்கல்பங்களைத் துறத்தல் என்பது உட்பொ திந்துள்ளது. மேலும் தெய்வ சிந்தனை அனைத்திலும் உள்ளது. என வேதான் பகவான் இச்சுலோகத்தில் சந்நியாசம், (ஞான யோகம்) யோகம், (நிஷ்காக கர்ம யோகம், அல்லது பக்தியோகம்) இரண்டும் ஒன்றே என்று போதிக்கிறார். மேலும் காமக்குரோதம் முதலான சங்கல்பங்களை, பலனைக் கருதுதல் முதலான சங்கல்பங்களையும் துறக்காத எவனும் யோகி (ஞான யோகியோ, கர்மயோகியோ; பக்தி யோகியோ, தியான யோகியோ) ஆகான் என்று ஆணித்தரமாக அறைந்து கூறுகின்றார். எனவே சங்கல்பத்தியாகமே உண்மையான சந்நியாசம், உண்மையான யோகம் ஆகும். அவ்வாறின்றி, கர்மங் களை மட்டும் துறந்து செயலாற்றாமல் வெறுமே இருப்பவன் சந்நி யாசியோ, யோகியோ அல்லன்.

**வினா :** சந்நியாசமும், யோகமும் வெவ்வேறானவையா?

**விடை :** அல்ல. இரண்டும் ஒன்றே. எதனைச் சந்நியாசம் என்று கூறுகிறார்களோ அதுவே யோகம் என்று அறிதல் வேண்டும்.

**வினா :** மனிதன் எப்போது யோகியாகிறான்?

**விடை :** தேகம் முதலான காட்சிப்பொருள்களைப் பற்றிய சங்கல்பங் களை விட்டால் மாத்திரமே, யோகியாகிறான். அவற்றை விடாவிட் டால் யோகியோ, சந்நியாசியோ ஆகான்.

**முன்னுரை**

சாதகனுக்கு ஆரம்ப நிலையில் கர்மாவைச் செய்தல் மிக மிக அவசியம் என்கிறார்.

*ஆருருக்ஷோர் முனேர்யோகம் கர்மகாரண முச்யதே!*
*யோகாரூடஸ்ய தஸ்யைவ சமஹ காரண முச்யதே!!* (3)

### சொற்பொருள்

*யோகம் - யோகத்தினை (ஞான யோகம் அல்லது தியான யோகத்தினை), ஆருருக்ஷோஹ - அடைய விரும்பும், முனேஹ் - முனிவனுக்கு, கர்ம - கர்மம், காரணம் - சாதனம், உச்யதே - (என்று) சொல்லப்படுகிறது, யோகாரூடஸ்ய - யோகத்தினை (ஞானம் அல்லது தியான யோகத்தினை), அடைந்த தஸ்ய ஏவ - அவனுக்கே, சமஹ் - உபாதி (கர்ம நிவர்த்தி) காரணம் - சாதனமென்று, உச்யதே - சொல்லப்படுகின்றது.*

### கருத்துரை

*யோகத்தினை அடையவிரும்பும், முனிவனுக்கு கர்மா சாதனமென்றும், அதனை நன்கு பயின்று அடைந்தவனுக்கு மாத்திரமே செயலின்மை சாதனமென்றும் சொல்லப்படுகிறது.*

### விளக்கம்

*ஞானயோகமோ, தியானயோகமோ சாதிப்பதற்கு நிஷ்காம கர்மயோகம் சாதனமாகச் சொல்லப்படுகிறது. தியான யோகத்தில் அல்லது ஞானயோகத்தில் ஒருவாறு நிலைபெற்றவனுக்கு அதில் இன்னும் திடமாக நிற்பதற்கு செயலின்மை 'சமம்' (சாந்தி), சாதனமாகச் சொல்லப்பட்டது.*

*எனவே சாதகன் தியானயோகத்தில் நுழைவதற்கு முன் அடைய வேண்டிய சித்தத்தூய்மைக்காக நிஷ்காம கர்மயோகத்தினை ஆரம்பத்தில் மேற்கொள்ளுதல் வேண்டுமெனினும், அதன்பின் தியானத்தில் ஒருவாறு நிலைபெற்றபின், கர்ம சந்நியாசத்தைப் படிப்படியாகக் குறைத்துக் கொண்டே வந்து, கர்மமற்ற நிலையான செயலற்ற சித்தத்தினைப் பெருக்கிக் கொள்ளுதல் வேண்டுமென்பதும் தெரிகின்றது.*

*சாதகனுக்குச் சித்த சுத்தி ஏற்படும் வரை நிஷ்காம கர்ம அனுஷ்டானம் ஆரம்பத்தில் மிகவும் உதவும். தியானத்தில் நுழையும் வரை அவனை அழைத்துச் சென்று கர்மம் ஆற்றுதல் அங்கேயே நின்றுவிடும். அதன் பின் கர்மமாற்றாத நிலையான செயலற்ற தன்மை சமம் (சாந்தி) அவனை இன்னும் மேல் நிலைக்கு (தியானரூடஸ்திதிக்கு) கொண்டு செல்லும். அதாவது அதன்பின் வெளிக் கர்மாக்கள் அற்று சிரவணம், மனனம், தியானம் முதலான அந்தரங்க முயற்சிகள் ஆரம்பிக்குமென்பது பொருள். அச்சமயத்தில் அவனது சித்தம் கர்மாக்*

களை ஆற்றுவதில் ஆவலின்றிச் செயலற்ற தன்மையிலேயே ஆவல் கொள்ளும் நோக்கு வெளிமுகமாகச் செல்லவொட்டாது. உள்முக மாகத் திருப்பி சாந்தியையே விரும்புவான். அத்தகைய சமமே அவ னுக்கு தியான யோகத்தில் முறையாக சங்கல்ப மற்ற நிலையை ஏற்படுத்தி ஆத்ம சொரூப அனுபவத்திற்கு இட்டுச் செல்லும்.

எனவே ஆன்மீக அரங்கத்தின் ஆரம்ப நிலையில் ஒவ்வொருவ ரும் புண்யகர்மங்ளைச் செய்தல், நிஷ்காம கர்ம சாதனை இவற்றைத் தவறாது செய்து வரவேண்டும். அவ்வாறு செய்யாவிடின் சித்தத்தில் தாமத குணம், சோம்பல் உள் நுழைந்து நம்மை ஜடமாக்கி ஞான யோகத்திலோ, தியான யோகத்திலோ நுழைவதற்கு நம்மை அருக தையற்றவராக்கிவிடும். காயத்தின் மீது ஏற்பட்ட வடு அதுவாகவே காலக் கிரமத்தில் காய்ந்து அதுவே மறைய வேண்டுமே தவிர அது காய்வதற்கு முன்பாகவே நாமே பிய்த்து எறிந்தால் புண் பெரிதாகித் துன்புறுத்தும். அவ்வாறே தியானத்தில் நிலைபெறுதல் ஏற்பட்ட பின் கர்மா அதுவே ஒழிந்துவிடும். பக்குவமற்ற நிலையில் அவற்றை விடுத்தால் இலட்சியத்தை அடைய முடியாது. எனவே ஆரம்பத்தில் நற்காரியங்களை செய்துவந்தால் சித்தம் சுத்தியடைந்து தியானத்தில் எப்போது ஒருவாறு நிலைக்கின்றதோ, அப்போது கர் மங்களைப் படிப்படியாகக் குறைத்துக் கொண்டு, கர்மமற்ற நிலை யையடைந்து முன்னேறுதல் வேண்டும். மனதினை உள்முகமாகச் செலுத்தி விசாரணை, தியானம் இவற்றைச் செய்தல் வேண்டும். அப்போது முறையாக தியானத்தில் திடமான நிலையேற்பட்டு ஆத் மசொரூப அனுபவம் ஏற்படும்.

*ஆருருக்ஷீ - அடைய விரும்புகிற ஆரம்பநிலை*
- (High School course - *உயர்நிலை பள்ளி)*

*யோகாரூட யத்தனன் - தியானயோக நிலைக்கு முயல்பவன் - மத்திய நிலை*
- (College Course - *கல்லூரி)*

*யோக நிலையை டைந்தவன்*
(Graduate - *பட்டதாரி)*

இதில் முதல் நியைலான யோகநிலையை அடைய விரும்பும் முதல் நிலை இச்சுலோகத்தில் சொல்லப்பட்டது. முதல் நிலையில் நன்கு அனுபவம் அடையாவிடின் மத்திய நிலையிலோ, அந்திம (கடைசி) நிலையிலோ வெற்றி கொண்டுவிட முடியாது.

ஆரம்பப் பள்ளியில் கற்றுத் தேராதவன் மேற்பள்ளியில் தேர்தல் கடினமல்லவா! எனவே ஆன்மீக அரங்கத்தில் நுழைய விரும்பு வோன் முதலில் கர்மங்களைத் துறந்துவிடாமல் நிஷ்காமமாக அவற் றைச் செய்து வந்தபின், பரிபக்குவ நிலை எய்திய பின் கர்மமற்ற நிலையை மேற்கொண்டு அந்தர்முகமாக மனதைத் திருப்பி முன்னே றுதல் வேண்டும். சித்தம் உள்முகமாகத் திரும்பிய பின் கர்மாவைச் செய்தல் இயலாது! அதன்பின் செயலாற்றுதல் மிகவும் பளுவாகத் தோன்றும். அதுவே கர்ம நிவர்த்திக்குச் சரியான சமயம். அதற்குமுன் அல்ல. இவ்விஷயத்தினை சாதகர்கள் நன்கு நினைவில் இறுத்திக் கொள்ள வேண்டும்.

*யதா ஹிநேந்த்ரியார்த் தேஷு ந கர்ம ஸ்வனுஷஜ்ஜதே!*
*ஸர்வ ஸங்கல்ப ஸ்நயாஸீ யோகாரூட ஸ்ததோச்யதே!!* (4)

## சொற்பொருள்

யதாஹி - எப்பொழுது, இந்தியார்த்ததேஷு - சப்தாதி விஷயங் களில் ந அனுஷஜ்ஜதே - இச்சை வைப்பதில்லையோ, கர்மஸீ- கர்மாக்களில், ந (அனுஷஜ்ஜதே) - பற்றுவைப்பதில்லையோ (சிக்கு வதில்லையோ), ஸர்வசங்கல்ப சந்நியாசீ - (பவதி) - எல்லா சங்கல் பங்களையும் விட்டு விடுகிறானோ, தா - அப்போது, யோகாரூடஹ் - யோகாரூடன் என்று, உச்யதே - சொல்லப்படுகிறான்.

## கருத்துரை

எப்போது சப்தாதி விஷயங்களிலும், கர்மங்களிலும் கருத்து வைக்காது, எல்லா சங்கல்பங்களையும் விட்டொழிக்கிறானோ, அப் போது மனிதன் யோகாரூடன் எனப்படுகிறான்.

## விளக்கம்

'யதா'த்தா என்ற இரண்டு பதங்களும் பயன்படுத்தியிருப்ப தால், மேற்சொன்ன மூன்று இலட்சணங்களும் எப்போது பொருந்தி யுள்ளதோ அப்போதே ஒருவன் யோகாரூடன் ஆகிறான் என்பது பொருள். அதற்கு முன்பல்ல, அம்மூன்று இலட்சணங்கள் எவையெ னின் - 1 இந்திரியார்த்தங்களான சப்தாதி விஷயங்களில் பற்றின்மை (2) கர்மங்களில் பற்றின்மை (3) எல்லா சங்கல்பங்களையும் விட்டு விடுதல் ஒருவன் யோகாரூடனா, தியான நிஷ்டனா, என்று அறிவ தற்கு இத்தேர்வின் மூலம் எளிதாக அறியலாம். தியானத்தில், யோகத்தில் முழுமையை அடைவதற்கு, விரும்புவோர் இம்மூன்று

இலட்சணங்களும், பொருந்தியுள்ளனவா என்று விசாரித்து அறிய வேண்டும்.

1. இந்திரியார்த்தங்களான விஷயங்களில் பற்றுடையவர்க்கு தியானத்தில் மனம் ஒருமைப்படுவதில்லை. அவற்றின் மீது விரக்தி ஏற்பட்டால் மாத்திரமே மனது வெளியில் அலைந்து திரியாமல் உள்முகமாக ஒருமனப்படுகிறது. எனவேதான் விஷயங்களின் மீது பற்றில்லாதவன் மாத்திரமே யோகாரூடன் ஆக முடியும் என்று இங்குச் சொல்லப்பட்டது. (2) இனி இரண்டாவது கர்மாக்களின் மீது பற்றின்மை. உள் மனத்தில் சித்தம் ஆத்மாவிலேயே ஆசை வைக்கும் போது, இனி வெளி விஷயங்களில் தொடர்புடைய செயல்களின் மீது மனம் செல்வதில்லை. மேலும் இந்திரியங்கள், மனம் அந்தரங்கத்தில் நிலைத்திருப்பதால் கர்ம பிரவிருத்தி என்பது (செயலாற்றுதல்) நேர்வதில்லை. ஆயின் இது சாதனையின் மேல் நிலையில் ஏற்படுவதேயன்றி முதல் நிலையில் அல்ல. சாதனை முழுமையடைந்து, சாத்தியப் பொருள் (ஆத்மா) கைகூடின பிறகே சில ஜீவன் முக்தர்கள் உலக நன்மைக்காக காரியங்களை ஆற்றுவர். (3) இனி மூன்றாவது எல்லா சங்கல்பங்களையும் விட்டொழிதல். சங்கல்பங்கள் மூன்று விதமானவை.

1. துர்சங்கல்பங்கள், 2. சுத்தசங்கல்பங்கள், (3) நிச்சங்கல்பம் (சங்கல்பமின்மை) சாதனையின் ஆரம்ப நிலையில் சுத்த சங்கல்பத்தினால் துர்சங்கல்பத்தை தூய்மைப் படுத்துதல் வேண்டும். அதாவது, சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள சம்பிரதாயங்களில் பிறக்கும் தூய்மையான (புண்ய) சங்கல்பங்களினால் இதற்கு முன் இருந்த பாவ சங்கல்பங்களை நீராட்டி தூய்மைபடுத்துதல் வேண்டும். சித்தத்தில் முழுமையாக சுத்தமான சங்கல்பங்களே தெய்வ சங்கல்பங்களே இருக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும். அதன்பின் இன்னும் ஒரு படி மேலே சென்று சங்கல்பமற்ற ஆத்மாவில் நிலை பெற்று நிச்சங்கல்ப நிலையை அடைதல் வேண்டும். அதாவது, அதன்பின்னர் காட்சிப் பொருள்களைக் குறித்த எந்தவிதமான சங்கல்பமும் இராது. சித்தம் ஆத்மாவாக ஒளிர்ந்து கொண்டிருக்கும். சர்வ சங்கல்ப அந்நியாசஸ்திதி என்றால் சூன்யம் என்று எவரும் கருதலாகாது. ஏனெனில் அப்போது பிரக்ஞா ரூபமான ஆத்ம அறிவு விழித்திருக்கிறது. சித்தம் அதில் லயித்து, ஊடுருவி நிற்கிறது. (சமாதியினின்றும் மீண்டும் பழைய நிலைக்கு வந்த பின் அத்தகைய மகான்களில் சிலர் பிரம்மா கார விருத்தியை விட்டுவிடாது சுத்த சங்கல்பங்களை மேற்கொண்டு உலக நன்மைக்காக காரியங்களை ஆற்றுவர்)

*இவ்வாறாக, மேற்சொன்ன மூன்று இலட்சணங்களை சாதகன் நன்கு பயிற்சி செய்து படிப்படியாக யோகாரூடனாகி விட்டால் வாழ்க்கையே அவனுக்கு தியானமாகிவிடுகிறது.*

**வினா :** *யோகாரூடனின் இலட்சஙணங்கள் எவை?*

**விடை :** *1. இந்திரியார்த்தங்களான சப்த ஸ்பர்சாதி விஷயங்களில் பற்றின்மை 2. கர்மாவில் பற்றுவைக்காதிருத்தல் 3. எல்லா சங்கல்பங்களையும் ஒதுக்கி ஆத்மாவில் மாத்திரம் நிலை பெற்றிருத்தல்.*

**முன்னுரை**

*(அத்தகைய யோகா ரூட நிலையை எய்துவதற்கு) தனக்குத் தானே உயர்த்திக் கொள்க என்கிறார்.*

*உத்தரே தாத் மானாம் நாத்மான மவஸாத யேத்!*
*ஆத்மைவ ஹ்யாத்மனோ பந்துராத்மைவ ரிபுராத்மனஹ!!*

**சொற்பொருள்**

*ஆத்மனா - ஆத்மாவினால் (தன்னால்) ஆத்மானம் - தன்னை (ஆத்மாவை) உத்தரேத் - உத்தாரணம் செய்க (உயர்த்திக் கொள்க), ஆத்மானம் - தன்னை, ந அவ ஸாதயேத் கீழ்நிலையை அடையுமாறு இழிவுபடுத்தலாகாது, ஹி - ஏனெனில், ஆத்மனஹ - ஆத்மாவிற்கு (தனக்கு) ஆத்மா ஏவ - தானே, பந்துஹ் - நண்பன், ஆத்மனஹ் - தனக்கு, ஆத்மா ஏவ - தானே, ரிபுஹ் - பகை.*

**கருத்துரை**

*தன்னைத் தானே உயர்த்திக் கொள்ள வேண்டும். தன்னை இழிவுறுத்திக் கொண்டு கீழ்நிலையை அடையக் கூடாது. ஏனென்றால் தானே தனக்கு நண்பன் (இந்திரியங்களை வென்றால்), (இல்லையெனில்), தனக்குத்தானே பகைவன்.*

**விளக்கம்**

*ஒவ்வொரு ஜீவியும் தன்னைத் தானே உயர்த்திக் கொள்ளவேண்டுமென பகவான் போதிக்கின்றார். குரு, சாஸ்திரங்கள், தெய்வம் இவை நமக்கு நல்வழிகாட்டுமே யன்றி அதனைப் பின்பற்றி நடக்க வேண்டியது நம் கையில் தான் உள்ளது. தன் கால்களால் தானே*

நடக்க வேண்டும். தன் கண்களால் காண வேண்டும். தன் பசியைத் தானே தீர்த்துக் கொள்ள வேண்டும்.

'God helps those who help themselves

என்று பெரியோர்கள் சொன்னதைப் போல் தன்னைத் தானே உயர்த்திக் கொள்ள முயற்சி செய்வோருக்கு மாத்திரமே இறைவன் உதவி செய்வான். சோம்பித் திரிந்து, இந்திரியங்களை ஓரளவேனும் கட்டுப்படுத்தாது, வைராக்கியம் இன்றி, போகங்களில் ஈடுபட்டு 'இறைவனே மோட்சத்தை வாங்கித் தருவார்' என்று நினைப்பதோ, 'குருவே தன்னை கைவல்ய பதத்தின் வாயிலுக்கு அழைத்துச் சென்று விடுவார்' என்று நினைப்பதோ மிகமிகத் தவறு. தெய்வமோ, சாஸ்திரங்களோ, குருவோ சோம்பித் திரிபவர்க்கு, செயலாற்றாது இருப்பவர்க்கு இலவசமாக மோக்ஷத்திற்கு நுழைவு அனுமதிச் சீட்டு (Passport) வாங்கிக் கொடுப்பதற்காகக் காத்திருப்பதில்லை. சாதாரணமாக ஒரு சிறிய பொருளைக் கடையில் வாங்க வேண்டுமாயினும், சிறிது பணமாவது கொடுக்க வேண்டியிருக்கும். பொருளின் மதிப்பு அதிகமானால் அதன் விலையும் கூடுதலாக இருக்கும். அவ்வாறிருக்கையில் மோக்ஷம், துக்கமின்மை, பிறப்பு இறப்பில்லாத பந்த விமோசனம், பரமானந்தம் ஆகிய பொருள்களை வேண்டுவோர் அதற்குத்தகுந்த விலையைக் கொடுத்துத்தான் தீரவேண்டுமல்லவா? சோம்பேறியாக இருந்தால் அது சாத்தியமாகுமா? அதற்காக எவ்வளவோ தியாகங்கள், எவ்வளவோ சாதனைகள், எத்தனையோ இந்திரியக் கட்டுப்பாடு, இவை தேவை. அத்தகைய ஆன்ம சாதனையென்னும் விலையைக் கொடுக்காவிடில் சாட்சாத் இறைவனே கூட ஜீவனுக்கு எதுவும் கொடுக்க இயலான். எனவே சிறிது உழைத்தல் வேண்டும். பெரியோர்கள் போதித்த வழியில் செல்ல வேண்டும். தன்னைத் தானே உயர்த்திக் கொள்ள வேண்டும். இவ்வுண்மையையே பகவான் இச்சுலோகத்தில் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

மகான்கள் எத்தனையோ இன்னல்களை ஏற்று, குளிர் வெப்பம் முதலான இருமைகளைச் சகித்துக் கொண்டு, எத்தனையோ வருடங்கள் கடினமான சாதனைகளைச் செய்து தம் சித்தத்தினைத் தாமே வைராக்கிய போதனைகள் மூலம் தூய்மைப்படுத்துதல் வேண்டும். அவ்வாறு தூய்மைப்படுத்தப்பட்ட மனமே மக்களை சம்சாரமெனும் குரங்கினின்றும் விடுவிக்க இயலும். குரு சிஷ்யனுக்கு உபதேசித்தல் என்னும் மரபைப் பின்பற்றுவதற்கேயன்றி, செய்ய வேண்டி

யவை யாவும் சிஷ்யனின் கையிலேயே இருக்கின்றது என்று வசிஷ்ட முனி ஸ்ரீராமசந்திரனுக்குச் சொல்லியுள்ளார். மனிதன் தன் வியாதிக்குத் தானே மருந்து தின்று எவ்வாறு வியாதியைப் போக்கிக் கொள்கிறானோ, தன் பசியை உணவு தின்று எவ்வாறு தீர்த்துக் கொள்கிறானோ, அவ்வாறே பவரோகத்தால் பீடிக்கப்பட்ட ஜீவன் தானே சுயமாக சாத்னை செய்து முன்னேறுதல் வேண்டும். 'உத்தரே தாழ்மனாத்மானட்'' - என்பதற்கான பொருள் இதுவே.

மேலும் தனக்குத் தானே கீழ்நிலைக்கு இறங்கி விடாமல் பார்த் துக் கொள்ள வேண்டும். உலகில் உன்னை முன்னேற்றுவோர் சுற்றத் தார்களோ, நண்பர்களோ அல்ல; வேறெவரும் அல்ல. உனது தூய் மையான மனமே உன்னை முன்னேற்றக் கூடியது. விஷயங்களற்று, காட்சி, வாசனைகள் இவையெவையும் அற்று தூய்மையான சித் தமே, உன்னை முன்னேற்றக் கூடியது. அவ்வாறே உனது அழுக்கு படிந்த கறையுடைய மனமே உன்னை அழிவிற்கு இட்டுச் செல்லக் கூடியது. எனவே அது உன் எதிரி. மனம், இந்திரியங்கள் இவை உன் வசமிருந்தால் அவையே உன் சுற்றத்தார், வசத்தில் இல்லையாயின் அவையே உனக்குப் பகை. இந்த உண்மையையே பகவான் இந்த சுலோகத்திலும், அடுத்து வரும் சுலோகத்திலும் நிரூபிக்கின்றார்.

சாதாரணமாக ஒவ்வொருவருக்கும் மனதில் இரண்டு பாகங்கள் உண்டு. ஒன்று நல்ல மனம். இரண்டாவது கெட்ட மனம். ஒன்று தர்மத்தின் பக்கமும் மற்றொன்று அதர்மத்தின் பக்கமும் இழுத்துச் செல்கின்றது. அதில் இரண்டாவது மனத்தையும் முதல் மனத்துடன் (தர்மத்துடன்) இணைத்தல் வேண்டும். இதனை நாம் முயற்சியால் செய்ய முடியும். இவ்வாறாக முயன்று நம்மை நாமே உயர்த்திக் கொள்ள வேண்டும். நண்பனும், எதிரியும் நம்மிடமே இருக்கிறான். சுத்த சித்தம் நண்பன் வசப்படுத்திய மனமே நண்பன். ஆகையால் அதனையே பற்றுதல் வேண்டும். அது ஜீவனுக்குப் பேருபகாரம் செய்யவல்லது. அவ்வாறே தூய்மையற்ற மனம், வசப்படுத்தப்ப டாத மனம், எதிரி. அது நமக்கு மிகவும் இழிவை ஏற்படுத்தும், வெளிப்படையான எதிரி இப்பிறப்பில் மட்டுமே நமக்குத் துன்பம் தருவான். நம்முள் இருக்கும் எதிரியான தூய்மையற்ற சித்தமோ, பிறவி தொறும் தொடர்ந்து வந்து துன்புறுத்தும். எனவே அத்தகைய உள் எதிரியை முயற்சி செய்து முதன் முதலில் ஒதுக்கிவிட்டு பரம சாந்தியைப் பெறுதல் வேண்டும்.

'உத்தரேத்' - (தன்னைத் தானே உயர்த்திக் கொள்ள வேண்டும்) என்று சொல்வதால், ஜீவனுக்கு 'பிராரப்தம்' என்பது தடையல்ல என்றும், தன்னைத் தானே எப்போதும் உயர்த்திக் கொள்வதற்கு இயலும் என்றும் போதிக்கப்பட்டது.

வினா : இந்த சம்சாரத்தில் மனிதனை முன்னேற்றுவோர் எவர்?

விடை : தன்னைத் தானே முன்னேற்றிக் கொள்ள வேண்டும். கீழ்நிலைக்கு இறங்கிவிடக்கூடாது.

வினா : மனிதனுக்கு உறவினர் (நண்பன்) யார்? எதிரி யார்?

விடை : தனக்குத்தானே உற்ற நண்பன் (தன் மனதைத் தானே வென்றுவிடின்), தனக்குத் தானே பகைவன் (தன்மனதைத் தானே வெல்லாவிடின்).

முன்னுரை

மேற்சொன்ன விஷயத்தையே விரிவாக விளக்குகிறார்.

*பந்துராத் மாத் மனஸ்தஸ்ய யேனாத்மை வாத்மனா ஜிதஹ்!*
*அனாத்மன ஸ்து சத்ருத்வே வர்தே தாத்மைவ சத்ருவத்!* (6)

சொற்பொருள்

யே - எதனால், ஆத்மனைவ - தன்னாலேயே (தன் விவேகத்தினால்) ஆத்மா - மனம், ஜிதஹ் - வெல்லப்பட்டதோ, தஸ்ய - அத்தகையோனது, ஆத்மாமனம் ஆத்மனஹ் - தனக்கு, பந்துஹ் - பந்து ஆகிறான். அநாத்மனஸ்து - மனதினை வெல்லா தலைவனுக்கோ, ஆத்மா - தன் மனமே, சத்ருவத் - எதிரியைப் போல, சத்ருத்வே ஏவ - பகைமை வர்தேத - கொள்ளும்.

கருத்துரை

எவன் (விவேக வைராக்கியத்தினால்) தன் மனதினைத் தானே வெல்கிறானோ, அவனது ஐயிக்கப்பட்ட மனம் அவனுக்கு உறவாகிறது. (உதவுகிறது) அவ்வாறின்றி மனதினை வெல்லாவிடின், அதுவே பகையாகிறது. (கேடு செய்கிறது).

**விளக்கம்**

முன் சுலோகத்தில் சூட்சுமமாகத் தெரிவித்த விஷயத்தையே இங்குத் தெளிவாகக் கூறுகின்றார். மனிதனுக்கு உறவினன், பகைவன் இருவரும் அவனிடத்திலேயே உள்ளனர். வெற்றி கொள்ளப் பட்ட மனதே உறவினன். அது ஜீவனை ஜனன மரண சம்சாரத்தினின்றும் விடுவிக்கும். சாந்தியை அடையச் செய்யும். சச்சிதானந்தத்தாத்மாவை அடையச் செய்யும். இவ்விதமாக அது ஜீவனுக்கு மிக்க மேன்மையை அடையச் செய்கிறது வெளிப்படையான உறவினர்கள் ஓரளவு உதவிகள் செய்தாலும், நட்பு, பகை, விருப்பு, வெறுப்பு இவற்றால் ஆன்மீக மார்க்கத்திற்குத் தடையாக வேண்டியுள்ளனர். உள் உறவினன் ஆன சமநிலையில் உள்ள சித்தம் அவ்வாறல்ல. அது மோகன ரூபமான நிலையான உதவியையே செய்கிறது. அவ்வாறே வெல்லப்படாத மனது பகையாக மாறுகின்றது எனப்பட்டது. ஏனெனில் அது ஜீவனை பவ ஆரண்யத்தில் தள்ளி, காமக்குரோதம் முதலான கோரமான விலங்கினங்களுக்குப் பலியிட்டு, தொடர்ந்து பிறவிதொறும் அவனை அழிவிற்கு இட்டுச் செல்கிறது. எனவே ஜீவன் முயற்சியினால் விவேகம் முதலியவற்றால் தன் மனதை வென்று, பகைவனை நண்பனாக மாற்றிக் கொண்டு உற்ற உறவினனாகச் செய்து அவன் மூலம் முக்தி வழிக்குச் சேர்ந்து சுகமடைதல் வேண்டும்.

ஆத்மாஹ் - என்றதற்கு மனம் மட்டுமல்லாது இந்திரியங்கள், சரீரம் என்று கூட பொருள் கொள்ளலாம்.

'ஆத்மனாஹ ஜிதஹ்' - என்றதனால் தன் மனதைத் தானே வெல்லுதல் வேண்டுமென்பது தெளிவாகிறது.

**வினா :** மனிதனுக்கு உறவினன் யார்?
**விடை :** தன்னால் வயப்படுத்தப்பட்ட மனமே அவனுக்கு உறவினன்.

**வினா :** பகைவன் யார்?
**விடை :** தன்வயப்படுத்தப்படாத மனமே அவனது பகைவன்.

**முன்னுரை**

அங்ஙனம் தேக, இந்திரிய மனத்தைத் தன்வயப்படுத்துவதால் ஏற்படும் பலன்களைக் கூறுகிறார்.

*ஜிதாத்மனஹ ப்ரசாந்தஸ்ய பரமாத்மா ஸமா ஹிதஹ!*
*சீதோஷ்ண ஸுகதுக்கேஷு ததா மானாபமான யோஹ்!! · (7)*

## சொற்பொருள்

ஜிதாத்மனஹ - வெல்லப்பட்ட மனதையுடையவனுக்கு, ப்ரா சாந்தஸ்ய - பரம சாந்தியுடன் கூடியவனான மனிதனுக்கு, சீதோஷ்ண சுக துக்கேஷு - குளிர், வெப்பம், இன்ப துன்பம் முத லான இருமைகளில், ததா - அவ்வாறே. மானபிமான யோஹ் - மான, அவமானங்களிலும், பரமாத்மா - பரமாத்மா, யமா ஹிதஹ் - சொரூபமானது அனுபவிக்கப்படுகிறது. அவரது சொரூபம் நிலை பெறுகின்றது. (அல்லது - ஆத்மா - மனம் - பரம் - எப்போதும், ஸமா ஹிதஹ் - ஆத்மானு பவத்திலேயே நிலைத்திருக்கும் என்றும் சொல்லலாம்)

## கருத்துரை

மனதை வென்றவனும், பரம சாந்தியுடனும் இருப்பவனும் ஆன மனிதனுக்கு குளிர், வெப்பம், இன்ப துன்பங்களிலும், அவ் வாறே மான, அவமானங்களிலும் பரமாத்மா அனுபவம் சிதறிவிடா மல் நிலைத்திருக்கும் (அல்லது அத்தகையோனுக்கு குளிர் வெப்பங் களிலும் மனம் மட்டும் ஆத்மானுபவத்திலேயே இருக்கும்).

## விளக்கம்

சாதாரண மனிதர்களின் மனம் குளிர், வெப்பம், இன்ப, துன் பம், மான அவமானங்கள் ஏற்படும் போது தலைகீழாக மாறிவிடும். அது தன் சமநிலையினின்றும் (balance) வழுவி சபலமடையும். சுகம் அடையும் போது மகிழ்ச்சியடைவதும், துக்கம் வந்தபோது மனம் குமுறிப் போவதும் அவ்வாறே. எவரேனும் புகழும்போது மகிழ்வ தும், தூற்றும் போது வருந்துவதும் நிகழும். இவ்வாறு அஞ்ஞானி யான ஜீவன் இருமைகளுக்கு அடிமையாகி, அவை ஆட்டிவைக்கும் படி ஆடி வாழ்கிறான். எனவேதான் அவனது சித்தம் ஒரு கண நேரமாவது நிலைத்திருக்க இயலாமல், அமைதியின்றி இருக்கிறது. ஆயின் மனத்தையும், இந்திரியங்களையும் வென்றவனது நிலை வேறு. எவ்வளவு இருமைகளை எதிர் கொண்டாலும் அவனது சித் தம் சலனமின்றி அமைதியாக, பரமாத்மாவினிடத்திலேயே நிலை பெற்றிருக்கிறது. கடல்அலைகளோ பெருங்காற்றோ பெரிய மலையை எங்ஙனம் அசைத்து விடமுடியாதோ அது போன்று வெல் லப்பட்ட மனதையுடையவனை இருமைகள் ஒன்றும் செய்துவிட

முடியாது. எனவே அது எப்போதும் பரமாத்மாவிடம் நிலைத்து பேரமைதியை அனுபவித்துக் கொண்டிருக்கும். எனவே பயிற்சி, வைராக்கியம், விவேகம் இவற்றால் இந்திரியங்கள், மனம் இவற்றை எவ்வாறேனும், வெல்வது மிக மிக முக்கியம் என்பது இச்சுலோகத்தினால் தெரியவருகின்றது.

சிலர், 'ப்ரகாந்தஸ்ய' என்னும் சொல்லிற்கு குளிர் வெப்பம் முதலியவற்றுடன் இணைந்து இருமைகளினால் சலனமடையாது பேரமைதியுடன் இருப்பவனுக்கு மனம் பரமாத்விடத்திலேயே நிலைக்கும் என்று பொருள் கொள்கின்றனர். இரண்டின் பொருளும் ஒன்றே.

**வினா** : எவரின் சித்தம் சீதம், உஷ்ணம் முதலான இருமைகளிலும் சலனமின்றி இருக்கும்?

**விடை** : இந்திரிய மனத்தை வென்றவனின் சலனமற்ற சித்தம் இரு மைகளினால் சலனமடைவதில்லை.

**வினா** : எனவே மனத்தை வெல்வதால் கிடைக்கும் நற்பலன் என்ன?

**விடை** : இருமைகளினால் சலனமடையாது. எப்போதும், பரமாத்மா விடத்திலேயே நிலைத்திருப்பான். அதன் பலனாய்ப் பேரமைதியை அனுபவிப்பான்.

**முன்னுரை**

பரமாத்மாவிட ம் நிலைபெற்றவனின் இலட்சணங்கள் அடுத்து வரும் இரண்டு சுலோகங்களில் கூறப்படுகிறது.

*ஞான விக்ஞானத் ருப்தாத்மா கூடஸ்தோ விஜிதேந்திரியஹ!*
*யுக்த இத்யுச்யதே யோகீ ஸமலோஷ்டாச்ம காஞ்சஹ!!* (8)

**சொற்பொருள்**

**ஞான விக்ஞான திருப்தாத்மா** சாஸ்திர ஞானத்தினாலும், அனுபவ ஞானத்தாலும் திருப்தியடைந்த மனத்தையுடையவன், **கூடஸ்தஹ** - அசையாதவனாய், **விஜிதேந்திரியஹ** - இந்திரியங்களை நன்கு வென்றவனும், **ஸமலோஷ்ட அச்ம காஞ்சனஹ** - மண், கல், பொன் இவைகளைச் சமமாக் கருதுகின்றவனும் (ஞான) **யோகீ** - யோகிஷ்டன், **யுக்தஹ** - யோகா ரூடன் (ஆத்மானுபவம் பெற்றவன்), **இதி** என்று, **உச்யதே** - சொல்லப்படுகிறான்.

### கருத்துரை

சாஸ்திர ஞானம், அனுபவ ஞானங்களால் திருப்தியடைந்த மனம் உடையவனும், அசையாத மனம் கொண்டவனும், இந்திரியங்களை நன்கு வென்றவனும், மண்கட்டி, கல், பொன் என்ற மூன்றையும் சமமாக நோக்குபவனும் ஆன யோகி, யோகா ரூடன் (யோகத்தில் நிலைபெற்றவன், ஆத்மானுபவம் பெற்றவன்) எனப்படுகிறான்.

### விளக்கம்

யோகம் என்பது கூடுதல்; ஜீவ பிரம்ம ஐக்கியம். அத்தகைய ஐக்கியத்தினை அளிக்கும் பயிற்சியினை யோகமென்றே சொல்வர். அத்தகைய முயற்சியினை மேற்கொள்ளுபவன் யோகி. யோகிகள் பலர் இருப்பினும் அதில் ஆரூடநிலையை எட்டியவர் மிக மிக அரிதானவர். அத்தகைய ஆரூட நிலையை எட்டியவரது இலட்சணங்கள் இச்சுலோகத்தில் விவரிக்கப்பட்டுள்ளது. ஒருவன் பரிபக்குவ நிலையை அடைந்துவிட்டானா இல்லையா என்பதை கீழ்வரும் அடையாளங்களால் அறிய முடியும்.

அவையெவையெனின்

1. ஞான, விஞ்ஞானத்தால் திருப்தியடைதல்
2. அசையாதவனாய் இருத்தல்
3. இந்திரியங்களை நன்கு அடக்கிவென்றமை
4. மண், கல், பொன் - இவற்றைச் சமமாக நோக்குதல்.

இந்நான்கு இலட்சணங்களும் சாதர்களுக்கு மிகமிகத் தேவையானவையாதலால் அவற்றைக் குறித்து ஒருவாறு அலசி ஆய்வோம்.

1. கீதையில் பகவான் அங்கங்கு ஞான விக்ஞானங்களை வெவ்வேறாகச் சொல்வது கவனிக்கத்தக்கது. ஞானமென்றால் சாஸ்திரங்களின் மூலமும், குருவின் உபதேசத்தினாலும், பெரியோர்களின் உபதேசத்தின் மூலமாகவும் இறைதத்துவம் எத்தகையது என்பதை அறிந்து கொள்ளுதல். விஞ்ஞானமென்றால் அத்தகைய தத்துவத்தை முழுமையாக அனுபவித்தறிதல். ஞானமென்பது சமையற் கலையை கற்பது போன்றது. விஞ்ஞானம் என்பது அக்கலையைப் பயன்படுத்திச் சமைத்து உண்பதைப் போன்றது. அப்போதே பசி தீரும். இரண்டும் தேவையே. முதன் முதலில் பரமாத்மாவின் தத்துவம் எத்தகையது என்பதை அறிந்து அதன் பின்னர் இறைத்தத்து

வத்தை நேரில் அனுபவித்தறில் வேண்டும். முதலாவது ஞானம். இரண்டாவது விஞ்ஞானம். மக்களில் சிலர் ஞானத்தைப் பெற்று விட்டால் மாத்திரம் திருப்தியடைந்து விடுகின்றனர். அதுமட்டும் போதாது என்றும், விஞ்ஞானத்தைக் கூட அடைந்து ஞான விஞ் ஞான இரண்டிலும் திருப்தியடைதல் வேண்டுமென்பதும், அத்த கையோனே யோகாரூடன் என்றும், உத்தம யோகியென்றும் இங் குக் கூறப்பட்டது. (உலகில் சிலர் செல்வத்தில், சிலர் அதிகாரத்தில், மேலும் சிலர் விஷய போகங்களில் திருப்தியடைந்து விடுகின்றனர். இவர்கள் கீழ்நிலையினர், ஞான, விஞ்ஞானத்தால் திருப்தியடை வோரே மேலோர்).

2. இனி, இரண்டாவது இலட்சணம் நிர்விகாரமற்ற தன்மை. அதாவது சலன மற்றநிலை 'காட ஸ்த்வம்' - அதாவது காடமென் றால் தட்டா உபயோகிக்கும் அடிக்கட்டை. அதன் மீது தட்டி தட் டான் எத்துணையோ பொன் ஆபரணங்கள் தயார்செய்தாலும் அது சலனமின்றி மாற்றமின்றி இருக்கும். அவ்வாறே எவனது மனம், இன்ப, துன்பங்கள், லாப நஷ்டங்கள், மான, அவமானங்கள் எத் துனை வந்து சேர்ந்தாலும் மாற்றமடையாமல் சமநிலையில் இருப்ப வனே கூடஸ்தன் எனப்படுகிறான். அத்தகையோனே உத்தமயோகி அல்லது கூடஸ்தன் என்றால் ஆத்மா என்றும் சொல்லலாம். ''கூ டஸ்ரோ அக்ஷர உச்யதே' என்று கீதையில் ஓரிடத்தில் கூறப்பட்டுள் ளதல்லவா? அத்தகயை கூடஸ்த ஆத்மாவுடன் ஐக்கியமடைந்த வனே யோகாரூடன் எனப்படுகிறான்.

3. மூன்றாவது இலட்சணம் விஜிதேந்திரியத்வம். அதாவது இந் திரியங்கள் மனம் இவற்றை வெல்வது. 'ஜிதேந்திரியஹ்' என்பது 'விஜிதேந்திரியஹ்' என்றதால் இந்திரியங்களை நன்கு 'கட்டுப்படுத் துதல் வேண்டுமென்பது பொருள். வாசனைகள் ஒரு சிறிது மிகுந்தி ருந்தாலும் அவை மறுபடியும் சாதகனுக்குத் துன்பம் தரும். ஆகை யால் அவற்றை முழுமையாக அற்றுப் போகச் செய்து இந்திரியங்கள் மனம் இவற்றைக் கட்டுக்குள் வைத்திருப்பவனே ஜிதேந்திரியன். இதனால் தத்துவ விசாரணைக்கு நன்கு நடப்பதற்கு உதவியாகும். எனவே விவேக வைராக்யங்களினால் இந்திரியங்களை நன்கு கட் டுப்படுத்தி யோகாரூடத்துவத்தை அடைய முடியும்.

4. இனி யோகாரூடனின் நான்காவது இலட்சணம் சமதிருஷ்டி. மண், கல், பொன் இவற்றைச் சமமாக நோக்குதல். மண், கல், இவற்றைச் சமமாக பாவித்தலில் எந்தவிதமான கஷ்டமும் இல்லை.

ஆயின் கல்லைப் பொன்னாகக் காண்பது கடினம். சில உபாயங்களி னால் அத்தகைய நிலையை அடைய முடியும். அவையெனின்,

1. இவ்வுலகில் உள்ள அனைத்துப் பொருள்களும் பஞ்சபூதங்க ளின் சேர்க்கையால் ஆனவையே. மரம், செடி, புற்று, சூரியன், சந்திரன், தேகம், கல், பொன் - இவையனைத்தும் பஞ்ச பூதங்களின் சேர்க்கையே. இவ்வுண்மையை நன்கறிந்த விஞ்ஞானிக்கு உலகில் உள்ள எப்பொருளைக் கண்டாலும் அதனை உடனே அதன் இருப்பி டமான நிலம், நீர் முதலான பஞ்ச பூதங்களோ அல்லது பஞ்ச பூதங்க ளுக்கு ஆதாரமான பரமாத்வாவோ நினைவிற்கு வருவதால் அவற் றில் சமத்துவத்தையே காண்பான்.

2. இவ்வுலகில் ஒரு பொருளின் மதிப்பை, வேறொரு பொரு ளின் மீது வைத்தல் அவரவர் மனதைப் பொறுத்ததே. கல் அதிகமா கக் கிடைப்பதால் அதன் மதிப்பைக் குறைத்தும், பொன் மிக அரிதா கக் கிடைப்பதால் அதன் மதிப்பு அதிகமாகவும் மனது கற்பித்துக் கொள்கிறது. ஒரு சிறு குழந்தையின் முன் பொன்னை வைத்தால் அதற்கு கல்பிக்கும் மனம் இல்லையாதலால் அதனைச் சிறிதும் இலட்சியம் செய்யாது. அவ்வாறே ஞானிக்குப் பிரித்துப் பார்க்கும் மனம் இல்லையாதலால் மண், கல், பொன் என்ற மூன்று மட்டுமே யன்றி, எல்லாப் பொருள்களும் அவனுக்குச் சமமாகவே தோன்றுகி றது. 3. ஆருட நிலையை எட்டிய யோகி பிரம்மம் ஒன்றே உண்மை யானது காட்சியனைத்தும் கற்பனையே, என்றும் மாயையென்றும் கருதுவான். எனவே இல்லாத இவ்வுலகில் அல்பமானது எது? உயர்ந்தது எது? கனவில் அரசன், ஆண்டி இருவரும் ஒருவரே ஆவ தைப் போல் உத்தம யோகிக்கு கல், பொன் முதலான காட்சிப் பொருள்கள் அனைத்தும் சமமாகவே தோன்றும். 4. ஆத்மாவை அடைவதற்கு மண்ணோ, பொன்னோ பயன்படாது. இவ்வுண் மையை அறிந்தவனுக்கு போக திருஷ்டியில் இரண்டும் சமமாகவே தோன்றும்.

**வினா :** ஆருட நிலையை அடைந்த உத்தம யோகியின் இலட்சணங் கள் யாவை?

**விடை :** 1. சாஸ்திர ஞானம் அனுபவ ஞானம் இரண்டும் பெற்று அவற்றால் திருப்தி அடைந்திருத்தல்.

2. விகாரமற்றிருத்தல் (கூடஸ்தன்)
3. இந்திரியங்கள், மனத்தை நன்கு கட்டுக்குள் வைத்திருத்தல்.

## முன்னுரை

*சமதிருஷ்டியைக் குறித்து இன்னும் விரிவாகச் சொல்கிறார்.*

*ஸுஹ்ருன் மித்ரார்யுதாஸீந மத்யஸ்த த்வேஷ்ய பந்துஷு!*
*ஸாதுஷ்வபி ச பாபேஷு ஸமபுத்திர் விசிஷ்யதே!! (9)*

## சொற்பொருள்

*ஸுஹ்ருத் - பிரதி பலனை எதிர்பாராது உபகாரம் செய்பவனிடத்தும், மித்ர - பிரதி பலன் கிடைக்குமென்று கருதி உபகாரம் செய்வோனிடத்தும், அரி - பகைவனிடத்தும், உதாசீன - பொதுவாகச் சமநிலையில் இருப்பவர் இடத்தும், மத்யஸ்த - நடுவர்களிடத்தும், பந்துஷு - சுற்றத்தாரிடத்தும், ஸாதுக்களிடத்தும், பாபேஷு ச - பாவிகளிடத்தும், ஸம புத்திஹ் - சம புத்தியுடையவன், விசிஷ்யதே - சிறந்தவன் ஆகிறான்.*

## கருத்துரை

*பலனை எதிர்பாராது நன்மையையே நாடுபவரிடத்தும், பலனை எதிர்பார்த்து உதவிசெய்வோரிடத்தும், எதிரிகளிடத்தும், சமநிலையில் இருப்பவன், மத்யஸ்தர், வெறுக்கத் தக்கவர், (விரோதிகள்), சுற்றத்தார், நல்லோர், பாவிகள் இவர்களைவரிடத்தும் சம பாவம் கொண்டவனே மேலோன் (சிறந்தவன்).*

## விளக்கம்

*மக்களில் எவர் உத்தமர் என்பதை இச்சுலோகம் தெரிவிக்கின்றது. சாதாரணமாக மக்களில் எவராயினும் அழகு, சௌந்தரியம், வித்தை இவற்றில் மிக்கவராய் இருப்பின் அவன் சிறந்தோன் என்பர். ஆயின் பகவான் அங்ஙனம் சொல்லவில்லை. எவன் எல்லா ஜீவர்களிடத்தும் சமபுத்தியுடன் இருக்கின்றானோ அவனே சிறந்தவன் என்கிறார். சர்வ ஜீவிகளிலும் பகவான் சிலரையே இங்குக் குறிப்பிட்டுள்ளார். அவர்களை மூன்று வர்க்கத் தினராகப் பிரிக்கலாம்.*

*1. நல்லெண்ணமுடையவர், நண்பர், சுற்றத்தார், சாது - என்ற இந்நால்வரும் ஒரு வர்க்கத்தினர். 2. மத்யஸ்தன், (உதாசீனன்) வெறுக்கத் தக்கவன் - இருவரும் ஒரு வர்க்கத்தினர். 3. எதிரி, வெறுக்கத் தக்கவன், பாபி இம்மூவரும் மற்றொரு வர்க்கத்தினர். இதில் முதல் வர்க்கத்தினன் உபகாரம் செய்பவன். இரண்டாம் வர்க்கத்தி*

னர் உபகாரமோ, அபகாரமோ செய்யாதவர்; மூன்றாமவர் அபகாரமே செய்வோர். இவர்களில் முதல் வர்க்கத்தினரின் மீது மக்களுக்கு அன்பு, இரண்டாமவர் மீது சம பாவம், மூன்றாமவர் மீது வெறுப்பும் ஏற்படும். ஆயின் உத்தமமான யோகிக்கு இம்மூவரின் மீதும் சமபாவமே இருக்கும். ஏனெனில், அதமனுக்கு (கீழ்நிலையானுக்கு) ஒருவனைப் பார்க்கும் போதே அவனது தேகம் மாத்திரமே புலப்படும். அவனது நிறம், அழகானவனா, அழகற்றவனா என்று பார்ப்பான். அவனுக்கு தேகதிருஷ்டி மாத்திரமே இருக்கும். மத்யநிலையில் இருப்போன் ஒருவனைப் பார்க்கும் போது அவனது கல்வி அறிவு இவற்றைப் பார்ப்பான். இவனது திருஷ்டி மனோ திருஷ்டி. உத்தமன் ஒருவனைப் பார்க்கையில் அவனது ஆன்மாவை மாத்திரமே பார்ப்பான். இவனது திருஷ்டி ஆன்மதிருஷ்டி. அவனது தேகத்தையோ, அறிவையோ அவன் பாரான். எல்லாவுயிர்களிடத்தும் ஆன்மா ஒன்றேயாதலால், எதிரி நண்பன், உதாசீனன் ஆகிய அனைவரும் சமமாகவே தோன்றுவர். எனவே அத்தகையோன் மிகச்சிறந்தவன் என்று இங்குக் கூறப்பட்டது. வேற்றுமைகள் நிறைந்த உலகில் அவன் ஒற்றுமையையே காண்பான். இக்காரணத்தினால் ஒவ்வொரு ஜீவியும் அவ்வுத்தம நிலையை யடைவதற்கு முயற்சி செய்து தேக பாவனை, மனோபாவனையைக் குறைத்துக் கொண்டு ஆத்மபாவனையையே பெருக்கிக் கொள்ளுதல் வேண்டும். அப்போதே அவனுக்கு சமபுத்தி தோன்றி மக்களிடையே ஸர்வ உத்தமனாக மாறுவான்.

**வினா :** மனிதர்களில் உத்தமன் யார்?
**விடை :** பகைவன், நண்பன், வெறுக்கத்தக்கவன் ஆகிய யாவரிடத்தும் சமபுத்தியுடையவனே உத்தமன்.

**முன்னுரை**

அத்தகைய யோகாரூடநிலை எய்துவதற்கு, பகவத் சாட்சாத்காரத்திற்கு தியான யோகத்தினைப் பற்றி விவரிக்க எண்ணி முதலில் தியான முறையைப் பற்றி தெரிவிக்கிறார்.

*யோகீ யுஞ்ஜீத ஸததமாத்மானம் ரஹஸி ஸ்திதஹ!*
*ஏகாகீ யதசித்தாத்மா நிராசீபரிக்ரஹஹ!! /0*

**சொற்பொருள்**

*யோகீ* - யோகியானவன், *ரஹஸி* - தனிமையில், **ஸ்திதஹ்** - இருப்பவனாய், ஏகாகி - தனியாக இருந்து, **யதசித்தாத்மாய சுவாதீ**

னப் படுத்தப்பட்ட மன, புத்தி, இந்திரியம், தேகமுடையவனாய், நிராசீஹ் - ஆசைகள் அற்றவனாய், அபரிக்ரஹஹ் - பிறரிடமிருந்து எதையும் பெறாதவனாய், ஸததம் - எப்போதும் ஆத்மானம் - மன தினை, யுஞ்ஜித - ஆத்மாவில் ஒடுக்க வேண்டும் (லயித்தல் வேண் டும்).

**கருத்துரை**

*(தியான யோகத்தினை பயிலக் கருதும்) யோகீ தனியான இடத் தில், தனிமையில் இருந்து, மனம், தேகம், இந்திரியங்களைத் தன்வ யப்படுத்திக் கொண்டு, ஆசைகள் ஏதுமின்றி, பிறரிடமிருந்து எத னையும் பெறாது எப்போதும் மனதை ஆன்மாவிலேயே நிலை நிறுத்த வேண்டும்.*

**விளக்கம்**

இது முதல் இனி தியான அப்பியாசம் எவ்வாறு செய்யவேண்டு மென்பதை மனதில் நன்கு பதியும் வண்ணம் பகவான் தெரிவிக்கி றார். இங்கு யோகி என்றால் முழுமையடைந்தவனல்லன் என்றும், ஆன்மீக சாதனை புரிபவன் மாத்திரமே என்றும் அறிதல் வேண்டும். தியான முறையைப் பயிற்சி செய்பவன் என்று பொருள். அவன் தியானத்தில் பரிபக்குவ நிலையை அடைவதற்கு ஐந்து விஷயங்க ளைக் கருத்தில் கொண்டு பயிலுதல் வேண்டும் என்கிறார். 1. தனி மையான இருப்பிடம் 2. தனிமையில் பயிற்சி செய்தல், 3. இந்திரி யங்கள், மனம், தேகம் இவற்றை ஒடுக்குதல், 4. ஆசைகளற்றிருத் தல், 5. பிறரிடமிருந்து எந்தப் பொருளையும் பெறாதிருத்தல்.

இவ்வைந்து விஷயங்களையும் முழுமையாகப் பயிற்சி செய்து சாதகன் ஆத்ம தியானத்திலேயே எப்போதும் ஈடுபட்டிருத்தல் வேண்டும்.

''ரஹஸி' - தியானம் செய்கையில் வெளிப்படையாக அமர்தல் கூடாது. அவ்வாறு செய்யின் சலனம் ஏற்படும். தியானம் செய்தல் ஏனையோர் மெச்சுவதற்காக இல்லை. வேறொருவர் பார்ப்பதற்காக வும் இல்லை. தியானம் என்பது பக்தனுக்கும் பகவானுக்கும் இடை யில் உள்ள தொடர்பேயாகும். எனவே தனிப்பட்ட இடத்தில்தான் அமர்தல் வேண்டும். எனவே தான் முன்காலத்தில் ரிஷிகள், முனிகள் தவம் செய்வோர் தம் தியானம் தடையின்றி நடைபெறுவதற்காக மலைக்குகை, நதிதீரம், காட்டுப் பகுதி இவற்றிற்குச் சென்றனர். அங்குச் சலனம் ஏற்படுத்தக்கூடிய சக்திகள் எவையும் இல்லாமல்

இருப்பதுடன், இயற்கையின் இனிய சூழலில் சித்தத்தில் மகிழ்ச்சி உதயமாகும். ஆயின் கிருஹஸ்தர்கள் தம் இல்லத்திலேயே அத்த கைய தனி இடத்தை ஏற்படுத்திக் கொள்ள முடியும். தம் வீட்டி லேயே தனியாக ஓர் அறையை ஜபம், தியானம், பூஜை இவற்றிற்காக ஒதுக்கி, அதில் எவரையும் வரவிடாது, பெரிய மகான்களின் படத் தினை வைத்து புஷ்பம், தீபம், தூபம் இவற்றால் அலங்கரித்துத் தூய்மையாக வைத்திருக்க இயலும். அப்போது அது தனிப்பட்ட இடமேயாகும். அவ்வாறின்றி, 'ரஹஸி' என்னும் சொல்லிற்கு மலைக்குகை, நதிதீரம் ஆரண்யம் என்று மாத்திரமே பொருள் கொண்டால், உலகில்நூற்றுக்குத் தொண்ணூற்று ஒன்பது பேர் உள்ள கிருஹஸ்தர்கள் பகவான் சொன்ன இந்த தியான ஸ்தலத்தை அடைய முடியாமல் போகலாம்.

இவ்வாறாக, தனியிடத்தில் சேவித்தாலும் நான்கைந்து பேரோ, பத்து பேரோ ஒரே இடத்தில் தியானித்தல் கூடாது. தனிமையில்தான் தியானிக்க வேண்டும். எனவேதான் 'ஏகாகீ' யென்று சொல்லப்பட் டது. இரண்டு மூன்று பேர் ஓரிடத்தில் இருந்தால் தியான காலத்தில் மனதிற்கு சலனம் ஏற்படக்கூடும். உலக ராமாயணங்கள் அங்கு அல சப்பட ஆரம்பிக்கலாம். ''ஏக் நிரஞ்சன், தோகடபட்'' என்ற வாக்கி யம் அனைவரும் அறிந்ததே அல்லவா! இவ்வாறு இடநிர்ணயம் செய்து கொண்டு, மிதமான ஆகாரத்தினால், தேகத்தினையும், பக்தி வைராக்கியம், விசாரணை இவற்றால் இந்திரியங்களையும் கட்டுப் படுத்தி, காட்சிப் பொருள்களின் மேல் உள்ள ஆசையை விட்டுவிடு தல் வேண்டும். ஏனெனில், ஏதேனும் ஒன்றின் மேல் ஆசை ஏற்பட் டாலும் உடனேயே மனம் அதனையே சிந்தித்திருக்குமாதலால் பக வத் தியானத்திற்கு இடையூறு ஏற்பட்டுவிடும். ஆசை பைசாசம் போன்றது. அதனை விசாரணையால் இதயத்தினின்றும் களைந்தெ றிதல் வேண்டும். மேலும் தியான யோகி (தேகத்தை காப்பாற்ற தேவையானவை தவிர) பிறரிடமிருந்து எப்பொருளையும் பெறுதல் கூடாது. பிறரிடமிருந்து பொருளைப் பெறுவதால் அவனுக்கு புண் யம் வந்து சேரும். மேலும் பிறரது கர்ம பலன்கள் அவனுக்குச் சேரும். மேலும் அப்பொருள்களின் மீது அக்கறை ஏற்பட்டு மனம் அதனையே மறுபடியும் மறுபடியும் சிந்திக்கத் தொடங்கும். மேலும் அவ்வப்பொருள்களின் நலனைக் குறித்து மனம் இரவும் பகலும் ஆலோசித்தவாறிருக்கும். எனவே அவையனைத்தும் சாதகனுக்கு பந்தத்தை ஏற்படுத்தக் கூடியவையென்று கருதி பெரியோர்கள் 'அப ரிக்ரஹ்' நியமத்தை ஏற்படுத்தியுள்ளனர்.

இவ்விதமாக மேற்சொன்ன ஐந்து நியமங்களையும் பின்பற்றி சாதகன் எப்போதும் தன் சித்தத்தினை ஆன்மாவிலேயே நிலைநிறுத்த வேண்டும். ஏதோவொரு சமயத்தில் மட்டும் செய்தால் போதாது. எப்போதும் செய்ய வேண்டும். எனவேதான் 'சததம்' என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. 'நாஸ்தி ஜாக்ரதோ பயம்' என்றதைப் போல நிரந்தரம் பகவத் விஷயத்தில் மிகவும் எச்சரிக்கையுடன் இருந்தால் காமம் முதலான எதிரிடைச் சக்திகள் உள் நுழைய முடியாது. எப்போதும் விழிப்புடன் இருந்தால் திருடர்கள் உள்நுழைய முடியாதல்லவா? விளக்கு எப்போதும் எரிந்து கொண்டிருந்தால் இருட்டு உள் நுழைய முடியாதல்லவா?

**வினா :** யோக அப்பியாசி எத்தகைய நியமங்களைப் பின்பற்றுதல் வேண்டும்?

**விடை :** 1. தனிப்பட்ட இடத்தில் தியானம் செய்தல் வேண்டும். 2. தனிமையில் செய்தல் வேண்டும். 3. தேக, இந்திரியங்களைத் தன்வயப்படுத்த வேண்டும். 4. ஆசைகளை அறவே ஒழிக்கவேண்டும். 5. பிறரிடமிருந்து எதனையும் பெறுதல் கூடாது.

**வினா :** இந்நியமங்களுடன் சாதகன் இன்னும் என்ன செய்ய வேண்டும்?

**விடை :** தன் சித்தத்தை நிரந்தரம் ஆத்மாவிலேயே லயிக்கச் செய்ய வேண்டும். அதாவது ஆத்ம தியானம் செய்த வண்ணமாகவே இருத்தல் வேண்டும்.

**முன்னுரை**

தியானத்திற்கு ஏற்ற இடம் (இருக்கை, (ஆசனம்)) அமரும் முறை, தியானக் கிரமம் இவற்றை அடுத்துக் கூறுகிறார்.

*சுசௌ தேசே ப்ரதிஷ்டாப்ய ஸ்திர மாஸனமாத் மனஹ!*
*நாத்யுச்ச்ரிதம் நாதிநீசம் சைலாஜின குசோத்ரம்!! (11)*

*தத்ரைகாக்ரம் மனஹ க்ருத்வா யத சித்தேந்திரிய க்ரியஹ!*
*உபவிச்யாஸனே யுஞ்ஜ்யாத் யோக மாத்ம விசுத்தயே! (12)*

**சொற்பொருள்**

சுசௌ தேசே சுத்தமான இடத்தில், **ந அத்யுச் ச்ரிதம் - அதிக உயரமில்லாததும், ந அதிநீசம் - மிகத் தாழ்ந்ததுமல்லாததும், சைல**

அஜின குச உத்தரம் - கீழே தர்ப்பையும், அதன் மீது தோலால் ஆனதும் (மான் அல்லது புலித்தோல்) அதன் மீது துணியால் ஆன தும், ஸ்திரம் - அசையாததும் (ஆன), ஆசனம் - ஆசனத்தை (பீடத்தை), ஆத்மனஹ் - தனக்காகவென்று, ப்ரதிஷ்டாப்ய - பிர திஷ்டை செய்து கொண்ட, தத்ர ஆசனே - அவ்வாசனத்தின் மீது, உபவிஸ்ய - அமர்ந்திருந்து, மனஹ் - மனத்தினை -ஏகாக்ரம் - சலனமற்று, க்ருத்வா - ஒருமைப்படுத்தி யதசித்தேந்ரியக்ரியஹ இந் திரியம், மனம் இவற்றின் செயல்களை அடக்கி (சுவாதீனப்படுத்திக் கொண்டு), ஆத்ம நிசுத்தயே - அந்தக்கரண சுத்திக்காக, யோகம் - பரமாத்ம தியானத்தை, யுஞ்ஜ்யாத் - பயிலுதல் வேண்டும்.

### கருத்துரை

தூய்மையான இடத்தில், அதிக உயரமில்லாததும், மிகத் தாழ்ந்து இல்லாததும், கீழே தர்ப்பை, அதன் மீது தோல் (மான் அல்லது புலித்தோல்), அதன் மீது துணியால் ஆன, அசைவற்ற ஆசனத்தில் (பீடம்) மீதமர்ந்து, மனத்தை ஒருமைப்படுத்தி, இந்தி ரிய, மனம் இவற்றின் செயல்களை ஒடுக்கி, அந்தக்கரண தூய்மைக் காக (பரமாத்ம) தியானத்தினைப் பயிற்சி செய்தல் வேண்டும்.

### விளக்கம்

தியானம் செய்யுமுன் எங்கு அமரவேண்டும், எவ்வாறு அமர வேண்டும், என்ன செய்யவேண்டுமென்பதை இங்குக் குறிப்பிடு கின்றார். பகவத் கீதையின் பெருமை இதிலேய உள்ளது. சாதகனுக் குத் தேவையான சிறுவிஷயம் முதல் பெரிய பெரிய விஷயங்கள் வரை அனைத்தையும் கீதை விரிவாக விவாதிக்கின்றது. முதன்முத லில் தியானம் செய்வோர் அமர்கின்ற இடம் தூய்மையாக இருத்தல் வேண்டுமென்கிறார். 'சுசௌ தேதே' என்பதால் தியான நிட்டைக்கு எத்தேசத்திற்காவது செல்ல வேண்டிய தேவையில்லை. தூய்மை யான இடமாக இருந்தால் போதும் என்பது தெரிகின்றது. தான் தியானிக்கும் இடம் தனிமையாகவும், தூய்மையாகவும் இருந்தால் மட்டும் போதும் என்கிறார். இத் தூய்மையை பகவான் இவ்வாறு வலியுறுத்திச் சொல்வதை நாம் கவனத்தில் கொள்ள வேண்டும். சிலர் 'சுற்றிலும் எப்படியிருந்தால் என்ன? மனமே முக்கியம்! என் பர். மனமே முக்கியமெனில், சுற்றுச்சூழல் தூய்மையாக உள்ள போதே மனம் ஊர்த்துவ முகமாக நிலைக்கும் உன்னதமான, புனித மான எண்ணம் அப்போதே உண்டாகும். தூய்மையற்றச் சூழ்நிலை யின் தாக்கம் சாதகனின் மனதில் கூட ஏற்படும். மகனீயர்கள் தம்

மனதை எந்த அளவு தூய்மையாக வைத்துக் கொள்கின்றனரோ, அந்த அளவு தூய்மையாக தம்தேகத்தை, தம் வாக்கினை, தம் சுற்றுப் புறத்தை கூட வைத்திருப்பர். அவர்களது தூய்மையான எண்ணம் ஒவ்வொன்றிலும் பிரதிபலிக்கும். எனவே சாதகர்கள் தாம் தியா னிக்க எண்ணும் இடத்தை நன்றாக தூய்மை செய்து, கோமயத்தால் சுத்தம் செய்து தூய்மைப்படுத்த வேண்டும்.

தியான அப்யாசி தான் அமரும் இடம், பீடம் மிகவும் உயரமா கவோ, கீழாகப் பள்ளத்திலோ இருக்கலாகாது. ஏனெனில், மிகுந்த உயரத்தில் இருந்தால் தியானம் செய்யும் போது எப்போதாவது மயக் கம் (தமஸ்) வந்தால் கீழே விழுந்து விடுவர். அவ்வாறே பள்ளத்தில் இருந்தால் தண்ணீர், கிருமிகள், பூச்சிகள் சேரக்கூடும். எனவே மித மான உயரத்தில், அருகம்புல்லின் மீதாவது, பீடம் மீதோ அமர்ந்து தியானம் செய்தல் உத்தமம் என்கிறார். தரை சமமாக இல்லாவிடில் நெடு நேரம் அமர முடியாது. ஒரு என்ஜினை (engine) தரை மீது வைக்கும்போது அது சமமாக, கெட்டியாக இருக்கிறதா இல்லையா என்று பார்ப்போம் அல்லவா? அவ்வாறே தியான அப்யாசி அமரும் ஆசனம் நகருமேயானால் தியானம் இடைஞ்சலின்றிச் செய்தல் இய லாது. எத்தகைய ஆசனத்தில் அமரவேண்டுமென்பதற்கு இவ்வாறி ருத்தல் வேண்டுமெனக் குறிப்பிட்டுச் சொல்லாமல் (ஸ்திரமாஸ னம்) என்று மட்டுமே கீதாச்சாரியன் கூறுகிறார். அதாவது, அவரவர் வசதிப்படி பத்மாஸனமோ, சித்தாசனமோ அல்லது வேறெந்த ஆச னத்திலோ, எதில் அமர்ந்தால் நிலையாக நெடுநேரம் அமர்வதற்கு அனுகூலமாக இருக்குமோ அதனையே பின்பற்றுமாறு கூறுகிறார் பதஞ்சலி மகரிஷி இச்சந்தர்ப்பத்தில் 'ஸ்திர சுகமாசனம்' என்கிறார். அதாவது, எந்த ஆசனம் சாதகனுக்கு சுகமாகவும் நிலையாகவும் இருக்குமோ அதனையே பயன்படுத்தலாம் என்கிறார்.

இவ்வாறு ஆசனமீதமர்ந்து முதன்முதலில் இந்திரிய மனோவி ருத்திகளை வெளியில் செல்லவொட்டாது அடுத்து, அவற்றை உள் முகமாகத் திருப்பி, பரமாத்மா தியானத்தில் நிலைநிறுத்தல் வேண் டும். மனதினை உலகப் பொருட்களின் மேல் பரவவிடாது கட்டுப்ப டுத்தி இறைவனிடத்திலேயே ஒருமுனைப்படுத்த வேண்டும். ஒரு முனைப்பட்ட மனத்திற்கு சக்தி அதிகம். சாதாரண சூரிய கிர ணத்தை, பூதக் கண்ணாடியின் வழியாக ஒரே இடத்தில் செலுத்தி னால், உஷ்ண சக்தி அதிகமாக வெளிப்பட்டு கீழேயுள்ள காகிதத் தையே எரித்துவிடுகிறதல்லவா? அவ்வாறே மனதின் சக்தியனைத் தையும் வெளி உலக விஷயங்களினின்றும் திசைதிருப்பி இறைவ

னின் மீது மாத்திரமே, ஒரு முனைப்படுத்தினால் நிறைந்த சக்தி வெளிப்பட்டு அஞ்ஞானத் திரையை எரித்துச் சாம்பலாக்கிவிடும்.

இவ்விதமாக மனம் ஒரு முனைப்படுத்தி அந்த கரணசுத்திக்காக தியானத்தை ஆரம்பித்தல் வேண்டும். ஏனெனில் அத்தகைய இதயத் தூய்மை, அந்தக்ரண சுத்தி ஆத்மா சாட்சாத் காரத்திற்கு மிகமிகத் தேவை. தூய்மையான இதயத்திலேயே ஆத்மா உதயமாகிறது.

இதற்கு முன் சுலோகத்தில் 'அஜனமு' என்று சொல்லப்பட்ட இடத்தில் மான் முதலானவற்றைக் கொன்று அதன் சருமத்தினை எடுத்து வரவேண்டும் என்பது பொருளல்ல. இறந்துவிட்ட மிருகங்க ளின் தோலை எடுத்துப் பயன்படுத்தலாம் என்பது பொருள். இல் லையெனில் இம்சித்தல் என்னும் குற்றம் வந்துசேரும்.

**வினா :** தியான அப்யாசி முதன் முதலில் செய்ய வேண்டிய வழிமு றைகள் யாவை?

**விடை :** 1. தியானத்திற்கு தூய்மையான இடத்தினை தேர்ந்தெடுத்தல் வேண்டும். 2. மிகவும் உயரமாகவோ அல்லது கீழிறிங்கியோ இல் லாத இடத்தில் அமரவேண்டும். 3. அமரும்போது கீழே தர்ப்பை யால் ஆன ஆசனம் இட்டு அதன் மீது தோல், அதன்மீது வஸ்திரம் இவற்றை இட வேண்டும். 4. அமரும் பீடம் அசைதல் கூடாது. மேலும் எந்த ஆசனத்தின் மீது அமர்ந்தாலும் தான் நிலையாக சுகமாக அமர முடியுமோ அதிலேயே அமர வேண்டும். 5. இந்திரிய, மனவி ருத்திகளை கட்டுப்படுத்த வேண்டும் 6. மனதினை ஒருமுகப்படுத்த வேண்டும்.

**வினா :** எதற்காக இத்தியானம் செய்தல் வேண்டும்?

**விடை :** இதய சுத்திக்காக அந்தக் கரணசுத்திக்காக. அப்போதே பரமாத்மா சாட்சாத்காரம் பெற முடியும்.

**முன்னுரை**

தியான அப்யாசி அமரும் நிலை. பார்வை எங்கு நிலைநிறுத்த வேண்டும் என்று சொல்கிறார்.

*ஸமம் காயசிரோக்ரீவம் தாரயன்னசலம் ஸ்திர:*
*ஸம்ப்ரேக்ஷ்ய நாஸிகாக்ரம் ஸ்வம் திசச்சானவலோகயன்!* (13)

*ப்ரசாந்தாத்மா விகதபீர் ப்ரஹ்மசாரி வ்ரதே ஸ்திதஹ!*
*மனஹ் ஸம்யம்ய மச்சித்தோ யுக்த ஆஸீத மத்பரஹ!!* *(14)*

**சொற்பொருள்**

காயா சிரோக்ரீவம் - சரீரம், தலை, கழுத்து, சமம் - நேராகவும், அசலம் - அசையாமலும், தாரயன் - வைத்துக் கொண்டு, ஸ்திரஹ் - உறுதியாய் இருந்து கொண்டு, திசஹ்ச - திசைகளைக் கூட அனவ லோகயன் - பாராது, ஸ்வம்ட தன்னுடைய, நாசிகாக்ரம் - மூக்கு நுனியை ஸம்ப்ரேக்ஷ்ய - பார்வையை வைத்து, பிரஸாந்தாத்மா - அமைதியான உள்ளத்தை உடையவனாய் - மனஹ் - மனதினை, ஸம்யம்ய - நன்கு கட்டுப்படுத்தி (சவாதீனப்படுத்திக் கொண்டு), மச்சித்தஹ் - என்னிடத்தே சித்தத்தை நிறுத்தியவனாய், மச்சித்தஹ் நேநே - என்னைக் குறிக்கோளாகக் கொண்டு (என்னையே தியா னித்து) யுதக்தஹ - ஸமாதி நிலையில், ஆஸீத - அமர்ந்திருக்க வேண் டும்.

**கருத்துரை**

(தியானம் செய்பவன்) தேகம், தலை, கழுத்து இவற்றை உறுதி யாக அசையாது நிறுத்தி, உறுதியாக இருந்து, திசைகளைப் பாராது, நாசி முனையை நோக்கியிருந்து, அமைதியான மனமுடையவ னாய், அச்சத்தை யகற்றி, பிரம்மச்சாரி விரத நிஷ்டையில் இருந்து, மனத்தை நன்கு கட்டுப்படுத்தி, என்னிடத்தே சித்தத்தை வைத்து, என்னையே பரகதியென்று நம்பி, ஸமாதி (தியான) யுக்தனாய் இருத் தல் வேண்டும்.

**விளக்கம்**

தியானம் செய்பவன் ஆசனத்தின் மீதமர்ந்து, தேகம், தலை, கழுத்து, என்ற இம்மூன்றையும் நேராக நிறுத்தி, அதாவது சிறிதளவு கூட வளையாது நிறுத்தி அமர்தல் வேண்டுமெனப்பட்டது. ஏனெ னில் இம்மூன்றும் உறுதியாக இருக்கும் போது மாத்திரமே சுஷ்ம நாடியினின்றும் குண்டலினி சக்தி இடைவிடாது சஹஸ்ராரத்திற்கு பிரவகித்தற்கு இயலும். அப்போதுதான் சாதகனுக்கு புதிய ஆன்மீக அனுபவங்கள் ஏற்படும். படைவீரர்கள், போலீஸ் முதலானோர் அணிவகுத்துச் செல்லும் போது எவ்வாறு இம்மூன்று அங்கங்களும் நேராக இருக்கின்றதோ, அவ்வாறே தியானத்தைப் பயில்பவனும் நேராக சலனமற்று அமர்ந்து தியானித்தல் வேண்டும். 'ஸ்திரஹ்'

என்றதால் தியான காலத்தில் இடையிடையே எழுந்திராமல் தியானம் முடியும் வரை அசையாது இருத்தல் வேண்டும் என்பது பொருள்.

அவ்வாறு அசையாதிருந்து, நாலா பக்கமும் பார்வையைச் செலுத்தாது, திசைகளைப் பாராது, தியானத்தில் ஈடுபடுதல் வேண்டும். திசைகளை நோக்கினால் 'அது என்ன, அங்கே யார்?' என்பது போன்ற எண்ணங்கள் இடையிடையே வந்து தொல்லை தரும். ஆதலால் திசைகளை நோக்குதல் கூடாது என எச்சரிக்கிறார். இவ்வாறாகப் பார்வையை வெளியின்றும் திருப்பி அங்கிங்கும் சிதறவிடாமல், தன் மூக்கின் நுனியில் நிறுத்தி தியானம் தொடங்குதல் வேண்டும். இதனையே, 'பூசரீ' முத்திரையென்பர். அவ்வாறு பார்வையை நிலைநிறுத்திய பின் மனம்படிப்படியாக சலனமற்று இருக்கும். சிலர் பார்வையைப் புருவமத்தியில் நிறுத்துவர். மற்றும் சிலர் இதயத்திலும் சிலர் ஸஹஸ்ராரத்திலும் அவரவர் வசதிக்கேற்ப நிணயித்துக் கொள்ளக்கூடும். ஆரம்ப நிலையில் கண்களை முழுமையாகத் திறந்திருந்தால் காட்சிப் பொருள்கள் புலப்படும். முழுமையாக மூடியிருந்தால் உறக்கம் வந்துவிடக் கூடும், எனவே அரைக் கண் மூடி நாசியின் நுனியில் பார்வையைச் செலுத்தினால் தியானம் நன்கு புரிய இயலும். தியானத்தில் நம் பார்வையால் இடையூறு ஏற்படா வண்ணம் இருக்க வேண்டுமென்பதற்காக பகவான் இவ்வாறாக சொல்கிறார். இனி இந்திரியங்களுக்கு தடையேதுமிராது! ஜீவராசிகளின் மீது பகவானுக்கு அத்தகைய கருணை!

இவ்வாறாக தியான காலத்தில் பார்வையை பிரத்தியாகாரம் செய்து, உள்முகமாகத் திருப்பி, ஓரிடத்தில் நிலையாக ஒருமுனைப் படுத்தி, பரமாத்மாவே பரகதியென நம்பி அவனையே தியானித்தல் வேண்டும். என்னிடத்திலேயே சித்தத்தை வைத்து, என்னை தியானித்தல் வேண்டும் என்று கிருஷ்ண பரமாத்மா கூறுகிறார். எல்லா ஜீவராசிகளின் இதயத்தினுள் புத்திக்கு சாட்சியாய் நிற்பவர் கிருஷ்ண பரமாத்மாவேயாதலால் அத்தகைய ஆத்மாவையே தியானித்திருத்தல் வேண்டும். அவ்வாறு தியானத்தில் ஈடுபடுவோனுக்கு நான்கு இலட்சணங்கள் இருத்தல் வேண்டுமெனப்பட்டது. அவை யெவையெனின் 1. அமைதியான மனம், 2. அச்சமின்மை, 3. பிரம்மச்சரிய விரதம், 4. மனதை அடக்குதல்.

கடல் எங்ஙனம் அமைதியாகவும் கம்பீரமாகவும் உள்ளதோ அவ்வாறே சாதகனின் அந்தக்கரணமும் இருத்தல் வேண்டும். 'சாந் தாத்மா' என்பது 'ப்ரகாந்தாத்மா' என்றதால் சித்தத்தில் மிக்க அமைதி நிலை கொண்டிருத்தல் வேண்டுமென்பது புலப்படுகிறது. சாதக னின் மனதில் எத்தகைய அச்சமும் இருத்தல் கூடாது. காட்சிப் பொருள்கள் யாவும் மறையக் கூடியவையேயாதலால் சாதகன் எதற் கும் பயப்பட வேண்டிய தேவையேயில்லை. அல்லது அனைத்தும் தன் (ஆத்ம) சொரூபமேயாதலால் தன்னைக் குறித்த அச்சமும் தேவையில்லை. தன் (ஆத்ம) சொரூபத்தை மறந்து காட்சியை உண் மையென்று எண்ணும் போதே அச்சம் ஜீவனிடத்துத் தோன்றும். சுருதி வாக்கியங்கள் இவ்வுண்மையையே வெளிப்படுத்துகின்றன.

*யதா ஹ்யேவைஷ ஏ தஸ்மின்னு*
*சரமந்தரம் குருதே அபஅஸ்யபயம் பவதி*

*த்தீயாத்வை பயம் பவதி*

இத்தகைய முழுமையாக பயமற்ற நிலை ஏற்பட வேண்டுமாயின், பக்தி வைராக்கிய, தத்வ விசாரணைகளின் மூலம், பயிற்சியின் மூலம் சிறிதளவேனும் பயமற்ற நிலையை சம்பாதித்துக் கொண் டால் சித்தம் தியானத்தில் நிலைபெறும். எனவேதான் 'விகத பீஹ்' என்று சொல்லி அச்சமின்மை தியானசீலனுக்கு ஒரு அங்கமாக, அவசியத் தேவையாக வர்ணிக்கப்பட்டது.

மேலும் தியானசீலன் பிரம்மச்சரியத்தை நன்கு காப்பாற்றிக் கொள்ள வேண்டும். பிரம்மச் சரியத்தினால் சாதகனுக்கு சரீரத்தினா லும், மனத்தினாலும் பெரும் சக்தி ஏற்படும். பிரம்மச்சர்யம் என் னும் பதத்திற்கு, 'பிரம்மத்தில் உலவுபவன்' என்ற பொருள் இருப்பி னும், 'காமம் தொடர்பான சேஷ்டைகள், எண்ணங்கள் எவையும் இல்லாதிருத்தல்' என்ற பொருளிலேயே பொதுவாகப் பயன்படுத் தப்படுகிறது. கிருஹஸ்தர்களுக்கு கிருஹஸ்த பிரம்மச்சரியம் விதிக் கப்பட்டுள்ளது. பிரம்மச்சரியத்தை சரீரத்திற்கு மட்டுமே கொள்ளா மல், மனம், வாக்கு இவற்றிற்கும் விரிவுபடுத்தி, எவ்விஷய சங்கல் பத்தினையும் (எண்ணங்களையும்) மனதில் நிலை பெறவிடாது, திரிகரண சுத்தியுடன் அவ்விரதத்தை மேற்கொள்ளுதல் வேண்டும். பிரம்மசரியத்தின் பலன் மிக அதிகம். உலகில் இதுவரை அவதரித்த் பெரிய மகான்கள், பெயர்பெற்ற அறிஞர்கள் இவர்கள் அத்தகைய அபாரசக்தியை அடைந்தனர். எண்ணெய் இல்லாவிடில் தீபம் எவ் வாறு எரிவதில்லையோ, அவ்வாறே வீரியம் வீணாகிப் போனால்

ஞானதீபம் ஒருபோதும் எரியாது. வீர்யமே 'ஒஜஸ்'ஸா பரிணமித்து, மூளைக்கும், ஏனைய அங்கங்களுக்கும் சக்தியை, ஒளியை அளிக்கின்றது. எத்துணையோ சொட்டு இரத்தம் சேர்ந்து வீர்யமாகிறது. எனவே அது சரீரத்தில் மிகவும் அரிதான பொருள். அத்தகைய விலை மதிப்பற்ற பொருளை விஷய போகங்களில் விரயமாக்குதல் அறிஞர்களுக்கு நல்லதல்ல. அதனை தியானத்திலேயே செலுத்த வேண்டும். பிரம்மச்சரியம் மிகமிக முக்கியமானது. எனவேதான் கீதையில் விரதம் என்ற பதம் அதற்கு சேர்க்கப்பட்டது. (பிரம்மச்சாரிவ்ரதே ஸ்திதஹ). இதனை வைத்துப் பார்க்கையில் அதனது உயர்ந்த நிலை நன்கு புலப்படுகிறது. அவ்விரதத்தை எவ்வாறு சிரத்தையுடனும், மிகவும் எச்சரிக்கையுடனும், நியமத்துடன் கடைபிடிக்க வேண்டுமோ, அவ்வாறே இதனைக் கடைபிடித்தல் வேண்டுமென்று அந்த 'விரத' என்னும் பொருளின் அர்த்தபாவம். எனவே தியானசீலன் விரதத்தின் சூடாமணியான இப்பிரம்மச் சரிய விரதத்தைத் தவறாது கடைபிடித்தல் வேண்டும்.

இவ்வாறாக சாதகன் நல்ல விஷயங்களைக் கடைபிடித்து மனச் சலனத்தைக் கட்டுப்படுத்தி, ஆத்மாவிலேயே நிலைநிறுத்தி, ஆத்ம தியானம் செய்பவனாய் ஒளிரவேண்டும். 'மச்சிதஹ' 'மத்பரஹ' - முதலான சொற்களால் தியானயோகி பிறவற்றை நினையாமல் பகவானையே (ஆத்மாவையே) சிந்தித்திருந்து பகவானிடமே மனதை லயிக்கச் செய்தல் வேண்டுமென்பது தெளிவாகிறது.

வினா : தியானம் செய்பவன் ஆசனத்தின் மீது எவ்வாறு அமர்தல் வேண்டும்?

விடை : தேகம், தலை, கழுத்து இவை மூன்றையும் சிறிதும் அசையாது, தியானம் முடியும் வரை இடையில் எழுந்து விடாமல் நிலையாக அமர்தல் வேண்டும்.

வினா : பார்வையை எங்குச் செலுத்த வேண்டும்/

விடை : நாசியின் நுனியில், திக்குகளைப் பார்த்தல் கூடாது.

வினா : தியான அப்யாசி எத்தகைய இலட்சணங்கள் பொருந்தியிருத்தல் வேண்டும்.

விடை : 1. அமைதியான சித்தம் (2) அச்சமின்மை (3) பிரம்மச்சரிய விரதம் (4) மனக்கட்டுப்பாடு.

**வினா :** *இத்தகைய இலட்சணங்களுடன் இருந்து என்ன செய்ய வேண்டும்?*

**விடை :** *ஆத்மாவில் சித்தத்தை நிலை நிறுத்தி, ஆத்மாவையே தியானித்த வண்ணம் ஆன்ம ரூபமாகவே மாறுதல் வேண்டும்.*

**முன்னுரை**

*அத்தகைய தியானத்தின் பலனைப் பற்றிக் கூறுகிறார்.*

*யுஞ்ஜன்னேவம் ஸ்தாத்மானம் யோகீ நியதமானஸஹ!*
*சாந்திம் நிர்வாண பரமாம் மத்ஸம்ஸ்தாம மதிகச்சதி!! (15)*

**சொற்பொருள்**

*நியதமான ஸஹ - மனக் கட்டுப்பாடுடைய, யோகீ - யோகி, ஸதா - எப்போதும், ஏவம் - இவ்வாறாக, ஆத்மானம் - மனத்தினை, யுஞ்ஜன் - ஆத்ம தியானத்தில் நிறுத்தி, மத்ஸம்ஸதாம் - என்னிடத்தில் உள்ள (என் சொரூபமாகவேயுள்ள) நிர்வாண பரமாம் - மோக்ஷத்திலே முற்று பெறுகிற (பரமானந்த ரூபமானதும்) (ஆகும்), சாந்திம் - சாந்தியை, அதிகச் சதி - அடைகிறான்.*

**கருத்துரை**

*மனக்கட்டுப்பாடுடைய யோகி, இவ்வாறாக எப்போதும் மனதை ஆத்ம தியானத்தில் நிறுத்தி, என்னிடத்துள்ள (என் சொரூபமானதும்), மோஹத்திலே முற்றுப்பெறுவதும் (பரமானந்த ரூபமானதும்) ஆன சாந்தியை அடைகிறான்.*

**விளக்கம்**

மேற்சொன்னவாறு தியானம் செய்து வந்தால், சாதகனுக்கு எத்தகைய பலன் கிட்டுகிறது என்பதை இச்சுலோகம் விவரிக்கின்றது. அவனுக்குப் பேரமைதி கிட்டும். அந்த சாந்தி எத்தகையது? சாட்சாத் பரமாத்விடம் குடிகொண்டிருப்பது. பகவத் சொரூபமானது. காட்சிப் பொருள்களில் விஷயங்களில் கிட்டும் அமைதியல்ல அது. போகங்களினால் ஏற்படும் சுகமோ, சாந்தியோ கணநேரமே நிலைத்திருப்பவை. ஆகவே மகனீயர்கள் அமைதியை நாடி வெளியில் திரியாமல், இதயத்திலேயே தேடி அதனை அடைந்து தன்யர்கள் ஆயினர். ஆயின் அத்தகைய நிரதிசய சாந்தியைப் பெறவேண்டுமாயின், (1) மனக்கட்டுப்பாடு, (2) இடைவிடாத பயிற்சி இரண்டும்

தேவையென இங்குப் போதிக்கப்பட்டது. 'ஸதா யுஞ்ஜன்' என்பதில் மாயையை வெல்வதற்குச் சிறிதளவே பயிற்சி செய்தால் மட்டும் போதாது. இடைவிடாது பயிற்சி செய்தல் வேண்டுமென்பது தெளிவாகிறது. வைராக்கியம், விசாரணை இவற்றால் இந்திரியம், மனம் இவற்றை விஷயங்களின் மீது செல்லவொட்டாமல் தடுத்து, அதனைப் பயிற்சியால் தன்வயப்படுத்திக் கொண்டு அந்தர்முகமாக அதனைத் திருப்பி ஆத்ம தியானத்தில் நிலை நிறுத்த வேண்டும். அப்போதே நிர்வாண ரூபமான பேரமைதியெனும் பலன் கிட்டும். எத்தகைய விலையை நாம் கொடுக்கிறோமோ அதற்குத் தகுந்த பலன் கிட்டும். அவித்தையைத் தியாகம் செய்தல் என்னும் பணத்தைத் தந்தால் மோக்ஷரூப சாந்தியெனும் பலன் கிட்டும். எனவே எனக்கு இன்னும் அமைதி கிட்டவில்லையேயென்று எவரும் வருந்தத் தேவையில்லை. பகவான் தெரிவித்த இந்த (தியானரூப) சாதனையெனும் பெருஞ் செல்வத்தையடைந்தால் போதுமானது. பேரமைதி உள்ளங்கை நெல்லிக்கனியாகும்.

வினா : இத்தகைய தியான யோகத்தினால் பலன் என்ன?

விடை : பேரமைதியை ஜீவன் பெறுவான்

வினா : அந்த அமைதியின் சொரூபம் எத்தகையது?

விடை : மோட்ச ரூபமானது; பரமாத்மாவினிடத்தில் இருப்பது. (பரமாத்மரூபமேயானது).

வினா : இத்தகைய அபூர்வ பலனை அடைவதற்கு சாதகன் என்ன செய்தல் வேண்டும்?

விடை : 1. மனதை தன்வயப்படுத்துதல் வேண்டும். 2. எப்போதும் ஆத்ம தியானத்தைப் பயிற்சி செய்தல் வேண்டும்.

முன்னுரை

இனி தியானயோகியின் ஆகார நியமங்களைப் பின்வரும் இரண்டு சுலோகங்களில் தெரிவிக்கிறார்.

*நாத்யச்னதஸ்து யோகோஅஸ்தி ந சைகாந்த மனச்னதஹ!*
*நசாதி ஸ்வப்ன சீலஸ்ய ஜாக்ரதோ நைவ சார்ஜுன!!* (16)

**சொற்பொருள்**

*அர்ஜுன* - அர்ஜுன! *யோகஹ்* - (தியான) யோகம், *அதி அத்யச்* *சைஹது* - அதிகமாக உண்பவனுக்கு, *ந ஆஸ்தி* - கூடுவதில்லை. *ஏ காந்தம் அனச்சனதஹ்ச* - சிறிதும் உண்ணாதவனுக்கும், *ந* - கூடுவதில்லை. *அதி ஸ்வப்பன சீலஸ்ய* - அதிகமாக உறங்குவோனுக்கும், *ந* - கூடுவதில்லை. *ஜாக்ரதஹ்ச* - அதிகமாக விழித்திருப்பவனுக்கும் *நைவ* - கூடுவதேயில்லை.

**கருத்துரை**

அர்ஜுனா! இந்த தியான யோகமானது அதிகமாக உண்பவனுக்கும், அறவே உண்ணாதவனுக்கும் கூடுவதில்லை. அவ்வாறே மிகைப்பட உறங்குபவனுக்கும், மிகைப்பட விழித்திருப்பவனுக்கும் யோகம் கூடுவதேயில்லை.

**விளக்கம்**

தியானயோகத்திற்கு உதவும் ஆகார விகாரங்களைக் குறித்துக் கூறுகிறார் 'யோக' என்பதற்கு பகவானிடத்துச் சேர்க்கும் மார்க்கம் எனப் பொருள் கொள்ளலாம். ஆயினும் இங்குச் சொல்லப்பட்ட விஷயம் தியானமாதலால் அதுவே இங்குப் பொருத்தமாகிறது. இப்போது கூறப்போகும் ஆகார நியமங்கள் எல்லா யோகங்களுக்கும் தேவையேயென்று அறிய வேண்டும்.

அதிகமாக உண்பவனுக்கு தியானம் கூடுவதில்லை. மிதமான ஆகாரத்தை உண்பவனுக்கு மாத்திரமே தியானம் கூடும்.

> *மிதமான ஆகார இலட்சணங்கள் -*
> *தௌவ்வா யாகௌ பூரயே தைன்னஹ்*
> *ஹேரயேன நகம் ப்ரபூரயேத்*
> *மாருதஸ்ய ப்ரசாராத்தம் சதுர்த்தமவ சேஷயேத்*

வயிற்றில் பாதிபாகம் அன்னம் முதலானவற்றாலும், கால்பாகம் நீராலும், மிகுந்த பாகம் காற்றுத் திரிவதற்கு அனுகூலமாகக் காலியாக இருக்க வேண்டும்.

ஆகார நியமமென்பது ஆன்மீக சாதனைக்குத் தேவையான விஷயமல்ல எனக் கருதி அதனை அலட்சியப்படுத்துவர். ஆயின் பகவான் அதற்கு முதன்மையான முக்கியத்துவம் அளித்து அதனை மிகவும் எச்சரிக்கையுடன் பின்பற்றுதல் வேண்டுமென கீதையில்

பலவிடங்களில் வலியுறுத்திக் கூறிச் செல்கிறார். சிறிய ஆணி ஒன்று சரியாகப் பொருத்தப்படாவிட்டால் எவ்வாறு இயந்திரம் நின்று விடுகிறதோ அவ்வாறே ஆகாரத்தின் நிலையுமாகும். அது சரியாக இல்லாவிடில் மோட்ச சாதனம் கிடைப்பதில்லை. வாழ்க்கை முழுவதும் (1) ஆகாரம், (2) உறக்கம் என்ற இரண்டு திருடர்களும் களவு கொண்டுவிடுகின்றனர். விவேகமற்றவர்களுக்கு வாழ்நாள் முழுவதும் அவ்விரண்டிலேயே கடந்து போய்விடுகின்றது. கிடைத்தற்கரிய மனிதனின் வாழ்நாளை, பந்த விருத்திக்காக முயற்சி செய்ய வேண்டிய இவ் உத்தமமான வாழ்நாளை ஆகாரம், உறக்கம் என்பதிலேயே விரயமாக்குதல் நல்லதல்ல. உணவு, உறக்கம் இரண்டும் மனிதனுக்குத் தேவையே. ஆயின் அது எதுவரை வாழ்க்கையை நடத்துவதற்கு பரமாத்மா சிந்தனைக்கு அவசியமோ அந்த அளவே இருந்தால் மட்டும் போதுமானது. அதற்கு அதிகமாகவோ, அல்லது குறைவாகவோ இருந்தால் பகவத் சிந்தனை கைகூடாது. இவ்விஷயத்தையே இங்கு இரண்டு சுலோகங்களில் பகவான் கூறுகிறார்.

அளவுக்கு அதிகமான உணவால் உடல் பளு அதிகமாகி, சோம்பலும் அதிகமாவதால் தியானத்தில் அமர்தல் கூட கடினமாகிவிடும். 'சமம் காய சிரோ கீவம்' (சரீரம், தலை, கழுத்து நேராக இருத்தல்) என்பது சரீரம் பருத்து விட்டால், சாத்தியமாகாது. ஒரு வேளை பலவந்தமாக அமர்ந்தாலும் உறக்கம் வந்துவிடும். தியானத்தில், தேகத்தைத் தாண்டி இந்திரியங்களைத் தாண்டி, மனதையும் தாண்டி அதற்கப்பால் உள்ள ஆத்மாவிடம் செல்ல வேண்டியவர்கள், அதன் பிறகு தேகத்தினைப் பற்றிய எண்ணத்தால் தேகத்திற்கு அருகிலேயே நின்றுவிடுவர். இவ்வாறாக அதிக உணவு தியானத்திற்குத் தடையாகிறது. அதனால் மிதமான ஆகாரம் உண்ணுதல் வேண்டும். அவ்வாறே உணவே புசிக்காதவர்க்கு தியானம் கூடுவதில்லை. ஏனெனில், ஆகாரத்தினால் தான் சரீரம், மனம் இவை ஏற்படுகின்றது. ஆகாரம் இல்லாவிடில் அவை ஹீனமடைந்து போவதால், தேகத்தினால் அமர்வதற்கோ மனதால் தியானிப்பதற்கோ சக்தி இராது.

எனவே தியானயோகி மிகவும் கடினமான உபவாசமிருத்தல் கூடாது. எப்போதாவது ஆரோக்கியத்திற்காக (ஏகாதசி முதலான விரத நாட்களில்) உபவாசம் இருக்கக் கூடும். இவ்விதமாக அதிகமான உணவோ ஆகாரம் உண்ணாதிருப்பது என்ற இரண்டையும் விடுத்து மிதமான ஆகாரத்துடன் தியான யோகத்தைக் கடைபிடித்தவர் வெற்றியடைவர்.

அவ்வாறே உறக்கத்திலும் கூட எச்சரிக்கையாக இருந்து உறக்க மின்மையோ, அல்லது அதிகமான உறக்கமோ இரண்டையும் விடுத்து - மிதமான உறக்கத்துடன் இருந்தால் யோகம் நன்கு கூடும். அவரவர் சரீர அமைப்பையொட்டி ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமாக ஓய்வு தேவைப்படுகிறது. அது இல்லாவிடிலோ அல்லது மிதமிஞ்சிப் போனாலோ, இரண்டும் அபாயகரமாகிறது. எனவே சாதகன் ஆகாரம், உறக்கம் இரண்டிலும் மிதமாக (moderation) இருந்து ஆன்மீக சாதனையில் முன்னேற்றமடைதல் வேண்டுமென பகவான் போதிக்கிறார்.

**வினா :** தியானயோகி ஆகாரம், உறக்கம் இவற்றில் எவ்வாறு நடந்து கொள்ளவேண்டும்.

**விடை :** அவற்றை மிதமாக கொள்ளல் வேண்டும். அதிக ஆகாரமோ, ஆகாரமின்மையோ, அதிக உறக்கமோ, உறக்கமின்மையோ கூடாது.

**முன்னுரை**

இவ்விஷயத்தையே மறுபடியும் கூறுகிறார்.

*யுக்தாஹார விஹாரஸ்ய யுக்த சேஷ்டஸ்ய கர்மஸு!*
*யுக்தஸ்வப்னாவ போதஸ்ய யோகோ பவதி துக்கஹா!! (17)*

**சொற்பொருள்**

யுக்தா ஹார விஹாரஸ்ய - மிதமான உணவு உண்பவனுக்கு, கர்மஸு - தன் கடமைகளைச் செய்வதில், யுக்தசேஷ்டஸ்ய - அளவுடன் ஈடுபடுபவனுக்கு, யுக்த ஸ்விட்னாவபோதஸ்ய - மிதமான உறக்கம், விழிப்பு இவையுடையவனுக்கு (உள்ள மனிதனுக்கு) யோகஹ்யோகம், துக்கஹா - (ஜனன மரணம் முதலான) துக்கங்களைப் போக்குவதாக பவதி - ஆகிறது.

**கருத்துரை**

மிதமாய் உண்டு, உடற் பயிற்சி செய்வோனுக்கு, கர்மங்களையும் அளவுடன் செய்து, உறக்கத்திலும் விழிப்பிலும் முறையாக மிதமாக இருப்பவனுக்கு, யோகம், (ஜனன மரணம்) முதலான சம்சார துக்கங்களைப் போக்குவதாக உள்ளது.

**விளக்கம்**

மேற் சுலோகத்தில் ஆகாரம், உறக்கம் இவற்றில் யோகி எவ்வாறு நடந்து கொள்ள வேண்டுமெனக் கூறினார். இங்கு ஏனையக் கிரியையைகள், எவ்வாறு செய்தல் வேண்டுமென்பதைக் கூறுகின்றார். ஆகாரவிகாரங்களில், செயல்களில் உறக்கம், விழிப்பில் மிதமாக இருப்பவனுக்கு யோகம் துக்கத்தினைப் போக்கக் கூடியது என்று போதிக்கிறார். முறைதவறி நடந்தால் யோகம் ஜீவனுக்கு துக்கத்தைப் போக்க இயலாது. எனவே சாதகன் எவராயினும் துக்கம் தீர வில்லையாயின் அதற்குக் காரணம் அவர்களது சாதனை முறையில் உள்ள குறையேயன்றி யோகத்தில் குறையில்லையென்பதை உணர்தல் வேண்டும். இஷ்டப்படி நடந்தால் யோகத்தின் நற்பலன் கிட்டாது. நல்ல மருந்தாயினும் அதைச்சரிவரப் பயன்படுத்தாவிடில் வியாதி குணமாவதில்லை. அவ்விஷயம் இங்கு மிகத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. சிலர் தியானத்தைஆரம்பித்துவிட்டு, அல்லது ஆன்மீக சாதனையில் வேறு பலவற்றையும் ஆரம்பித்துவிட்டு மிகுந்த ஆவேசத்துடன் இரவு பகல் அதனை விடாது மேற்கொண்டு கடைசியில் சரீரம் மனம்அனைத்தும் சோர்ந்து போய் பழியை யோகத்தின் மீது போடுவர். அது சரியல்ல. அது யோகத்தின் குற்றம் அல்ல. அவர்களது செயற்பாட்டில் உள்ள குற்றமேயாகும். யோகம், ''துக்கஹ'' என்று சொல்லப்பட்டதேயன்றித் 'துக்கஜ' எனப்பட வில்லை. யோகம் துக்கத்தைப் போக்கடிக்குமேயன்றி துக்கத்தைத் தருவதில்லை. ஒரு வேளை யோகத்தினால் துக்கமேற்பட்டால் அது யோக சாதனை முறையில் நாம் செய்த தவறால் மட்டுமே ஏற்படக் கூடுமேயன்றி யோகத்தால் அல்ல.

திரியும் தீபத்தில் திரியை மிதமாக எரிய விட்டால் இரவு முழுவதும் எரியும். திரியைப் பெரிதாக்கினால் கரிபடிந்து ஒளிகுறைந்து போகும். திரியை நன்கு குறைத்து விட்டால் ஒளியே இல்லாது போகும். எனவே மிதமாக இருப்பதே சிறந்தது. புத்தர் தன் சாதனை காலத்தில் ஒரு முறை உணவு உண்ணாமல் இருந்து தியானம் செய்ய இயலாமல், மறுபடியும் ஓரளவு உண்ண ஆரம்பித்ததாக சரித்திரம் கூறுகிறது. எனவே 'அதி ஸர்வத்ர வர்ஜயேத்' என்ற சூத்திரத்தினை சாதகன் நன்கு நினைவில் வைத்திருந்து நடந்துகொள்ளுதல் வேண்டும். சாதகன் ஆகார விகார, நித்திரை இவற்றில் மிதமின்றி நடந்து கொள்ளாது, தகுந்த அளவு சரியான உணவு, உறக்கம் இவற்றுடன் தியான யோகத்தினைச் செய்து வந்து அதன்மூலம் துக்கத்தைப் போக்கிக் கொள்ள வேண்டும்.

துக்கத்தைப் போக்கிக் கொள்ள விரும்புவோர் அனைவரும் யோகத்தினை (ஆத்மதியானத்தை) மேற்கொள்ளுதல் வேண்டு மென்பதும் அதற்குச் சரியான ஆகார, விகார நியமங்களைப் பின் பற்ற வேண்டுமென்பதும் இதன்மூலம் தெளிவாகிறது.

**வினா :** *(தியான) யோகத்தின் பலன் என்ன?*

**விடை :** *துக்கமின்மை*

**வினா :** *அவ்யோகத்தினை எத்தகைய நியமங்களுடன் ஏற்க வேண் டும்?*

**விடை :** *1. மிதமான உணவு, 2. மிதமான காரம், 3. மிதமான செயல் கள், 4. மிதமான உறக்கம், 5. மிதமான விழிப்பு இவற்றுடன் இருத் தல் வேண்டும். எதிலும் மிதமாக இருத்தல் வேண்டும்.*

**வினா :** *துக்கம் தொலைவதற்கான வழியாது?*

**விடை :** *யோகம் (தெய்வத்தியானம் - ஆத்ம சிந்தனை)*

**முன்னுரை**

தியானத்தின் இலட்சணங்களைக் கூறுகிறார்.

*யதா விநியதம் சித்தமாத்மன்யேவா வதிஷ்டதே|*
*நிஹ் ஸ்ப்ருஹஹ் ஸர்வ காமேப்யோ யுக்த இத்யுச்யதே ததா||* (18)

**சொற்பொருள்**

யதா - எப்போதும், சித்தம் மனம், நிவியதம் - (ஸத்) - நன்கு அடக்கப்பட்டதாய், ஆத்மணி ஏவ - ஆன்மாவிலேயே, அவதிஷ் டதே - நிற்கின்றதோ, (யதா - அப்போது, யோகீ - யோகி), சர்வ காமேப்யஹ் - எல்லா ஆசைகளினின்றும், நிஹ்ஸ்பருஹஹ் - நீக்கப் பட்டு, (ஆசைகளற்றவனாய்) (இருக்கின்றானோ), ததா - அப் போது, யுக்த ஹ - யோக சித்தியை அடைந்தவன் என்று (சமாதியுக் தன் என்று) உச்யதே - சொல்லப்படுகிறான்.

**கருத்துரை**

எப்போது மனம் நன்கு அடக்கப்பட்டு, ஆன்மாவிலேயே நிலைக்கின்றதோ, மேலும் எப்போது யோகி எல்லாவிதமான ஆசை களினின்றும் விடுபடுகிறானோ, அப்போதே அவன் யோகசித்தியை

அடைந்தவன் (சமாதி யுக்தன்) என்று சொல்லப்படுகிறான்.

விளக்கம்

யோக சித்தியை மனிதன் எப்போது அடைகிறான் என்பது இங்குக் கூறப்பட்டது. மோக்ஷத்திற்குக் கால நியமம் ஏதுமில்லை என்பதைப் பல முறை கூறியுள்ளார். எப்போது மனிதன் மேற் சொன்ன மூன்று இலட்சணங்களை, அதாவது, 1. எல்லாவிதமான ஆசைகளற்று இருத்தல், 2. மனக்கட்டுப்பாடு, 3. ஆத்மநிலை - என்றவற்றைப் பெற்றிருக்கிறானோ அப்போது அவன் மோட்சம் அடைந்தவனாகப் போற்றப்படுகிறான். பகவான் தெரிவித்த இம் மூன்று இலட்சணங்களையே 1. வாசனாக்ஷயம், 2. மனோ நாசம், 3. தத்வ ஞானம் என்று கூறுவர். அவற்றை ஒன்றினால் மற்றொன் றைச் சாதிக்க முடியும்.

1. நிஸ்ப்ருஹ ஹ்சர்வகாமேப்யா ஆசைகள் ஜீவனைக் கட்டுப்ப டுத்தும் எண்ணங்களாம். விஷய போகங்களில் மனிதனுக்கு எப் போது ஆசை ஏற்படுகிறதோ, அப்போது சித்தம் நிலைபெறாது சலனமடைகிறது. ஆதலால் அதன் பிறகு தியானத்தில் நிலைபெ றாது. எனவே கட்டைகளை நீக்கிவிட்டால் அக்னி அணைந்து விடு வதைப் போல் விவேக வைராக்கியங்களினால் ஒவ்வொரு ஆசை யாக, போகங்களாக, விஷய சங்கல்பங்களை இதயத்தினின்றும் எடுத்து வெளியே எறிந்து விட்டால் மனம் தானாகவே அதிஷ்டமான ஆத்மாவில் லயிக்கும். 'ஸ்வகாமேப்ய' என்றதால் ஏதோ சில ஆசை களை, விட்டுவிட்டால், மட்டும் போதாது எல்லா ஆசைகளையும் ஒழித்தல் வேண்டும் என்பது தெளிவாகிறது.

2. 'வினியதம் சித்தம்' - சித்தம் நன்கு கட்டுப்படுத்தப்பட வேண்டும். சாதாரணக் கட்டுப்பாடு போதாது. எனவேதான் வினிய தம் - (யதம் - சுவாதீனப்பட்ட, நியதம் - முழுமையாக சுவானதீனப் பட்ட, விநியதம் - நன்கு முழுமையாகக் கட்டுப்படுத்தப்பட்ட) என்று சொல்லப்பட்டது. கட்டுப்படுத்தப்பட்ட குதிரைகளையு டைய, ரதத்தையுடையவன் இடையூறு ஏதுமின்றிச் சேரவேண்டிய இடத்தைச் சென்றடைவதைப் போல, கட்டுக்குள் இருக்கும் இந்தி ரிய; மனம் இவற்றையுடையவன் மோக்ஷமெனும் இடத்தை விரை வாகவே சென்றடைவான்.

(3), 'ஆத்மன்யே விரிவதிஷ்டதே' - சித்தத்தில் ஆசைகளனைத் தும் அழியும்போது, சித்தம் தன் உருமாறி அதிஷ்டானமான ஆத்மா

வில் லயித்துப் போகும். வேறெங்கும் செல்லாது ஆத்மாவிலேயே நிலைத்துவிடும். அதுவே மோக்ஷம்.

இவ்வாறு மேற்சொன்ன மூன்று இலட்சணங்களையும் உடையவன் யோகசித்தன் எனப்படுகிறான்.

**வினா :** யோகசித்தன் என்றும் மோக்ஷயுக்தன் என்றும் எவன் சொல்லப்படுகிறான்?

**விடை :** 1. ஆசைகள் ஏதுமின்றி (2) மனதை முழுமையாகக் கட்டுப்படுத்தி, 3. ஆன்மாவிலேயே அதனை நிலை நிறுத்தினால் அப்போதே அவன் யோகசித்தன் அல்லது மோக்ஷயுக்தன் எனப்படுகிறான்.

**வினா :** மோக்ஷத்தை அடைவதற்கான உபாயத்தைக் கூறுக?

**விடை :** 1. எல்லாவிதமான தேவைகள், ஆசைகளை விட்டுவிடுதல், 2. மனதை நன்கு கட்டுப்படுத்துதல், 3. மனதை ஆத்மாவில் நிலைநிறுத்துதல்.

**முன்னுரை**

சமாதி நிலையில் யோகியின் மனம் எவ்வாறிருக்கும் என்பதை வர்ணிக்கின்றார்.

*யதா தீபோ நிவாதஸ்தோ நேங்கதே ஸோபமா ஸ்ம்ருதா!*
*யோகினோ யதசித்தஸ்ய யுஞ்ஜதோ யோக மாத் மண ஹ!!* (19)

**சொற்பொருள்**

நிவாதஸ்த - காற்றில்லாத இடத்தில் வைக்கப்பட்ட, தீபஹ் - தீபம், யதா - எவ்வாறு ந இங்கதே - அசைவதில்லையோ, அது (அத்தகைய நிஷ்டை), ஆத்மனஹ் யோகம் - ஆத்மதியானத்திலும், யுஞ்ஜதஹ - பயிலுகின்ற (அனுஷ்டிக்கின்ற), யோகினஹ - யோகியின், யதசித்தஸ்ய - கட்டுப்படுத்தப்பட்ட மனத்திற்கு, உபமா - உபமானமாக, ஸ்ம்ருதா - நினைக்கப்படுகிறது.

**கருத்துரை**

காற்று வீசாத இடத்தில் உள்ள தீபம் எவ்வாறு அசையாது சலனமின்றி இருக்கிறதோ, அவ்வாறே ஆத்ம தியானத்தைப் பயிலுகின்ற யோகியின் அடங்கிய மனதும் சலனமின்றி இருக்கும். ஆகவேதான் சலனமற்ற மனதிற்குக் காற்றில்லாத இடத்தில் வைக்கப்பட்ட தீபம்

உபமானமாகச் சொல்லப்படுகின்றது.

**விளக்கம்**

மலை சலனமின்றி இருப்பினும், அதற்கு ஒளியில்லையாத லால் அதனை இங்கு உவமானமாகச் சொல்லப்படவில்லை. காற் றில்லாத இடத்திலுள்ள தீபம் சலனமற்றும் ஒளியுடன் கூடியும் இருக் கும். எனவேதான் யோகியின் ஞானஒளி, சலனமற்ற சித்தத்திற்கு உபமானிக்கப்பட்டது. தினசரி வாழ்க்கையில் காணப்படும் மிகவும் சாதாரணமான உபமானங்களுடன் போதித்தல் கீதையின் ஒரு சிறப்பு. அதனால் சொல்லப்பட்ட கருத்து நன்கு மனதில் பதிகின் றது. ஜன்னல்கள், வாயில்கள் திறந்து வைத்துள்ள அறையில் அகல்வி ளக்கு தீ அவ்வாயில்களில் வீசும் காற்றினால் சலனப்படும். அல்லது அணைந்துவிடும். அவ்வாறே அஞ்ஞானியின் சித்தம் இந்திரிய வாயில்களின் வழியாக நுழையும் விஷயங்களின் மீதான ஆசையி னால் சபலமடைந்திருக்கும். யோகியையோ, சப்தாதி விசயங்கள் தாக்காது. ஸர்வத்பாராணி சம்யம்ய! என்பதைப் போல இந்திரியார்த் தங்களனைத்தையும் விஷயமெனும் காற்றினை உள்நுழையவிடா மல் கட்டுப்படுத்துவதால் அவனது மனம் என்னும் ஒளி சலனமற்று ஆன்மாவில் நிலைபெறுகிறது. சலனமற்ற, தூய்மையான நீரில் சூரி யனின் பிம்பம் நன்கு தெரிவதைப் போல, சலனமற்ற தூய்மையான மனத்தில் ஆத்ம ஒளி நன்கு விட்டு (அல்லது அத்தகைய மனம் அதிஷ்டானமான ஆத்மாவில் லயிக்கிறது) பிரம்மானந்த அனுபூ தியை அடைகிறது. அஞ்ஞானிக்குச் சலனத்துடன் கூடிய மனதான தால் ஆத்மா ஒளிவிட்டு பிரகாசிப்பதில்லையாதலால் துக்க அனுபூ தியே கிடைக்கின்றது. எனவே 1. சித்தத்தைக் கட்டுப்படுத்துதல், 2. அதனை ஆத்ம தியானத்தில் நிலை நிறுத்தல் என்ற இரண்டு கிரியைக ளினால் யோகிக்கு, சலனமற்ற தீபத்தின் ஒளிபோல, ஆத்மானந்தம் தோன்றுகிறது. அதுவே மோக்ஷம்.

**வினா :** ஆத்மா தியானத்தைப் பயிலும் யோகியின் மனத்தை எதனு டன் உவமிக்கலாம்?

**விடை :** காற்றில்லாத இடத்தில் உள்ள தீபத்துடன் (அத்தகைய தீபத்தைப் போல யோகியின் மனம் சலனமற்று, ஒளியுடன் பிரகாசிக் கும் என்பது பொருள்)

**வினா :** மனதை ஆன்மாவில் நிலைத்தல் என்றால் என்ன?

**விடை :** அடக்கப்பட்டதாக, தன்வயப்பட்டதாக இருத்தல் வேண் டும்.

### முன்னுரை

ஆத்ம சாட்சாத்காரமான அத்தகைய (தியான) யோகத்தின் மகிமையை நான்கு சுலோகங்களின் மூலம் தெரிவிக்கிறார்.

*யத்ரோ பரமதே சித்தம் நிருத்தம் யோக சேவயா!*
*யத்ர சைவாத் மனாத்மானம் பச்யன் னாத்மணி துஷ்யதி!! (20)*

*ஸுகமாத்யந்திகம் யந்தத்புத்தி க்ராஹ்ய மதீந்த்ரியம்!*
*வேத்தி யத்ர சைவாயம் ஸ்திதஸ் சலதி தத்வத ஹ!! (21)*

*யம் லப்தவா சாபரம் லாபம் மண்யதே நாதிகம் ததஹ!*
*யஸ்மின்ஸ்திதோ ந துக்கேன குருணாபி விசால்யதே!! (22)*

*தம் வித்யாத்துக்க ஸம்யோக வியோகம் யோக ஸம்ஜிதம்!*
*ஸ நிஸ்சயேன யோகிதவ்யோ யோகோ அநிர்விண்ண சேதஸா!! (23)*

### சொற்பொருள்

யோக சேவயா - யோகாப்யாசத்தால், நிருத்தம் - நன்கு அடக்கப்பட்ட (விஷயங்களினின்றும் திருப்பப்பட்ட), சித்தம் - மனம், யத்ர - எப்பொழுது, உபரமதே - அமைதி பெறுகிறதோ, யத்ரச - எப்பொழுது, ஆத்மனா - (தூய்மையான) மனத்தினால், ஆத்மானாம் - ஆத்மாவை, (சுவஸ்வரூபத்தை), பச்யன் - பார்த்து (அனுபவித்துக் கொண்டு) ஆத்மன்யேவ - (ஆத்மாவினிடத்தே) தன்னிடத்தேயே, துஷ்யதி - ஆனந்தத்தை அடைகிறானோ, யத்ர அப்போது ஸ்திதஹ - நிலைத்தவனாய், அயம் - இந்த யோகி, யத் - எது, அதீந்திரியம் - இந்திரியங்களுக்கு அப்பாற்பட்டதோ, புத்தி க்ராஹ்யம் - புத்தியினால் (பிரக்ஞையஸ்) கிரகிக்கப்படுவதோ, அத்யந்திகம் ச - முடிவில்லாததோ, தந்சுகம் - அந்த சுகத்தினை, வேத்தி - அறிகிறானோ, ச - மேலும், தத்வதஹ - ஆத்மானுபவத்தினின்று, நைவ சலதிட சிறிதளவும் அசைவதேயில்லையோ, யம் - எதனை, லப்தவா - அடைந்தபின் அபரம் - வேறான, லாபம் - லாபத்தை ததஹ - அதைக் காட்டிலும், அதிகம் அதிகமான ந மன்யதே - எதையும் எண்ணுவதில்லையோ, யஸ்மின் - எதில் ஸ்திஹ் - நிலைத்திருந்து, குருணா - சிறந்ததான, துக்கேன அபி - துக்கத்தாலும், ந விசால்யதே - அசைக்கப்படுவதில்லையோ, துக்கஸம்யோக வியோகம் - துக்கத்தின் தொடர்பு ஏதுமில்லாத, தம் - அதனை, யோக ஸம்ஜிதம் - (தியான) யோகமெனும் பெயருடைய சொல்லப்பட்ட, வித்யாத் -அறிய வேண்டும், ஸயோகஹ் - அந்த யோகம், அநிர்விண்ண சேதசா -

கலப்படமற்ற (துக்கமற்ற, சோர்வின்றி) மனத்தினால், நிஸ்சயேன - ஆர்வத்துடன், யோகத்வ்யஹ் - அடையத் தக்கது.

**கருத்துரை**

யோகாப்பியாசத்தால் அடக்கப்பபெற்ற மனம் எப்போது அமைதி அடைகிறதோ, எப்போது (தூய்மையான) மனதினால் ஆத்மாவைக் கண்டு (அனுபவித்துக் கொண்டு) யோகி தன்னிலேயே ஆனந்தத்தைக் காண்கின்றானோ, எங்கிருப்பினும், யோகி இந்திரியங்களுக்குப் புலப்படாததும் (நிர்மலமான) புத்தியினால் கிரகிக்கப் படுவதும், முடிவில்லாததும் ஆன சுகத்தினை அனுபவிக்கிறானோ, மேலும் தன் அனுபவத்தினால் சிறிதளவும் அசைவற்றிருக்கிறானோ, எதனை அடைந்த பின்பு ஏனைய லாபங்களை அதனினும் மேலாகக் கருதுவதில்லையோ, எதில் நிலைத்திருந்து மிகப் பெரிய துக்கத்தினால்கூட அசைவதில்லையோ, துக்கம் சிறிதளவேனும், இல்லாத அந்த நிலையையே யோகம் (ஆத்ம ஐக்கியம், ஆத்ம சாட்சாத்காரம்) என்றறிதல் வேண்டும். அத்தகைய ஆத்ம சாட்சாத்காரமான யோகத்தினை துக்கத்தினால் கலப்புறாத தீரமான மனத்தினால் ஊக்கத்துடன் செயல்பட்டு சாதித்தல் வேண்டும்.

**விளக்கம்**

ஜீவ பிரம்மத்தின் ஐக்கிய ரூபமான, ஆத்ம சாட்சாத்காரமான தியான யோகத்தின் மகிமை எத்தகையது என்பதை இந்நான்கு சுலோகங்களும் தெரிவிக்கிறது. தியான யோகத்தினால் மனம் ஆன்மாவில் லயித்து பேரமைதியை, இன்பத்தை அடைகிறது. அதுவே ஜீவனின் இலட்சியம், கட்டுப்படுத்தப்பட்ட மனமே அங்ஙனம் ஆன்மாவில் லயிக்கும். அதாவது விஷயங்களின்றும், திரும்பிய வாசனைகளற்ற மனமே, ஆத்ம ஐக்கியத்தை அடைய முடியும். மனதைக் கட்டுப்படுத்துதல் எங்ஙனம்? 'யோக சேவயா' - யோகா அப்பியாசத்தினால், சாதனையால் மனது கட்டுப்படும். முயற்சி வைராக்கியம் இவற்றினால் மனம் அதுவே தன்னிச்சையின்றியே கட்டுப்படுகிறது. எனவே 'யோகசேவ' தவறாது செய்தல் வேண்டும். அஞ்ஞானிகள் 'விஷய சேவை'யை எவ்வாறு செய்கிறார்களோ அவ்வாறு ஞானிகள் 'யோக சேவை' செய்கிறார்கள். எனவே விஷயசேவையை தெய்வ சேவையாக மாற்றினால் மாத்திரமே ஜீவன் கடைத்தேற இயலும்.

அத்தகைய யோகாப்பியாசத்தினால் ஜீவன் தூய்மையாக்கப் பட்ட தன்மனத்தினால் அந்தரங்கத்தில் ஆத்மாவை அமர்த்திப்

பேரின்பத்தைப் பெறுகிறான். 'வஸ்யன்' என்று சொன்னதால் ஆன்ம வஸ்து புலப்படாதது அல்ல என்பதும், நேருக்கு நேர் அதனைக் காணக்கூடும் என்பதும் (அனுபவித்தறியும் அறிவிது) தெளிவாகிறது. இங்குக் காண்பது என்பது கண்ணால் காண்பது அல்ல. ஆன்மநிலையில் காண்பது என்பதே இல்லை. எனவே இங்கு 'அனுபவித்தல்' என்பதே பொருளாகும். அதாவது தூய்மையான மனம் மாத்திரமே ·ஆன்மாவை அனுபவித்தல் இயலும். தூய்மையற்ற மனம் அல்ல. ஆன்மாவைத் தரிசித்தல் என்பதற்கு ஈடாக உலகில் உள்ள எப்பொருளையும் உவமைகாட்டல் இயலாது. நமது தூய்மையான மனம் ஒன்றினையே அதற்கு உவமையாகக் கூற முடியும்.

அப்படியாயின் ஆன்மா எங்குளது? பகவான் எங்குளார்? 'ஆத்மா'விலேயே உள்ளவன் அவனை வெளியில் தேடவேண்டிய அவசியமில்லை. தன் இதயத்திலேயே ஒவ்வொருவரும் பரிசோதித்துக் கொண்டால் போதுமானது. பகவான் நம் அருகிலேயே வசிக்கின்றார். எனவே இவ்வாக்கியம் சாதகர்களுக்கு மிக்க தைரியத்தை ஏற்படுத்துகின்றது. அவ்வாறு ஆன்மாவை தன்னிலேயே காண்பதால் பயன் என்ன? 'துஷ்யதி' - பேரின்பம் ஏற்படுகின்றது. இதுவே அதன் பயன். அற்ப சுகங்களை வெளியில் தேடித் தேடி அலைந்து, மனம் அலுத்துப்போய், இறுதியில் அந்தர் முகமாக மனத்தைத் திருப்பி மனிதன் பரமானந்தத்தை அறிந்து கொண்டு தன்யனாகிறான்.

அந்த சுகம் எத்தகையது? முடிவில்லாதது. இந்திரியங்களுக்கு அப்பாற்பட்டது. நிர்மலமான புத்தியினால் அறிந்து உணரக்கூடியது. புத்தி தூய்மையடையும் போது அது தன் உபாதி ரூபத்தை விடுத்து ஆத்மாகாரமாக பரிணாமம் அடைகின்றது. அத்தகைய தூய்மையான புத்தியினால் ஆத்மசுகம் அனுபவமாகிறது. அது இந்திரியங்களுக்கு எட்டாதது. இந்திரியங்களுக்கு அடிமைப்பட்டு வெளிப்படையான காட்சியுடையவனாய் இருப்பவர்க்கு அது எந்நாளும் புலப்படாது. அப்படியாயின் ஆன்மசுகம் இந்திரியங்களுக்குப் புலப்படாது என்று சொல்லி, மறுபடியும் (ஒருவாறு இந்திரியமேயான) புத்தியினால் உணர முடியும் என்று சொல்வது, ஒன்றுக்கொன்று எதிர்மறை எனின் அல்ல. புத்தி மிகவும் தூய்மையடையும் போது அது தன் இந்திரிய உருவை இழந்து, பிரம்மமாகவே உருவெடுக்கிறது. (உப்புக்கல்லும் ஆலங்கட்டியும் கடலில் கலப்பதைப் போல்). மேலும் 'புத்திக்ரஹ்யு' என்று சொல்வதால் ஆன்மா ஒவ்வொருவராலும் கிரகித்துக் கொள்ளக் கூடியதே என்றும், அதற்காக எவரும் அஞ்சத் தேவையில்லை என்பதும், அவரவர் புத்தியை அவரவர் தூய்மைப்படுத்திக் கொண்டால் போதுமென்பதும், தெளிவாக்

கப்பட்டுள்ளது. 'அதீந்திரியம்' என்றதால் இந்திரியங்களின் செயல்க ளிலேயே ஈடுபாடு கொண்டிருப்பவனுக்கு அந்த ஆத்மானந்தம் கன வில்கூட தெரிவதில்லை எனத் தெரிவிக்கப்பட்டுள்ளது. மேலும் ஆத்மசுகம் அளவில்லாதது என்று சொல்வதால், ஏனைய காட்சிப் பொருளாளானவை அனைத்தும் அழியக்கூடியவையாதலால் அவற் றிற்காக அலைதல் கூடாது என்பதும் சொல்லப்பட்டது.

அத்தகைய ஆத்மானந்தத்தில் திளைத்திருக்கும் யோகி அதனின் றும் அசையாது அதிலேயே லயித்துவிடுவான் என்பதும் கூறப்பட் டது. மகரந்தத்தைச் சுவைக்கும் வண்டு அதன் வாசனையை விடுத் துப் போக நினைக்குமா? உண்மைப் பொருளைக் கண்டுணர்ந்தவன் மறுபடியும் மாயையான அழியக்கூடிய பொருள்களின் மேல் ஈடுப டுவானா? பிம்பத்தையே நேரில் காண்பவன் பிரதி பிம்பத்தையே வேண்டும் என்பானா? அவ்வாறு ஒருவேளை விரும்பினால் அவன் முழுமையான உண்மைப் பொருளை உணர வில்லை என்று பொருள். கனவுலகில் சஞ்சரிக்க விரும்பிய அவன் இன்றும் ஊக்கத் தினின்றும் எழவில்லை என்று அர்த்தம்.

உலகில் உள்ள எல்லா லாபங்களைவிட மிகச் சிறந்த லாபம் ஆத்மானந்தம். எனவே தியானயோகி அதனை அடைந்த போது அதனையே மிகச் சிறந்த லாபமாகக் கருதி ஏனைய உலகப் பொருள் களினால் கிடைக்கும் லாபங்களைக் கீழாகவே கருதுவான். உலகில் ஒவ்வொருவனும் லாபத்தைக் கருதியே செயல்படுவான். வர்த்தகன் தான்யத்தை அளக்கும்போது கூட 'ஒன்று' என்று எண்ணாமல் 'லா பம்' என்பான். ஆயின் உலக விஷயமாக எத்துணை லாபங்களை அடைந்தாலும் அவை சிறிது காலமே நிலைக்கும். இல்லை அந்த லாபங்கள் நிலைத்திருந்தாலும், அனுபவிக்கும் உபாதி சிறிதுகாலத் தில் அழிந்துபடுவான். எனவே இவையனைத்தும் கணநேரமிருக் கும் அழியக் கூடிய லாபங்களே. பேரமைதி, பிறப்பு, இறப்பு எனும் துக்கமின்மை, நித்தியசுகம் இவற்றைக் கொடுக்கும் ஆத்மானுப வமே சிறந்த லாபம். எனவேதான் அதனை அடைந்தவன் இதர ஏனைய பொருள்களின் மீதோ அவற்றினால் அடையக் கூடிய லாபங்களைப் பற்றியோ, பிரம்மாண்டத்தை ஆளக்கூடிய தலை மைப் பதவியைக் கூட பெருமையாகக் கருதமாட்டான் என்கிறார். எனவே விவேக முடையவன் இத்தகைய இறை ஐக்கியத்தின் மீது நம்பிக்கை வைத்து; அழியக்கூடிய உலகப் பொருள்களிலான லாபத்தை மதிக்காது அறியக்கூடிய லாபங்களைச் சம்பாதிப்பதில் வீணாகப் பொருளைக் கழிக்காமல் ஆத்மானுபவத்திற்காக முயற் சித்தில் வேண்டும்.

அத்தகைய ஆத்ம நிலையில் உள்ளவனுக்கு எத்தகைய பயங்கர மான துக்கம் நேரிடினும் அவன் அசைவற்றிருப்பான். இதனால் சர்வ துக்க நிவாரணத்திற்கான உபாயம் ஆத்ம சாட்சாத்காரமே என்பது தெளிவாகிறது. கனவில் தோன்றி ஆபத்துக்கள் விழித்திருக்கையில் எத்தகைய துன்பத்தையும் தரவியலாததைப் போல ஆத்மானுபவம் அடைந்தவனைப் பெரிய துக்கம் கூட சிறிதுகூட அசைக்க முடியாது. இனி சாதாரணமான துக்கம் என்ன செய்துவிட முடியும்? ஆத்ம ஞானமற்றவனை, தேகாபிமானியை, காட்சியினையே உண்மை யென நம்பியவனுக்கு ஒரு சிறிய துக்கம்கூட தலைகீழாக மாற்றிவி டும் 'கோஷ்பதம் சாகராயதே' என்றதைப் போல ஆவின் கால்களை ஒத்த சிறிய துக்கம் கூட கடலளவு தோன்றுமாம். எனவே துக்கத் தினை எள்ளளவும் அடையாதிருக்க வேண்டுமாயின் ஆன்ம நிலையை எட்ட வேண்டும். அதனைத் தவிர வேறு வழியில்லை.

அத்தகைய ஆத்ம நிலையே யோகமெனப்பட்டது. துக்கத்தின் வாசனை கூட எட்டாத தூய்மையான நிலையே அது. எனவேதான், (துக்கஸம் யோக வியோகம்' என்று பகவான் அதனைக் குறிக்கின் றார். உலகில் செல்வம், புத்திர சந்தானம் ஆகிய எதனைப் பெறினும் மனக் கிலேசத்தை ஏற்படுத்துமேயன்றி பகவான் தெரிவித்த இவ் வாத்ம நிலையான 'துக்கஸம்யோக வியோகம்' மாத்திரம் பிரம்மா னந்தத்தையே அடையச் செய்யும். அப்படியாயின் அத்தகைய நிலை எவருக்குக் கிடைக்கும்? பற்றுதலோடு கூடிய தீரமான சித்தம் உடை யவர்க்கே அது கிடைக்கும். பலமற்ற சித்தம்யுடையவர்க்கு அது கிடைக்காது. எனவேதான், 'அநிர்வண்ணசேதஸா' என்று இங்குக் கூறப்பட்டது. தைர்ய சாகசத்துடன் கூடியதும், 'நான் தவறாமல் அடைவேன்' என்ற நம்பிக்கையுடன் கூடியதும் ஆன மனதுடைய வனே பரமாத்மரூப இலக்கினை அடையக் கூடும். 1. பயிற்சிக் காலத்தில் எத்தனைத் தடைகள் வரினும் கலங்காமை, 2. பற்றுதலு டன் கூட திடமான நம்பிக்கை என்ற இரண்டுமே ஆத்மானுபூதியை அடையத் தேவையானவை. சாதனைகளைத் தடுப்பதற்கென மாயை பலவிதத்தில் துக்கத்தைக் கொடுத்து இடர்ப்படுத்தும். விவே கமுடையவன் இது மாயையின் சோதனை என்று கருதி இறைவனின் சோதனை என்று கருதி இறைவனின் மீது 'குருவின் மீது ஆராத அன்பு, நம்பிக்கை கொண்டு, தைரியமாக மோட்ச மார்க்கத்தில் நிலைபெற்று முன்னேறுதல் வேண்டும்.

**வினா :** சித்தம் எதனால் கட்டுப்படும்?

விடை : யோக சேவையினால் (பயிற்சி, வைராக்கியம் இவற்றால்)

வினா : எத்தகைய சித்தம் ஆன்மாவில் நிலைக்கும்?

விடை : விஷயங்களின்றும் கட்டுப்படுத்தப்பட்ட சித்தம்.

வினா : ஆன்மாவை எதனால் காணலாகும்?

விடை : தூய்மையான மனத்தினால்.

வினா : எங்கு

விடை : தன்னிலேயே, தன் இதயத்திலேயே.

வினா : ஆன்ம தரிசனத்தால் கிடைக்கும் பலன் என்ன?

விடை : அதனால் ஜீவனுக்குப் பெரும் பேரின்பம் கிடைக்கும் (மோட்சம் கிடைக்கும்).

வினா : ஆத்ம சுகம் எத்தகையது?

விடை : இந்திரியங்களுக்கு எட்டாதது.

வினா : அவ்வாறாயின் அதனை அறிவது எங்ஙனம்

விடை : தூய்மையான புத்தி, மனம் இவற்றால் (புத்தி கராஹ்யம்)

வினா : ஆன்ம நிலையை அடைந்தவன் என்ன செய்வான்?

விடை : எப்போதும் ஆன்மாவிலேயே நிலைத்திருப்பான். அதனை எப்போதும் விடமாட்டான்.

வினா : உலகில் எல்லா லாபங்களையும் விடச் சிறந்தது எது?

விடை : ஆத்ம லாபமே.

வினா : ஆன்ம நிலையையடைந்தவனை எங்ஙனம் அறிதல் இயலும்?

விடை : எத்தகைய துன்பம் வரினும் ஒரு சிறிதும் கலங்காதவனே ஆன்ம நிலையை அடைந்தவன்.

வினா : எனவே துக்கம் தொலைவதற்கான உபாயம் யாது?

விடை : ஆன்மாவில் நிலைத்திருத்தல் ஆத்மானுபவம் பெறுதல்.

**வினா :** *ஆன்ம நிலை எத்தகையது?*

**விடை :** துக்கம் என்பதே சிறிதும் இல்லாதது.

**வினா :** *அதனை எங்ஙனம் அடைவது?*

**விடை :** *1. துன்பங்களுக்கு அசையாத மனம், 2. இடைவிடா முயற்சி இவற்றால் அடைய முடியும்.*

முன்னுரை

*அத்தகைய ஆன்ம நிலையை அடைவதற்குப் பின்பற்றப்பட வேண்டிய தியான முறையை அடுத்துவரும் இரண்டு சுலோகங்களில் கூறுகிறார்.*

*ஸங்கல்ப ப்ரபவான் காமான்ஸ்த்யக்த்வா ஸர்வான சேஷதஹ!*
*மனஸை வேந்த்ரியக்ராமம் விநியமிய ஸமந்ததஹ!! (24)*

*சனைஹசனைரு பரமேத் புத்தியா த்ருதிக்ருஹீதயா!*
*ஆத்ம ஸம்ஸ்தம் மனஹ க்ருத்வா ந கிஞ்சிதபி சிந்தயேத்!! (25)*

சொற்பொருள்

*ஸங்கல்ப ப்ரபவான் - சங்கற்பத்தினால் ஏற்படும், காமான் - ஆசைகள் ஸர்வான் - அனைத்தையும், அசேஷிதஹ - முழுவதுமாக, த்யக்திவா - விடுத்து, மனஸா ஏவ - மனத்தினாலேயே, இந்திரிய க்ராமம் - இந்திரியக் கூட்டத்தினை, சமந்ததஹ - எல்லாச் செயல்களினின்றும் (எல்லா விஷயங்களினின்றும்), விநியம்ய - நன்கு அடக்கி, த்ருதி க்ருஹீதயா - தைரியத்தை மேற்கொண்ட புத்தியா - புத்தியினால் சனைஹ்சனைஹ் மெல்ல மெல்ல, உபரமேத் - காட்சி உலகினின்றும் திருப்பி உள்முகமாக), அமைதி அடைதல் வேண்டும். மனஹ் - மனத்தினை, ஆத்ம ஸம்ஸதம் - ஆன்மாவில் இருக்குமாறு, க்ருத்வா - செய்து, கிஞ்சித் அபி - ஆன்மாவைத் தவிர வேறெதனையும் பற்றி, ந சிந்தயேத் - சிந்தித்தல் கூடாது.*

கருத்துரை

***எண்ணத்தினால் (சங்கற்பத்தினால்) ஏற்படும் ஆசைகளனைத்தையும் முழுவதும் விடுத்து, மனதினால் இந்திரியங்களை நான்கு பக்கங்களினின்றும், நன்கு அடக்கி, தைரியத்துடன் கூடிய புத்தியினால் மெல்ல மெல்ல வெளி உலகினின்றும் அம் மனத்தினை மாற்றி***

அந்தரங்கத்தில் உள் மனதில் ஆற அமரச் செய்ய வேண்டும். மேலும் மனத்தினை ஆன்மாவில் நிலை நிறுத்தி ஆன்மாவைத் தவிர வேறு எதனைப் பற்றியும் சிந்திக்காது இருத்தல் வேண்டும்.

**விளக்கம்**

தியானம் செய்யும் போது எவ்வாறு அமர்தல் வேண்டு மென்ப தையும் எவ்வாறு பார்வையை நிலைநிறுத்தல் வேண்டுமென்றும் இதற்கு முன்னே கூறினார். இனி தியானம் எவ்வாறு செய்தல் வேண் டும் என்பதை நிரூபிக்கிறார்.

ஆசைகளனைத்தையும் முழுமையாக விட்டுவிடுதல் வேண்டு மென முதலில் கூறுகிறார். ஆசைகள் எங்கிருந்து உதயமாகின்றன. சங்கற்பங்களில். சங்கல்பமே ஆசைகளுக்கு பிறப்பிடம் , தாய் போன்றது. எனவேதான் 'சங்கல்ப ப்ரபாவன்' என்று அவற்றைக் குறித்துச் சொல்லப்பட்டது. விவேக, வைராக்கியங்களால் விஷயங் களைக் குறித்த சங்கல்பமே உதயமாகாதவாறு பார்த்துக் கொண்டால் ஆசைகள் தோன்றாது. இவ்வாறாக, ஆசைகளனைத்தையும் முழு மையாக ஒவ்வொன்றாக விட்டுவிடுதல் வேண்டும். 'ஸர்வான்' என் றதால் எதாவது ஒன்றோ இரண்டு ஆசைகளை மட்டும் விட்டுவிட் டால் போதாது. அனைத்தையும் துறக்க வேண்டுமென்பது தெரிகி றது. ஏனெனில் ஒன்றே ஒன்று மிகுந்திருந்தாலும் அது சாதகனுக்குச் சொல்ல முடியாத அளவு கேட்டைத் தருகின்றது. எனவேதான் பக வான் கீதையில் ஆசைகளை விட்டுவிடுதல் வேண்டும் என்று போதிக்கும் போதெல்லாம் 'எல்லா விதமான ஆசைகளையும்' என்று பலமுறை வலியுறுத்திக் கூறுகிறார். அக்னியோ, பகை வனோ, வியாதியோ தலைப்பட்ட கடனோ, விஷய ஆசையோ ஒரு சிறிதளவு இருந்தால்கூட அதுவே காலக்கிரமத்தில் பலப்பட்டு, மனி தனுக்கு கேட்டை, விளைவிக்கும். எனவே விஷயங்களின் மீதான ஆசைகளனைத்தையும் ஒழித்து விடுதல் வேண்டும். அதாவது அனைத்தையும் ஒவ்வொன்றாக அழித்தால் போதாது என்பதைத் தெரிவிப்பதற்காக, 'அ சேஷதஹ' (முழுமையாக) என்னும் சொல் லைப் பயன்படுத்தியுள்ளார். காமம் அனைத்திலும் பிரபலமான எதிரி. ஆதலால் தன் விஷயமாக எவரும் ஏமாந்துவிடுதல் கூடாது என்பதை எச்சரிப்பதற்காகவோ என்னவோ, 'ஸர்வான்', 'ஆசேஷத ஹ' என்ற இரண்டு சொற்களைப் பயன்படுத்திச் சிறப்பித்துள்ளார். அதாவது ஆசைகளை சிலவற்றை மட்டும் விடுதலோ, எல்லாவற் றையும் சிறிது சிறிது விட்டுவிடுதலோ போதாது என்பதும், அனைத்

தையும் முழுமையாக விட்டு விடுதல் வேண்டும் என்றும் போதிக் கப்பட்டுள்ளது. ஆசைகள் அற்றுப்போகும்போதே உள்முகமாகத் திரும்பும். எனவேதான் தியான நிஷ்டைக்கு காமம் முதலானவற்றை தியாகம் செய்தல் மிகமிகத் தேவையானது.

இவ்விதமாக எல்லாவிதமான ஆசைகளையும் முழுமையாக விட்டு மனதினால் இந்திரியங்களை (ஆமை தன் அவயங்களை உள் இழுத்துக் கொண்டு அடங்கி இருப்பதைப் போல) சப்தாதி விஷயங் களினின்றும் மாற்றி உள்முகமாகத் திருப்ப வேண்டும். இந்திரியங் கள் ஆகிய குதிரைகளை மனமெனும் கடிவாளத்தினால் இழுத்துப் பிடித்து கட்டுப்பாட்டுக்குள் வைத்திருத்தல் வேண்டும். இங்கு 'நி யம்ய' என்னாது 'விநிம்யம்ய' என்பதால் மனதினால் இந்திரியங் களை நன்கு கட்டுப்படுத்த வேண்டும் என்பதும், 'க்ராமம்' (கூட் டம்) என்றதால் ஒரு இந்திரியமேயன்றி இந்திரியக் கூட்டங்கள் அனைத்தையும் கட்டுப்படுத்துதல் வேண்டுமென்பதும், 'ஸமந்தத ஹ' என்ற சொல்லைப் பயன்படுத்தக் கூடியதாகையால் இந்திரியங்க ளைக் கட்டி இழுத்து தன் வசப்படுத்திக் கொள்ள அதனால் இயலும். இல்லையெனில், இந்திரியங்கள் சொன்னபடி மனம் ஆடும். எனவே விவேகத்துடன் கூடிய மனத்தினால் இந்திரியக் கூட்டத்தை நன்கு கட்டுதல் வேண்டுமெனப் போதிக்கப்பட்டது.

அதன் பிறகு, தைரியத்துடன் கூடிய மனத்தினால் மெல்ல மெல்ல வெளி உலகினின்றும் (விஷயங்களின்றும்) திருப்பி ஆன்மா வில் நிலைநிறுத்தல் வேண்டும். மனதினைத் தன் வயப்படுத்தக் கூடிய சக்தி புத்திக்குண்டு. 'மனஸஸ்து வராபுத்தி' என்று இதற்கு முன்பே சொல்லப்பட்டதல்லவா? அஞ்ஞானிகளுக்கு மனம் சொல் லியபடி புத்தி ஆடும். ஞானிகளுக்கு புத்தி சொல்லியபடி மனம் ஆடும். அதாவது ஜன்மாந்தர விஷய வாசனைகளுடன் கூடிய மனமா னது சாதாரண புத்திக்குக் கட்டுப்படாது. எனவேதான் 'த்ருதிக்கு ஹீத யா' - என்றார். அதாவது தைரியத்துடன் கூடிய புத்தியினால் மனத்தினைத் தன்வயப்படுத்திக் கொள்ளுதல் வேண்டும். மனம் புலியைப் போன்றது. எனவே புத்தி ஆடாக இருத்தல் கூடாது. சிங்கம் போன்றிருத்தல் வேண்டும். 'புத்தயா த்ருதிக்ருஹீ தயா' என் பதன் பொருள் மனம் சிம்மம் போன்றது தைரியத்துடன் இருத்தல் வேண்டுமென்பதே அப்புத்தியினால் மனத்தை உள்முகமாகத் திருப் புதல் வேண்டும்.

ஆயின் இச்செயலில் துரிதம் தேவையில்லை. *'சனைஹ் சனைஹ்'* - மெல்ல மெல்ல மனத்தினை பின்னால் திருப்ப வேண் டும். இங்கு பலாத்காரம் தேவையில்லை. 'லால யேத் சித்தபாலகம்' என்று வசிஷ்டர் சொன்னதைப் போல மனத்தினை ஒரு குழந்தை யைத் தாலாட்டுவதைப் போலத் தாலாட்டி, சீராட்டிக் காப்பாற்றி, விவேகத்துடன் நிதானமாக அதனை வெளியுலகினை மறக்கச் செய்து உள் முகமாகத் திருப்புதல் வேண்டும். சாதகர்களில் சிலர் பகவானின் இக்கட்டளையை மேற்கொள்ளாது மிகவும் அவசரப் பட்டு மனதினை பலாத்காரமாக இழுத்து இறுதியில் வெற்றிகிட் டாது அவதியுறுகின்றனர். ஒரு சிறிய பொறி நெருப்பின் மேல் பெரிய கட்டைகளைப் போட்டால் நெருப்பு அனைந்து விடுவதைப் போல அவசரப்பட்டு முதலிலேயே பெரிய பெரிய சாதனைகளைச் செய்தால் சரீரம், மனம், இரண்டும் அதனைத் தாங்க இயலாமல் இலட்சியத்திற்கே இடையூறு நேர்ந்து விடுகிறது.

Slow and Steady wins the race' என்ற ஆங்கிலப் பழமொழியை அனுசரித்து மெல்ல மெல்ல சாதித்துவந்தால் தான் வெற்றி கிட்டும்.

இவ்வாறாக தீரத்துடன் மனத்தினை மெல்லமெல்ல கட்டுப்ப டுத்தியபின் அதனை வெறுமனே செயலற்றுப் போகவிடாமல் ஆத் மாவில் நிலைநிறுத்த வேண்டும். ஆத்ம சிந்தனையென்ற ஆகாரத் தினை அதற்கு அளித்திட வேண்டும். அதன்பின் ஆலங்கட்டி கட லில் கலந்துவிடுவதைப் போல, மனம் ஆத்ம சாகரத்தில் (பிரம்மமா கிய கடலில்) லயித்து ஆத்மாகாரமாக மாறிவிடும். அதுவே மோக்ஷம், ஆயின் அவ்வாறு மனதினை ஆன்மாவில் நிலைநிறுத்திய பின் ஆன்மாவைத் தவிர வேறெதனையும் சிந்தித்தல் கூடாது. என வேதான், 'நகிஞ்சிதபி சிந்தயேர்' என்று எச்சரிக்கிறார். ஏனெனில், மருந்தைத் தின்று பத்தியத்தை (உணவுக் கட்டுப்பாடு) இல்லையெ னில் வியாதி நயமாகாததைப் போல இவ்வாறே ஆன்மாவில் மனதை நிலைநிறுத்தியபின் காட்சிப் பொருள்களின் மீது சிந்தனை செல்லுமானால் இலட்சியத்தை அடைய முடியாது. எனவே ஆத்மதி யானம் என்னும் மருந்திற்கு 'ஆத்மாவைத் தவிர வேறெதனையும் சிந்தித்தல் தகாது' என்னும் கட்டுப்பாட்டினைக் கூட கடைபிடித்தல் அன்றி பவரோகம் தீராது. இவ்விஷயத்தைச் சாதகர்கள் நன்கு கவனத் தில் வைத்திருந்து தியான காலத்தில் (ஆத்மாவைத் தவிர) வேறெத னையும் நினையாதிருக்க முயற்சி செய்தல் வேண்டும்.

***ஆத்மஸம்ஸ்தம் மனஹ க்ருத்வா ந கிஞ்சிதபி சிந்தயேத்'***

(ஆன்மாவில் மனதை நிறுத்தி வேறெதனையும் சிந்தித்தல் கூடாது) என்று இந்த கீதா வாக்கியம் எல்லா சாஸ்திரங்களின் சாரத்தினையும், எல்லா சாதனைகளின் சுருக்கமாகவும் இருப்பதால் முமுக்ஷுக்கள் இதனைப் பலமுறை எண்ணிப்பார்த்துப் பயிலுதல் வேண்டும். அதாவது காட்சிப் பொருள்களைப் பற்றி எண்ணாது பார்வையேயான (திரிக) ஆத்மாவிலேயே மனத்தை நிறுத்துதல் வேண்டும்.

**வினா :** தியானப்யாசி பின்பற்ற வேண்டிய நியமங்கள் யாவை?

**விடை ;** 1. ஆசைகளனைத்தையும் துறக்க வேண்டும். 2. மனம், இந்திரியங்களை விஷயங்களினின்றும் திருப்புதல் வேண்டும். 3. தைரியத்துடன் கூடிய புத்தியினால் மனத்தினை வெளிஉலகத்தினின்றும் மெல்ல மெல்ல திருப்பி ஆன்மாவில் நிலை நிறுத்த வேண்டும். 4. அவ்வாறு நிறுத்தியபின் ஆன்மாவைத் தவிர வேறெதனையும் சிந்தியாதிருத்தல் வேண்டும்.

**வினா :** ஆசைகள் எதனின்றும் உதயமாகின்றன?

**விடை :** சங்கல்பங்களினின்றும்

**வினா :** சாதகன் எத்தகைய புத்தி பெற்றிருத்தல் வேண்டும்?

**விடை :** தைரியத்துடன் கூடிய புத்தியைப் பெற்றிருத்தல் வேண்டும்.

**வினா :** சாதனையை எவ்வாறு செய்தல் வேண்டும்?

**விடை :** மெல்ல மெல்ல அவசரப்படாமல் செய்தல் வேண்டும்.

**முன்னுரை**

முன் செய்த வாடிக்கையினால் ஒரு வேளை சாதகன் தியான காலத்தில் மனம் வெளியுலகிற்கு ஓடுமேயானால் என்ன செய்தல் வேண்டுமென்பதை அடுத்துக் கூறுகிறார்.

*யதோ யதோ நிஸ்சரதி மனஸ் சஞ்சல மஸ்திரம்!*
*ததஸ்ததோ நியம்யைத தாத்மன்யேவ வசம் நயேத்!!* (26)

**சொற்பொருள்**

***சஞ்சலம்*** - சபல சுபாவமுடையதும், ***அஸ்திரம*** - நிலையற்றதும் ***(ஆன)***, ***மனஹ்*** - மனம், ***யதஹ் யதஹ்*** - எங்கெங்கும் (எந்த விஷயங்களின் மீது), ***நிஸ்சரதி*** - சஞ்சரிக்கின்றதோ, ***ததஹ்ததஹ்***

அங்கிருந்து, ஏதத் - அதனை (மனதை), நியம்ய - அடக்கி (நன்கு வயப்படுத்திக் கொண்டு), ஆத்மனிஏவ - ஆன்மாவிலேயே, வசம் - வசத்திலேயே, நயேத் - கொண்டு வருதல் வேண்டும் (ஆன்மாவிலேயே நிலைக்குமாறு செய்தல் வேண்டும்).

**கருத்துரை**

சபலத்துடன் கூடியதும், நிலையற்றதுமான மனத்தினை எங்கெங்கு (எவ்வெவ் விஷயங்களில்) சஞ்சரிக்கின்றதோ அங்கிருந்து அதனை அடக்கிக் கொணர்ந்து ஆன்மாவிலேயே நிலைநிறுத்துதல் வேண்டும். ஆன்மாவின் வசத்தில் ஒப்படைத்தல் வேண்டும்.

**விளக்கம்**

மனத்தினை ஆன்மாவிலேயே நிறுத்தி வேறெதனையும் பற்றிச் சிந்தியாது இருத்தல் வேண்டுமென முன் சுலோகத்தில் கூறினார். ஒரு வேளை மனம் அவ்வாறு நிலைபெறாது வெளியுலகிற்கு ஓடினால் என்ன செய்ய வேண்டுமென்பதற்கு இங்குப் பதிலுரைக்கிறார். கீதை அனுபவ பூர்வமான சாஸ்திரம் (Practical Sciences) ஆதலால், சாதர்களுக்கு நேரக்கூடும் எதிர்ப்புகளை முன்னதாகவே ஊகித்து அதற்கான விடைகளையும் கூறிச் செல்கிறது.

மனம் மிகவும் சபலம் உடையது. ஆரம்ப நிலையில் அது டத்தில் நிலைபெறாது. ஆத்மாவில் அதனைச் செலுத்தினாலும், இதற்கு முன்பிருந்த வாடிக்கை காரணமாக அதுவே வெளியில் உலவச் சென்றுவிடும். அப்போது சாதகன் என்ன செயய வேண்டும்? மனம் எங்கெங்கு ஓடுமோ அவ்விஷயங்களினின்றும் அதனைக் கட்டுப்படுத்துதல் வேண்டும். ஆயின் அது சொன்னபடி கட்டுப்படுமா? அவ்விஷயங்களின் நிலையற்ற தன்மையை அவ்வப்போது சிந்தித்திருந்து விசாரணை செய்தல் மனதிற்கு அவற்றின் மீது விரக்தி ஏற்பட்டு அதன் மீது சலிப்புண்டாகும். அப்போது மனம் கட்டுப்படும், 'துக்க தோஷானுதர்சனம்' என்ற இம்முறையை பகவான் இனிக் கூறப் போகிறார். எனவே விவேக வைராக்கியங்களின் உதவியால் மனதிற்கு விஷயங்களின் மீதான குறைகளை நன்கு எடுத்துக் கூறி, அங்கிருந்து திருப்பி ஆன்மாவில் நிலைநிறுத்தல் வேண்டும். வெளியில் இருப்பது துக்கத்துடன் கூடிய கணநேரமே நிலைக்கக் கூடிய சுகமே என்றும், உள்ளிருக்கும் ஆன்ம சுகம் நிரதிசய ரூப சச்சிதானந்த சுகமென்றும் போதித்தால், இனி துச்சமான சுகத்தில் நிலைத்தல் கடினம் என்பதை உணர்ந்து மனம் ஆன்மாவினிடத்தில் நிலைக்கும்.

இவ்வாறாக விவேகி, ஆன்மாவில் மனதை நிறுத்தி, அதன் வசத்தில் ஒப்படைத்தல் வேண்டும். விஞ்ஞானிகளிடத்தில் ஆத்மா மனதின் கட்டுப்பாட்டில் இருக்கும். அதாவது மனம் சொன்னபடி மனிதன் ஆடுவான். அவ்வாறின்றி ஆன்மாவின் கட்டுப்பாட்டில் இருந்தால் தான் பேரமைதி, சுகம் கிடைக்கும். ஆன்மாவின் கை ஓங்க வேண்டும்; எனவேதான் ஆத்மன்யேவ வசம் நயேத் - மனிதனை ஆன்மாவின் கட்டுக்குள் வைத்தல் வேண்டும் என்று பகவான் கட்டளையிடுகிறார்.

எனவே சாதகன் மனதின் செயல்களை நன்கு கவனித்து வருதல் வேண்டும். அஞ்ஞானி மனதினால் ஐக்கியமாகி மனோர்விகாரங்களைத் தன்னைவிட வேறாகப் பார்க்க இயலாமல் அவதியுறுகிறான். எனவேதான் அவற்றைக் கட்டுப்படுத்த இயலாமல் தவிக்கிறான். விவேகமுடையவன் தன்னிடத்தே விகாரம் தோன்றும்போதே அதனை சாட்சியாய் நின்று கவனித்துக் கட்டுப்படுத்துகிறான். மனம் எங்குப் போகிறது. எங்கு வருகிறது என்பதை அஞ்ஞானியால் பார்க்க முடியாது. தியான யோகியோ அதன் சரியைகளை நன்கு கவனிக்கிறான். இத்தகைய பார்வையையே பயிற்சி செய்யல் வேண்டுமென பகவான் இச்சுலோகத்தில் போதிக்கிறார். சங்கற்பமே மனதின் உருவம். எனவே எந்த எண்ணம் மனதில் உருவாகிக் காட்சிப் பொருள்களின் மீதான விஷயங்களில் செல்கிறதோ அப்போது அதனை அங்கிருந்து திருப்பி, கட்டுப்படுத்தி ஆன்மாவில் நிலைநிறுத்த வேண்டும். இதைத்தவிர அமைதிக்கான வழி வேறு இல்லை. அத்தகைய நிலையையடைவதே வாழ்க்கையின் குறிக்கோள்.

**வினா :** மனதின் இயல்பு எத்தகையது?

**விடை :** சஞ்சலமுடையது? நிலைபெறாதது.

**வினா :** மனதினை ஆத்மாவில் நிலைபெறாது வெளியில் அலையும் போது என்ன செய்தல் வேண்டும்?

**விடை :** எங்கு அது செல்கிறதோ, (விவேகத்தின் உதவியால்) அங்கிருந்து அதனைத் திருப்பி மறுபடியும் ஆன்மாவில் நிலைநிறுத்துதல் வேண்டும். ஆன்மாவின் வயப்படுத்துதல் வேண்டும்.

**முன்னுரை**

மனதினை விஷயங்களினின்று திருப்பி ஆத்மாவில் நிறுத்துவதால்ஏற்படும் பலனை விவரிக்கிறார்.

*ப்ரசாந்தமனஸம் ஹ்யேனம் யோகினம் ஸுகமுத்தமம்!*
*உபைதி சாந்தரஜஸம் ப்ரஹ்மபூதம கல்மஷம்!! (27)*

## சொற்பொருள்

*ப்ரசாந்தமானஸம் - மிகச் சாந்தமான மனதையுடையவனும், சாந்த ரஜஸம் - (காமக்குரோதம் முதலான) ரஜோகுண விகாரங்களற்றவனும், ப்ரம்ஹபூதம் - தானே பிரம்மமானவனும், அகல்மஷம் - பாபமற்றவனும் (ஆன), ஏவம் - இந்த யோகினம் - யோகியை உத்தமம் - சிறந்த, சுகம் - சுகம், உவ ஏதிஹி - வந்தடைகிறதல்லவா?*

## கருத்துரை

*மிகச் சாந்தமான மனதையுடைய, ரஜோகுண விகாரமற்ற, பாவங்களற்ற, பிரம்மரூபத்தையடைந்த யோகியை மிக உத்தமமான சுகம் (ஆத்மானந்தம்) வந்தடைகிறது. (அவ்வாறு அடைதல் சாஸ்திரங்களில் காணலாகும் என்பது பொருள்).*

## விளக்கம்

*நிரதிசய சுகம் எவருக்குக் கிடைக்கின்றதென்பது இங்கு விவரிக்கப்பட்டுள்ளது. உலகில் சாதாரண மனிதர்கள் அனைவரும் அனுபவிப்பது உத்தம சுகம் அல்ல. காட்சிப் பொருள்களில் முழுமையான சுகம் இல்லை. காலம், தேசம் இவற்றிற்குட்பட்ட சுகம் நிலையாக இருக்க முடியாது. அது இந்திரிய சுகமாயினும், ஹிரண்ய கர்ப்ப சுகமாயினும் சரியே. ஆத்ம சுகம் ஒன்றே தேச, காலத்திற்கு அப்பாற்பட்டுள்ளது. எனவேதான் அதனை இங்கு 'உத்தமசுகம்' என்று சொன்னார். எனவே ஏனைய சுகம் அனைத்தும் நிலையற்றவை எனத் தெரிகிறது. எனவே அறிஞர்கள் அதனை அடைவதற்கு முயலாது பரிபூரண ஆன்ம சுகத்தையே நாடுவர். எத்தகைய சாதனைகளைச் செய்தால் அத்தகைய உன்னதமான சுகம் ஜீவனுக்குக் கிடைக்கக்கூடுமென்பதை இச்சுலோகம் தெரிவிக்கத் தலைப்படுகின்றது.*

*1. சஞ்சலமின்றி மனதை அமைதியாக வைத்திருத்தல்.*

*2. ரஜோ குணதமோ குண விகாரங்கள் சித்தத்தில் இல்லாதிருத்தல்.*

*3. இதயத்தின் வாசனைகளின் அழுக்கோ, பாவங்களின் கறையோ இல்லாதிருத்தல் என்ற மூன்று சாதனைகளினால் மனிதன் தானே பிரம்மமாகிறான். அதன்பின் மேற்சொல்லப்பட்ட உத்தமமா*

நம் அவனைத் தேடி வந்தடைகிறது. மக்கள் சுகத்தைத் தேடி அலைகையில், மேற்சொன்ன குணங்கள் உடைய யோகியை சுகமே அதுவாகவே அவனைத் தேடி வந்தடைகிறதாம்! ஆஹா! யோகியின் நிலை எத்துணை உயர்ந்தது என்பதைச் சிந்தியுங்கள். அத்தகைய நிலையை அனைவரும் அடைய முடியும். ஆயின் அம்மூன்று குணங்களும் அவர்களிடத்தே பொருந்தி இருத்தல் வேண்டும்.

பரமாத்மாவை அடைவதற்கு குறுக்குச் சுவராக இருக்கின்ற எந்த சித்தத்தில் கறைபடிந்துள்ளதோ அதனை முதலில் விலக்கித் தூய்மைப்படுத்துதல் வேண்டும். காட்சிப் பொருடள்களினால் ஏற்படும் வாசனைகளை முழுமையாகத் துடைத்தெறிந்து அதன் குற்றமற்றதாகச் செய்து கொள்ளுதல் வேண்டும். பல வருடங்களாக மூடி வைத்துள்ள வீட்டினை எப்போதேனும் திறக்க நேர்ந்தால் அதனுள் தூசி, ஒட்டடை, எலி, ஆந்தை, பெருச்சாளி, பாம்பு, தேள், பிசாசு இவை குடிகொண்டிருப்பதைக் காணலாம். அப்போது அதனை நன்கு பெருக்கி நீரால் கழுவி தூய்மைப்படுத்திய பின்தான் குடியிருப்புக்கு ஏற்றதாகும். அவ்வாறே ஜீவனின் உபாதி எத்துணையோ பிறவிகளாகத் தொடர்ந்து அஞ்ஞான இருளில் மூழ்கியிருப்பதால், காமக் குரோதம் முதலான பாம்புகள், விருப்பு, வெறுப்பு போன்ற எலிகள் அதில் குடியிருக்கின்றன.

அதனை விவேகம், வைராக்கியம் பக்தி முதலான நீரினால் துப்புரவு செய்து வாசனையெனும் தூசியைத் தட்டி, தூய்மைப்படுத்தி, ஞான ஒளியை ஏற்றினால் ஆத்ம தேவன் குடியிருப்புக்கு தகுதி உடையதாகிறது. தூய்மையற்ற இதயத்தில் இறைவன் குடியிருக்கமாட்டான். எனவேதான், 'சாந்த ரஜஸம்' 'அகல்மஷம்' முதலான சொற்களினால் இதயத்தூய்மையின் அவசியத்தை கீதாச்சார்யன் வலியுறுத்திச் செல்கிறார். 'ப்ரசாந்தமனஸம்' என்றதால் மனம் எந்தவிதமான சஞ்சலமுமின்றி, சபலமின்றி, சமமாக, அமைதியாக இருத்தல் வேண்டுமெனக் கூறப்பட்டது. எனவே பகவத் சாட்சாத்காரத்திற்கு, சுகானுபூதிக்கு மனதின் (1) சலனமற்ற தன்மை (2) நிர்மலத்தவம் இரண்டும் மிகவும் அவசியமென்பது தெளிவாகிறது.

அத்தகைய நற்குணங்கள் உடையவன் சாட்சாத் பிரம்ம சொரூபமேயாகிறான். ஏனெனில், அவனைச் சுற்றியுள்ள ஆவரணம் நீங்கினால், ஜீவன் சிவனாகிறான். சித்தத்தில் தோஷங்கள் நீங்கும் போது 'சித்தம்' சித்தாகமாறும். அதாவது லயித்து பிரம்மாகாரமாகவே மாறிவிடும். எனவே அதன்பின் ஜீவன் பிரம்மபூதனாகிறான். சுகம்

அவனைத் தேடி வந்தடையும். மோக்ஷலக்ஷ்மி அவன் மீது பூமாலை போடும். எனவே எதனால் மோக்ஷத்தை அடையமுடியுமோ அந்தப் பயிற்சியைக் கவனித்து அதனைச் சரிவர செய்து சாதிப்பதிலேயே கண்ணுங்கருத்துமாய் இருப்பின் மோக்ஷம் அதுவே வந்து சேரும். அப்போது பிரம்மானந்தமும் அதுவே வந்து தீரும்.

எனவே, 'எனக்கு இன்னும் மோக்ஷம் கிடைக்கவில்லையே', ஆனந்தம், அடையவில்லையே என்று எவரும் திகிலடையத் தேவையில்லை. எந்தக் கணத்தில்தம் மனத்தை மக்கள் குற்றமற்ற தாக, ரஜோ தமோ குணமற்றதாக, ஆக்கிக் கொள்கிறார்களோ, அந்த கணத்திலேயே மிக உத்தமமான சுகம் வந்து சேரும் - என்று பகவான் இந்த சுலோகத்தில் அனைவருக்கும் அபயமளிக்கிறார். எனவே நாமாகவே முயற்சி செய்து ஆனந்த அனுபூதியடைந்து நமது பிறவி யைக் கடைத்தேற்ற வேண்டும்.

**வினா :** உலகில் எல்லாவிதமான சுகங்களைவிட உத்தம சுகம் எது?

**விடை :** மோக்ஷ சுகம் (ஆத்மானந்தம்)

**வினா :** அதனை எவர் அடையக்கூடும்?

**விடை :** 1. அமைதியான சித்தமுடையவன், 2. ரஜோ, தமோ குணம் நீங்கியவன், 3. தோஷமற்றவன் - ஆன ஜீவன் அடைகிறான்.

**வினா :** எனவே உத்தம சுகத்தை அடைவதற்கான உபாயம் எவை?

**விடை :** 1. மனதினை அமைதியாக வைத்துக் கொள்ளுதல் வேண் டும், 2. மனதில் காமம் முதலான ரஜோகுண தமோகுண விகாரங் களை ஒழித்து விடுதல் வேண்டும். 3. மனதில் உள்ள வாசனைகள் முதலான அழுக்குகளை, பாபங்களை விலக்கி அதனைக் குற்றமற்ற தாகச் செய்து கொள்ள வேண்டும்.

முன்னுரை

ஆத்ம ஞானமடைந்தவனது நிர்மல சித்தத்தினால் ஏற்படும் பலனைப் பற்றி மேலும் கூறுகிறார்.

*யுஞ்ஜன்னேவம் ஸதாத்மானம் யோகீ விகத கல்மஷஹ!*
*ஸுகேன ப்ரஹ்ம ஸம்ஸ்பர்ச மத்யந்தம் ஸுகமச்னுதே!!* (28)

### சொற்பொருள்

ஏவம் - இவ்வாறாக, ஸதா - எப்போதும், ஆத்மானம் - மனத்தினை, யுஞ்ஜன் - ஆன்மாவில் நிலைக்கச் செய்து, விகத கல்மஷஹ் - பாபம் நீங்கப் பெற்ற, யோகீ - யோகி, சுகேன - எளிதாக, பிரம்ம ஸம்ஸ்பர்சம் - பிரம்மஞ்ஞானத்தில் பிறந்த - அத்யந்தம் - மிகவும் சிறந்ததான, சுகம் - ஆன்ந்தத்தை, அச்னுதே - அடைகிறான்.

### கருத்துரை

இவ்வாறு மனத்தினை எப்போதும் ஆன்மாவிலேயே நிறுத்திக் குற்றமற்றவனான யோகி பிரம்மானுபவமான பரமசுகத்தை எளிதாக அடைகிறான்.

### விளக்கம்

பிரம்மானந்தம் எளிதாகக் கிடைப்பதற்கு சிறந்த வழி என்ன என்பதை இங்குக் கூறுகிறார். பலரும், 'மோக்ஷத்தை அடைவதற்கான எளிய வழியாது'? எனக் கேட்கின்றனர். அதற்கான விடை இங்கு அளிக்கப்படுகிறது. மோக்ஷம் எளிதாகக் கிடைக்க வேண்டுமாயின் இரண்டு சாதனைகள் செய்ய வேண்டும். 1. மனதில் உள்ள பாவங்களை, கெட்ட குணங்களை, காமக் குரோதங்களை ஒழித்தல் வேண்டும். 2. மனத்தினை எப்போதும் ஆத்மாவில் லயிக்கச் செய்தல் வேண்டும். முதலில் சித்தத்தில் உள்ள குற்றங்களை நீக்குதல் வேண்டும். (விகத கல்மஹஹ) குற்றங்களை நீக்குதலைக் குறித்து, ப்கவான் கீதையில் அங்கங்குப் பலமுறை சொல்லிக் கொண்டேபோகிறார். ஏனெனில், குற்றமுள்ள சித்தத்தில் ஆத்மஞானம் தோன்றுவதில்லை. அது ஆன்மாவில் லயிப்பதில்லை. வாசனைகள், பாவங்கள் இவையுடைய மனம் தரமற்றவை. நல்லதரமான ஆன்மாவிடம் சேராது. எனவே முயற்சி செய்து அவற்றை நீக்க வேண்டும். வாசனைகளற்றதாக மனத்தைச் செய்துகொள்ளுதல் ஒருபக்கமும், மற்றொரு பக்கம் அதனை ஆன்மாவில் ஈடுபடச் செய்தலும் ஆகிய இரண்டுமே அவசியம்.

இம்முயற்சியை எப்போதோ ஒருமுறை செய்துவிட்டால் போதாது, 'நிரந்தரம்' எப்போதும் செய்து வரல் வேண்டும். 'சதா' என்ற சொல்லின் பொருள் இதுவே. அதன்பின் மிக எளிதாக பிரம்மானுபூதியை அடைந்து ப்ரமானந்தத்தை தம் கைவசமாக்கிக் கொள்ள முடியும். மேற்சொன்ன சாதனைகளைச் செய்பவர்க்கு எளிதாக - பிரம்மானுபூதி கிடைக்கும். செய்யாதவர்க்கு எத்துணை கஷ்டப்படி

னும் கிடைக்காது. 'பிரம்ம ஸம்ஸ்பர்சம்' என்றதால் யோகிசாட்சாத் பரமாத்வையே ஸ்பரிசிக்க முடியும் என்பது தெளிவாகிறது. உலகில் காட்சிப் பொருள்களின் மேல் ஆசைவைத்து அதற்காக வீணே காலம் கழிப்பவனோ, காட்சிப் பொருளோ, பிரம்மத்தைத் தொடமுடியாது. மாயையான பொருள் உண்மைப் பொருளை எங்ஙனம் அணுக முடியும்? கனவுப் பொருள் விழித்திருக்கையில் கிடைக்குமா? நிர்மலசித்தமுடைய ஆத்ம ஞானி ஒருவனே பிரம்மத்தைத் தொடமுடியும். பிரம்மத்தில் லயிக்க முடியும். அதன்பின் அவன் அடையும் சுகத்திற்கு அளவில்லை. 'யோவை பூமா தத்சுகம், சிநால்பே சுகமஸ்தி' (சாந் - 7-23-1) என்றதைப் போல் பூமாவின் உருவான இடைவிடாத சுகம் அவனுக்கு ஏற்படும். எனவேதான் ஆன்ம சுகத்தை 'அத்யந்த சுகம்' என வர்ணிக்கிறார். ஹிரண்ய கர்ப்பனின் சுகம் கூட ஆத்மானந்த சாரத்தில் ஒரு துளியேயாகும் என்று உபநிஷத்துக்கள் கோஷிக்கின்றன. இதனை அனைவரும் முயற்சி செய்தால் அடைய முடியும்.

**வினா** : மோக்ஷசுகத்தை எளிதாக அடைவதற்கு வழி என்ன?

**விடை** : 1. மனதில் பாவ வாசனைகள், குற்றங்கள் இவற்றை நீக்குதல், 2. மனத்தினை எப்போதும் ஆத்ம தியானத்தில் திளைக்கச் செய்தல்.

**வினா** : மோக்ஷ சுகம் எத்தகையது?

**விடை** : 1. நிரதிசயமானது 2. பிரம்மத்தைத் தொட வல்லது.

**முன்னுரை**

உலகில் நடைமுறையில், தியான யோகி எத்தகைய பாவம் கொண்டிருப்பான் என்பதை அடுத்துச் சொல்கிறார்.

*ஸர்வ பூதஸ்தமாத்மானம் ஸர்வபூதானி சாத்மனி!*
*ஈக்ஷதே யோகயுக்தாத்மா ஸர்வத்ர ஸமதர்சனஹ!!* (29)

**சொற்பொருள்**

யோகயுக்தாத்மா - யோகத்தில் உறுதி பெற்றவன், ஸர்வத்ர - எல்லா உயிர்களிடத்தும், ஸமதர்சனஹ - சம திருஷ்டியுடையவனாய், ஆத்மானம் - தன்னை சர்வபூதஸ்தம் - எல்லா உயிர்களிடத்து இருப்பதாகவும், ஸர்வபூதானி - எல்லா உயிர்களையும், ஆத்மனி - தன்னிடத்தும், ஈஹதே - காண்கிறான்.

**கருத்துரை**

*யோகத்தில் உறுதிபெற்று எங்கும் சமதிருஷ்டியுடையவன் தன்னை எல்லா உயிர்களிடத்தும், எல்லா உயிர்களைத் தன்னிடத்தும் காண்கிறார்.*

**விளக்கம்**

இங்கு யோகமென்றால் ஜீவ பிரம்ம ஐக்கியம். மனம் ஆன்மாவில் கலப்பது; (ஐக்கியமடைதல், லயித்தல்) யோகம். அத்தகைய யோகத்தினைச் சாதித்த மகனீயர்களின் லட்சணங்கள் எத்தகையது என்பது இங்கு விவரிக்கப்பட்டுள்ளது. அவன் எல்லா பிராணிகளிடத்தும் தன்னையும், எல்லா உயிர்களையும் தன்னிடத்தேயும் கண்டு எல்லாவற்றிலும் சமதிருஷ்டியுடையவனாய் இருக்கிறான். அது எங்ஙனம் சாத்தியமாகும் என்பதையும் சிறிது ஆராய்வோம்.

இவ்வுலகமனைத்தும் இருப்பிடமான ஆன்மாவில் கற்பிக்கப்படுகின்றது. கயிறைப் பாம்பாக கற்பித்தலைப் போல, இந்த உலகமனைத்தும், எல்லா உயிர்க்கும் பிரம்மாண்டம் அனைத்தும் ஆன்மாவிலேயே கற்பிக்கப்படுகின்றது. கற்பிக்கப்படும் பொருள் அதன் இருப்பிடத்திலேயே இருக்குமேயன்றி வேறிடத்தில் இல்லை. வேறெங்கும் அதற்கு இருப்பிடம் இல்லை. எனவே ஆத்மாவேதானென்று உணர்ந்த யோகி தன்னிலேயே இவ்வுலமனைத்தையும் காண்கிறான். மேலும் இவ்வுலகமனைத்திலும் ஆத்மாவே வியாபித்துள்ளதாதலால், உலகில் தன்னைக் காண்கிறான். இத்தகைய நிலையியான யோகத்தினாலோ, இதர யோகங்களினாலோ மனதினை ஆன்மாவிடம் ஐக்கியப்படுத்திக் கொண்டு, ஆத்ம சாட்சாத்காரம் அடைந்த யோகிக்கே இது கூடுமேயன்றி, ஏனையோர்க்கு அல்ல. ஏனெனில் தான் ஆன்மாவேயன்றி தேகமல்ல, உபாதியல்ல என்று எண்ணும் போது மாத்திரமே இத்தகைய ஸர்வாத்ம நிலை ஏற்படும். இன்னும் ஆன்மாவை அடையவில்லையாதலால் எல்லா உயிர்களிடத்தும் தன்னையோ, தன்னில் எல்லா உயிர்களையும் காணமுடியாது. தேக பாவனை மிக்க குறுகிய நோக்குடையது. தேகத்திற்கும் இன்னுமொரு தேகத்திற்குமிடையில் அவன் வேற்றுமையையே காண்பான். வேற்றுமையே போட்டிக்கு, அமைதியின்மைக்குக் காரணம். ஆத்ம பாவனையுடையவன் உபாதியில் வேற்றுமையைக் காணாது ஆன்மாகவே காண்கிறான். அத்தகையோருக்கு இதர உயிர்களிடத்து வெறுப்பு ஏற்படுவதில்லை. எல்லாம் தன் ஆத்மாவே, தன் தேகமே தன்மனமே என்று எண்ணுபவனுக்கு மாத்திரமே முழுமை

யான தயை, கருணை, அன்பு இவை ஏற்படும். இதனை வைத்துப் பார்த்தால் அற நிலைக்கும் ஆதாராம், ஆன்மீக நிலையே என்பது தெளிவாகிறது. அனைத்தும் ஆன்மாவே, ஆன்மாவிலேயே எல் லாம் இருக்கிறது என்ற ஆன்மீகச் சித்தாந்தமே எல்லா அறக்கொள் கைகளுக்கும், குணங்களுக்கும் மூலாதாரம்.

சாதகன் யோகத்தில் முழுமையடைவதற்கு இத்தகைய சமத்து வம், பரந்த மனப்பான்மை, இவற்றை வழக்கப்படுத்திக் கொள்ள வேண்டும். மேலும் இத்தகைய நோக்குடையவனே உண்மையான யோகி என்றறிதல் வேண்டும். ஒருவன் யோகியா அல்லவா என்று தெரிந்து கொள்வதற்கு சர்வபூத தயை, சமத்துவம் இவை உதவும்.

**வினா :** யோகி எத்தகைய இலட்சணங்கள் பொருந்தியிருப்பான்.

**விடை :** எப்போதும், அனைவரிடத்தும் சமதிருஷ்டியுடையவனாய், எல்லா உயிர்களிடத்தும் தன்னையும், (ஆத்மாவை), தன்னில் (ஆத் மாவில்) எல்லா உயிர்களையும் காண்பான்.

### முன்னுரை

எங்கும் பரமாத்மாவையே காணும் பகவத் திருஷ்டியுடைய வன் ஒரு நாளும் மாறுவதில்லை என்கிறார்.

*யோ மாம் பச்யதி ஸர்வத்ர ஸர்வம் சமயிபச்யதி!*
*தஸ்யாஹம் ந ப்ரணச்யாமி ஸசமே ந ப்ரணச்யதி!!* (30)

### சொற்பொருள்

யஹ் - என், ஸர்வத்ர எல்லாவற்றினிடத்தும், மாம் - என்னைப் பச்யதி - பார்க்கிறானோ, ஸர்வஞ்ச - எல்லா உயிர்களையும், மய - என்னிடத்தே, பச்யதி - பார்க்கிறானோ, தஸ்ய - அவனுக்கு, அஹம் - நான், ந ப்ணஸ்யாமி - தோன்றாமல் இருப்பதில்லை, ஸஹ்ச - அவனும், மே - எனக்கு - ந ப்ரணஸ்யதி - கண்களில் படாமல் போவதில்லை.

### கருத்துரை

எவனொருவன் எல்லா உயிர்களிடத்தும் என்னைக் காண்கி றானோ, மேலும் என்னை எல்லாவற்றிலும் காண்கிறானோ அவன் காட்சியினின்று நான் மறைவதில்லை; அவனும் என் காட்சியி னின்று மறைவதில்லை.

**விளக்கம்**

ஸ்ரீ கிருஷ்ண பகவான் எல்லா ஜீவன்களிடத்தும் உள்ளிருக்கிறான் ஆதலால், யோக யுக்தன், அனைத்திலும் ஆன்மாவைக் காண்பவன், எல்லா ஜீவர்களிடத்து ஸ்ரீ கிருஷ்ணரை (பகவானை), ஸ்ரீ கிருஷ்ணனிடத்து எல்லா உயிர்களையும் காண்பான் என்பது பொருள். இவ்வாறாக எவன் எல்லா உயிர்களையும் பரமாத்மாவிலும், பரமாத்விடத்தே எல்லா உயிர்களையும் காண்கிறானோ, அவனுக்கு பரமாத்மா எவ்வாறு காட்சியளிக்காமல் போவான். இங்குக் காணப்படுவதென்பது காட்சி பொருளைக் காண்பது போல அன்று; சாட்சாத்காரம் (அதாவது, அனுபவத்தில்) என்று பொருள். ஜீவன் பரமாத்மாவில் ஐக்கியமடைந்தபின் இருவரும் ஒரே சைதன்ய பொருளாக மாறுவதால் இனி ஒருவருக்கு இன்னொருவர் தெரியாமல் போவது எங்ஙனம்?

மேலும் (தெய்வ திருஷ்டியில் பார்த்தாலும்), பகவானின் அருள் எவர் மீது இருக்கும் என்ற கேள்விக்கு இங்குப் பதிலுரைக்கப் பட்டது. எவன் எல்லா உயிர்களிடத்தும் பகவானை (தெய்வத்தினை) மேலும், பகவானிடத்து எல்லா உயிர்களையும் காண்கிறானோ, அத்தகையோனிடத்து பகவானுக்கு (பூரண அனுக்கிரஹம்) முழுமையான அருள் இருக்குமென்பது தெளிவாகிறது. ஏனெனில், 'ஸசமேன ப்ரணஸ்யதி' - அவன் எனக்குக் கண்ணில்படாமல் போகான் என்று பகவான் கூறுகிறார். அவன் பகவானின் அருளுக்கு பாத்திரமானவன், மிகவும் பிரியமானவன் என்று பொருள். எல்லா ஜீவர்களும் பகவானின் குழந்தைகள் ஆனாலும் தன்னை அண்டியவர்களிடத்தே அவன் மிகுந்த பிரியமுடையவன் ஆகிறான். அவர்களே இறைவனின் அருள் நோக்கத்திற்கு இலக்காகிறார்கள். அவர்கள் எத்துணை அதிர்ஷ்டக்காரர்கள். அவர்களது வாழ்க்கையில் கடைத்தேறியவர்களேயல்லவா? உலகில் உள்ள சிறிய சிறிய அதிகாரிகளின் கண்ணுக்குப் புலப்படுவதை விட இறைவனின் அருள் நோக்கிற்கு, பக்தி வைராக்கியம், தியானம் இவற்றில் பாத்திரமாவது மேல். அப்படியாயின் அதனை அடைவது எங்ஙனம்? (தியானங்களின் வழி) எல்லா ஜீவராசிகளிடத்தும் பரமாத்வையும், பரமாத்மாவில் எல்லா ஜீவராசிகளையும் காணக் கூடிய அனுபவத்தைப் பெறுவதற்கு முயன்றால் போதும். பகவத் கிருபை அவன் மீது பொழியும். அவ்வாறின்றி வேற்றுமையுணர்வு உடையவனுக்கு அது எந்நாளும் கிடைத்தல் அரிது.

இச்சுலோகத்தில் 'யச்சப்தம் பயன் படுத்தியதால் (யஹ) எவரா யினும் சரி இவ்வாறு சாதனை செய்து வந்தால் பகவானின் அருள் என்னும் உன்னதமான பலனை அவன் அடைவான் என்பது பொருள். ஜாதி, மதம் காலம் என்ற பேதங்கள் இங்கு இல்லை.

**வினா :** இறைவன் எவனுக்குப் புலப்படுவான்? அல்லது இறைவ னின் அருள் நோக்கை எவன் அடையக் கூடும்?
**விடை :** எல்லா உயிர்களிடத்தும் இறைவனை, இறைவனிடத்து எல்லா உயிர்களையும் காண்பவனுக்கு இறைவன் புலப்படுவான். அவன் அருள்நோக்கு அவன் மீது படும்.

**வினா :** அவன் அருளுக்கு பாத்திரமாக வேண்டுமாயின் என்னசெய் தல் வேண்டும்.
**விடை :** எல்லா உயிர்களிடத்தும் பரமாத்மாவை, பரமாத்வினிடத்து எல்லா உயிர்களையும் காணுதல் வேண்டும். (மேலும் எல்லா பிரா ணிகளின் நன்மையைக் கோருதல் வேண்டும்.

## முன்னுரை

அத்தகைய ஸர்வாத்மதிருஷ்டி உடையவன் எவ்வாறு செய்தா லும் எப்போதும் பரமாத்மாவிடத்தினிலேயே வசிக்கிறான் என்று தெரிவிக்கிறார்.

*ஸர்வபூதஸ்திதம் யோமாம் பஜத்யேகத்வா மாஸ்திதஹ!*
*ஸர்வதா வர்தமானோஅபி ஸயோகீ மயிவர்ததே!!* (31)

## சொற்பொருள்

ஸர்வபூதஸ்கிதம் - எல்லா உயிர்களிடத்துமுள்ள, மாம் - என்னை, யஹ் எவனொருவன், ஏகத்வம் - பிரம்மம் ஒன்றே என்ற எண்ணத்தில், அஸ்திதஹ நிலைத்தவனாய், பஜதி - என்னைச்சேவிக் கிறானோ, ஸஹ்யோகி - அந்த யோகியானவன், ஸர்வதா பார்தத் மானஹ அபி - எந்த விதமாக எங்கிருப்பினும், மய - என்னிடத்தி லேயே, வர்ததே - இருப்பவனாகிறான்.

## கருத்துரை

எவன் எல்லா உயிர்களிலுமிருக்கிற என்னை வேற்றுமை யின்றி, அனைத்தும் பிரம்மமே என்கிற உறுதியுடன் என்னை போற் றிச் சேவிக்கும் யோகி எந்நிலையில் எப்பாங்கில் இருப்பினும் (சமா திநிஷ்டையிருந்தாலும், அல்லது செயலாற்றிக் கொண்டிருப்பினும்) என்னிடத்திலேயே (ஆத்மாவிலேயே) இருப்பவன் ஆகிறான்.

**விளக்கம்**

1. பகவான் எங்கிருக்கறார்? 2. எந்த உபாயத்தினால் மனிதன் இறை நிலையைப் பெறமுடியும்? என்ற வினாக்களுக்கு இங்கு விடை அளிக்கப்பட்டுள்ளது. இறைவன் எங்கிருக்கிறான் என்ற வினா அனைவரின் மனத்திலும் அடிக்கடி எழும். ஐயமே? இறை ஓரிடத்தில் மட்டும் இல்லை. இவ்வண்ட சராசரமனைத்தும் உள்ள உயிர்களிடத்தே உறைகிறான். இறைவன் இல்லாத இடமில்லை. பாலில் உள்ள வெண்ணையைப் போன்று, பூமாலையின் நூலைப் போன்று, எள்ளிலிருக்கும் எண்ணையைப் போன்று. கரும்பிலுள்ள சாற்றைப் போன்று இறைவன் எல்லாவற்றிலும் வியாபித்திருக்கி றான். எனவே எல்லா உயிர்களும் இறைவனின் சொரூபமே என்று ணர்ந்து எவருக்கும் தீங்கு செய்தல் கூடாது. உயிர்களிடத்தே தயை கருணை இவற்றுடன் இருத்தல் வேண்டும். அவற்றின் நன்மை யையே கோருதல் வேண்டும். அதுவே மாதவ சேவையாகும்.

இனி இரண்டாவது வினா - எந்த உபாயத்தினால் மனிதன் இறை நிலையை அடைய முடியும்? எங்கும், அனைத்திலும் இறை வனே வியாபித்துள்ளான் என்ற அபேத ஞானம் பெற்று அவனை சேவித்து வருபவன், தியானிப்பவன் இறுதியில் அவனையே அடை கிறான். ஒரே சூரிய பிம்பம் வேறுவேறு பொருள்களின் மேல் வெவ் வேறாக பிரதிபலிப்பதைப் போல், ஒரே மனிதன் பலவித வேடங்க ளைத் தரிப்பதைப் போல், தங்கம் என்ற ஒரே உலோகம் பலவித மான ஆபரணங்களாக மாறுவதைப் போல் ஒரே விதமான மண் பலவிதமான மட்பாத்திரங்களாக உருவெடுப்பது போல், உபாதிகள் வெவ்வேறாயினும் பரமாத்மா ஒருவனே எல்லா சராசரங்களிலு முள்ள உயிர்களிடத்தும் வியாபித்துள்ளான் என்ற ஒருமையுணர்வு கொண்டு, ஸர்வ அந்தர்யாமியான பகவானை தியானிப்பவன் இறு தியில் அவனையே அடைகிறான்.

அத்தகைய ஒருமையுணர்வு, அபேதாத்ம தத்வ ஞானம், உடை யவன் எவ்விதமாக இருந்தாலும், இறைவனிடத்தே உறைகிறான் எனப்பட்டது. அதாவது அவன் சமாதி நிலையில் இருந்தாலும், அல்லது செயலாற்றிக் கொண்டிருந்தாலும் அல்லது செயலற்று இரு[illegible]லும், அவனது சித்தம் எப்போதும் ஆன்மாவினிடத்தி [illegible]வயமாகி இருக்கும். கடலில் பயணம் செய்வோரிடத்து [illegible]ம் கருவி'யில் உள்ள முள் எப்படித் திருப்பினா [illegible]யே நோக்கித் திரும்புவதை[illegible] [illegible]காத்ம

ஞானமுடையவன் உலகில் பலவிதமான செயல்களில் ஈடுபட்டிருந் தாலும் இறைவனிடத்திலேயே உறைபவன் ஆகிறான். எனவேதான் ஆத்மஞானிகளான மகான்கள் உலக நன்மைக்கான செயல்களில் ஈடுபட்டிருந்தாலும் அவர்களின் இறைநிலைக்கு எந்தவிதமான தடங்கலும் ஏற்படுவதில்லை.

அப்படியாயின் 'ஸர்வதா வர்த்தமானோஅபி'' என்பதன் பொருள் ஞானி கீழ்த்தரமான செயல்கள் செய்வான் என்றோ, கீழ்நி லைக்கு இறங்கி வருவான் என்பதோ அல்ல. அவ்வாறு துர்செயல்க ளில் ஈடுபடுபவன் ஞானியேயல்ல. இறை அனுபவம் பெறுவதற்கு விசுத்த சத்வ குணம் பெற்றிருத்தல் வேண்டுமல்லவா! அத்தகைய உயர்ந்த சீலம் என்னும் செல்வம் உடையவன் எந்நாளும் கீழ்நி லைக்கு இறங்கி, ரஜோ குணம், தமோ குணங்களைப் பெற்றிருப் பானா? அவ்வாறு ஒரு நாளும் நடைபெறாது. அவ்வாறு ஒரு வேளை நடந்தால் அவன் ஞானியே அல்ல என்று நிச்சயமாகக் கூறலாம். எனவே குறுகிய நோக்கினை விடுத்து முமுக்ஷுக்கள் மிக வும் எச்சரிக்கையாக இருத்தல் வேண்டும். தம் நடவடிக்கையில் எத்தகைய குற்றமும் இல்லாதிருக்குமாறு பார்த்துக் கொள்ள வேண் டும். இத்தகைய சொற்களின் பொருளை மிகவும் எச்சரிக்கையாக கவனித்தல் வேண்டும். 'எவ்விதமாகச் செயல் புரிந்தாலும் என்றதன் பொருள், இங்கு, 'ஸர்வாத்மஞானமுடையவன், தியானத்தில் இருப்பினும், உலக வியவகாரங்களில் ஈடுபட்டிருப்பினும், எவ்வா றிருப்பினும் அவனது ஆன்மநிலைக்குப் பங்கம் ஏற்படுவதில்லை என்பதாகும்.

**வினா :** பகவான் எங்கிருக்கிறார்?

**விடை :** எல்லா உயிர்களிடத்தும் வியாப்பித்துள்ளார்.

**வினா :** இறை நிலையடைய வேண்டுமாயின் ஜீவன் என்ன செய்தல் வேண்டும்?

**விடை :** எல்லாம் ஆன்ம சொரூபமே என்றுணர்ந்து இறைவனை சேவித்து, தியானித்தல் வேண்டும்.

**வினா :** ஆத்ஞானியானவன் உலக வியவகாரங்களில் ஈடுபட்டிருப்பி னும் அவனது இறையுணர்விற்குத் தடங்கல் ஏற்படுமா?

**விடை :** ஏற்படாது. அவன் எவ்வாறிருப்பினும் இறைநிலைக்கு ஊறு ஏற்படாது.

*ஆத்மௌபம்யேன ஸர்வத்ர ஸமம்பச்யதி யோ அர்ஜுன!*
*ஸுகம் வாயதிவா துக்கம் ஸ யோகீ பரமோ மதஹ!! (32)*

## சொற்பொருள்

*அர்ஜுன்! - ஏ அர்ஜுனா! ஸர்வத்ர - எங்கும், எல்லா உயிர்களி டத்தும், சுகம் வா - சுகத்தினையும், துக்கம் யதிவா - துக்கத்தினை யும், ஆத்மௌபம்யேன - தன்னையே போல் எண்ணி, தனதாகவே கொண்டு, ஸமம் - சமமாக யஹ் - எவன், பச்யதி - பார்க்கிறானோ, ஸஹ்யோகி -அந்த யோகியானவன், பரமஹ் - (இதி) - சிறந்தவ னென்று, மதஹ - கருதப்படுகிறான்.*

## கருத்துரை

*ஓ அர்ஜுனா! எல்லா உயிர்களின் சுகத்தையும், துக்கத்தையும் தன்னுடையதாகவே எண்ணி, தன்னையே உவமையாகக் காண்ப வன் பரமயோகியெனக் கருதப்படுகிறான்.*

## விளக்கம்

*இச்சுலோகத்தில் நடைமுறை வேதாந்தத்தை (Practical Vedanta) உபதேசிக்கிறார். ஒருவனுக்கு போதனை சரிவர மனதில் ஏறியதா இல்லையா என்பது அவனது நடவடிக்கையை பார்த்தாலே தெரிந்து விடும். வாக்கினால், அனைத்தும் பிரமம்மே எல்லாம் தெய்வமே என்று சொல்லிக் கொண்டு இதர உயிர்களுக்குக் கேடு செய்வது சரியானதல்ல. அது அனுபவ வேதாந்தமல்ல. போதனைகளை திரிக ரண சுத்தியுடன் பின்பற்றுதல் வேண்டும். பெரியோர்கள் அங்க னமே கருதிவந்தனர். செய்தும் வந்தனர். இல்லையெனில், கொள்கை, 'புஷ்பிதாம் வாசம்' என்பதைப்போல் பலனற்றுப் போகும். எனவே 'எங்கும் ஒரே ஆன்மாவே நிறைந்துள்ளது' என் னும் சித்தாந்தத்தினைக் கடைபிடிக்கும்போது எல்லா உயிர்களிடத் தும் தயை, கருணை, அன்பு இவை காட்ட வேண்டியிருக்கும். தன் தேகத்திற்கு, தன் மனத்திற்கு தான் எங்ஙனம் சுகத்தினை அமை தியை, துக்கத்தினை அடைந்து அனுபவிக்கிறானோ அவ்வாறே ஏனையவர்களது சுகத்தினையும் துக்கத்தினையும், அனுபவிப்பவ னாவான். இதுவே ஆத்மௌபம்ய நிலை. இவ்வாறாக சுகதுக்கத்தி னைத் தன்னுடன் சமமாக ஏனையோரிடத்தும் காணும் யோகியே யோகிகள் அனைவரிலும் சிறந்தவர் என்று பகவான் சொல்கிறார்.*

எனவே மனிதனின் மேன்மை அவனது நடவடிக்கையிலேயே அடங்கியிருக்கிறது என்பது இதனால் தெரியவருகிறது. 'ஜீவர்களே! எல்லாம் பிரம்மமே' என்னும் சித்தாந்தத்தைப் பின்பற்றி எல்லா ஜீவர்களிடத்தும் காருண்யம், தயை இவற்றைப் பொழியுங்கள். அப்போதே நீங்கள் உண்மையான பக்தர்கள், யோகிகள் ஆவீர்கள்! என்று பகவான் இங்கு வெளிப்படையாகச் சொல்கிறார். இவ்வாக்கியம் வாய் வேதாந்தம் பேசும் வறட்டு வேதாந்திகளின் இதயத்தைப் பிளக்கக் கூடியது. எனவே முமுக்ஷுக்கள் எச்சரிக்கையாகயிருந்து எல்லா மன்னுயிர்களையும் தன்னுயிராய்ப் பாவித்துக் கருணை கொண்ட இதயத்துடன் விளங்குதல் வேண்டும்.

மேல் நாட்டு மதங்களில், சமுதாயத்தில் சகோதரத்துவத்திற்கு (Brotherhood) மக்கள் முக்கியத்துவம் அளிப்பர். ஆயின் அது போதாது. ஏனெனில் சகோதரர்களிடையே கூட கருத்து வேறுபாடுகள், பகைமை இவைதோன்றக் கூடும். எனவே சகோதரத்துவம் அன்பின் இறுதி நிலையைக் காட்டக் கூடியது அல்ல. கீதை உபநிஷத்துக்கள் அன்பின் இறுதி நிலையைப் போதித்து, ஆன்ம பாவத்தைப் போதிக்கின்றது. சகோதரத் துவத்தை விட, ஒரு படி மேலே போய் உலகமனைத்தும் ஒரே ஆத்ம ஸ்வரூபமாகவே கருதும் பான்மையை வளர்க்கின்றது. இதுவே கீதை, உபநிஷத்துக்கள் இவ்ற்றின் பெருமை, இந்து மதத்தின் பேரொளி.

இச்சுலோகத்தில் 'சர்வத்ர' என்றதால் அன்பு காட்ட வேண்டியது வெறும் மனிதர்களிடம் மட்டுமன்று எல்லா சராசரி பிராணி கோடிகளிடத்தும் தயை முதலான நற்குணங்கள் பொருந்தியிருத்தல் வேண்டுமென்பது தெளிவாகிறது.

'ஸயோகி பரமோ மதஹ' என்றதால் சாதாரண யோகிகளைப் போன்று இராமல் 'ஆத்மௌ பம்ய திருஷ்டியுடன் யோகிகளில் சிறந்தவர்களாதல் வேண்டுமெனக் காட்டப்பட்டது.

**முன்னுரை**

பகவான் போதித்த ஜீவபிரம்ம ஐக்கிய ரூபமான (ஸர்வாத்மதிருஷ்டிரூப) இந்த யோகத்தினை அர்ஜுனன் சரிவர புரிந்துகொள்ள இயலாமல் கீழ் வரும் விதமாக பகவானை வினவுகின்றான்.

**அர்ஜுன உவாச**

*யோஅயம் யோகஸ்த்வயா ப்ரோக்தஹ் ஸாம்யேன மதுசூதன*

*ஏதஸ்யாஹம் ந பச்யாமி சஞ்சலத்வாத் ஸ்திதம் ஸ்திராம் !!* *(33)*

*அர்ஜுன உவாச - அர்ஜுனன் சொன்னது.*

### சொற்பொருள்

*மது சூதன! - கிருஷ்ணா! ஸாம்யேன (ஸாத்யஹ்) - மனத்தின்) சமத்துவத்தினால் சலனமற்ற தன்மையினால் சிந்திக்கக் கூடிய, யஹ் அயம் யோகஹ் - எந்தெந்த யோகங்கள், த்வயா - உன்னால், ப்ரோக் தஹ் - சொல்லப்பட்டனவோ, ஏதஸ்ய - அவற்றின் ஸ்திராம் - நிலையான, ஸ்திதம் - தன்மையை, சலத்தித்வாம் - மன சஞ்சலத்தி னால், அவிம் - நான், ந பச்யாமி - அறிய முடியாமல் இருக்கின்றேன்.*

### கருத்துரை

*ஏ கிருஷ்ணா! மனம் சலனமற்றதாக இருப்பின் சித்திக்கும் என்று நீ சொன்ன இந்த யோகத்தின் நிலையானதன்மை அலைகின்ற என் மனதிற்குப் புரிபடவில்லை.*

### விளக்கம்

*ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா ஆத்மா தத்துவத்தைக் குறித்து விரிவாக போதித்துக் கொண்டே போகிறார். இடையில் அர்ஜுனன் தன் ஐயத்தை கேட்கிறான். இவ்வாறு இடையில் அர்ஜுனன் கேட்காவி டில் பரமாத்மா இன்னும் எத்தனையோ விஷயங்களைச் சொல்லியி ருப்பாரோ என்னவோ? ஆயினும் முமுக்ஷுக்களுக்கு அர்ஜுனனின் ஐயங்கள் மிகவும் உதவுபவை "தேவா" ஜீவாத்மாவும் பரமாத்மா வும் ஒன்றேயென்றும் மனம் சலனமற்ற நிலையில் அதனை அடை யும் என்றும் சொல்லிய இந்த தியான யோகத்தில் எனக்கு நிலை யான தன்மை இன்னும் ஏற்படவில்லை. ஏனெனில் என் மனம் சபலத்துடன் அலைபாய்கின்றது என்று அர்ஜுனன் தன் நிலையை வெளிப்படுத்துகின்றான். சிஷ்யர்கள் குருவினிடம் தன் மனதைத் திறந்து வெளிப்படையாகப் பேசக்கூடும். எதனையும் மறைத்து வைக்கக் கூடாது. வைத்தியனிடத்தில் வியாதியஸ்தன் தன் நிலையை உள்ளது உள்ளபடி சொல்லாவிடில் விபரீதமான நிலை அவனுக்கு நேரும். தன் உள்மனத்திலுள்ளதை விளக்கமாகச் சொன் னாதல்தான் சிஷ்யன் குருவினால் நற்பலனைப் பெறுதல் இயலும். ஆன்மபலனை அடைய முடியும். அர்ஜுனன் நல்ல மாணவன் ஆத லால் தன் இதயத்தை வெளிப்படுத்தினான். மனம் சபலமுற்றிருப்ப தால் தன்னால் ஆன்மாவில் நிலைத்தல் இயலவில்லை என்றும்,*

சபலத்தைப் போக்கும் வழியைத் தெரிவிக்குமாறும் வேண்டுகிறான்.

அர்ஜுனன் உலகில் உள்ள எல்லா முமுக்ஷுக்களின் சார்பாக, பிரதிநிதியாக உள்ளான். எனவே பகவான் அவனுக்கு அளிக்கும் பதில் எல்லா முமுக்ஷுக்களுக்கும் உபதேசிக்கப்பட்டதேயாகும்.

'ஸாம்யேன' என்றதால் தியானயோகம் மனதின் சமத்துவத்தினாலேயே, சலனமற்றிருப்பதனாலேயே, அடையக் கூடியது என்பது தெளிவாகிறது. ஊசியின் காதில் துளையிட வேண்டுமாயினும் அதற்கு ஒரு முனைப்பாடு அவசியம். அவ்வாறே மனம் பிரம்மத்தின் துளையில் அல்லது மோட்சத்தின் வாயிலில் நுழைய வேண்டுமாயின் சனலமற்று இருத்தல் வேண்டும். புகைப்படம் பிடிக்கையில் சலனமற்று இல்லாவிடில் படம் சரியாக விழாதல்லவா? எனவே மனம் சபலமுற்றிருந்தால் தேயவஸ்து சரியாகப் புலப்படாது. அத்தகைய சலனமற்ற மனம் அர்ஜுனனுக்கு இன்னும் ஏற்படவில்லையாதலால் பகவான் இவ்வாறு கேட்கிறார்.

## முன்னுரை

மனதினைக் கட்டுப்படுத்துவது மிகவும் கடினம் என்று அர்ஜுனன் கூறுகிறான்.

*சஞ்சலம் ஹி மனஹ க்ருஷ்ண ப்ரமாதி பலவத் த்ருடம்!*
*தஸ்யாஹம் நிக்ரஹம் மன்யே வாயோரிவ ஸுதுஷ்கரம் (34)*

## சொற்பொருள்

க்ருஷ்ண - கிருஷ்ணா! சஞ்சலம் - சஞ்லமுடையதும், ப்ரமாதி - (தேக இந்தியிரங்களை) கலக்கக் கூடியதும், பல வத் பலமுடையது ( கட்டுப்படுத்துவதற்கு இயலாததும் த்ருடம்ஹி - (விஷயங்ளின் மீது) திடத்தன்மை அடங்காதது அல்லவா! தஸ்ய - அதனின், நிக்ரஹம் - கட்டுப்பாடு, வாயோஹ இவ - காற்றை அடக்குவதைப் போல, சுதுஷ்கரம் - மிக்கக் கடினமானது என்று சஹம் - நான், மன்யே - கருதுகிறேன்.

## கருத்துரை

கிருஷ்ணா! மனம் சலனமுடையதும், கலக்கம் தரக் கூடியது என்றும், பலமுடையதுஎன்றும், அடங்காதது என்றும் அறிகிறேன். எனவே அதனைக் கட்டுவது காற்றை அடக்குவதைப் போல மிக்கக் கடினமானதாக நான் கருதுகிறேன்.

**விளக்கம்**

*மனம் சலனமின்றி இருந்தால்தான் யோகம் (ஆத்ம ஐக்கியத்துவம்) கை கூடும் 'ஆயின் மனமோ மிகவும் சலனப்படுவது. அது தேக இந்திரியங்களைக் கலக்கமுறச் செய்து சாந்தமான இதயத்தை - பாற்கடலில் மந்தர மலையைப் போன்று கடைந்து கலக்கிவிடுகின்றது. மேலும் பல பிறவிகளாகத் தொடர்ந்து வரும் வாசனைகளை, பிறவிக் குணங்களை, காட்சிப் பொருள்களைத் தன்னிடத்தே கொண்டதாய், சபலத்துடன் கூடிமிகவும் பலமுடையதாக உள்ளது. எனவே தான், அதனைக் கட்டுப்படுத்துதல் கடினமாக உள்ளது. இவ்வாறாக, அர்ஜுனன் மனதின் திறமையை வர்ணித்து அதன் தன்மையை நான்கு சிறப்பு அடைகளில் தெரிவிக்கிறார் அவையெவையெனின் 1. சபலத்தன்மை, 2. கலக்கம், 3. பலம், 4. திடத்தன்மை மனதின் இந்த இலட்சணங்கள் அனைவரும் அனுபவத்தில் கண்டதே. சபலம் கொண்ட மனத்தினைக் கூட முள்குத்திய, கள் குடித்த, பிசாசு பிடித்த, தேள் கொட்டிய குரங்கிற்குப் பெரியோர் ஒப்பிட்டுச் சொல்வது வழக்கம். மனம் தியான காலத்தில் சாதகனைத் தடுமாற வைக்கும் தன்மை அனைவரும் அறிந்ததே. மேலும் இந்திரியங்களை, இதயத்தினை அது அமைதியாக இருக்க விடாது. ஒவ்வொரு கட்டத்திலும் கலக்கி மனவமைதியின்றிச் செய்து விடும். அமைதியுறுவதற்குப் பல மாதங்கள் கூட பிடிக்கலாம்.*

*இவ்வாறாக, மனதின் சக்தியைக் குறித்து அர்ஜுனன் வர்ணித்து அதனைக் கட்டுப்படுத்துதல் மிகவும் கடினமானது. அதனை எவ்வாறு தன்வயப்படுத்துவது என்பதைக் கூறுமாறு பகவானை வேண்டுகிறான். 'துஷ்கரம்' என்னாது 'ஸுதுஷ்கரம்' என்றதால் மனத்தைக் கட்டுப்படுத்துதல் மிகமிகக் கடினம் என்பது தெளிவாகிறது.*

**வினா :** *மனதின் இயல்பு எத்தகையது?*

**விடை :** *1. சஞ்சலமுடையது, 2. தேக இந்திரியங்களைத் திகைக்கச் செய்வது, 3. மிகவும் பலமுடையது, 4. திடமானது.*

**முன்னுரை**

*அர்ஜுனின் வாக்கியங்களைக் கேட்டு ஸ்ரீ கிருஷ்ணா பரமாத்மா மனதினைக் கட்டுப்படுத்தும் உபாயங்களைக் கூறுகிறான்.*

**ஸ்ரீ பகவானுவாச**

*அஸம்சயம் மஹாபாஹோ மனோ துர்நிக்ரஹம் சலம்!*
*அப்யாஸேன து கௌந்தேய வைராக்யேண ச க்ருஹ்யதே!!* (35)

## சொற்பொருள்

மஹாபாஹோ - சிறந்த தோள் வலியுடைய அர்ஜுனா! மனம் - மனமானது, துர்நிக்ரஹம் - கட்டுப்படுத்துதற்குக் கடினமானது சலம் - சஞ்சலமானது (இத்யத்ர - என்று சொல்வதில்) அஸம்சயம் - என்பதில் ஐயமில்லை. (ததாலி - ஆயினும்) கௌந்தேய - குந்தியின் மைந்தா! அப்யாஸேனது - பயிற்சியினால், வைராக்யேணச - வைராக்கியத்தினாலும், க்ருஹ்யதே - (அம்மனம்) கட்டுப்படுகின்றது.

## கருத்துரை

சிறந்த தோள்வலியுடைய அர்ஜுனா! மனத்தினை கட்டுப்படுத்துதல் கடினமே, மேலும் அது சஞ்சலமானதே. இதில் எத்தகைய ஐயமும் இல்லை. ஆயினும் பயிற்சியினாலும், வைராக்கியத்தினாலும் அதனைக் கட்டுப்படுத்த இயலும்.

## விளக்கம்

மனதினைக் கட்டுப்படுத்துதல்கடினமே. அது சஞ்சலமுடையதே என பகவான் ஒப்புக் கொள்கிறார். ஆயின் அதற்காகப் பயப்படத் தேவையில்லையென்றும் பயிற்சி வைராக்கியம் இவற்றால் அதனைக் கட்டுப்படுத்துதல் இயலும் என்றும் தைரியமூட்டுகிறார். ஒரு பொருளோ, தனிமனிதனோ பலம் பொருந்தியிருந்தால் மட்டும் எவரும் பயப்படத் தேவையில்லை. யானை மிகவும் பல சாலியானதே, ஆயினும், ஒரு சின்ன அங்குசத்திற்குக் கட்டுப்பட்டுவிடுகிறது. அவ்வாறே சிங்கம், புலி முதலானவை ஒரு சிறிய துப்பாக்கி குண்டுக்குப் பயப்படுகிறது. எருது மிக்க பலமானதாயினும் மூக்கணாங்கயிறுக்கு கட்டுப்பட்டுவிடுகிறதல்லவா? அவ்வாறே மனதின் பலம், திறமை இவற்றைப் பார்த்துப் பயமடையத் தேவையில்லை, மனம் 'துர்நிக்ர ஷமானதே தவிர, 'அநிக்ரமானதல்ல' அதனை வெல்லுதல் கடினமேயன்றி இயலாததென்பது இல்லை. தக்க முயற்சி செய்தால் அதனைக் கட்டுப்படுத்த முடியும்.

இனி அதனைக் கட்டுப்படுத்த பகவான் போதித்த உபாயங்களைக் குறித்துச் சிறிது விசாரிப்போம். இக்கட்டம் சாதகர் உலகிற்கு மிகவும் முக்கியமானது. ஏனெனில், எதற்கு வசப்பட்டு மனிதர்கள்

ஆதிகாலத்தினின்றே இந்த சம்சாரக் கடலில் விழுந்து அலைப்புறுகி றார்களோ, பிறப்பு இறப்பு எனும் துக்கத்திற்கு ஆட்படுகிறார்களோ, எது ஆத்மாவை அடைவதற்கு தடைக்கல்லாக உள்ளதோ அத்தகைய மனத்தினைக் கட்டுப்படுத்துவதைக் குறித்து பகவான் இங்குக் கூறு கிறார். அதுவும் இது அவதார மூர்த்தியான ஸ்ரீ கிருஷ்ணபகவானின் நேரடி வாக்கானதால் அது மிகமிக முக்கியத்துவத்தை அடைகிறது. மனத்தினைக் கட்டுப்படுத்தல் எங்கணம்? என்ற இந்த வினாவே ஒவ்வொருவரிடமும் எழுகின்றது. இந்த பிரச்சினையைத் தீர்த்தால் ஆன்மீக சாதனை முழுமையுற்றதாகவேயாகும். எனவே அதனைக் குறித்து பகவான் என்ன சொல்கிறார் என்பதை அறிந்து கொள்வது மிகமிக அவசியம்.

1. அப்யாசம் (பயிற்சி) 2. வைராக்கியம் என்ற இரண்டு உபாயத் தினால் மனத்தினைக் கட்டுப்படுத்துதல் இயலும் என்று பகவான் உறுதியளிக்கிறார். பதஞ்சலிமகரிஷியும் அவ்வாறே கூறுகிறார். (அப்யாச வைராக்யாப்யாம் தன்நிரோதஹ்) வைராக்கியம் என்றால் காட்சிப் பொருள்களின் நிலையாமையை விசாரித்துஅதன்மீது பற் றின்றி இருத்தல் வேண்டும். அதனால் மனம் வெளியில் அலைப்பு றாது உள்முகமாகத் திரும்பும். வைராக்யம் எதற்காக மேற்கொள்ளு தல் வேண்டுமெனில் காட்சிப் பொருள்கள் காலக்கிரமத்தில் அழி யக்கூடியவை. இந்த சரீரமும் சிறிது காலமே இருக்கக் கூடியது. அழியக் கூடியவற்றின் மீது பற்று எதற்கு? (நிலையானது ஆன்மா ஒன்றே. எனவே அதன் மீது மட்டும் தான் பற்று வைத்தல் வேண் டும்) போகங்களை அனுபவித்தாலும் அதில் திருப்தி ஏற்படுவ தில்லை. ஆசை குறைவதில்லை. மறுபடியும் அதன் மீது இரட்டிப்பு தோன்றும். அதனால் வாசனைகள் பலப்பட்டு சம்சார பந்தம் மேலும் விருத்தியாகும். மேலும் மனம் விஷய அனுபவத்திற்காக வெளிமுகமாக அலைப்புறுவதால் ஆன்மப் பொருள் தூரமாகி விடு கிறது. தியானத்தில் மனம் நிலைக்காது. எனவே மனம் சலனமற்று இருப்பதற்கு, வசப்படுத்துதற்கு வைராக்கியம் மிக மிக அவசியம்.

இனி பயிற்சியினால் இடைவிடாத முயற்சியினால் எந்தக் காரி யமாயினும் சாதித்தல் இயலும். 'சது தீர்க்க காலனைரன்ந்தர் ய சத்கா ரசேவிதோ த்ருடபூமி' என்று பதஞ்சலி மகரிஷி பலகாலம் தொடர்ந்து பயிற்சி செய்தால் மனக் கட்டுப்பாடு தவறாது சாத்தியமா கும் என்று சொல்லியிருக்கிறார். சோம்பேறிகளுக்கு மனம் கட்டுப்ப டாது. ஏனெனில் அதனை வசப்படுத்துவதற்கு அவர்கள் முயற்சியே செய்ய மாட்டார்கள். முயற்சியோ, பயிற்சியோ இன்றி உலக அரங்

கிலோ, ஆன்மீக அரங்கிலோ எந்தக் காரியத்தையும் சாதிக்க இய லாது. ஒரு சின்னத் தேர்விலே வெற்றி பெற வேண்டுமாயின் பல நாட்கள் முயற்சி செய்ய வேண்டுமெனின் பல பிறவிகளாகத் தொடர்ந்து கடினமாகியுள்ள மனத்தினை இளக்குவதற்கு எத்துணை முயற்சி, பயிற்சி தேவைப்படும் என்பதைச் சிறிது ஆலோசித்துப் பாருங்கள்!

எனவே தினமும் மனதினை விசாரணை, வைராக்கியம் இவற் றால் வெளி உலகினின்றும் திருப்பி உள்முகமாக ஆன்மாவில் நிலை பெறுவதற்கு பயிற்சி இடைவிடாது செய்துவந்தால் இறுதியில் மனம் தன்வயப்பட்டு ஆன்மாவிலேயே எப்போதும் நிலைத்துவி டும்.

இச்சுலோகத்தில் அர்ஜுனனை 'மஹா பாஹோ' என்று கிருஷ் ணர் அழைக்கிறார். அர்ஜுனா! நீ புஜபல பராக்கிரமும் நிறைந்தவன்; சரீரபலம் நிறைந்தவன். அந்த சக்தியினை நீ ஆன்ம அரங்கில் செலுத் தினால் பயிற்சி வைராக்கியம் இவற்றால் மனதினைக் கட்டுப்ப டுத்தி,வெற்றி காண்பாய் என்று இவ்வழைப்பின் மூலம் பகவான் தெரிவிக்கிறார். மனதினைக் கட்டுப்படுத்துவது கடினம் என்று சோர்ந்து நின்ற அர்ஜுனனுக்கு அவனது பராக்கிரமத்தை எடுத்துச் சொல்லி உற்சாகப்படுத்துவதற்காக அங்ஙனம் அழைத்தார் எனலாம்.

**வினா :** மனம் எத்தகையது?

**விடை :** 1. சலனமுடையது 2. கட்டுப்படுத்துவதற்குக் கடினமாது

**வினா :** எந்த சாதனையால் மனதினைக் கட்டுப்படுத்த இயலும்?

**விடை :** 1. பயிற்சி, 2. வைராக்கியம் - இரண்டினால் மனதினை தன்வயப்படுத்த முடியும்.

*அஸம்யதாத்மனா யோகோதுஷ்ப்ராப **இதிமே மதிஹ** !*
*வச்யாத்மனாது யததா சக்யோ அவாப்து முபாயதஹ* (36)

**சொற்பொருள் :**

அஸம்யத ஆத்மனா - கட்டுப்படுத்த முடியாத மனமுடையவ னால், யோகஹ் - யோகம் (பிரம்மஐக்கியம்) துஷ்ப்ராபஹ - அடைய முடியாது. இது - என்பது, மே - என், மதிஹ் - கருத்து, வச்யாத்மனா து யததா - மனதைத் தன் வயப்படுத்தியவனால், முயற்சி செய்பவ னுக்கு உபாயதஹ - உபாயத்தினால், அவாப்பதும் - அடைய; சச் யஹ் - முடியும்.

**கருத்துரை**

*மனதை அடக்காதவன் யோகத்தினை அடைய முடியாது என்பது என் கருத்து. தன்வயப்பட்ட மனத்துடன் முயற்சி செய்பவனுக்கோ அது அடையக்கூடியது.*

**விளக்கம்**

*மனதினை அடக்காதவனுக்கு ஆத்ம சாட்சாத்காரம் கிடைப்பதில்லை. தியான யோகத்தில் நிலைப்பதில்லை. மனதை அடக்கியவனுக்கு ஐக்கியத்துவம் சாத்தியமாகிறது என பகவான் விரும்புவோரனைவரும் நன்கு பயிற்சி செய்து முதன் முதலில் தம் மனத்தை இந்திரியங்களை அடக்க வேண்டும். அது கட்டுக்குள் அடங்காது தன் போக்கில் விஷயங்களின் மீது அலைப்புறும் வரை வீடுபேறு என்பதைக் குறித்து ஆலோசிக்க வேண்டிய தேவையில்லை. ஏனெனில் மனம் ஆசை பாசங்களினால் கட்டுண்டு வெளிமுகமாக அலையும் போது ஆத்மாவின் மீது (தெய்வத்தின் மீது) பற்றின்றி, உள்முகமாகச் செல்ல இயலாததால் ஆன்ம சொரூபத்தைக் காண இயல்வதில்லை.*

*மனக்கட்டுப்பாடு எங்ஙனம் பெறுவதென்பதை முன்சுலோகத்திலேயே பகவான் தெரிவித்துள்ளார். பயிற்சி வைராக்கியம் இரண்டையும் மேற்கொண்டால் மனது தன்வயப்படும். 'யததா' (பயிற்சி செய்பவனால்) இங்கு சொல்வதால் யோகம் அல்லது ஆத்ம சாட்சாத்காரம் அடைவதற்கு முயற்சி மிகவும் தேவை என்பதும், முயற்சி செய்பவருக்கே அது சித்திக்கும் என்பதும் தெளிவாகிறது. பல பிறவிகளாகத் தொடர்ந்து வரும் வாசனைகளை அற்றுப்போகச் செய்ய வேண்டுமாயின் பலமான முயற்சி தேவை. மேலும் 'உபாதயஹ' என்று சொல்வதால் மாயையை வெல்வதற்கு பரமாத்மாவை (யோக சித்தியை) அடைவதற்கு யுக்தி தேவை எனத் தெரிகிறது. சில சமயங்களில் சக்தி, சில சமயங்களில் யுத்தி இரண்டும் பகையை வெல்வதற்கு தேவைப்படுகிறது. எத்துணை பெரிய காரியமாயினும் யுக்தியினால் மிக விரைவில் நிறைவேறிவிடும். அத்தகைய யுக்திகளை, உபாயங்களை பலவற்றை முமுக்ஷீயானவன் ஊகித்துக் கொண்டு, அவற்றாலும், ஏனைய மார்க்கங்களினாலும் எவ்வாறேனும் பகவத் சாட்சாத்காரத்தை அடைய வேண்டும்.*

*'மேமதிஹ' - (எனது கருத்து) என்று பகவான் இங்கு தெரிவித்ததால் மனக்கட்டுப்பாடு அற்றவனுக்கு தெய்வ சாட்சாத்காரம்*

கிடைப்பதில்லை என்றும், கட்டுப்பாடுடையவர்க்கே கிடைக்கும் என்றும் நிச்சயமாக்க் கூறுவதால் அதனை முன் உதரணமாகக் கொண்டு முமுக்ஷுக்கள் அவ்வார்த்தைகளின் மீது முழு நம்பிக்கை கொள்ளுதல் வேண்டும். எனவே இனி 'என் மனதை வெல்லக்கூடுமோ, மோட்சம் கிடைக்குமோ' என்ற ஐயங்கள் எவரும் இன்றி பகவானின் வாக்கியத்தின்மீது நம்பிக்கை வைத்து பயிற்சி, வைராக்கியம் முதலிய உபாயங்களைக் கொண்டு முயன்று மனதினை அடக்கி இப்பிறவியிலேயே மோட்சத்தைச் சாதித்தல் வேண்டும்.

**வினா :** யோக சித்தியை எவர் அடையக்கூடும் எவரால் அடைதல் இயலாது?

**விடை :** மனத்தை அடக்கி உபாயங்களினால் முயற்சி செய்பவன் அடையக்கூடும். அது இல்லாதவன் அடைய இயலாது.

**வினா :** மோட்சம் எத்தகையோனுக்குக் கிடைக்கும்

**விடை :** முயற்சி செய்பவனுக்கேயன்றிச் சோம்பித் திரிபவனுக்கல்ல.

**முன்னுரை :** யோகத்தில் அக்கறையுடனும் இருந்தும் மனக்கட்டுப் பாட்டினை அடைய முடியாது சாதகன் மரணத்திற்குப் பிறகு எந்த கதியை அடைவான் என்று பரமாத்மாவை அர்ஜுனன் வினவுகிறான்.

*அர்ஜுன உவாச*

*அயதிஹ ச்ரத்தயோபேதோ யோகாச்சலித மானஸஹ!*
*அப்ராப்ய யோகஸம்ஸித்திம் காம் கதிம் க்ருஷ்ண கச்சதி!!* (37)

சொற்பொருள்

கிருஷ்ண - கிருஷ்ணா! ச்ரத்தயா - சிரத்தையுடன் - மனக்கட்டுப் பாடு இல்லாமல் இருப்பதனால், யோகம் யோகத்தினின்றும் சலித மானஸஹ - வழுவிய மனத்தையுடையவன், யோக சம்ஸித்திம்; யோக நிலையை, (ஆத்ம சாட்சாத்காரத்தை), அப்ராப்ய - அடையாது, காம்கதிம் - எந்த கதியினை, கச்சதி, அடைகிறான்?

**கருத்துரை**

*கிருஷ்ணா! சிரத்தையுடன் கூடியவனாயினும், முயற்சிக் குறைவால் யோகத்தினின்றும் மனம் தவறியவன், யோகம் நிறைவேறாது எந்த கதியினை அடைகிறான்?*

**விளக்கம்**

*மனத்தைக் கட்டுப்படுத்தினால்தான் யோகசித்தி கிடைக்கும் என்று கிருஷ்ணர் சொல்லவும், அர்ஜுனனுக்கு ஒரு ஐயம். ஒருவனுக்கு யோகத்தில், தியானத்தில், குருவின் வாக்கியத்தில், சிரத்தையுள்ளது. நம்பிக்கையுள்ளது. சாதனையும் செய்கிறான். ஆயின் மனம் தியானத்தில் நிலைபெறவில்லை. தன்வயப்படவில்லை. அத்தகையோன் தன் இலக்கினை அடையும் முன்பே மரணமடைந்து விட்டால் எந்த கதியை அடைவான் என்பது அர்ஜுனன் வினா? இவ்வினா பலருக்கும் எழுதல் இயற்கை. ஏனெனில் இப்பிறவிலேயே மோட்சத்தையடைதல் வேண்டும் என தீவிர முயற்சி மேற்கொள்பவர் மிக அரிது. இடைநிலையில் இருந்து ஏதோ ஒருவாறு சில முயற்சிகள் செய்து வருபவரே அநேகர். எனவே அத்தகையோர் மோட்சத்தை இந்நிலையிலேயே அடைய முடியாது இடையில் மரணம் நேர்ந்துவிட்டால் அவர்களின் கதி என்ன என்பது ஐயம். பயம் இவற்றைப் போக்குவதாக பகவானின் பதில் அமைந்துள்ளது.*

**வினா :** *அர்ஜுனன் ஸ்ரீ கிருஷ்ணனை என்ன வினவினான்*

**விடை :** *மோட்சப் பிராப்திக்காக சிரத்தையுடன், முயற்சிப்போனாயினும், மனக் கட்டுப்பாட்டின்மையால் யோக நிலையை அடைய முடியாது மரணம் நேரிடின் அவனது கதி என்ன என்பது அர்ஜுனனின் வினா?*

*கச்சின்னோபய விப்ரஷ்ட ஸ்சின்னா ப்ரமிவ நச்யதி!*
*அபரதிஷ்டோ மஹாபாஹோ விமூடோ ப்ரஹ்மண : பதி !!* (38)

**சொற்பொருள்**

*மஹா பாஹோ பெருந்தோள் வலியுடையவனே ஸ்ரீ கிருஷ்ணா! பிராஹ்மனஹ - பிரம்மத்தின், பதி - பாதையில், மோக்ஷமார்க்கமான யோகத்தில்), அப்ரதிஷ்டஹ - ஆதரவின்றி, வாமூடஹ - மோசமடைந்தவன், உபய விப்ரஹ்டா - இக, பரம் இரண்டிற்கும் பயனற்றவனாய், சின்ன அபரம் இவசிதறிய மேகம்போல, ந நச்யதி கச்சி அழிந்து போகிறானல்லவா?*

**கருத்துரை**

*பெருந்தோளுடைய ஸ்ரீ கிருஷ்ணா! பிரம்மமார்க்கத்தில், மோச மடைந்த மூடன் இகபரம் இரண்டுமிழந்து சிதறிய மேகம் போல் அழிந்து போகிறானல்லவா?*

**விளக்கம்**

*ஆன்மீக மார்க்கத்தில் நுழைந்தும் அதில் நிலைபெறாதவனது நிலையைக் குறித்து இங்குக் கேட்கப்படுகிறது. 'உபவிப்ரஷ்டஹ' என்ற சொல்லிற்கு கர்ம மார்க்கத்தினின்றும், யோக மார்க்கத்தினின் றும் என்று சிலரும், சுவர்க்க மோஹத்தினின்றும் என்று சிலரும் பொருள் கொள்கின்றனர்.*

*ஏதன்மே ஸம்சயம் க்ருஷ்ண சேத்துமர்ஹஸ்ய சேஷதஹ!*
*த்வதன்யஹ ஸம்சயஸ்யாஸ்ய சேத்தா ந ஹ்யுபபத்யதே!! (39)*

**சொற்பொருள்**

*கிருஷ்ண - ஓ கிருஷ்ணா! மே - என்னுடைய, ஏதத் - இந்த, சம்சமயம் - சந்தேகம், அசேஷதஹ - முழுமையாகச் சேத்தும் - போக்குவதற்கு, அர்ஹஸ - தகுதியுடையவர் ஆவீர், ஸம்சயஸய - இந்த சந்தேகத்தினை, சேத்தா - போக்குபவர், த்வத் - உன்னைவிட, அஸ்ய - வேறொருவர், நஹி உபபத்யதே - இல்லவே இல்லை.*

**கருத்துரை**

*ஸ்ரீ கிருஷ்ணா! இந்த சந்தேகத்தினை முழுமையாகத் தொலைப் பதற்கு நீயே தகுந்தவன். உன்னைத் தவிர வேறெவரும் இதனைப் போக்க இயலாது.*

**விளக்கம்**

*அர்ஜுனன் தன் குருவான ஸ்ரீ கிருஷ்ணனிடம் கொண்ட மிக்க பக்தி, முழு நம்பிக்கை இவற்றை வெளிப்படுத்துகிறான். 'பரிப்ரஸ் னேன் சேவயா' (ப-34) என்ற வாக்கியத்தில் பரிப்ரஸ்ன என்பதற்கு இது நல்ல உதாரணம். சிஷ்யன் குருவினை வினவும் போது பணிவு டனும், பக்தியுடனும் வினவுதல் வேண்டும். அப்போதே குரு மகிழ்ந்து சிஷ்யனின் மீது தன் அனுகிரகத்தைப் பொழிவார். குருவி டம், தெய்வத்திடம், பெரியோர்களிடம் அகங்காரம் இருத்தல் கூடாது.*

ஸ்ரீ கிருஷ்ணன் திரிலோக நாதன், இறைவன் எல்லா பிரம்மாண் டமனைத்திலும் உள்ள உயிர்களின் அசைவையும் அறிந்தவன். எனவே யோகத்தில் தவறியவர்களின் கதியையும் நன்கறிந்தவன். அத்தகைய மகான் எதிரில் இருக்கையில் வேறொருவரையும் அர்ஜுனன் எதற்கு நாடுகிறான்? அதற்கான தகுதி அவருக்கு மட்டுமே யுண்டு ஆதலால்! எனவே அர்ஜுனன் நீயே என் ஐயத்தைப் போக்கு தற்குத் தகுதியானவன், ஏனையோர் அல்ல என்று சொல்கிறான்.

**முன்னுரை**

அதற்கான விடை வருகின்றது.

ஸ்ரீ பகவானுவாச

*பார்த்த நைவேஹ நாமுத்ர விநாசஸ் தஸ்ய வித்யதே!*
*ந ஹி கல்யாண க்ருத்கஸ் சித்துர் கதிம் தாத கச்சதி!! (40)*

ஸ்ரீ பகவானுவாச பகவான் சொன்னது.

**சொற்பொருள்**

பார்த்த - அர்ஜுனா! தஸ்ய - அவனுக்கு (யோகத்தினின்றும் வழுவியனுக்கு), இஹ - இந்த உலகில் விநாசஹ் - விநாசம், நவித் யதே ஏவ - இல்லவே இல்லை, அமுத்ர - பிற உலகிலும், ந - இல்லை தாத - மைந்தா! கல்யாண க்ருதம் - நற்காரியம் செய்யும், கச்சித் - எவரும் துர்க்கதியை (கீழ்மையை) நகச்சதிஹி - அடைகிறதில்லை யல்லவா?

**கருத்துரை**

அர்ஜுனா அத்தகைய யோகத்தினின்றும் வழுவியவர்களுக்கு இவ்வுலகிலும், மேலுலகிலும் அழிவென்பதில்லை. நலஞ்செய் வோன் எவரும் துர்கதியடைவதில்லையப்பா!

**விளக்கம்**

நற்காரியம் செய்யும் நல்லோர்களுக்கு பகவான் அபயம் அளிக் கிறார். யோகப் பயிற்சி, தியானம் முதலானவை செய்பவர் ஒரு வேளை தம் இலக்கினை அடையாது முன்பே மரணமடைந்து விட் டால் அவர்களுக்கு துர்கதி நேராது என்று பகவான் உறுதியளிக்கி றார். நற்காரியம் செய்பவருக்கு ஒரு நாளும் அழிவோ, துர்கதியோ

நேர்வதில்லை என்று பறை அறைந்து சொல்கிறார். பகவானின் இவ்வாக்கியம் பக்தர்களுக்கு, சாதர்களுக்கு பிரம்ம மார்க்கத்தில் நுழைபவர்க்கு சஞ்சீவி போன்றது. எத்துணையோ உற்சாகமளிக்கக் கூடியது. இச்சுலோகத்தைச் செய்து அவ்வப்போது பாராயணம் செய்து வந்தால், பயம் துக்கம், சந்தேகம் இவை முமுக்ஷுக்களுக்கு ஏற்படாது. கெட்ட காரியங்கள் எத்துணை சிறப்பானதாயினும் செய்வதற்குப் பயப்பட வேண்டுமேயன்றி,நற்காரியங்கள் செய்வதற்குப் பயப்படத் தேவையில்லையென்பது தெளிவாகிறது. அவரவர் செய்யும் நற்காரிய்ங்களை அனுசரித்து மக்களுக்குக் கிடைக்கும் நற்பலனில் ஒரு வேளை வேறுபாடு இருக்கக் கூடுமேயன்றி, கெட்ட பலன்கள் மாத்திரம் எந்நாளும் அத்தகையோருக்கு நேராது.

'இஹ', 'அமுத்ர்' என்ற இரண்டு சொற்கள் பயன்படுத்தப்பட்டிருப்பதால், இஹலோகம், பரலோகம் இரண்டிலும், வேறு எங்காயினும் நற்காரியம் செய்வோருக்கு அழிவில்லையென்பது பொருள். மேலும், 'கல்யாணக்குத்' (சுபாரியம்) என்று பொதுவாகப் பயன்படுத்தப்படும் சொல்லைப் (General Term) பயன்படுத்தியிருப்பதால் எந்த புண்ய காரியமாயினும் நற்கதியே கிடைக்குமென்பது தெளிவாகிறது.

மேலும் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா தெரிவித்த இந்த விடையில் பாவாத்மாக்களுக்கு, கெட்ட காரியங்களில் ஈடுபடுவோர்க்கு, சுபமற்ற காரியங்களைச் செய்பவருக்கு துர்க்கதி தவறாது கிடைக்கும் என்ற தொனிப்பு புலப்படுகிறது. பாவிகளுக்கு இகலோகம், பரலோகம் இரண்டிலும் அழிவே ஏற்படும். (விநாசம் என்றால், கீழ்ப்பிறவி, துக்கம் முதலானவை ஏற்படுதல்) எனவே அவற்றை ஒதுக்கித் தள்ளி நற்காரியங்களையே செய்து வந்து இப்பிறவியிலேயே ஆத்ம சாட்சாத்காரத்தினை அடையவேண்டும். ஒரு வேளை அவ்வாறு அடைய இயலாது போயினும் பகவானின் இவ்வாக்கியத்தினால் தைரியத்தை வளர்த்துக் கொண்டு முன்னேறுதல் வேண்டும்.

**வினா :** யோகத்தினின்றும் வழுவியவனுக்கு எத்தகைய கதி நேரும்?

**விடை :** அவனுக்கு இவ்வுலகம், மேலுலகம் இரண்டிலும் துர்கதி ஒரு நாளும் நேராது. நற்கதியே கிடைக்கும்.

**வினா :** இங்கு ஸ்ரீ கிருஷ்ணனின் கொள்கை யாது?

**விடை :** நற்காரியங்கள் செய்பவர் எவருக்கும் துர்கதி ஒருநாளும் நேராது. நற்கதியே கிடைக்கும் என்ற உண்மையே அது.

*ப்ராப்ய புண்யக்ருதாம் லோகானுஷித்வா சாஸ்வதீஹ் ஸமாஹ்!*
*சுசீனாம் ஸ்ரீ மதாம் கேஹே யோகப் ப்ரஷ்டோ அபிஜாயதே! (41)*

## சொற்பொருள்

யோகப்ரஷ்டஹ் - யோகத்தினின்றும் வழுவியன் (யோக நிலையை அடையாதவன்) (மரணத்திற்கு பின்) புண்ய க்ருதாம் - புண்யம் செய்தவர்களின், லோகான் - உலகங்களின் ப்ராப்ய - அடைந்து, சாச்வதீஹி - பல ஸமாஹ் - வருடங்கள், உஹித்வா - (அங்கு) வசித்து (இறுதியில்) சுசீனாம் - தூய்மையானவர்களான (எப்போதும் நற்காரியங்களை ஆற்றக்கூடிய), ஸ்ரீ மதாம் - செல்வம் நிறைந்தவர்களுடைய கேஹே - இல்லத்தில், அபிஜாயதே - பிறக்கிறான்.

## கருத்துரை

யோகத்தினின்று வழுவிய (மரணத்திற்குப் பின்) புண்யாத்மா மேலுலகை அடைந்து, அங்குப் பல வருடங்கள் வாழ்ந்திருந்து, இறுதியில் நன்னெறியாளர்களான செல்வம் நிறைந்த இல்லத்தில் பிறக்கிறான்.

## விளக்கம்

யோகத்தினின்றும் வழுவியவன் துர்கதியடைவதில்லையென்று முன் சுலோகத்தில் சொல்லப்பட்டது. இனி அவன் எந்நிலையை அடைவான் என்பது இச்சுலோகத்தில் நிரூபிக்கப்படுகிறது. அவன் (மரணத்திற்குப் பின்) புண்ணிய லோகத்தையடைந்து அங்குப் பலகாலம் வசித்து, அதன்பின் நன்னெறியாளர்களான செல்வம் நிறைந்த இல்லத்தில் பிறக்கிறான். அங்குப் பிறந்து தான் இதுவரை விட்டு விட்ட யோக அப்பியாசத்தை மறுபடியும் ஆரம்பிக்கிறான். புண்யாத்மாக்களின் உயரத்தில் சுகமேயிருக்மேயன்றித் துக்கம் இருக்காது. மேலும் செல்வந்தர்களின் இல்லத்தில் தரித்திரம் குறித்த கவலைகள் ஏதுமிராது. அவர்களின் நன்னெறியாளர்களான செல்வந்தர்களாகையால் போகங்களில் ஈடுபட்டு மாறான நெறியில் செல்ல மாட்டார்கள். மேற்படியும் யோகாப்பியாசத்தைத் தொடர்வதற்கு எப்போதும் அனுகூலமான சூழ்நிலையே இருக்கும். ஆதலால் அவனுக்கு நற்கதியே கிடைக்கும் என்பது வெளிப்படை.

இச்சுலோகத்தில் 'சீனாம்', 'ஸ்ரீமதாம்' என்ற இரண்டு சிறப்பு அடை கூறப்பட்டுள்ளது. 'நன்னெறியாளர்களான, செல்வந்தர்களா

ன' என்பது அதன் பொருள். தரித்திரர்களான நன்னெறியாளர்களின் குடும்பத்தில் யோகபிரஷ்டன் பிறக்கநேர்ந்தால் அங்கு உணவிற்கா கவே மிகுந்த நேரம் உழைக்க வேண்டியிருக்கும். அதன் பலனாக யோகத்திற்குத் தடை ஏற்படக் கூடும். அவ்வாறே செல்வந்தர்களின் இல்லத்தில் பிறந்தால் போகங்களில் முழுகிப் போய் அதில் சிக்குவ தற்கான வாய்ப்பு உண்டு. எனவே தரித்திரம் இல்லாத, துராசாரம் இல்லாத இல்லத்திலேயே யோகபிரஷ்டன் பிறக்குமாறு பகவான் செய்கிறார். அப்போது தெய்வ தியானத்திற்கு எந்தவிதமான நடை யும் அவனுக்கு இராது, ஆகா! சாதகர்களின் மீது பக்தர்களின் மீது பகவானுக்கு எத்தகைய பெருங்கருணை! தன்னைத் தியானிப்ப வரை ஆயிரம் கண்ணால் அவன் பார்க்கிறான். எனவே இனி மனி தன் தெய்வமார்க்கத்தில் செல்வதற்கு ஏன் தயங்குதல் வேண்டும்?

1. யோகத்தினின்றும் வழுவியவன் புண்யவான்களின் உலகில் பிறப்பான் என்பதால், யோகம் மிகவும் புண்ணியத்தைக் கொடுக்கக் கூடியது என்பது தெளிவாகிறது.

2. மேலும் நல்ல பிறவியினை அடைந்து மறுபடியும் யோகத்தி னைத் தொடர்வதால் தான் இதுவரை செய்த பயிற்சி பலனற்றுப் போவதில்லை என்பதும் தெரிகின்றது. 3. செல்வத்துடன் நன்னெறி யும் தொடரும் என்பது இச்சுலோகத்தின் மூலம் தெரிகின்றது. எனவே செல்வந்தர்கள் தம் ஐசுவரியத்துடன் நன்னெறியையும் பின் பற்றுதல் வேண்டும். இவ்விரண்டிலும் எது சிறந்தது என்ற கேள்வி எழும் போது நன்னெறிக்கே முக்கியத்துவம் அளிக்கப்பட வேண் டும். ஏனெனில், இறைவனின் அருகில் இட்டுச் செல்வது நன்னெறி யேயாதலால்.

கீதையின் இரண்டாவது அத்தியாயத்தின் ஆரம்பத்தில் சில சுலோகங்கள் ('தேஹினோ அஸ்மின் யதா தேஹி' முதலானவை), இந்த ஆறாவது அத்தியாத்தின் இறுதி சுலோகம் (ப்ராப்ய புண்யக்ரு தாம் லோகான்' முதலான) வாழ்க்கையைப் பற்றிய கொள்கையி னைத் தெரிவிப்பதாக உள்ளது.

**வினா :** யோகத்தினின்றும் வழுவியவன் மரணத்திற்குப் பின் எத்த கைய நிலையை அடைவான்?
**விடை :** அவன் முதலில் புண்ய உலகத்தில் சென்று அங்குப் பலகா லம் வாழ்ந்து, அதன் பின் நன்னெறியுடன் கூடிய செல்வந்தர்களின் இல்லத்தில் பிறந்து தான் இதுவரை விட்டுவிட்ட யோகத்தினைத் தொடர்வான்.

### முன்னுரை

இவ்வாறாக சாமான்யயோகத்தினைக் குறித்துச் சொல்லி இனி உத்தம நிலையில் உள்ள யோகிகளைக் குறித்து மரணத்திற்குப் பின் அவர்களது நிலையைக் குறித்துச் சொல்கிறார்.

*அதவா யோகினாமேவ குலே பவதி தீமாதாம்!*
*ஏதத்தி துர்பதரம் லோகே ஜன்மயதீ த்ருசம்!! (42)*

### சொற்பொருள்

*அதவா - அல்லது (உத்தம நிலையோகியானால்), தீமாதாம் - ஞானிகளுடைய குலே - ஏவ - வசம்த்திலேயே, பவதி - பிறக்கிறான், ஈத்ருசம் - இதுபோன்ற, ஜன்ம - பிறவி, யத் - எது இருக்கின்றதோ, ஏதத் ஹி - அதுவே லோகே - உலகில், துர்லபதரம் - பெறுதற்கரியது.*

### கருத்துரை

*அல்லது (உத்தம யோகியானால்) ஞானத்துடன் கூடிய வம்சத்திலேயே பிறக்கிறான். இவ்வாறான பிறவி உலகில் மிக மிக பெறுதற்கரியதாகும்.*

### விளக்கம்

*ஓரளவு சாதனை செய்து மரணமடைந்த யோகிகளைக் குறித்து முன் சுலோகத்தில் வர்ணிக்கப்பட்டது. யோக சாதனைகள் பல புரிந்து இலட்சியத்தை அடைவதற்கு முன்னரே மரணடைந்தவர்களின் நிலை எவ்வாறிருக்குமோ? அவர்களுக்கு எத்தகைய கதி நேரும் என்பதும் இங்கு விவரிக்கப்படுகிறது. அத்தகையோர் மரணத்திற்குப் பின் ஞானிகளான யோகிகளின் வம்சத்தில், தவத்தில் சிறந்த மகாத்மாக்களின் வரிசையில் பிறப்பான். (முன் சுலோகத்தில், வர்ணிக்கப்பட்டவர் 100க்கு 40 மதிப்பெண்கள் பெற்றவரென்றால், இவர்கள் 100க்கு 80 மதிப்பெண்கள் பெற்றவர் எனலாம்). உத்தம யோகிகளின் வம்சத்தில் பிறக்கும் அத்தகைய பிறவி மிகவும் கிடைத்தற்கரிது எனப் பகவான் கூறுகிறார். ஏனெனில் அவர்கள் ஞானிகள் ஆனதால் ஆத்மானுபவத்தை நன்கு அறிந்தவர். ஆதலாலும், அங்குப் பிறப்பவர் வம்ச பாரம்பரியமாக வரும் நற்குணங்களினால், பிறந்தது முதலான சுக மகரிஷியைப் போன்று பக்தி, ஞான, வைராக்கியத்துடன் கூடியிருப்பதற்கான தேவையே இராது. சிறுவயதில் இருந்தே தெய்வ சம்பந்தமான சூழ்நிலையில் பிறத்தல் சாமான்ய விஷய*

மல்ல. மகோன்னதமான நற்பலனாகும். பல பிறவிகளாகச் செய்த புண்யங்களின் பலனேயாகும். அத்தகைய உத்தமயோக பிரஷ்ட னுக்கு முதலிலிருந்தே தடங்கல்கள் நேரிடினும் சாதனைகள் தொடர்ந்து நடைபெறும். ஏனெனில், அவன் சிறந்த யோகிகளின் வழிமுறைப்படி, நிரந்தரமாக ஆன்மீக விசாரணை, யோக விசா ரணை, யோக சாதனை, நியமநிட்டைகள், தெய்வீக புத்தகங்களைப் படித்தல் முதலானவை அவையே நடந்து கொண்டிருக்கும். அதற்கு எதிராகப் போதிப்பவரோ, நடந்து கொள்பவரோ, அங்கு இரார். எனவே இதற்கு முன்பு தான் விட்ட சாதனையில் மிகுந்தவற்றை பூர்த்தி செய்து கொண்டு தன்யமடைவதற்கான அவகாசம் இங்குக் கிடைக்கிறது.

உலகில் எல்லாப் பிறவிகளை விட யோகிகளின் வம்சத்தில் பிறப்பதே மிகவும் சிறந்தது என்று பகவான் சொல்வதில் அதன் மேன்மை நன்கு தெரியவருகிறது. உலகில் செல்வந்தர்களின் பிறப்பு சிறந்ததல்ல. ஞான யோகியின் பிறவியே மேன்மையானது என்று பகவான் அறைந்து கூறுகிறார். எனவே தெய்வத் தன்மையில் யோகாப்பியாசத்தில், ஆத்மானுபூதியில் மாத்திரமே உண்மையான சிறப்பு உள்ளது என்றுணர்ந்து, விவேகிகள் அதற்கான தீவிரமான முயற்சியை இப்பிறவியிலேயே செய்ய வேண்டும். ஆன்மீக வழி யில் எத்துனை முயற்சி செய்தால் அத்துனை பலன் கிடைக்கும்.

'குலே' என்பதற்கு வம்சம் அல்லது சம்பிரதாயம் என்று பொருள் சொல்லக்கூடும்.

**வினா :** உத்தம நிலையடைந்த யோக சாதகர்களுக்கு (யோக சாதனை அதிகமாகச் செய்து லட்சியத்தினை அடையாது மரணமடைந்த வர்க்கு) எத்தகைய நற்கதி கிடைக்குமோ, அதனை விவரிக்க?

**விடை :** அத்தகையோர் ஞானிகளான யோகிக் குடும்பத்தில் பிறப்பர்.

**வினா :** உலகில் எல்லா ஜன்மங்களைவிடச் சிறந்த ஜன்மம் எது?

**விடை :** ஞானிகளான யோகிகளின் குடும்பத்தில் பிறப்பது.

**முன்னுரை**

அவ்வாறு யோகிகளின் வம்சத்தில் பிறந்த பின் அவனது நிலையை, செயலை விவரிக்கின்றார்.

*தத்ர தம் புத்திஸம் யோகம் லபதே பௌர் வதே ஹிகம்!*
*யததே ச ததோ பூயஹ ஸம்ஸித்தௌ குருநந்தன!! (43)*

**சொற்பொருள்**

குருநந்தன! - அர்ஜுனா, தத்ர - அந்த யோகிககளின் குலத்தில் (அவன்) பௌர்வதை ஹீகம் - பூர்வ தேகத்தின் தொடர்பான, தம் - அந்த புத்திஸம் யோகம் - யோக விஷயமான புத்தியுடன் சேர்க்கையை லபதே - அடைகிறான். தத்ரஹ - அவ்வாறு பூர்வ ஜன்மத் தொடர்பில், யூயஹ - மறுபடியும் ஸம்ஸித்தௌ - முழுமையான யோக நிலைக்காக (மோட்சத்திற்காக), யததேச - முயற்சி செய்கிறான்.

**கருத்துரை**

அர்ஜுனா! அவ்வாறு அவன் யோகிகளின் வசம்சத்தில் பிறந்து முன் பிறவியின் தேகத் தொடர்பால் அத்தகைய யோக சாதனை அறிவைத் திரும்பவும் பெறுகிறான். அத்தகைய பண்பாட்டினால் அவன் முழுமையான யோக நிலையை அடைவதற்கு மறுபடியும் தீவிரமாக முயலுகிறான்.

**விளக்கம்**

அவ்வாறு யோகிகளின் வம்சத்தில் பிறந்த அவன் என்ன செய்கிறான் என்பது இங்குச் சொல்லப்பட்டது. முன் பிறவியில் தான் பயிற்சி செய்து விட்டுவிட்ட யோகத்தினை மறுபடியும் பூரண நிலையை அடையும் வரை அதனை சாதனை புரிகிறான். எங்கு விட்டானோ, அங்கிருந்து மறுபடியும் தொடர்கிறான். அவனது முன் பிறவியின் தேகம் அழிந்ததேயன்றி, அவனது முன்பிறவியின் புத்தி, பண்பாடு அழிவதில்லை. மோட்சத்தை அடையும்வரை அவை தொடரும், எனவே முன் பிறவியில் புத்தியுடன் சேர்க்கை ஏற்படுகின்றது. அது புண்ய புத்தியானால் அந்த புண்ணிய பண்பாடே இப்போது மலர்கிறது. பாவ புத்தியாயின் பாவச் செயல்கள் பழக்கத்திற்கு வருகின்றன. எனவே தான் முன் பிறவியில் செய்தது அழிந்து விடாமல் இப்பிறவியில் மறுபடியும் தோன்றும். இது (Brought Over) முறையைப் போன்றது. அதாவது கடையில் கணக்கு எழுதுபவர்கள் ஒரு பக்கம் கணக்கெழுதி அப்பக்கத்தின் மொத்தத்தை மறுபக்கத்திற்கு முதலில் எழுதி அந்தப் பக்கத்தின் கணக்கைத் தொடர்வர். அவ்வாறே முன் பிறவியில் செய்த யோக சாதனைகள் அடுத்த பிறவியில் தொடரும் (சம்சித்தௌ) (சமயக் - சித்தௌ) என்று சொல்வ

தால் முழுமையான சித்திக்காக அவன் முயற்சி செய்து வருவான் என்பது தெளிவாகிறது. யோக வம்சத்தில் பிறப்பதால் ஆன்மீக சூழ் நிலையே அங்கிருப்பதால் அவனின் சாதனைக்கு எவ்விதத்திலும் தடங்கல் ஏற்படுவதில்லை.

இதனால், புண்யமோ, பாவமோ, ஞானமோ, அஞ்ஞானமோ, நற்பலனோ, துர்வாசனைகளோ பிறவிதொறும் ஜீவனை நிழலைப் போலத் தொடர்ந்து வரும் என்பது தெரிகின்றது. ஞானாக்னியில் எரிக்கப்பட்டால் மாத்திரமே கர்மா மறைந்து ஜீவனை சம்சாரத்தின் சுழற்சியினின்றும் விடுபடச் செய்து முக்தியை அளிக்கும். எனவே இந்த தேகம் அழிவடைவதற்கு முன்பே ஜீவன் தன் புத்திக்கு முழு மையான ஆன்மீக அறிவை உண்டாக்குதல் வேண்டும். அநேக சாத னைகளின் வழி அதற்கு தெய்வத் தொடர்புடைய பண்பாட்டி னையே வளர்க்க வேண்டும். ஏனெனில் அத்தகைய பண்பாடு ஒன்றே மரண காலத்தில் ஜீவனைப் பின் தொடர்கிறது. பிற பொருள் கள் அனைத்தும், இறுதியில் தேகத்துடன் இங்கேயே நின்றுவிடுகி றது. எனவே அறிஞானவன் தன்னுடன் எப்போதும் இருக்கும் சூஹ்ம தேகத்தினைத் (மனம், புத்தி) தூய்மையாகவும், தெய்வம ணம் கமழ்வதாகவும், ஆத்மஞானத்தோடு கூடியதாகவும் செய்து கொள்ள வேண்டும். செய்த பாவம், புண்ணியம் இரண்டும் அழிவ தில்லையாகையால், ஏதோ ஒருவிதத்தில், ஜபம், தியானம், ஞானம், பரோபகாரம், தர்மம், இவற்றை இப்பிறவியில் செய்தால், அது மறுபிறவியில் இன்னும் விரிவடைந்து பிறப்பு இறப்பு உருவான பெரிய பயத்தினின்றும் ஜீவனைக் காப்பாற்றும் (ஸ்வல்ப மப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத் - 2-40) எனவே இதயத்தினைத் தெய்வமாகவும், தர்மமயமாகவும் ஆக்கிக் கொண்டு இப்பிறவி லேயே கடைத்தேறுவதற்குத் திடமான எண்ணம் கொண்டு ஒரு வேளை, வாழ்க்கையின் இறுதிக்குள் மோக்ஷத்தினை அடைய இய லாவிடில் மறுபிறவியிலாவது அதனைத் தொடர்ந்து முழுமையை அடைதல் வேண்டும். ஆன்மீகப் பொருளை விரைவில் அடைதல் வேண்டும். இல்லையெனில் வாழ்க்கையில் பரிதாபநிலைக்கு ஆளாக வேண்டியிருக்கும்.

**வினா :** யோகிகளின் வம்சத்தில் பிறந்து சாதகன் என்ன செய்வான்?

**விடை :** இதற்கு முன்தான் பாதியில் நிறுத்திவிட்ட யோகத்தினை பூரணசித்தியடையும் வரை தொடர்ந்து செய்து வருவான்.

**வினா :** பிறந்தவுடனேயே அவனுக்கு யோகப் பண்பாடு எங்ஙனம் நேரும்?

**விடை :** முன் பிறவியில் யோக விஷயம் குறித்து புத்தியுடன் கூடியிருந்ததால் நேரிடும். அதனால் நல்லயோகநிலையை அவன் அடைய முடியும்.

**முன்னுரை**

யோகத்தின் மகிமையை வர்ணிக்கிறார்.

*பூர்வாப்யாஸேன தேனைவ ஹ்ரியதே ஹ்யவ சோ அபி ஸஹ!*
*ஜிக்ஞாஸீரபி யோகஸ்ய சப்தப்ரஹ்மாதி வர்ததே!! (44)*

**சொற்பொருள்**

ஸஹ் - எவன் (யோக பிரஷ்டன்) அவசஹ் அபி - முயற்சி செய்யாவிட்டாலும், தேன - அந்த, ஆர்வாப்யாஸேன ஏவ - முன் பிறவியில் செய்த பயிற்சியினாலேயே, ஹ்ரிய முதே - ஹி - யோக சாதனத்தில் பலாத்காரமாக இழுக்கப்படுகிறான்; யோகஸ்ய - யோகத்தின் ஜிக்ஞாசுஹ்அம - தத்வ ஆராய்ச்சியாளன் கூட, சப்தப்ர மஹா - வேதத்தினை வேதம் சொல்லும் கர்மபலனை, அதிவர்த்ததே - கடந்த வனாகிறான்.

**கருத்துரை**

அவன் (யோக விரஷ்டன்) யோக அப்பியாயசத்திற்குத் தானே நிச்சயித்துக் கொள்ளாவிட்டாலும் முன் பிறவியில் செய்த பயிற்சியினால் யோக சாதனைக்கே இழுக்கப்படுகிறான். யோகத்தினை ஆராய்ச்சி செய்யும் தத்வ ஆராய்ச்சியாளன் கூட வேதத்தைக் கடப்ப வனாகிறான்.

**விளக்கம்**

முன் பிறவியில் செய்த யோக சாதனையின் பலன் எத்தகையது என்பதைக் காட்டுகிறார். இந்தப் பிறவியில் யோகத்தினைக் குறித்துத் தானாகவே எதுவும் எண்ணாதிருப்பினும் மனிதன் முன் பிறவியில் பண்பாட்டின் காரணமாக யோகத்தின் பக்கமே இழுக்கப்படுகிறான். எனவே எப்போதோ செய்த புண்ணியம் ஜீவனுக்கு எவ்வாறு மறுபிறவியிலும் தொடரும் என்பதை இங்கு நிரூபிக்கிறார். புண்ணியம், பாவமே தத்தம் கடமையை நிறைவேற்றித்தான் தீரும். புண்ணி

யம் புண்ணிய புத்தியையும், பாவம் பாவ புத்தியையுமே தரும். எனவேதான் இவருக்குச் சிறுவயதிலேயே விரக்தி, பகவத் பக்தி யோக பயிற்சி ஆன்மீக விசாரணை இவற்றில் ஈடுபாடு ஏற்படுகின் றது. எனவே எப்போதும் காமம் நிறைந்த தன் மனத்தினை புண்யத் தோடு கூடியதாகவும், ஆன்மீக நெறியில் நிற்பதாகவும் யோகப் பயிற்சியில் ஈடுபாட்டுடனும் இருக்கும்படி இந்தப் பிறவியிலேயே அதனை மாற்ற வேண்டும்.

இனி, இச்சுலோகத்தின் இரண்டாம் பாதத்தில் பகவான் யோகத்தின் மகிமை எத்தகையது என்பதை நிரூபிக்கிறார். யோகத் தினை அறிய வேண்டுமாயினும் அதனைப் பற்றிய ஆசை தோன்ற வேண்டுமாயினும் அவன் சுத்த பிரம்மத்தை - அதாவது வேத அனுஷ்டான கர்ம பலனை, அல்லது சாஸ்திரத்தின் மூலமான ஞானத்தின் (பரோக்ஷ ஞானம்) பலனைத் தாண்டிவிடுகிறான் எனப் பட்டது. இதனால் ஆத்ம தியான ரூபமான யோகத்திற்கு எத்துணை மகிமையுடையது என்பது விளங்குகின்றது. யோகத்தினைப் பற்றி அறிய வேண்டும் என எண்ணும் எண்ணமே மனிதனை சுத்த பிரம் மத்தைத் தாண்டி இட்டுச் செல்லும் போது இனி யோகத்தினைச் சரிவரச் செய்துவந்தால் எத்தகைய பலன் கிடைக்கும் என்பதை நாம் சொல்ல வேண்டியதில்லை.

**வினா :** யோகப் பிரஷ்டன் இப்பிறவியில் ஏன் மறுபடியும் யோகத் தின் பக்கமே ஏன் ஆகர்ஷிக்கப்படுகிறான்?

**விடை :** முன் பிறவியின் தொடர்பால் யோகப்பியாச பண்பாடே அவனை பலாத்காரமாக இப்பிறவியிலும் யோகத்தின் பக்கமே தள் ளுகிறது.

**வினா :** யோகத்தின் மகிமை எத்தகையது?

**விடை :** அதனை அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஆசை மாத்தி ரமே மனிதனை சுத்த பிரம்மத்திற்குத் தாண்டி வைத்துவிடுகின்றது.

**முன்னுரை**

யோக பிரஷ்டன் எத்தகைய நற்கதியையடைவான் என்பதைக் கூறுகிறார்.

*ப்ரயத்னாத்யத மாணஸ்து யோகீ ஸம்சுத்த கில்பிஷஹ!*
*அநேக ஜன்ம ஸம்ஸித்தஸ்த தோ யாதி பராம் கதிம்!!* (45)

### சொற்பொருள்

*ப்ரயத்னாத் - பற்றுதலுடன், பதமான - முயற்சி செய்கிற* யோகிது - யோகியானவன், ஸம்சுத்த சில்பிஷஹ - பாவங்களினின் றும் விடுபட்டவனாய் (குற்றமற்றவனாய்) அநேக ஜன்ம ஸம்ஸித் தஹ - பல்பிறவிகளில் ப்யிற்சியின் மூலம் அடைந்த பரிபக்குவத்யு *டையவனாய், ததஹ - அதன்பின்,* பராம் - *மிக* உத்தமமான, கதிம் - *கதியினை (மோக்ஷத்தினை), பாதி - அடைகிறான்.*

### கருத்துரை

*ஈடுபாட்டுடன் முயற்சிக்கின்ற யோகியானவன் பாவங்களற்ற வனாய், பல பிறவிகளாகத் தொடர்ந்து செய்யப்பட்டு வந்த பயற்சி யினால் யோக சித்தியடைந்தவனாய், அதன்பின் மிக உத்தமமான கதியினை (மோட்சத்தினை) அடைகிறான்.*

### விளக்கம்

*இங்கு மோட்சத்தை அடைவதற்கு மூன்று விதமான விஷயங் கள் விவரிக்கப்பட்டுள்ளன.*

*1. பற்றுதலோடு கூடிய முயற்சி.*
*2. பல பிறவிகளாகச் செய்யப்பட்ட பயிற்சி*
*3. குற்றமற்ற தன்மை ஆகிய இம்மூன்றும் மோட்சத்தின் வாயிலை அடையக் கூடிய படிகள்.*

*எக்காரியத்தைச் செய்தாலும் அதன் மீது பற்றுதல், திடமான எண்ணம், மிக மிக அவசியம். உலக விஷயங்களிலேயே இவை அவசியமாயின் உலக ஆன்மீக காரியங்களில் இன்னும் எவ்வளவு தேவையென்பதை சொல்ல வேண்டிய அவசியமில்லை. 'நாய மாத்மா பலஹீனேன லப்யஹ' இந்த ஆன்மாவானது பலமற்றவ னால் அடையக் கூடியது அல்ல'. என்று உபநிஷத்துகள் கோஷிக்கின் றன. எனவே முயற்சி அவசியம். அதுவும் ஈடுபாட்டுடன் கூடிய முயற்சி தேவை. இல்லையெனில் மாயையின் பிடி அவனை அலைப்புறச் செய்யும். 'கஸிசத்தீரஹ்' ப்ரத்யகாத்மான மோஹத்' - என்று உபநிஷத்துகள் சொல்வதைப்போல தைரியம், பற்றுதல் கூடி யபவனே ஆத்மாவை அடைய முடியும்.*

*அத்தகைய திடமான முயற்சி இந்தப் பிறவியிலேயே யோகிக் குக் கிடைக்கும்மெனில், அவன் முற்பிறவிகளில் எத்துணையோ*

செய்த பயிற்சியினாலேயாம். மனிதப்பிறவி அடைதல் மோக்ஷத்தை அடைய விரும்பும் சாதகர்களாவது, ஆன்மீகப் பண்பாடு உடைய குடும்பத்தில் பிறப்பது, பல பிறவிகளில் செய்த புண்ணியத்தின் பலன் என்று சாஸ்திரங்கள் அறைந்து கூறுகின்றன. இதனால் மோட்சம் அடைவதற்குப் பலபிறவிகள் தேவை என எண்ணக்கூடாது. அவ்வாறு எண்ணிப் பயப்படத் தேவையில்லை. தீவிர முயற்சியினால் இப்பிறவியிலேயே, இக்கணமே மோட்சத்தினை அடைய முடியும. பல பிறவிகளாக நாம் செய்த முயற்சியினால் தூய்மை, தெய்வ சிந்தனை ஏற்பட்டுள்ளது என்று நினைத்தால் போதுமானது.

இனி மூன்றாவது பாவங்களற்ற தன்மை சித்தத்தில் பாவங்களின் கறை படிந்துள்ள வரை ஆன்மா ஒளிவிடாது. எனவே ஆத்மானுபூதி சித்திக்க வேண்டுமாயின், நிஷ்காம கர்மாவினால் பாவத்தின் குறைகளை அகற்றினால் இதயம தூய்மையாகும். அதன்பின் நிர்மலமான நீர்நிலையைப் போல அது தெளிவாக இருக்கும். எனவே தான் பகவான் 'ஸம் சுத்த கில்பிஷஹ' பாவத்தை முழுமையாகத் தொலைத்தவன் மாத்திரமே மோட்ச சித்தியை அடைவான் என்கிறார். தூசியைத் துடைப்பதற்குத் துடைப்பம் எவ்வாறு தேவையோ மலத்தைக் கழுவுவதற்கு நீர் எவ்வாறு அவசியமோ, இதயத்திலுள்ள கறையைப் போக்குவதற்கு தெய்வதியானம், ஆன்ம விசாரணை, நிஷ்காம கர்மா முதலானவை அவசியமே.

'பரா ங்கதிம்' என்றதால் மோட்சப் பதவி உலகிலுள்ள எல்லா பதவிகளையும்விட மிகவும் சிறந்ததென்பது தெளிவாகிறது. ஏனெனில் ஏனைய உதவிகளனைத்தும் மறுபடியும் பிறவியை ஏற்படுத்தும். மோட்சப் பதவியொன்றே (தெய்வ நிலை) மறுபிறப்பற்றது. அத்தகைய மேன்மை பொருந்திய பதவியை அடைவதற்கான வழியை சர்வேசுவரன் இங்கு அறிவிக்கிறார். (பாவமற்ற தன்மை ஆகிய சாதனைகள்) அதனை அனுசரித்து பிரம்மானுபூதியை அடைந்து ஜீவர்கள் தன்மயமடைவார்களாக!

**வினா :** உலகில் எல்லாவற்றையும் விட உத்தமமான நிலை எது?

**விடை :** ஆத்ம சாட்சாத்காரம்

**வினா :** அது ஜீவர்களுக்கு எங்ஙனம் கிடைக்கும்?

**விடை :** 1. பற்றுடன் கூடிய முயற்சி, 2. பல காலம் இடைவிடா பயற்சி, 3. பாவங்களற்ற தன்மை ஆகியவற்றால் கிடைக்கும்.

## முன்னுரை

*யோகியின் சிறப்பை வர்ணிக்கிறார்.*

*தபஸ்விப்யோ அதிகோ யோகீ ஞானிப் யோஅபி மதோ அதிகஹ!*
*கர்மிப்யஸ்சாதிகோ யோகீ தஸ்மாத் யோகீ பவார்ஜுன!! (46)*

## சொற்பொருள்

*அர்ஜுன - அர்ஜுனா!, யோகி யோகியானவன், தபஸ்விப் யேஹ் -தவம் புரிபவர்களைக் காட்டிலும், அதிகஹ் - மேலானவன், ஞானிப்ய ஹ்அபி - சாஸ்திரஞானம் உடையவர்களைக் காட்டிலும், அதிகஹ் - மேலானவன், என்று, மதஹ் - எண்ணப்படுகிறார்கள். யோகீ - யோகி, கர்மிப்யஹ்ச - (அக்னிஹோத்ரம் முதலான) காமிய கர்மங்களைச் செய்பவர்களைக் காட்டிலும், அதிகஹ் - மேலான வன், தஸ்மாத் - ஆகையினால், யோகீ - யோகியாக, பவ - ஆவாய்.*

## கருத்துரை

*அர்ஜுன! யோகியானவன் தவசிகளைக்காட்டிலும், சாஸ்திர ஞானம் உடையவர்களைக் காட்டிலும், காமிய கர்மங்கள் செய்பவர் களைக் காட்டிலும் மேலானவன் என்று கருதப்படுகிறான். எனவே நீ யோகியாக ஆவாய்.*

## விளக்கம்

*தியானயோகியின் சிறப்பு இங்கு நிரூபிக்கப்படுகின்றது. அவன் 1. தவசிகளைவிட, 2. சாஸ்திர அறிஞர்களைவிட, 3. கர்மநிஷ் டனைவிட சிறந்தவன் என்கிறார். தவசிகள் என்றால் சாந்திராயண விரதம் மேற்கொள்பவர்கள் என்றும், ஞானிகள் என்றால் சாஸ்திர ஞானம் மட்டுமுடையவரென்றும், கர்ம நிஷ்டர்கள் என்றால் அக்னி ஹோத்திரம் முதலான (யக்னங்கள்) கர்மங்களைச் செய்பவர்கள் என்றும் பொருள். 'ஞானாத்தியானம் விசிஷ்யதே! என்று இதற்கு முன் இப்பொருளிலேயே பகவான் வெளிப்படுத்தினார். அதாவது சாஸ்திரங்களின் மூலம் பெறும் பரோகஷ ஞானத்தைவிட ஆத்மதி யானம் சிறந்தது என்பது பொருள். எது ஜீவனின் ஆன்மீக பதவிக்கு அருகில் சேர்த்துவிடுமோ, அல்லது எதன் மூலம் ஜீவன் ஆத்மா விற்கு அருகில் சேரமுடியுமோ, அதுவே ஏனையவற்றைவிட யாவற் றிலும் சிறந்தது. இந்த சூத்திரத்தினால் உலகில் உள்ள எல்லாப் பொருள்களின் நிலையை, சூன்யத்தன்மையை நாம் உணர முடியும்.*

'யோகிபவ' - 'யோகியாவாய்' என்று அர்ஜுனனை பகவான் ஆசிகூறுகிறார்.. யோகத்தின் சிறப்பை முதலில் கூறியே அதன்பின் னரே யோகியாவாய் என்பது, இங்குக் கவனிக்கத்தக்கது. எனவே தான் 'தஸ்மாத்' (ஆசையினால்) என்ற சொல்லைப் பயன்படுத்தியுள் ளார். எதனையும் தீர விவரமாகச் சொல்லிய பின்தான் அதன்மீது பூரண நம்பிக்கை ஏற்படும். எனவே ஸ்ரீ கிருஷ்ணரும் அவ்வாறே செய்தார். தியானத்தின் முறையை, சிறப்பைத் தகுதியைக் கூறி பின் னர் 'இக்காரணத்தினால் நீ யோகியாகக் கடவாய்' என்று கருணையு டன் கூறுகிறார். எனவே பகவான் கட்டளைப்படி அனைவரும் யோகியாதல் வேண்டுமேயன்றி போகிகளாக அல்ல. யோகம் ரோகத்தை நிர்மூலமாக்கும். அதாவது பவரோகத்தை மாற்றும். பக வத் ஐக்கியத்திற்கு வழிவகுக்கும் யோகமே எல்லாவிதமான சம்சார துக்கங்களினின்றும் விமுத்தியடையச் செய்யும். யோகியென்றால் ஜடாமுடி தரித்து, காஷாயம் உடுத்து சாதுவாக மாறுதல் அல்ல. மனத்தை வெளி விஷயங்களினின்று திருப்பி உள்முகமாக ஆன்மா வில் நிலைநிறுத்தலே. இறைதியானம் செய்பவனே யோகி. தியா னத்தின் வழி சுஸ்சொரூப சாட்சாத்காரம் அடையப் பெறுகையில் ஜீவன் முக்தி பெறுகிறான். எனவே அத்தகைய மனோன்னத யோகப தவியை அடைந்த அனைவரும் தன்னுயிர்களாதல் வேண்டும்.

**வினா :** யோகி எத்தகையவன்?

விடை : அவன் 1 தவசிகளைவிட, 2. சாஸ்திர அறிஞர்களைவிட, 3. கர்மநிஷ்டர்களைவிட சிறந்தவன்.

**வினா :** எனவே பகவான் அர்ஜுனனுக்கு என்ன சொல்கிறார்?

**விடை :** 'நீ யோகியாக ஆவாய்' என்கிறார்.

**முன்னுரை**

யோகிகளில் எவர் சிறந்தவன் எனக் கூறுகிறார்.

*யோகினா மபி ஸர்வேஷாம் மத் கதேனாந்தராத்மனா!*
*ச்ரத்தாவான் பஜதே யோமாம் ஸமே யுக்த தமோமதஹ!* (47)

**சொற்பொருள்**

ஸர்வேஷாம் யோகினாம் அபி - யோகிகள் அனைவரிலும், யஹ் எவன், மத்கதேன - என்னிடம் செலுத்தப்பட்ட, அந்தராத்மனா - மனத்துடன் - ச்ரத்தாவான் - சிரத்தையுள்ளவனாய், மாம் - என்னை,

பஜதே - சேவிக்கிறானோ, (தியானிக்கிறானோ), ஸஹ் - அவன், யுக்ததமஹ் - மிகவும் சிறந்தவனென்று, மே - மதஹ - என் கருத்து.

**கருத்துரை**

*யோகிககள் அனைவரிலும் எவன் என்னிடத்து மனத்தை நிறுத்தி, சிரத்தையுடன் என்னைத் தியானிக்கிறானோ அவனே மிக வும் சிறந்தவன் என்பது என் கருத்து.*

**விளக்கம்**

*உலகில் அனைவரையும் விட யோகிகள் உத்தமர்கள் என்று இதற்கு முன் சுலோகத்தில் கூறப்பட்டது. அந்த யோகிகளிலும் எவன் மிகச் சிறந்தவன் என்பது இங்குக் கூறப்படுகிறது. மிக்க சிரத் தையுடன் அந்தகரண சுத்தியுடன் மனதை நிறுத்தி பரமாத்வையே தியானிப்பவன் யோகிகளில் மிகச் சிறந்தவன் என்று ஸ்ரீ கிருஷ்ணர் கூறுகிறார். ஸ்ரீ கிருஷ்ணர் சராசரமனைத்தும் உள்ள உயிர்களின் இத யத்தில் ஒளிவிடும் சாட்சாத் பரமாத்மாவேயாதலால், 'என்னிடத்து மனதை நிறுத்துக' என்று கூறுவதன் பொருள் இதயத்தின் சாட்சி யான அந்தராத்மாவில் சித்தத்தை லயிக்கச் செய்க என்பதே. யாரும் எவ்வாறாயினும் மனதில் வாசனை தோஷங்கள் நீங்கி, தேய வஸ்து வான பரமாத்விடம் லயித்து ஜீவன் ஆத்மாவாக மாறி நிற்பதே முக்கி யம். அதுவே யோகம். அதனைப் பின்பற்றுபவனே மிகச் சிறந்த யோகி. 'யோகிககள் அனைவரினும்' என்பதனால் கர்மயோகம், தியான, ஞான யோகம் - எதனை அனுசரித்தாலும் அவர்களின் மார்க்கத்தில் பக்தி சேர்ந்தால்தான் நற்பலன் கிடைக்கும். இந்தப் பொருளே இங்கு தொனிக்கிறது. எந்த விதையாயினும் நீரில் நனைந் தால்தான் முளைவிடும். அவ்வாறே பக்தியெனும் நீரில் நனைந்தால் தான் எந்த மார்க்கமாயினும் நன்கு பலனளிக்கும்.*

*பயங்கரமான மாயையை வெல்லும் செயலில் சாதகனுக்கு இறை அனுகிரஹம் அவசியம். இல்லையெனில் வெற்றி அடைதல் மிகவும் துர்லபம் எனவேதான் மகான்கள் அனைவரும் எந்த மார்க் கத்தைப் பின்பற்றினாலும் பக்தியைக் கண்டிப்பாகப் பின்பற்றியே தீருவர். கீதையின் ஒவ்வொரு அத்தியாயத்திலும் ஏதோவொரு இடத்திலாவது பக்தியைக் குறித்துப் பகவான் வலியுறுத்தாமல் செல் வதில்லை.*

'சிரத்தாவான்' என்றால் சாதகன் மிகுந்த சிரத்தையுடன் இறைவனைச் சேவித்தல் வேண்டுமென்பது தெளிவாகிறது. சிரத்தையைக் குறித்து கீதாச்சாரியன் பலவிடங்களிலும் வலியுறுத்துகிறார். சிரத்தையின்றிச் செய்யப்படும் எக்காரியமும், செய்யாமல் இருப்பதற்குச் சமானமேயாகும் என்று ஓரிடத்தில் சொல்கிறார் (17-28) சமதமாதி சாதனைகளில் சிரத்தை என்பது கூட சேர்க்கப்பட்டுள்ளது. எனவே சாதகன் மிகுந்த சிரத்தையுடன் இறைவனை தியானித்தல் வேண்டும். ''மத்கதேன' என்றதால் மனதினை வேறிடத்திற்குச் செல்லவிடாமல் ஆன்மாவிலேயே நிலை நிறுத்தல் வேண்டுமெனச் சொல்லப்பட்டது. அவ்வாறு சிரத்தையுடன் தெய்வத்தை தியானிப்பவர் மிகச் சிறந்தோன் (யுக்ததமஹ) என்று சொல்வதால், (இங்கு 'தம' என்றது கவனிக்கத் தக்கது), இதுஎன் கருத்து என்று பகவான் சொல்வதால், பக்தியுடன் கூடிய தியானம் எத்தனை மகிமை வாய்ந்தது என்பது தெள்ளத் தெளிவாகிறது. உலக மக்களின் பார்வையில் சிறந்தவன் என்று இருந்தால் மட்டும் போதாது, பகவானின் பார்வையில் 'இவன் சிறந்தவன் (யோக யுக்தன்) என்று கருத வேண்டும். அத்தகைய நிலை சிரத்தையுடன் கூடிய ஆன்மீக தியானத்தில் கிடைக்கக் கூடும் என்பது இங்குத் தெளிவாக்கப்பட்டது. எனவே அதனை முமுக்ஷுக்கள் தவறாது பின்பற்றி இறைவனின் அருளுக்கு பாத்திரமாகி தன்யர்களாதல் வேண்டும்.

வினா : யோகிகள் அனைவரிலும் சிறந்தவன் யார்?

விடை : 1. மிகுந்த சிரத்தையுடன் இருப்பவன், 2. இலட்சியமான ஆன்மாவிடத்து, அல்லது ஸ்ரீ கிருஷ்ணரிடத்தில் மனதினை லயிக்கச் செய்பவன், 3. இறைவனையே எப்போதும் தியானிப்பவன் சிறந்த யோகியாவான்.

ஓம்

இது பகவத் கீதை என்னும் உபநிஷத்தான பிரம்ம வித்தையைப் புகட்டுவதும், யோகசாஸ்திரமானதும், ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன சம்வாதமாக உள்ளதும் ஆகிய தியான யோகம் எனும் ஆறாம் அத்தியாயம்.

ஓம் தத் ஸத்

ஓம்

# ஸ்ரீ பகவத் கீதை

## ஏழாம் அத்தியாயம்

## விஞ்ஞான யோகம்

### இவ்வத்தியாயத்தின் பெயர் விளக்கம்

*விஞ்ஞான யோகம்' - விஞ்ஞானம் என்றால் விசேஷ ஞானம் - அல்லது அநுபவபூர்வமான அறிவு. அதாவது நேய ஸ்வரூபம், ஞானத்தினால் மட்டும் திருப்தியுறாமல் விஞ்ஞானத்தினைக் கூட பெறுதல் வேண்டும் என்பது இறைவனின் ஆணை. அமானித்வம் முதலான ஞான குணங்களேயன்றி, ஜிக்ஞதத்வ ரூபமான விக்ஞா னத்தின் அறிமுகம் முமுக்ஷு பெற்றிருத்தல் வேண்டும். அத்தகைய விக்ஞானத்தைக் குறித்து அதாவது சுய அனுபவமான ஆன்மீக ஞானத்தைக் குறித்துச் சிறப்பாகத் தெரிவிக்கப்பட்டுள்ள அத்தியாய மாதலால் இதற்கு விக்ஞான யோகமென்ற பெயர் ஏற்பட்டது.*

### இவ்வத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள முக்கிய விஷயங்கள்

*ஞானத்தைப் பற்றிய விளக்கம் (1 முதல் 3 வரை)*

*பரம், அபரம் முதலிய இயற்கையின் வருணனை (4 முதல் 7 வரை)*

*எல்லாப் பொருள்களிலும் உள்ள பரமாத்மாவின் அசித்வத்தை விளக்குதல் (8 முதல் 12 வரை)*

*அசுர இயல்பு கொண்ட யுக்திகளின் இகழ்ச்சி, தெய்வ இயல்பு கொண்டவர்களைப் பற்றிய புகழ்ச்சி, நான்கு வித பக்தர்களைப் பற்றிய விவரம் (13 முதல் 19 வரை)*

*இதர தேவதை குறித்த உபாசனை வழிகளைப் பற்றிய விஷயம் (20 முதல் 23 வரை)*

*பகவானின் இயல்பை அறியாதவரின் இயல்பு, அறிந்தவர்களின் மகிமை (24 முதல் 30 வரை)*

**முன் அத்தியாயத்திற்கும் இதற்குமுள்ள தொடர்பு**

முன் அத்தியாயத்தின் இறுதியில் யோகிகள் அனைவரிலும் இறைவனிடத்து லயித்த சித்தத்தை உடையவராய், சிரத்தையுடன் சேவிப்பவர் மிகச் சிறந்தவர் என்று ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா ஆணையிடுகிறார். ஆயின் இறைவன் சொரூப இயல்பை நன்கு அறிந்திருந்தால் மட்டுமே அத்தகைய தியானம், ஒருமுனைப்பாடு சாத்தியமாகும். எனவே இறைவனின் சொரூபத்தை, அதன் மகிமையை, அனுபூதியை நன்கு தெரிவிப்பதற்காக இந்த அத்தியாயம் ஆரம்பிக்கப்படுகிறது.

**ஸ்ரீ பகவானுவாச**

*மய்யாஸக்த மனாஹ் பார்த்த யோகம் யுஞ்ஜன் மதச்ரயஹ!*
*அஸம்சயம் ஸமக்ரம் மாம் யதா ஞாஸ்யஸி தச்சுருணு!!-(1)*

**சொற்பொருள்**

பார்த்தா - அர்ஜுனா, மய - என்னிடத்து, அஸந்தமானஹ்-இசைந்த மனத்தினனாய், மத்ராசயஹ் - என்னையே அடைக்கலமாய் பற்றியவனாய், யோகம் - யோகத்தினை, யுஞ்ஜன் - பயின்று, மாம் - என்னை, அஸம்சயம் - ஐயமின்றி, சமக்ரம் - முழுமையாக, யதா - எவ்வாறு, ஞாஸ்யஸி - அறிவாயோ, தத் - அதனை (அம்முறையை) ச்ருணு - கேள்.

**கருத்துரை**

*ஸ்ரீ பகவான் சொன்னார் - அர்ஜுனா! என்னிடத்தே இசைந்த மனத்தினனாய், என்னையே அடைக்கலமாய்க் கொண்டு யோகத் தினை அனுசரித்து ஐயத்திற்கிடமின்றி முழுமையாக என்னை அறிந்து கொள்ளும் முறையைக் கேள்.*

**விளக்கம்**

*இறைவனைக் குறித்து அறிந்தவர் மக்களில் மிகவும் குறைவே. அதிலும் எந்தவிதமான ஐயமும் இன்றி முழுமையாக அறிந்தவர் மிகமிகச் சிலரே. அவ்வாறு இறைவனை அறிய வேண்டுமாயின் முதலில் மூன்று தகுதி பெற்றிருத்தல் வேண்டும். அவையாவையெ னின்-*

*1) இறைவனிடத்தேயே மனத்தை வைத்திருத்தல். 2) இறைவ னையே அடைக்கலமாகக் கொள்ளுதல் வேண்டும். 3) இறைவனை அடைவதற்கு தியானம் முதலான யோகங்களைப் பயிற்சி செய்தல் வேண்டும்.*

*மனம் ஒரு 'டார்ச் (Torch Light) லைட்டைப்' போன்றது. அத னைப் பார்க்க வேண்டிய இடத்தில் திருப்பினால் காணவேண்டிய பொருளைக் காணலாகும். உள்முகமாகத் திருப்பினால் ஆன்மவஸ் துவான இறைவன் புலப்படுவான். எதில் சித்தம் தீவிரமான ஈடு பாடு கொண்டுள்ளதோ அதனைக் குறித்தே அது எப்போதும் சிந் தித்த வண்ணம் இருக்கும். அஞ்ஞானிகளின் மனம் சப்தாதி விஷயங் களின் மீதே ஈடுபாடு கொண்டிருக்கும். ஆதலால் அவற்றைக் குறித்தே சிந்தித்து, பரமாத்மாவை அறிய இயலாது இருக்கும். ஞானிகள் தன் மனத்தினை இறைமுகமாத் திருப்பி இறைதத்து வத்தை அனுபவித்து பரமானந்தத்தை அனுபவித்துக் கொண்டிருப் பார். எனவே ஞானிகளைப் போலவே நிரந்தரமாக இறைவனையே எண்ணியிருத்தல் வேண்டுமேயன்றி அழியக்கூடிய உலகப் பொருட் களை அல்ல. கண நேரமே இருக்கக்கூடிய காட்சிப் பொருள்களை நம்பி அவற்றையே எண்ணியிருந்தால் ஜீவன் பிறப்பெனும் துக்கமா கிய பெரிய விபத்தில் சிக்க வேண்டி இருக்கும். எனவே 'மய்யாசக்த மனாஹ்! மதாச்ரயஹ' என்ற சொற்களின் மூலம் இறைவனை நாடு தலே இங்கு வேண்டப்படுகிறது.*

*'என்னிடத்து ஈடுபாடுடைய மனத்தை உடையவனாய் என் னையே அடைக்கலம் அடைந்து (தியான) யோகத்தினைப் பயிற்சி*

செய்து என்னை எவ்வாறு அறிகிறாயோ' என்று சொல்வதால் ஞான யோகத்திற்கு, பக்தி யோகம், தியான யோகம் உதவுகின்றன என்று தெரிய வருகின்றது.

மேலும், 'எமக்கு இறைதத்துவம் பற்றி எதுவும் தெரியவில்லையே' என்று சிலர் கேட்கின்றனர். அதற்கான விடை இச்சுலோகத்தில் சொல்லப்பட்டுள்ளது. இறைவனிடத்திலேயே ஈடுபாட்டுடன் இருத்தல், தெய்வத்தையே அடைக்கலமடைதல், தியானம் முதலான யோகங்களைப் பயிற்சி செய்தல் என்ற தகுதியுடையவனுக்கு இறைவிக்ஞானம், இறை அனுபவம் கைகூடும் என்று இங்குக் காண்பிக்கப்பட்டது.

வினா

இறைவனை முழுமையாக, ஐயமறத் தெரிந்து கொள்ள வேண்டுமெனின் என்னென்ன தகுதிகள் வேண்டும்?

விடை

இறைவனிடத்திலேயே ஈடுபாடுடைமை, 2) இறைவனையே அடைக்கலமடைதல் 3) (தியானம் முதலான) அப்யாசத்தைப் பின்பற்றுதல்.

*ஞானம் தே அஹம் ஸவிக்ஞான மிதம் வக்ஷ்யாம் யசேஷதஹ!*
*யஜ்ஞாத்வா நேஹ பூயோ அந்யஜ்ஞா த்வயம் வசிஷ்யதே!!- (2)*

சொற்பொருள்

யத்-எதனை, ஞாத்வா-அறிந்த பின், இஹ-இவ்வுலகில், பூயஹ்-மறுபடியும், ஞாதவ்யம்-அறியக்கூடியது, அன்யத்-வேறொன்று, அசேஷகஹ-மிகுந்திராமல் இருக்குமோ, இதம்-அத்தகைய அந்த, ஸவிக்ஞானம்-அனுபவபூர்வமான, ஞானம்-ஞானத்தினை, அசேனுதஹ-முழுமையாக, தே-உனக்கு, வக்ஷ்யாமி-சொல்கிறேன்.

கருத்துரை

எதனை அறிந்திருந்தால் மறுபடியும் இவ்வுலகில் அறிய வேண்டியது வேறொன்று மிகுந்திராதோ, அத்தகைய அனுபவபூர்வமான ஞானத்தை முழுமையாக உனக்கு அளிக்கிறேன்.

**விளக்கம்**

பக்தனின் மீது பகவானுக்கு எத்தகைய பெருங்கருணை என்பது இச் சுலோகத்தில் தெரிய வருகின்றது. பக்தன் அர்ஜுனனுக்கு அனுபவபூர்வமான ஞானத்தைப் பகவான் அருளப்போகிறார். உலகில் பல வித்தைகள், கலைகள் உள்ளன. ஆயின் அவற்றை எத்துணை கற்றாலும் அது முழுமையடைவதில்லை. இனியும் கற்க வேண்டியது மிகுந்தேயிருக்கும். ஆயினும் இறைவனைக் குறித்து ஞானமோ அனுபவபூர்வமாக அடைந்துவிட்டால் எல்லாவற்றையும் அறிந்தது போலாகும். அதன் பின் இனி அறிய வேண்டியது எதுவும் மிகுந்திராது.

*'யஸ்மி நிவிக்ஞாதே ஸர்வமிதம் விக்ஞாதம் பவதி'*

என்ற உபநிஷத் வாக்கியம் இப்பொருளையே வெளிப்படுத்துகின்றது. எனவே எதனை அறிந்தால் அனைத்தும் அறிந்ததாக ஆகுமோ, எது, எல்லா சாஸ்திரங்களின் சாரமாக இருக்கின்றதோ, அத்தகைய ஆன்ம தத்துவம் (இறைதத்துவம்) அனுபவித்து அறிந்தால் போதுமானது. மரத்திற்கு அடியில் நீர் ஊற்றினால் போதுமானது. அது இலைகள், கிளைகள் இவற்றிற்கு நீர் ஊற்றினால் போன்றதே. எனவே பிரம்மானுபூதியை அடைந்து விட்டால் எல்லா அனுபவங்களையும் பெற்றது போலாகும். முருகன் உலகங்கள் அனைத்தையும் வலம் வந்தான். கணபதியோ தந்தையை மாத்திரம் வலம் வந்து அதன் மூலம் எல்லா பிரம்மாண்டம் அனைத்தையும் வலம் வந்த பலனை அடைந்தார். அவ்வாறே பிரம்ம வித்தையை மட்டும் அறிந்தால் எல்லா வித்தைகளையும் கற்றதாகும். மேலும், மனிதனின் ஆயுட்காலம் மிகவும் குறைவானதேயாகும். சாஸ்திரங்களுக்கு, வித்தைகளுக்கு முடிவேயில்லை. எனவே அனைத்திற்கும் சாரமான இறைவனை அறிதலே ஜீவனின் கடமையாகும். அவ்வாறன்றி வாழ்க்கை முழுவதையும் இதர வித்தைகளை அறிவதிலேயே காலம் கடத்தி பிரம்ம வித்தையினை பகவத் விக்ஞானத்தை அடையாவிட்டால் பிறவியே வீணாகிவிடும். எனவேதான் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா அர்ஜுனனைக் கடைத்தேற்ற எண்ணி அத்தகைய பிரம்ம விக்ஞானத்தை உபதேசிப்பதற்கு எண்ணினார்.

இங்கு ஞானம், விக்ஞானம் என்று இரண்டு வகை கூறப்பட்டுள்ளது. ஞானமென்றால் சாஸ்திர ஞானம்-சப்த பிரம்மம். விக்ஞானமென்றால் அனுபவ ஞானம்-பரபிரம்மம். முழுமையாக துக்கத்தினின்றும் விடுதலை, ஆனந்தம் அடைதல், அனுபவ ஞானத்தினால்

தான், அதாவது இறை தத்தவனுபத்தினால் கிடைக்குமேயன்றி வெறும் வித்தைகளால் அன்று. எனவே கீதையில் பல விடங்களில் ஞானமுடன் விஞ்ஞானமும் தொடர வேண்டும் என்று பகவான் எச்சரிக்கிறார். 'அசேஷதஹ' என்று சொல்வதால், 'ஞான விஞ்ஞான கங்கள் முழுமையாகக் கூறுகிறேன். அவற்றில் எதுவும் மீதியில்லை' என்று தெரிவித்ததைப்போல் ஆகின்றது. இங்கு ஞானமென்றால் 13 ஆம் அத்தியாயத்தில் கூறப்பட்ட அமானித்வம் முதலான குணங்க ளுக்கென்றும், விஞ்ஞானமென்றால் நயவஸ்துவான பரபிரம்ம மென்றும் சொல்லலாம்.

வினா: ஜீவன் கடைத்தேற வேண்டுமாயின் எதனை அறிதல் வேண் டும்?

விடை : ஞானத்தை, விக்ஞானத்தை (அனுபவ ஞானம்) அறிய வேண்டும்.

வினா : ஆன்மீக விக்ஞானத்தின் மகிமை எத்தகையது?

விடை : அதனை அறிந்தால் அனைத்தையும் அறிந்ததேயாகும்.

வினா : எதனை அறிந்தால் அனைத்தையும் அறிந்ததாகும்?

விடை : பரபிரம்மத்தினை அனுபவ பூர்வமாக அறிந்தால் அத்தனை யும் அறிந்ததாகும்.

முன்னுரை

அவ்வாறு இறைவனை அறிந்தவர் மிகச் சிலரே என்கிறார்.

*மனுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கஸ்சித் யததி ஸித்தயே!*
*யததாமபி ஸித்தாணாம் கஸ்சின்மாம் வேத்தி தத்வதஹ!! - (3)*

சொற்பொருள்

மனுஷ்யானாம் - மனிதர்களுள் ஸஹஸ்ரேஷு - ஆயிரக்கணக் கானவர்களுள், கஸ்சித்-யாரோ ஒருவன், ஸித்தயே மோட்ச சித்திக் காக, யததி-முயற்சி செய்கிறான், யததாம்-(அவ்வாறு) முயற்சி செய் கின்ற, சித்தானாம் அபி-முமுக்ஷுக்களிலும், கஸ்சித்-எவனோ ஒரு வன், மாம்-என்னை, தத்வதஹ-உண்மையில், வேத்தி- அறிகின்றான்.

**கருத்துரை**

*பல்லாயிரக்கணக்கான மனிதர்களுள் ஏதோ ஒரு சிலரே மோட்சப்பதவியை அடைவதற்கு முயல்கின்றனர். அவ்வாறு முயற்சி செய்யும் பலரில் எவனோ ஒருவனே என்னை உண்மையில் அறிகிறான்.*

**விளக்கம்**

உலகில் பலகோடி பேர் மக்கள் இருப்பினும், அதில் ஆன்மீக மார்க்கத்தில் நுழைவோர் மிகச் சிலரே. நுழைந்தும் மோட்ச சித்திக்கு முயல்வோர் இன்னும் அரிதானவர். அவ்வாறு முயல்வோரிலும் கடைத்தேறுபவர், இறை அனுபவத்தை முழுமையாகப் பெறுவர் ஏதோ ஒருவரே. ஓட்டப்பந்தயத்தில் முதலில் ஆரம்பிக்கும்போது பலர் இருப்பர். இடையில் சிலர் நின்றுவிடுவர். இறுதியில் ஏதோ ஓரிருவர் மாத்திரமே வெற்றி நிலையை எட்டுவர். செடியில் பல பூக்கள் பூக்கின்றன. அதில் பல உதிர்ந்து போய் ஏதோ சில பூக்களே காயாக மாறுகின்றன. அவ்வாறே முமுக்ஷுக்களின் விஷயத்திலும். இறைவனிடம் பக்தி தோன்ற வேண்டுமாயின் பல பிறவிகளின் நற்பலன் சேர்தல் வேண்டும்.

*(ஜன்மாந்தர ஸஹஸ்ரேஷு தபோதியான ஸமாதிபிஹ்*
*நிராணாம் க்ஷீண பாபாநாம் க்ருஷ்ணே பக்திஹ் ப்ரஜாயதே)*

மாயையின் பிரவாகத்தில் பலரும் அடித்துக் கொண்டு போகப்பட, புண்யவசத்தால் ஏதோ ஓரிருவர் இறைவனைத் தேடி, இடைவிடாத முயற்சியினால், நற்சாதனைகளைச் செய்து பலனடைகின்றனர். (சஸ்தி தீரஹ் ப்ரத்யரகத்மானா மைக்ஷத்!). பூர்வ புண்ணியத்தின் பலனால் ஆன்மீக மார்க்கத்தில் சிலர் அடி வைத்தாலும் கூட இறைவனின் சாட்சாத்காரம் என்ற இலட்சியத்தை அடையும் வரை இடைவிடாது முயற்சிப்பவர் மிகச் சிலரே. இவ்விஷயத்தையே கீதாச்சார்யன் இச்சுலோகத்தில் தெளிவுபடுத்துகிறார்.

ஆத்மானுபவம் வாய் வார்த்தைகளால் மட்டுமே கிடைப்பதில்லை. அதற்கு எத்துணையோ அரிய முயற்சி, பற்றுதல், தியாகம் அவசியம். இந்திரியக் கட்டுப்பாடு, மனக்கட்டுப்பாடு, முதலானவை மிக மிக அவசியம். எனவே சோம்பித் திரிபவர்கள் அந்த இலக்கினை ஒரு நாளும் அடைய முடியாது. முக்திவழியை அடைவதற்கு அதற்கு அநேக தேர்வுகள் (Selections) இரண்டு, அவற்றில் தேறினவரே மேலே போகமுடியும். சல்லடையில் சலிப்பதைப் போல் தகுதியற்றவர் வழியிலேயே நின்று விடுவர்.

'த்தவதஹ' (உண்மையில்) என்று சொல்வதால், இறைவனை அறிபவர்கல்லாராயினம் உண்மையில் அறிந்தவர் (அதாவது அனுப வித்தவர்) சிலரே இருப்பர் என்றும், இறைவனைக்குறித்துஅரைகு றையாக அறிதல் போதாது என்பதும், அவனை அனுபவித்து அறிதல் வேண்டுமென்பதும் தெளிவாகிறது. விலங்கு மனிதனாவதற்கு எத் துணையோ பிறவிகள் எடுத்திருப்பினும் மனிதன் மாதவனாவதற்கு அத்துணை காலம் ஆகாது. எனேவே காலம் கடத்தாது விரைவில் முயற்சி செய்து ஆத்ம ஞானத்தினை அடைந்து ஜன்ம ஈடேற்றம் பெறுதல் வேண்டும்.

**வினா:** மக்களில் பலர் மோட்ச சித்திக்காக எதற்கு முயற்சி செய்வ தில்லை?

**விடை:** நூற்றுக்கு, கோடிக்கு ஒருவரே முயற்சி செய்வர்.

**வினா:** அவ்வாறு முயற்சிப்பவரில் இறைவனை உண்மையில் அறிப வர் எத்தனை பேர்?

**விடை :** எவரோ ஒருவர்.

**முன்னுரை**

பகவான் தன் பர அபர இயற்கையை வர்ணித்து, முதன் முதலில் அபர இயற்கையினைக் குறித்துத் தெரிவிக்கிறார்.

*பூமிரா போஅனலோ வாயுஹ்கம் மனோ புத்திரேவச!*
*அஹங்கார இதீயம் மே பின்னா ப்ரக்ருதிரஷ்டதா!! - (4)*

**சொற்பொருள்**

பூமிஹ்-பூமி, ஆபஹ்-நீர், அனலஹ்-அக்னி, வாயு-காற்று, கம்-வானம், மனஹ்-மனம், புத்திஹ்-புத்தி, அஹங்காரஹச-அஹங்காரமும், இதி-இப்படி, மே இயம் ப்ரக்ருதிஹ்-இந்த என்னு டைய பிரகிருதி, அஷ்டதா-எட்டுவிதமாக, பின்னா-பிரிவுபட்டிருக்கிறது.

**கருத்துரை**

நிலம், நீர், நெருப்பு, காற்று, வானம், மனம், புத்தி, அஹங்கா ரம் என எட்டுவிதமாக என் பிரகிருதி பிரிவுபட்டிருக்கிறது.

**விளக்கம்**

பரம், அபர இயற்கையைக் குறித்து விளக்க முற்பட்டு முதலில் அபர பிரகிருதியை வர்ணிக்கிறார். பஞ்ச பூதங்கள், மனம், புத்தி, அகங்காரம் என்ற இந்த எட்டும் சேர்ந்து அபரா ப்ரக்ருதியாகும். பிரகிருதி ஜடமானது புருஷன். (ஆத்மா, பிரம்மம்) ஒருவனே சைதன்ய சொரூபன். இயற்கை காட்சிப் பொருளாயின், புருஷன் காட்சியாகும். இயற்கை அழியக்கூடியது. புருஷன் நிலையானவன். இச்சுலோகத்தில் மனம், புத்தி, அஹங்காரம் என்பது பஞ்சபூதங்களோடு சமானமாக எண்ணப்படுகின்றது. அவை பஞ்சபூதங்களோடு இணைந்த வர்க்கமாகக் கருதப்படுகின்றன. பஞ்சபூதங்கள் ஜடவஸ்துக்கள். எனவே, மனம், புத்தி இவையும் உண்மையில் ஜடமே என்பது தெளிவாகிறது. பலர் மனம், புத்தி இவற்றை சைதன்யமாகக் கருதுகின்றனர். அது தவறு, அவையும் ஜடமே. கல், மண், மரம் போன்றவையே அவையும். இவ்வாறு மனத்தை நாம் எப்போதும் ஜடமென்று உணர்கிறோமோ அப்போது அதன் பலம், சக்தி அடங்கிப் போகும். ஒரு பஞ்ச பௌதீக வஸ்துவைப் போன்றே அது கட்டுக்குள் வந்துவிடும். ஜடமான வஸ்து எவ்வாறு சைதன்ய வஸ்துவான ஆன்மாவின் மீது தன் அதிகாரத்தைச் செலுத்த முடியும்? இந்த இரகசியத்தை அறியாத அஞ்ஞானிகளையே அது ஆட்டிப்படைக்கும். எனவே மனத்தைக் கட்டுப்படுத்துவதற்கு இவ்வாறான பிரகிருதி புருஷ இயற்கையைப் பற்றிய விஞ்ஞானம் மிக மிக அவசியமாகிறது.

**வினா** : இறைவனின் அபர பிரகிருதி எத்தனை விதங்கள்? அவை எவை?

**விடை** : அவை எட்டு விதங்கள் (1) பூமி (2) நீர் (3) அக்னி, (4) ஆகாசம் (5) வாயு (6) மனம் (7) அகங்காரம் (8) புத்தி.

*அபரேய மிதஸ்த வன்யாம் ப்ரக்ருதிம் வித்தி மே பராம்!*
*ஜீவ பூதாம் மஹாபாஹோ யயேதம் தார்யதே ஜகத்!! - (5)*

**சொற்பொருள்**

மஹாபாஹோ! புஜபலம் பொருந்திய அர்ஜுனா! இயம்-இவ்வியற்கையை, அபரா-கீழானது, இதஹ்து-இதனைவிட, அந்யாம்-வேறானது, யயா-இதனால் இதம்ஜகத்-இவ்வுலகம், தார்யதே-தாங்கப்படுகிறது, (தாம்-அத்தகைய) ஜீவ பூதாம்-உயிர் ஆவதுமாகிய, மே-என்னுடைய, ப்ரக்ருதிம்-(பரா) பிரகிருதியை அபராம-

மேலானதாக, வித்தி-அறிவாயாக.

**கருத்துரை**

பெருந்தோள் வலியுடைய அர்ஜுனா! இந்த (அபரா) பிரகிருதி மிகவும் கீழானது. இதனைவிட வேறான, இவ்வுலகனைத்தையும் தாங்கக் கூடிய, உயிர் ஆவதும் ஆகிய வேறொரு பிரகிருதியை (பரா பிரகிருதியை) மேலானதாக அறிவாயாக.

**விளக்கம்**

இனி பிரகிருதியைக் குறித்து விளக்குகிறார். எது உயிர் நிலையா னதோ, எதனால் இவ்வுலகம் தாங்கப்படுகிறதோ, அது பரபிரகிருதி யெனப்படும். இனி அது எத்தகையதோ, அபரா பிரகிருதியெனின் எத்தகையதோ அதனை உவமையின் அறிந்து கொள்வோம். ஒரு பானை உள்ளது. அதில் நீர் இருக்கிறது. அந்நீரில் சூரியன் பிரதிபலிக் கிறான் என்று கருதுவோம். இங்கு பானை தேகம், நீர் மனம், சூரிய னின் பிரதிபிம்பம் ஜீவன். சூர்யன் பரமாத்மா. பானை, நீர், அபரா பிரகிருதி. சூரியனின் பிரதிபிம்பம் பரா பிரகிருதி. இவ்விரண்டைக் காட்டிலும் வேறுபட்ட சூரியன் பராபர பிரகிருதிக்கு அதீதமான புருஷன் (இறைவன்). ஸ்ரீ சங்கராச்சார்யார் தம் விவேக சூடாமணி யில் இவ்விஷயத்தைத் தெளிவாக நிரூபித்துள்ளார்.

*(கடம் ஜலம் தத்கதமர்க்க பிம்பம் விஹாய ஸர்வம் திவி வீக்ஷயதே அர்க்கஹ*
*தடஸ்த ஏத த்த்ரத யாவபாஸகஹ ஸ்வயம் ப்ராகாசே விதுஷா யதா ததா)*

(விவேக சூடாமணி-221)

பானை, நீர், அதில் பிரதிபலிக்கும் சூரியனின் பிரதிபிம்பம் - இவை யனைத்திற்கும் சாட்சியாய் நின்று எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்யும் ஸ்வயம் பிரகாச பரமாத்மா என்னும் சூரிய பிம்பத்தினை அறிஞர்கள் அடைக்கலமடைவர்.

பானை, நீர், பிரதிபிம்பம் இவற்றிற்கே மாறுபாடு உண்டு. ஆயினும் சூரியனுக்கு இல்லை. அவ்வாறே விவகாரங்கள் யாவும் பரா அபர பிரகிருதிகளுக்கே ஏற்படுமேயன்றி அதனின்றும் வேறு பட்ட ஆத்மாவிற்கில்லை. அபரா பிரகிருதியான பஞ்சபூதங்கள் ஜடங்கள். பராக்ர கிருதியான சித்ஆபாசனாகிய ஜீவன் சுத்த சைதன்ய ரூபனாகிறான். ஜீவரூபனாகிறான். எனவேதான் ஜீவபூதமான பிரகி

ருதியினால் ஜடமான இந்த ஜகத் தாங்கப்படுகிறது. (தார்யதே) அத்வைத விசாரணையில் இரண்டு பிரகிருதிகளையும் மாயையே ஆகி, இருப்பது இல்லாதது போல மாயத்தோற்றமாகவே நிச்சயிக்கப் பட்ட வேறான புருஷன் (ஆத்மா) ஒருவனே உண்மையாக நிற்கிறான். எனவே முமுக்ஷுவானவன் பரா, அபர பிரகிருதிகள் இரண்டையும் தாண்டி சாட்சியாய் நிற்கும் ஆத்மாவைச் சேர்தல் வேண்டும். ஜீவத்வம் ஜடத்துவத்தை விட ஒருபடி மேலானதாயினும் அதுவும் பிரகிருதியில் அடங்குவதே ஆகையால் மாயையேயாகும். கனவில் கல்லிற்கும் ஜீவனுக்கும் இடையேயுள்ள பேதமே அபரா, பரா பிரகிருதிக்கும் இடையேயுள்ள பேதம். கனவில் உள்ள ஜீவன் கனவில் கல்லை விட சிறிது வேறாயினும், இரண்டும் கனவேயாகையால் உண்மையில் இல்லாதவையேயாகும். விழித்திருப்பவன் ஒருவனே உண்மை. அவ்வாறே எவனின்றும் பரா அபரா பிரகிருதிகளிரண்டு ஆபாஸ ரூபமாகப் பிறக்கின்றனவோ அத்தகைய அனைத்திற்கும் ஆதரமான பரமாத்மாவே சத்யமானவன். இவ்விஷயத்தை முமுக்ஷு நன்று அறிந்து ஜீவ ஜகத்திற்கு மாறான வேறுபட்ட சாட்சியான ஆத்மாவை நேரில் கண்டு பந்தவிமுக்தியடைதல் வேண்டும்.

**வினா:** பரா, அபரா பிரகிருதியின் இயல்பு எத்தகையது?

**விடை:** (1) அது ஜீவ ரூபமானது. (2) அதனால் தான் இவ்வுலகனைத்தும் தாங்கப்படுகிறது. (3) எனவேதான் அது மிகவும் சிறந்தது.

**முன்னுரை**

பிரகிருதிகளுக்கு அப்பாற்பட்ட தானே இவ்வுலகிற்குக் காரண பூதன் என்று பகவான் கூறுகிறார்.

*ஏதத் யோனீனி பூதானி ஸர்வாணீத்யுபதாரய!*
*அஹம் க்ருத்ஸ்னஸ்ய ஜகதஹ ப்ரபவஹ ப்ரலய ஸ்ததா!! - (6)*

**சொற்பொருள்**

ஸர்வாணீ-எல்லாவிதமான, பூதானி-உயிர்களும், ஏதத்யோனீனி-இந்த பரா அபர பிரகிருதிகளைப் பிறப்பிடமாகக் கொண்டவை, இதி-என்று, உபதாரய-அறிந்து கொள், அஹம்-நான், க்ருத்ஸ்னஸ்ய ஜநத-இவ்வுலக முழுவதற்கும் (இவ்விரண்டு பிரகிருதிகளின் வழி), ப்ரபவஹ்-தோற்றத்திற்குக் காரணம், ததா-அவ்வாறே, ப்ரலயஹ்-அழிவிற்கும் (ஒடுக்கத்திற்கும்) காரணம்.

**கருத்துரை**

*(ஜடம், சேதனமான) எல்லா பூதங்களும் இவ்விரண்டு (பரா, அபரா) இயற்கைகளினாலேயே தோன்றுகின்றன என்று அறிவா யாக. (இவ்விரண்டு பிரகிருதிகளின் மூலம்) நானே இவ்வுலகம னைத்தின் தோற்றத்திற்கும், அழிவிற்கும் காரணமானவன்.*

**விளக்கம்**

*ஜட, சேதன பிரகிருதியினால் உயிர்கள் தோன்றுகின்றன. இவ் விரண்டிற்கு சாட்சியான பரமாத்மா, அவ்வியற்கைகளின் வழி இவ் வுலகின் சிருஷ்டி, ஸ்திதி, லயம் இவற்றை நடத்துகின்றார். எனவே எல்லா உலகிற்கும் காரணமானவன் அனைத்திற்கும் சாட்சியாய் உள்ள அவ்விறைவனே (பரமாத்மா) பிரகிருதி என்று உபகரணத்தின் வாயிலாக அவ்விறைவனே சூத்ரதாரியைப் போன்று இவ்வுலக நாடகத்தை நடத்துகின்றான். அதிஷ்டானமான இறைவனிடத்து உறைகின்ற இவ்வுலகத்தின் சிருஷ்டி, ஸ்திதி லயம் இவற்றிற்கு அதிஷ்டானமே காரணமாகும் அல்லவா! (ஆயின் உண்மையில், அத்வைத பார்வையில் பரமாத்மாவானவன் விகாரமற்றுச் செய லற்று எதுவும் செய்யாது, செய்விக்காது, சாட்சி மாத்திரமாக மட் டுமே இருப்பவனே ஆவான்.*

**வினா :** *இவ்வுயிர்கள் எவ்வாறு தோன்றின?*

**விடை :** *பரா அபரா பிரகிருதிகளினால்.*

**வினா :** *இவ்வுலகமனைத்தின் சிருஷ்டி, ஸ்திதி, லயத்திற்குக் கார ணம் யார்?*

**விடை :** *பரமாத்மாவே இவ்வுலக சிருஷ்டி முதலானவற்றைச் செய்கி றார்.*

**முன்னுரை**

*பரமாத்மாவே இவ்வுலகிற்குக் காரணமானவன், ஆதார புரு ஷன் ஆகையால் அவனே எங்கும் வியாபித்திருக்கிறான் என்று கூறு கிறார்.*

*மத்தஹ பரதரம் நாண்யத் சிஞ்சிதஸ்தி தனஞ்ஜய!*
*மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ!! - (7)*

### சொற்பொருள்

*தனஞ்ஜெய-அர்ஜுனா! மத்தஹ-என்னை விட, பரதரம்-வேறாக, (அல்லது மேலானது), அன்யத்-வேறொன்று, கிஞ்சித்-எதுவும், ந அஸ்தி-இல்லை, சூத்ரே-நூலிலே, மணிகளை இவ-மணிக் கோவை போல, மய-என்னிடத்தே, இதம் ஸர்வம்-இவ்வுலகமனைத்தும், ப்ரோதம்-கோர்க்கப்பட்டிருக்கிறது.*

### கருத்துரை

*அர்ஜுனா! என்னைவிட மேலானது வேறு எதுவும் இல்லை. நூலிலே மணிகள் போன்று இவ்வுலகமனைத்தும் என்மீது கோர்க்கப்பட்டிருக்கின்றன.*

### விளக்கம்

*இறைவன் எங்கிருக்கிறான்? எவ்விதமாக உள்ளான்? என்ற வினாக்களுக்கு இச்சுலோகத்தில் விடையளிக்கப்பட்டிருக்கிறது. பாலில் வெண்ணையைப் போன்று, எள்ளிலிருக்கும் எண்ணெயைப் போன்று, மணிகளுக்கு இடையே உள்ள நூலைப் போன்று பரமாத்மா இவ்வுலகெங்கும் வியாபித்துள்ளார். அவன் இல்லாத இடமில்லை. அவனைவிட வேறான மேலான பொருள் வேறெதுவும் இம்மூவுலகில் இல்லை. இவ்வுண்மையே இங்கு நிரூபிக்கப்படுகிறது.*

*மணிரத்ன மாலையில் நூல் இல்லாவிடில் மணிகள் சேர்ந்திராது. மணிகளுக்கு ஆதாரம் நூல். மணிகளுக்கு தானாகவே நிற்கும் சக்தியில்லை. நூலினால் அவை ஒன்று சேர்ந்து மாலையாகின்றது. மேலும் மணிகள் பலவிதமாக எண்ணிக்கையில் பலவாயினும் அதன் இடையேயுள்ள நூல் ஒன்றேயாகும். இவ்வுலகனைத்திலும் உள்ள உயிர்கள் (பலவித ஜாதிகள் உருவங்கள்) அனைத்தும் மணிகள். பரமாத்மா நூல், பரமாத்மாயில்லாவிடில் இவ்வுயிர்களனைத்தும் இராது. இவ்வுயிர்களனைத்தையும் ஒன்று சேர்த்து வைப்பது அந்தர்யாமியான அப்பரமாத்மாவே. அவனின் ஆதாரத்தினிலேயே அப்பரமாத்மாவே. அவையனைத்தும் வாழ்கின்றன. மேலும் மணிமாலையில் மணிகளே கண்களுக்குப் புலப்படுமேயன்றி நூல் அல்ல. நூல் சூட்சுமமாகக் கவனித்தால்தான் புலப்படும். அவ்வாறே இறைவன் ஸ்தூலப்பார்வைக்கும், புறக்கண்களுக்கும் புலப்படமாட்டான். ஞானப்பார்வையுடயவர்க்கே புலப்படுவான்.*

சிலர் 'எனக்கு இறைவன் புலப்படவில்லையே? இறைவன் இருப்பின் எனக்கு ஏன் புலப்படவில்லை? எனவே இறைவன் இல்லை' என்று அஞ்ஞானத்தினால் கூறுவர். மணிமாலையைப் பார்த்து நூல் கண்ணிற்குத் தெரிவதில்லை. ஆதலால் அதில் நூல் இல்லை என்று சொல்வது போல் இது உள்ளது. அது உன்மத்தம் பிடித்தவன், பேச்சேயாகும். மணிமாலையில் நூலானது சாதாரண கண்ணுக்கின்றி விவேகத்துடன் பார்த்தால் எவ்வாறு புலப்படுகிறதோ, அவ்வாறே இவ்வுலகமனைத்தும் பரமாத்மா வியாபித்திருப்பினும் விவேகமுடையவர்க்கே, ஞானதிருஷ்டியுடையவர்க்கு மாத்திரமே அவன் புலப்படுவான்.

*ஸர்வகம் சச்சிதானந்தம் ஞானசக்ஷுர் நிரீக்ஷதே*
*அஞ்ஞானசக்ஷுர்னேக்ஷேத பாஸ்வந்தம்-*

(ஆத்மபோத - ஸ்ரீ சங்கராச்சாரியார்)

ஸர்வவியாபியான சச்சிதானந்த பரமாத்மாவை ஞானக் கண்கள் உடையவனே பார்க்க முடியும். சூரியக் குருடன் எவ்வாறு பார்க்க முடியும்? அவ்வாறே அஞ்ஞானி பரமாத்மாவைப் பார்க்க முடியாது. ஜடத்தில் சேதனத்தினையும், அழியக்கூடியவற்றில் நிலையான ஒன்றையும், விகாரமுடையதில் விகாரமற்றதையும், பார்க்க இயல்வதே ஞானக் கண்கள். உபாதிகளனைத்தும் ஜடங்கள், அவற்றில் உள்ள சூததிரமே வியாபித்துள்ள அந்தராத்மாவை காண்பதே ஞானப் பார்வை. அஞ்ஞானிகள் வெளியில் மட்டுமே காண்பர். அவர்களது பார்வை அதுவரையே செல்லும். எத்தகைய பண்டிதன் ஆயினும், உபாதியை மாத்திரமே கண்டு உள்ளிருக்கும் பரமாத்மாவைக் காணவியலாவிடின் அவன் அஞ்ஞானியேயாவான். எனவே 'X' கிரணங்களை (X-rays) செலுத்தினால் பொருளின் உள்ளிருக்கும் அனைத்தும் தெரிவதைப் போல விவேகமெனும் கிரணங்களைச் செலுத்தி, ஒவ்வொரு ஜீவியிடத்தும், பொருளிடத்தும், உள்ளே ஒளிவிடும் பரமாத்மாவை காணுதல் வேண்டும். ஒருவனைப் பார்த்தவுடனே தேகத்தை மாத்திரம் பார்ப்பவன் அதமன். மனநிலையைப் பார்ப்பவன் இடைப்பட்டவன். ஆத்மாவைப் பார்ப்பவன் உத்தமன். தேகம், மனம், இவை பிரகிருதி ரூபமான ஜடங்கள், ஆத்மா ஒன்றே புருஷன், சைதன்யன். எனவே ஞானிகள் அதனையே பார்த்தல் வேண்டும். இத்தகைய பகவத் வாக்கியங்களைக் கேட்ட பின் மனிதர்கள் முயற்சி செய்து தம் பார்வையை மாற்றிக் கொண்டு ஸ்தூலத்தை மட்டுமின்றி, உள்ளிருக்கும் சூக்ஷ்மமான ஆத்மவஸ்து

வைக் கூட பார்க்கும் வண்ணம் பயிற்சி செய்தல் வேண்டும்.

இறைவனின் சொரூபத்தை, நிலையை நிரூபிப்பதால் இந்த சுலோகம் சாதனை நிலையில் உள்ள முமுக்ஷுக்களுக்கு மிக முக்கிய மானது. 'பரதரம்' - என்ற சொல்லிற்கு மிகவும் மேன்மையானது என்றும் பொருள் கொள்ளலாம். இந்த சுலோகத்தில் சொல்லப்பட்ட மணிமாலையைப் பார்க்கும் பார்வையின் விபரங்கள்:-

| | மணிமாலை | | ஜகத் |
|---|---|---|---|
| 1. | மணிகள் | 1) | காட்சிப் பொருள்கள் |
| 2. | நூல் | 2) | பரமாத்மா |
| 3. | மணிகள் பலவிதமானவை நூல் ஒன்றே | 3) | வஸ்துக்கள் பலவிதமா னனை பரமாத்மா ஒரு வனே. |
| 4. | நூல் இல்லாவிடில் மணிகள் நிற்காது | 4) | பரமாத்மா இல்லாவி டில் உலகப்பொருள்கள் எதுவும் நிற்காது. |
| 5. | ஸ்தூலப் பார்வையில் நூல் தெரியாது | 5. | அஞ்ஞானியின் பார்வை யில் பரமாத்மா தெரிவ தில்லை. |
| 6. | விவேக பார்வையில் நூல் புலப்படும் | 6. | ஞான திருஷ்டியில் பர மாத்மா தெரியும் |

**வினா :** உலகில் பரமாத்மா எவ்விதத்தில் வியாபித்துள்ளது.

**விடை :** மணிகளில் கோர்க்கப்பட்ட நூலைப்போல

**வினா :** எனவே இறைவனின் தரிசனத்திற்கு என்ன செய்ய வேண்டும்?

**விடை :** விவேகப் பார்வையை (ஞான திருஷ்டியை) சம்பாதித்துக் கொள்ள வேண்டும்.

**முன்னுரை**

தன்னுடைய சர்வ வியாபகத் தன்மையை இனிவரும் நான்கு சுலோகங்களில் விவரிக்கிறார்.

*ரஸோ அஹமப்ஸு கௌந்தேய ப்ரபாஸ்மி சசிஸூர்யயோஹ்!*
*ப்ரணவஹ் ஸர்வ வேதேஷு சப்தஹகே பௌருஷம் ந்ருஷு!! - (8)*

## சொற்பொருள்

கௌந்தேய-அர்ஜுனா!, அஹம்-நான், அப்ஸு-நீர்களில், ரஸஹ-சுவையாகவும், சசிஸூர்யோஹ்-சந்திர சூரியர்களில், ப்ரபா-ஜோதியாகவும், ஸர்வேதேஷு-எல்லா வேதங்களிலும், ப்ரணஹ்-ஓங்காரமாகவும், கே-ஆகாரத்தில், சப்தஹ-சப்தமாகவும், ந்ருஷு-மனிதர்களிடத்து, பௌருஷம்-ஆண்மையாகவும், அஸ்மி-இருக்கிறேன்.

## கருத்துரை

அர்ஜுனா! நான் நீரில் சுவையாகவும் சந்திர சூரியர்களிடத்தில் ஒளியாகவும், எல்லா வேதங்களிலும் ஓங்காரமாகவும், ஆகாசத்தில் சப்தமாகவும், மனிதர்களில் ஆண்மையாகவும் இருக்கிறேன்.

## விளக்கம்

எல்லா உயிர்களிடத்தும், மணிகளில் இடையே உள்ள நூலைப் போன்று தான் வியாபித்து உள்ளதை பகவான் இதற்கு முன் கூறினார். அவ்வுண்மையை நிரூபிப்பதற்குச் சிற்சில பொருள்களை எடுத்துக் கொண்டு அவற்றில் தான் எங்ஙனம் வியாபித்துள்ளமையை இங்குத் தெரிவிக்கின்றார். நீரில் சுவையாகவும், சந்திர சூரியர்களிடத்து ஒளியாகவும், வேதங்களில் ஓம்காரமாகவும், ஆகாசத்தில் சப்தமாகவும், மனிதர்களிடையே ஆண்மையாகவும் இருப்பதாக பகவான் கூறுகிறார். இதிலிருந்து பரமாத்மா எல்லாப் பொருள்களிலும் அந்தர்யாமியாய் வியாபித்திருப்பது தெளிவாகிறது. சுவையின்றி நீரில்லை. சுவைக்கும் நீருக்கும் நெருங்கிய தொடர்பு உள்ளது. நீரே சுவை, சுவையே நீர். இரண்டையும் பிரித்தல் இயலாது. அவ்வாறே ஒளியே சூரியன். சூரியனே ஒளி. ஒளியின்றிச் சூரியனை எவரும் கற்பனை கூட செய்து பார்க்க முடியாது. இவ்வாறு எல்லாப் பொருள்களைக் குறித்தும் ஊகித்து கிரகித்துக் கொள்ள முடியும். இறைவனின் சர்வ வியாபாகத் தன்மையை முதலிலேயே தெரிந்து கொள்வது கடினமாகையால், சாதாரணமானர்களுக்கு அத்தகைய இறைவனின் உலகெங்கும் வியாபித்துள்ள தன்மை எளிதாக விளங்கிக் கொள்ள சில உதாரணங்கள் சொல்லப்பட்டுள்ளன.

வேதங்களில் தான் ஓம்காரரூபமாக இருப்பதாக பகவான் சொல்வதால் வேதத்தின் சாரம் ஓம்காரமேயென்று தெரிகிறது. மேலும் 'ஸர்வ வேதேஷு' என்று சொல்லப்பட்டதால், எல்லா வேதங்களின் சாரம் ஓம்காரமேயென்பது தெளிவாகிறது. மக்களின் ஆயுட்காலம் மிகக் குறைவானதாலும், வேதங்கள் எண்ணிக்கையில் பலவானதாலும், சாரத்தினை மட்டுமே அறிந்து பின்பற்றினால் ஜன்ம ஈடேற்றமடையக் கூடும். எனவே பிரணவத்தை ஜெபித்த வண்ணம், அதன் பொருளைச் சிந்தித்திருந்து, பிரணவ ரூபமான பரமாத்வை தியானித்திருந்தால் மிக்க மேன்மை அடைதல் கூடும்.

மக்களின் ஆண்மை (உற்சாகம், தைரியம்) ரூபமாக தான் இருப்பதாக பகவான் சொல்லியிருப்பதால், நற்குணம் ஆண்மை மனிதனுக்கு எத்துணை அவசியம் என்பது தெளிவாகிறது. தைரியம், பராக்கிரமம், உற்சாகம் இவை இருக்குமிடத்தில் சாட்சாத் இறைவனே மேற்கொண்டிருப்பார். திகில், துக்கம், கோழைத்தனம், இவை இருக்கும் இடத்தில் பைசாசம் குடி கொண்டிருக்கும். எனவே துர்பலத்தை விட்டு இறை சொரூபமான தைர்யம் முதலான நற்குணங்களையே விருத்தி செய்தல் வேண்டும். அத்தகையோன் தன்யனாவான்.

**வினா :** பகவான் எவ்வெவ் பொருட்களில் தேய ரூபம் உள்ளதோ அவற்றில் சிலவற்றைக் கூறுக.

**விடை :** (1) நீரில் சுவை (2) சந்திர சூரியர்களில் ஒளி (3) வேதங்களில் ஓம்காரம் (4) ஆகாயத்தில் சப்தம் 5) மனிதர்களில் ஆண்மையாகவும் பகவான் இருக்கிறார்.

*புண்யோ கந்தஹ ப்ருதிவ்யாம்ச தேஜஸ்சாஸ்மி விபாவஸௌ!*
*ஜீவனம் ஸர்வ பூதேஷு தபஸ்சாஸ்மி தபஸ்விஷு!! - (9)*

**சொற்பொருள்**

(மேலும் நான்) ப்ருதிவ்யாம்-மண்ணில், புண்ய கந்தஹ்ச-நறுமணமாகவும், விபாவஸௌ-தீயில், தேஜஹ-சுடராகவும், அஸ்மி-இருக்கிறேன், ஸர்வபூதேஷு-எல்லா உயிர்களிலும், ஜீவனம் - உயிராகவும், தபஸ்விஷு-தபஸ்விகளுக்குள், தபஹ் ச-தவமாகவும், அஸ்மி-இருக்கிறேன்.

**கருத்துரை**

*(மேலும் நான்) மண்ணில் நறுமணமாகவும், அக்னியில் சுடரா கவும், எல்லா உயிர்களிலும் உயிராகவும், தபஸ்விகளுக்குள் தபஸா கவும் நான் இருக்கின்றேன்.*

**விளக்கம்**

வாசனையற்ற மண்ணையோ, ஒளியற்ற அக்னியையோ, பிரா ணமற்ற உயிர்களையோ, தபஸ் இல்லாத தபஸ்விக்களையோ நாம் ஊகிப்பது கூட இயலாததல்லவா! எனவே அவ்வப் பொருள்களின் சாரமே பரமாத்மா. இதனால் அவன் எல்லாப் பொருட்களிலும் முழு மையாக வியாபித்துள்ளான் என்பது தெளிவாகிறது.

*பீஜம் மாம் ஸர்வபூதானாம் வித்தி பார்த்த ஸநாதனம்!*
*புத்திர் புத்திமதாமஸ்மி தேஜஸ்தேஜஸ்வினா மஹம்!! - (10)*

**சொற்பொருள்**

*பார்த்த-ஓ அர்ஜுனா! மாம்-என்னை, ஸர்வபூதானாம்-எல்லா உயிர்களின், ஸநாதனம்-நிலைபேறுடைய, பீஜம்-வித்தாக (காரண மாக, மூலமாக) வித்தி-அறிக, (மேலும் நான்) புத்திமதாம்-புத்திவான்களின், புத்திஹ்-புத்தியும், (விவேகம்) தேஜஸ்வினாம்-தீரர்களின், தேஜஹ-தைரியமாகவும், அஸ்மி-இருக்கிறேன்.*

**கருத்துரை**

*அர்ஜுனா! என்னை எல்லாவித உயிர்களின் நிலைபேறுடைய வித்தாக அறிக. மேலும், புத்திமான்களின் புத்தியாகவும், தீரர்களின் தைரியமாகவும் நானே இருக்கின்றேன்.*

**விளக்கம்**

'பீஜம்மாம் ஸ்வர பூதானாம்!' என்ற வாக்கியத்தின் மூலம் எல்லா உயிர்களின் வித்து (மூலம்) அந்த பரமாத்மேவயென்றும், அவ னிடத்திருந்தே அனைத்தும் தோன்றுகின்றன என்பதும் தெளிவாகி றது. அனைவருக்கும் வித்தானவன் அவனே ஆகையால் இனி, 'அ வன் பெரியோன், இவன் சிறியோன்' என்ற வேறுபட்ட எண்ணத் திற்கே இடமில்லை. எனவே எத்தகைய கீழ்க்குலத்தில் பிறந்தாலும், எத்தகையவாத்மாக்கள் ஆயினும், தன் வித்து, தன் தந்தை பரமாத் மாவே என்று நிச்சயித்துக் கொண்டு மனிதர்கள் புண்ணிய பதத்தில்

முன்னேறுதல் வேண்டும். தான் கீழோன் என்று எவரும் துக்கப்பட வேண்டியதில்லை. அனைவருக்கும் வித்து பரமாத்மாவேயானதால் நாம் அனைவரும் 'பரபிரம்ம' கோத்திரத்தைச் சேர்ந்தவர்களே. வித்தின் இயல்பே செடியில் காணப்படும் எனவே அனைவரும் உண்மையில் நிலைத்திருக்கும் பரபிரம்ம பேர்களே.

அவித்தை வசப்பட்டு மனிதன் தான் கீழோன், ஜீவன், தேகம், காட்சி என்று பிரமித்து ஏமாறிப் போகிறான். எப்போது தைரியம், உற்சாகம் போன்று பகவத் வாக்கியங்களால் அவித்தை தொலைந்து போகுமோ அப்போதே தான் நிரந்தரமான ஆத்மசொரூபன் என்றும், தனக்கு மூலகாரணமாக இருப்பது பரமாத்மாவே என்றும் நிச்சயித்துக் கொண்டு பரமானந்தத்தை அடைகிறான்.

எத்தகைய கீழோனாயினும். சண்டாளன் ஆயினும், தீனமானவனாயினும், தனக்கு வித்து, மூலம் பரமாத்மாவேயென்று தெரிந்து கொண்டுவிட்டால் தைரியத்துடன் கூடிய தீரன் ஆவான். தன் உண்மை சொரூபத்தை அறிந்துவிட்டால் எத்தகைய அற்பனமானவன் ஆனாலும் மேருமலையைப் போன்று கம்பீரம் வந்து சேரும். 'ஸர்வபூதானம்' என்றதால் ஏதோ சில உயிர்கள் மட்டுமல்லாது இவ்வுலகங்கள் அனைத்திலும் உள்ள உயிர்கள் வித்து என்று கூறுகிறார். இத்தகைய போதனைகள் தற்போது மிகவும் தேவையாகயுள்ளது. சம்சாரத்தில் மூழ்கி வேதனைப்படுவோர்க்கு இத்தகைய போதனைகள் உற்சாகப்படுத்த வல்லது. அலைகள் சிறியதே. ஆயின் அதற்கு ஆதாரமாக வித்தாக, காரணமாக விரிந்த கடல் உள்ளது. எனவே அலைகள் தன் அற்பமான உருவைக் குறித்து துக்கப்படாது, தனக்கு வித்தான மகாசமுத்திரத்தை நினைத்த வண்ணம், தைரியம் பெறுதல் வேண்டும். அவ்வாறே மனிதனும், தன் சிறிய உபாதியைக் குறித்து எண்ணாமல், தன் வித்தே தன் உண்மையான சொரூபம், தன் உபாதிக்கு ஆதாரம் பரமாத்வே என்று நிச்சயமாக எண்ணினால் தைரியம் கைகூடும்! தனக்கு மூலம் தன் தந்தையல்ல, தாத்தா அல்ல, மூதாதையர் அல்ல. சாட்சாத் பரமாத்மாவே என்று நம்பிக்கை முழுமையாக இருத்தல் வேண்டும். எனவேதான் பிராம்மணர்கள் இப்போதும் சந்தியாவந்தனத்தின் இறுதியில் 'ப்ரவர' சொல்லும்போது தம் கோத்திரத்தைச் சொல்லும் சமயத்தில் ஏதோவொரு மகரிஷியை நினைப்பரேயன்றித் தம் குலத்தில் உள்ள மூதாதையரை அல்ல.

'பீஜ்மாம் ஸர்வபூதானாம்' என்ற வாக்கியத்தின் மூலம் பகவான் கீழ்வரும் போதனையை மக்களுக்கு அளிக்கிறார் - 'ஜீவர்

களே! நீங்கள் அற்பர்கள் என்று, தீனர்கள் என்றும் எக்காலத்தும் கருதலாகாது. உங்களனைவரின் வித்து, மூலம், நானே - அது சாதார ணமான வித்தல்ல. நிலையான (சாசுவதம்) வித்து. எனவே நீங்கள னைவரும் என் பரம்பரையில் பிறந்தவர்களே. உமக்கு நானே மூல புருஷன். நீங்களனைவரும் தெய்வாம்சத்துடன் பிறந்தவர்களே. எதை விதைக்கிறமோ அதுவே முளைக்கும். நீங்கள் மரமானால் அம்மரத்திற்கு வித்து நானே. எனவே நான் நிலையானவன். ஆத லால் நீங்களும் நிலையானவர்களே. இவ்வாக்கியத்தில் நம்பிக்கை வைத்து கடைத்தேறுங்கள். தேக பாவத்தினால் அநாவசியமாகத் துக்கத்தின் பாற்பட வேண்டாம். உங்கள் உண்மையான சொரூ பத்தை நினைந்து சிம்மம் போன்று சிலிர்த்து எழுங்கள்!

ஸ்ரீ கிருஷ்ண பகவானின் இந்தத் தெய்வ போதனையை வேத வாக்கியமாகக் கொண்டு பின்பற்றி கடைத்தேறுதல் ஒவ்வொரு ஜீவி யின் முக்கியமான தர்மமாகும்.

**வினா :** எல்லா உயிர்களின் வித்து யார்?

**விடை :** பரமாத்மாவே.

**வினா :** அவனது சொரூபம் எத்தகையது?

**விடை :** சாசுவதமானது (சாதனமானது).

*பலம் பலவதாமஸ்மி காமராக விவர்ஜிதம்!*
*தர்மா விருந்தோ பூதேஷு காமோ அஸ்மி பரதர்ஷப!! - (11)*

சொற்பொருள்

பரதர்ஷப - பரதகுலத்தில் சிறந்தோனே! அர்ஜுனா! அஹம் - நான், பலவதாம் - பலவான்களின், காமராக விவர்ஜிதம் - ஆடை அகங்காரம் சிறிதுமற்ற, பலம் - பலத்தினை, பூதேஷு - உயிர்களின், தர்ம விருத்தஹ - தர்மத்திற்கு எதிரற்ற, காமஹ - ஆசைகளாகவும், அஸ்மி - உள்ளேன்.

**கருத்துரை**

பரத குல சிரேஷ்டனே! நான் பலவான்களிடத்து காமம் நீங்கப் பெற்ற பலமாகவும், உயிர்களிடத்து தர்மத்துக்கு முரண்படாத ஆசை யாகவும் இருக்கிறேன்.

**விளக்கம்**

பலம் பெற்றிருத்தல் நல்லதே, ஆயின் அது, காமம், ஆசை இவையற்று இருத்தல் வேண்டும். அதாவது தர்மத்திற்கு முரண்படாத காரியங்களைச் செய்வதிலும், விஷய சம்பந்தமான ஆசைகளைப் பூர்த்தி செய்து திருப்திபடுத்துவதற்காகவோ, காட்சிப் பொருள்களின் மேல் ஆசை, மோகம் இவை கொள்வதில் செலவிடப்படாததாகவும் இருத்தல் வேண்டும். தர்ம காரியங்களுக்கு, பரோபகார காரியங்களுக்கு, தெய்வ காரியங்களுக்கு, ஆன்மீக சாதனைகளுக்கு அந்த பலத்தினைச் செலவழித்தல் வேண்டும். அதுவே உத்தமமானது. மனைவி பலமோ, சரீர பலமோ விஷய போகத்திற்காகவோ காம இச்சைகளுக்காகவோ பயன்பட்டால் அது கடியத்தக்கது. அது விலங்கின் பலம், அசுர பலம் போன்றது. இறைவன் குடிகொள்வதற்கு அத்தகைய பலம் இருப்பிடம் ஆகாது. 'வர்ஜிதம் விவர்ஜிதம்' என்றதால் பலத்தில் காம இச்சைகள் எவ்விதத்திலும் இடம் பெறுதல் கூடாது என்பது தெளிவாகிறது.

மேலும் தர்மத்திற்கு, சாஸ்திரங்களுக்கு விரோதமற்ற ஆசைகள் தானேயென்று பகவான் தெரிவிக்கிறார். ஆசைகள் கீழ்த்தரமானவையாக இருப்பின் அது அசுரத்தன்மை கொண்டதாகும். நன்முறையில் ஆசையைப் பிரயோகித்தால் தெய்வீகமாய் மாறும், தேகத்தைக் காப்பாற்றும் நிமித்தம் அன்னம், பானம், முதலான ஆசைகளும், மோட்சத்திற்கு சம்பந்தமான விருப்பங்களும், கிருஹஸ்தர்கள், நற்புத்திரர்களைப் பெறும் நிமித்தமான ஆசைகளும், தர்மத்திற்கு ஒட்டியவையே.

எனவே அவை குற்றமற்ற ஆசைகள். ஆதலால் பகவான் அவற்றைத் தன் ரூபமேயென்று கூறுகிறார். ஆயின் இதுவரை பலமுறை ஆசைகளனைத்தையும் விட்டு விடுதல் வேண்டும். (ப்ரஜ ஹாதி யதாகாமன் ஸர்வான்) என்று போதித்து, இப்போது 'தர்மத்திற்கு முரண்படாத ஆசைகள் நான்' என்று கீதாச்சார்யன் ஏன் கூறுகிறார் என்று சிலர் கருதக்கூடும். அதற்கு விடை - ஆசைகள் மூன்று விதமானவை (1) தீய ஆசைகள் (2) நல்ல ஆசைகள் (3) ஆசைகள் அற்ற தன்மை. ஆரம்ப நிலையில் சாதகன் தீய ஆசைகளை விட்டு, நல்லவற்றையே விரும்புதல் வேண்டும். தர்மத்திற்கு முரண்படாத ஆசைகளை ஸ்வீகரித்துக் கொள்ள வேண்டும். (கெட்ட எண்ணங்களை விடுத்து நல்ல எண்ணங்களையே எண்ணுதல் வேண்டும்). அதாவது பரோவதாரம், ஜன்மம் ஈடேறுதல் வேண்டுமென்ற எண்ணம், ஆன்

மீகப் பயிற்சி செய்தல் வேண்டும் என்ற எண்ணம், கிருஹஸ்தன் ஆனால் நன்மக்களைப் பெறுதல் வேண்டுமென்ற எண்ணம், புண் ணிய காரியங்கள் செய்தல் வேண்டும் என்ற எண்ணம் முதலான வற்றை முதலில் செய்து வந்து படிப்படியாக சாதனைகளின் மூலம் முன்னேற்றம் அடைந்து ஆசைகள் அற்ற நிச்சங்கல்ப நிலையை - ஆத்ம நிலையை எய்துதல் வேண்டும். இவ்வாறாக ஆத்ம நிலைக்கு அனுகூலமான தர்மத்திற்கு உட்பட்ட காரியங்களை மேற்கொள்ளு மாறும், தர்மத்திற்கு புறம்பான காரியங்களைக் கண்டிக்கப்பட்டும் இருக்கிறது. ஆயின் எப்போதாயினும் ஒரு நிலையில் ஆசைகள் அனைத்தையும் துறந்த நிச்சங்கல்ப நிலையை எட்டினால் தான் ஆன் மஸ்திதி ஏற்படும் என்பதை அறிதல் வேண்டும்.

### முன்னுரை

இவ்வுலகிற்கு மூலகாரணம் தானேயென்று பகவான் கூறுகி றார்.

*யே சைவ ஸாத்விகா பாவா ராஜஸாஸ் தாம ஸாஸ்சயே!*
*மத்த ஏவேதி தான் வித்தி நத்வஹம் தேஷு தே மயி!! - (12)*

### சொற்பொருள்

சாத்வீகாஹ்-சத்வகுணத்தால் உண்டான, பாவாஹ்-பொருள்கள் (அல்லது இயல்புகள்), யே-எவை (உள்ளனவோ), ராஜ ஸாஹ்ச-ரஜோ குணத்தால் உண்டான, தாமஸாஹ்ச-தமோ குணத் தால் உண்டானவை யே-எவை (உள்ளனவோ), தான்-அவற்றை, மத்தஹ-ஏவ, இதி-என்னால் ஏற்பட்டவை என்று, வித்தி-அறிக, து-ஆனால், தேஷு-அவைகளில், அஹம்-நான், ந-இல்லை, தே-என்று, மய-என்னிடத்து (சன்தி-உள),

### கருத்துரை

சத்வ ரஜோ, தமோ குணங்களால் உண்டான பொருள்கள் (அல் லது இயல்புகள்) எவை உள்ளனவோ அவை என்னால் ஏற்பட்டவை என்று அறிக. ஆயின் நான் அவற்றில் இல்லை. அவை என்னிடத்து உள்ளன. (நான் அவற்றிற்கு வசப்பட்டவன் அல்லன். அவை என் வசத்தில் இருக்கின்றன என்பது பொருள்).

### விளக்கம்

ஆதாரமின்றி ஆதேயம் நிற்காது. இவ்வுலகமனைத்திலுமுள்ள

பொருள்களுக்கு ஆதாரம் பரமாத்மா. அவனது 'சத்'தினால் தான் அவை 'சத்' உடையவை ஆகின்றன. அதிஷ்டானமான ஆத்மாவின் விரிவே இவ்வுலகம். அதாவது பிரமையால் பாம்பு கயிறாகாத் தோற்றமளிப்பதைப் போல். கயிறு காரண பூதமென்றால் அவ்வாறே இவ்வுலகிற்கு பரமாத்மா காரண பூதமாகின்றார். எனவேதான் இங்கு சாத்வீகம் முதலான குணங்களால் ஏற்பட்ட எல்லாப் பொருள்களும் என்னால்தான் ஏற்படுகின்றன என்று பகவான் கூறுகிறார். இவ்வாறாக ஜகத்திலுள்ள பொருள்கள் யாவும் பரமாத்மாவிடம் ஆதாரப்பட்டிருக்கிறது. ஆயின் பரமாத்மா அவற்றிடம் ஆதாரப்படவில்லை. பாம்பு கயிற்றில் இருக்கிறது. கயிறு பாம்பில் இல்லை. அதாவது பாம்பு கயிற்றை ஆதாரமாகக் கொண்டுள்ளது. அதுவேயன்றிக் கயிறு பாம்பின் மீது அல்ல. அலைகள் கடலை ஆதரமாகக் கொண்டுள்ளதேயன்றிக் கடல் அலைகள் மீது ஆதாரமாக இல்லை. 'அவை என்னிடத்து உள்ளன. நான் அவற்றில் இல்லை' என்ற பகவத் வாக்கியத்தின் பொருள் இதுவே.

'நந்வஹம் தே ஷ்தேமய' என்ற வாக்கியத்திற்கு வேறொரு விதமாகவும் பொருள் சொல்லலாம் - (அஹம் தேஷு ந தே மய ந) நான் அவற்றிலோ, அவை என்னிடத்தோ இல்லை. இது அத்வைத பரமான பொருள். இந்த ஜகத் மாயை, உண்மையில் இல்லாதது. எனவே இல்லாத பொருள் ஒன்றில் பரமாத்மா இருப்பது எங்ஙனம்? பரமாத்மாவிடத்து இல்லாத அப்பொருள்கள் இருப்பது எங்ஙனம்?

இச்சுலோகத்தின் முதல் பாதம், இரண்டாம் பாதத்தில் முதல் பகுதி துவைத, விசிஷ்டாத்வைத தத்வத்தினையும், இண்டாம் பாதத்தின் கடைசிப்பகுதி அத்வைத தத்துவத்தையும் காட்டுகிறது. கீதையின் முழுமையான அத்வைத நிலை போதிக்கப்பட்டுள்ள சில பகுதிகளில் இது ஒன்று. (பூதப்ருத் ப ச பூதஸ்தஹ (9-5) முதலானவை).

இச்சுலோகத்தில் ராஜஸ தாமஸ இயல்புகள் கூட பரமாத்மாவால் தான் உண்டாகின்றன என்று கூறுவதால் ஏதும் தவறில்லை என்று எண்ணுதல் கூடாது. அவற்றில் உள்ள அதிஷ்டானம் பரமாத்மாவே என்று தெரிவிப்பதற்காக அவ்வாறு கூறப்பட்டது.

**வினா :** பரமாத்மா எத்தகையவன்?

**விடை :** சத்வ, ரஜோ, தமோ குணங்களால் உண்டாகும் எல்லாப் பொருள்களுக்கும் ஆதாரமானவன். அவை அவனுக்கு வசப்பட்டுள்

ளன. அவன் அவற்றிற்கு வசமாக இல்லை.

### முன்னுரை

அத்தகைய பரமாத்வை மக்கள் ஏன் அறிவதில்லை என்பதைக் கூறுகிறார்.

*த்ரிபிர் குணமயைர் பாவைரேபிஹ் ஸர்மிதம் ஜகத்!*
*மோஹிதம் நாபிஜானாதி மாமேப்யஹ் பரமவ்யயம்!! - (13)*

### கருத்துரை

இங்குச் சொல்லப்பட்ட மூன்று விதமான சத்வ, ரஜோ, தமோ குணங்களின் விகாரங்களான இயற்கையின் இயல்பாய் இவ்வுலகம னைத்தும் மயக்கம் அடைந்து (அஜிவேகம்) அக்குணங்களுக்கு அப் பாற்பட்ட, அழிவற்ற என்னை அறிய இயலாதிருக்கின்றனர்.

### விளக்கம்

வானம் மேகத்தால் நன்கு மூடப்பட்டிருக்கையில் மேகத்திற்கு மறுபக்கத்தில் உள்ள சூரியனை, மேகத்திற்கு இப்பால் உள்ள மக்கள் எவ்வாறு பார்ப்பதற்கு இயல்வதில்லையோ அவ்வாறே திரி குணங் களுக்கு அப்பாற்பட்ட பரமாத்மாவை திரிகுணங்களுக்குட்பட்ட மக்கள் அறிய முடிவதில்லை. மேலும் அத்திப் பழத்தின் உள்ளிருக் கும் புழுக்களைப் போன்று மூன்று குணங்களால் ஆகிய மாயாவுல கில் ஜீவர்கள் மயங்குகின்றனர். தத்துவ விசாரணையென்னும் சண்ட மாருதத்தினால் மனிதன் எப்போது முக்குணங்களாகிய மாயா மேகத்தினை விலக்குகிறானோ அப்போது சுபரூபமான ஆத்மா வெளிப்பட்டு 'ஒளிவிடும்' ஆத்ம சாட்சாத்காரம் கிடைக்கும். இச் சுலோத்தில் ஜீவன் எவ்விதமாக திரிகுணத்தாலாகிய மாயையால் கட்டுப்படுகிறான் என்பது தெரிவிக்கப்பட்டது. பின்வரும் சுலோ கத்தில் அப்பந்தத்தை எவ்வாறு விலக்கிவிடும் என்று சொல்லப்படு கிறது. ஒவ்வொரு மனிதனும் முதன் முதலில் தான் மாயையால் கட்டுப்படுகிறான் என்பது தெரிவிக்கப்பட்டது. பின் வரும் சுலோ கத்தில் அப்பந்தத்தை எவ்வாறு விலக்கக்கூடும் என்று சொல்லப்படு கிறது. ஒவ்வொரு மனிதனும் முதன் முதலில் நான் மாயையெனும் பந்தத்தில் கட்டுண்டு இருக்கிறோம் என்ற உண்மையை உணர்தல் மிக மிக அவசியம். ஏனெனில் தான் கட்டுண்டு இருப்பதை உணர்ந் தால் அவன் தவறாது அதனின்றும் விடுபட எவ்வாறேனும் முயல் வான். 'ஸர்வமிதம் ஜகத்' என்று சொல்லப்பட்டதைப் போல் இவ்வு

லகத்தில் எல்லா ஜீவராக்ளும் தனவந்தர்கள், பலவந்தர்கள், சௌந் தர்யமுடையவர்கள், வித்தைகள் பல கற்றவர் - அனைவரும் பந்தத் தில் கட்டுப்பட்டேயுள்ளனர். எனவே அவ்வுண்மையை அறிந்து ஒவ்வொருவரும் தமது பந்த விமுக்திக்காக தவறாது முயலுதல் வேண்டும். 'தமஸஸ்து பாரே' என்றதைப் போல் பரமாத்மா 'தபஸ்' (அஞ்ஞானம்) என்ற திரைக்கு அப்பால் உள்ளார். அவனை தரிசித் தால் அன்றி சம்சார துக்கம் தொலையாது. ஆயின் இறைவனது தரிசனம் கிடைக்க வேண்டுமானால் ஜீவனுக்கும் தேவனுக்கும் இடையில் உள்ள திரிகுணத்தின் காரணமாக திரையை விலக்குதல் வேண்டும். பக்தி, வைராக்கியம், நிஷ்காமகர்மா இவற்றால் படிப்ப டியா ரஜோ, தமோ குணம் இவற்றை விடுத்து, அதன் பின்னர் சத்வ குணத்தையும் தாண்டி ஆன்ம ஸ்திதியில் நிலைபெறுதல் வேண்டும். அதுவே மோட்சம்.

எனக்கு இறைவன் ஏன் புலப்படவில்லை? என்று சிலர் வினவு கின்றனர். அவர்களுக்கான பதில் இச்சுலோகத்தில் உள்ளது. திரிகு ணங்களால் மயங்கிக் கிடக்கும் வரை இறைவனையறிதல் இய லாது. மேலும் துக்கம் தொலையாது. கண்கள் புரையோடி மறைக்கப் பட்டவன். 'எனக்குப் பொருள்கள் புலப்படவில்லை' என்றது போல் உள்ளது. இவ்வினாவும், அறுவை சிகிச்சை செய்து அத்தி ரையை விலக்கினால் பொருள்கள் தெளிவாய்த் தெரியும். அவ் வாறே உலக போகங்களுக்காக அலையாது முதன் முதலில் தன் இதயத்தில் ரஜோ, தமோ குணங்களை, அதன் விகாரங்களை, நன்கு முயற்சி செய்து தியானம் முதலான சாதனைகளின் மூலம் விலக்குவ தற்கு வழி செய்ய வேண்டும். பகவத் தரிசனத்திற்கு இதுவே வழி.

**வினா :** பரமாத்மா எத்தகையவன்?

**விடை :** காணவியலாதவ்ன், அழிவற்றவன்.

**வினா :** அவன் எங்கிருக்கிறான்? அவனது நிலை என்ன?

**விடை :** திரிகுணங்களுக்கு அப்பாற்பட்டவன்.

**வினா :** ஜீவர்கள் ஏன் அவனை அறிய இயலவில்லை?

**விடை :** திரிகுணங்களுக்கு இப்பக்கத்தில் இருப்பதால் திரிகுண்ங்க ளுக்கு அப்பாற்பட்ட இறைவனை அறிய இயலாதிருக்கின்றனர்.

**முன்னுரை**

*திரிகுணங்களின் காரணமான மாயையெனும் பந்தத்தின் இயல்பைத் தெரிவித்து அதனை விலக்குவதற்கான வழியையும் கூறுகிறார்.*

*தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா!*
*மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே!! (14)*

**சொற்பொருள்**

*ஹி-ஏனெனில், தைவீ-இறை சம்பந்தமான, (அலௌகிக சாமர்த்தியம் உடையது), குணமயா-திரிகுணங்களால் ஆய, ஏஷா-இங்குச் சொல்லப்பட்ட, மம-என், மாயா-மாயை (இயற்கை), துரத்யயா-தாண்டுதற்குக் கடினமானது, மாம் ஏவ-என்னையே, மேய-எவர், ப்ரபத்யந்தே-அடைக்கலமடைகின்றனரோ, தே-அவர்கள், ஏதாம் மாயமாம்-இந்த மாயையை, தரந்தி-தாண்டுகின்றனர்.*

**கருத்துரை**

*ஏனெனில், இறை சம்பந்தமானதும் திரிகுணங்களால் ஆகியதுமாகிய என் மாயை (தேவ மாயை) தாண்டுவது மிகவும் கடினமானது. (ஆயினும்) எவர் என்னையே அடைக்கலமடைகின்றனரோ அவர் மாயையைத் தாண்ட வியலும்.*

**விளக்கம்**

*மக்கள் ஏன் இறைவனை அறியவியலவில்லை என்பதை முன் சுலோகத்தில் சொன்னார். இந்த சுலோகத்தில் இறைவனை அடைவதற்கு, மாயையைத் தாண்டுவதற்கான வழி சொல்லப்படுகிறது. எனவே முமுக்ஷுக்களுக்கு இந்த சுலோகம் மிக முக்கியமானது. இதனை மனப்பாடம் செய்து எப்போதும் மனனம் செய்து வருதல் வேண்டும்.*

*இறைவனை தரிசிப்பதற்கு ஒரு பெரிய தடைச்சுவர் ஒன்றுள்ளது. அதனையே 'மாயை' என்பர். அம்மாயையை விளக்கும் முகமாக பகவான் நான்கு சிறப்புச் சொல்லைக் கையாண்டுள்ளார். அவையாவன - (1) தெய்வ சம்பந்தமானது (அலௌகீகமானது), மிகவும் சாமர்த்தியமானது, (2) திரிகுணங்களால் ஆகியது. (3) இறைவனுக்குக் கட்டுப்பட்டது (4) தாண்டுதற்கு மிகவும் கஷ்டமானது மாயையின் இந்த இலட்சணங்களைச் சிறிது விரிவாகக் காண்போம்.*

(1) மாயையை 'தெய்வீ' (தெய்வ சம்பந்தமானது) என்று வர்ணிப்பதால் அது சாதாரணமானதல்ல என்றும், இறை சம்பந்தமானது என்றும், மிகவும் சக்தி சாமர்த்தியம் உடையது, அலௌகீகமானது என்பதும் தெளிவாகிறது. இதனையே 'வைஷ்ணவீ மாயை', என்றும் சொல்வர், அது மிகவும் சக்தி வாய்ந்த தாகையால் மேதைகளையும், பலவான்களையும், அசுரர்களையும், இந்திர சந்திரர்களையும் கூட திசை திருப்பி அஞ்ஞானத்தில், பிறப்பு இறப்புடன் கூடிய சம்சார பிரவாகத்தில் தள்ளி விடுகிறது. மக்களின் அறிவு, சாமர்த்தியம் இவை அதனிடம் செல்லாது. அது அலௌகீகமானதாகையால் இறைசம்பந்தமானதாகையால் தெய்வீக உபாயத்தினால் தான் அது கட்டுப்படும்.

(2) 'குணமயா' என்று சொல்வதால் இம்மாயை திரிகுணங்களால் ஆகியது என்று தெரிகின்றது. மாயைக்கு (இயற்கைக்கு) வேறு வேறு உருவம் இல்லை. திரிகுணங்களே அதற்கு உருவம். எனவே தான் 'குணமய' எனப்பட்டது. திரிகுணங்களை ஒவ்வொன்றாக வெளியில் இழுத்து எறிந்து விட்டால் இனி மாயை இருக்காது. இக்குணங்களால் பயந்து மயங்கியே மக்கள் தன்னை யறிய இயலாதிருக்கின்றனர். என்று முன்பே பகவான் சொல்லியதை நினைவில் கொள்ள வேண்டும்.

(3) 'மம' (என்னுடைய) 'மாயா' என்று சொல்வதால் இம்மாயை இறைவனுக்குக் கட்டுப்பட்டது என்பது தெளிவாகிறது. வீட்டில் இருக்கும் வளர்ப்பு பிராணிகள் எஜமானனுக்குக் கட்டுப்படுவதைப் போல் மாயை இறைவனுக்கும் கட்டுப்பட்டது. ('மாயினந்து மஹேஸ்வரம்') இம்மாயையானது சாமான்ய மனிதர்களை அலைப்புறச் செய்வதாயினும் இறைவனிடத்து அடங்கியிருக்கும். மாயையில் கட்டுண்டவர்களுக்கு அதைக் கண்டால் பயம். மாயையை வசப்படுத்திய பரமாத்மாவிற்கோ, அதனை வென்ற ஞானிகளுக்கு அது அற்பமானதாகப் புலப்படும். 'யா மாஸா மாயா' (எது இல்லையோ அதுவே மாயை) என்பதைப் போல் அதன் இரகசியத்தை அறிந்தவர்க்கு அது இல்லாததொன்றாகும். பெருங்கடல் மிகவும் பயங்கரமாத் தோன்றினாலும், அதனைப் பற்றி அறிந்தவர்க்கு அது சிறு நீரோடையாய்த் தெரியும். அதனை எளிதாக விளையாட்டாகத் தாண்டிவிடுவர். ஒரு கொசுவிற்குச் சிறிய நீரோடையே பெரிய சமுத்திரமாகத் தோன்றும். அவ்வாறே மகா சக்தி வாய்ந்த இவ்வியற்கை, மக்களுக்குத் தாண்ட இயலாததாகத் தோன்றினால், பரமாத்மாவிற்கு அது வசப்பட்டு அவனுக்கு ஒரு உபகரணமாக விளங்குகின்றது.

எனவேதான்-'மம மாயா' (என்னுடைய மாயை, எனக்குக்கட்டுப் பட்டது என்று பகவான் சொல்வதற்குக் காரணமாயிற்று).

(4) 'துர்த்யயா' (தாண்டுதற்கு கடினமானது) மாயையை வெல்வது கடினமேயன்றி இயலாததொன்றல்ல. மனதை வெல்ல இயலாதவர்கள், இந்திரியங்களுக்கு அடிமையானவர்கள், விஷயங்களின் மீது மோகம் கொண்டவர்கள் ஆகிய மனிதர்கள் மாயையைத் தாண்ட இயலாது. ஆன்மீக ஞானம் பெற்றவர்கள், தெய்வத் தன்மையுடையவர்கள், பக்தி, வைராக்கியம் முதலான சாதனையாளர்கள். இவர்களால் மாயையைத் தாண்டுதல் இயலும். இவ்விஷயத்தினை இரண்டாவது பாகத்தில் பகவான் சொல்லிப் போகிறார்.

இவ்வாறு மாயையின் பயங்கரத்தை அறிந்து அதனைப் பற்றி பயம் அடையத் தேவையில்லை. கடல் பெரிதாயினும், கடப்பது கடினமாயினும், ஒரு சிறிய ஓடத்தைப் பெற்றுவிட்டால் அதனை விளையாட்டாகத் தாண்டிவிட முடியும். அவ்வாறே மாயையெனும் கடலைத்தாண்டுவதற்கு பகவான் இச்சுலோகத்தில் நல்ல படகு ஒன்றினை அளிக்கிறார். அதுவே பக்தி, பகவானைச்சரணடைதல், ஆத்ம சிந்தனை, என்னை அடைக்கலமடைந்தவர்களே பயங்கரமான மாயையை எளிதாகத் தாண்டி விடுவர் என்று பகவான் கருணையுடன் கூறுகிறார். இறைவனின் பாதார விந்தங்களை என்றும் பலமான படகினால் கடக்கவியலாத இச் சம்சாரமெனும் பெருங்கடலை எளிதாகத் தாண்டிவிட முடியும் என்று ஸ்ரீ சங்கராச்சாரியார் தெரிவிக்கின்றார்.

*'அபார சம்சார சமுத்ர மத்யே ஸம்மஞ்சதோ மே சரணம் கி மஸ்தி*
*குரோ க்ருபாளோ க்ருபயா வதைத த்விஸ்வேச பாதாம்புஜ தீர்க்க நௌகா'*

*(-ஸ்ரீ சங்கராச்சாரியார்)*

ஏனைய உபாயங்கள் எவையும் இங்குப் பயன்படாது. இறைவனைச் சரணாகதியடைதல் ஒன்றே வழி.

மாயையை வெல்ல வேண்டுமாயின், தாண்ட வேண்டுமாயின் அதனை வசப்படுத்தியவர்களின் பாதங்களைச் சரணடைதல் வேண்டும். அதனை வசப்படுத்தியவன் சாட்சாத் இறைவன் ஒருவனே. எனவே அவனையே சரணடைதல் வேண்டும். சில வீடுகளில் காவலுக்கு நாய் இருக்கும். அது எவரையும் உள்ளே அனுமதிக்காது. ஆயின் அதன் எஜமானனை நாம் வசப்படுத்தினால் அதுவும் வசப்பட்டு விடும். அவ்வாறே பகவானை அடைக்கலமடைந்தவர்க

**வினா :** இறைவனை எவர் போற்றுவதில்லை?

**விடை :** (1) பாவிகள் (2) மூடர்கள் (3) கீழ் மக்கள் (4) மாயையினால் அபகரிக்கப்பட்ட ஞானத்தை உடையவர்கள் (5) அசுர இயல்புடையோர் முதலானோர்.

**வினா :** மனிதனின் ஞான்த்தை அபகரிக்கும் கள்வன் எவன்?

**விடை :** மாயை.

*சதுர்விதா பஜந்தே மாம் ஜனாஹ் ஸுக்ருனோ ர்ஜுன!*
*ஆர்தோ ஜிக்ஞாஸுரர்த்தார்த்தீ ஞானீச பரதர்ஷப!! - (16)*

## சொற்பொருள்

பரதர்ஷப-பரத வம்சத்தில் சிறந்தவனான, அர்ஜுன-அர்ஜுனா! ஆர்தஹ்-ஆபத்தில் இருப்பவன், ஜிக்ஞாசுஹ்-(இறைவனை) தெரிந்து கொள்ளும் ஞான வேட்கையுடையவன், அர்த்தார்த்தீ-பொருளின்பம் தேடுபவன், ஞானீச-ஆத்மா, ஞானம் உடையவன் (ஆகிய நீ), சதுர்விதாஹ்-நான்கு விதமான, சுக்கிருதனஹ்-புண்ணியாத்மாக்களான, ஜனா-மக்கள், மாம்-என்னை, பஜந்தே-போற்றுகிறார்கள் (சேவிக்கிறார்கள்).

## கருத்துரை

பரத வம்சத்து சிறந்தோனான அர்ஜுனா! ஆபத்தில் இருப்பவன், இறைவனை அறிதல் வேண்டுமென்ற ஞான வேட்கையுடையவன் செல்வத்தை விரும்புவோன் (ஆத்ம) ஞானம் உடையவன் என்ற நான்கு விதமான புண்ணியாத்மாக்களாகிய மக்கள் என்னைச் சேவிக்கிறார்கள் (போற்றுகிறார்கள்)

## விளக்கம்

இறைவனைச் சேவிக்காதவர் குறித்து இதற்கு முன் சொன்னார். இப்போதும் சேவிப்பவர்களைக் குறித்து இங்குச் சொல்கிறார் (1) துன்புற்றோர் (2) ஞான வேட்கையுடைவன், (3) பொருள் விரும்புவோன். (4) ஞானி என்ற நால்வர் இறைவனைச் சேவிக்கின்றனர் எனப்பட்டது. இவர்களனைவரும் ஏதோ ஒரு விதமாக இறைவனை நினைக்கின்றனர். எனவே அவர்கள் புண்ணிய ஆத்மாக்களே என்று சொல்லப்பட்டது. ஆனாலும் அவரவர் எக்காரணங்களால் அவர்கள் இறைவனைப் போற்றுகின்றனரோ அதனை வைத்தே அவர்களது

தரம் நிர்ணயிக்கப்படுகிறது.

அதில் முதலாமவனான துன்புற்றவன் ஏதோ ஒரு ஆபத்து நேர்ந் தால் இறைவனை நினைத்து வேண்டுகிறான். ஏதாவது வியாதியி னால் துன்பம் ஏற்பட்டாலோ, திருட்டுத்தனத்தால் கெடுதல் நேர்ந் தாலோ, ஏதேனும் இதர கஷ்டங்கள் ஏற்பட்டாலோ இறைவனை நினைப்பான். ஆபத்து நேர்ந்த சமயத்தில் இறைவனை நினைப்பவர் களே பலர் இருக்கின்றனர். எவ்வாறிருப்பினும் ஏதோ ஒரு விதத்தில் இறைவனை நினைப்பவர் புண்ணியாத்மாக்களையே சேர்வர்.

இனி இரண்டாமவர் ஜிக்ஞாசு இறை தத்துவம் இத்தகையது என அறிய விரும்புவோன். இத்தகையோர் மிக அரிதானவர்களே. காட்சிப் பொருள்களின் மீதான ஆசை, அதனைப்பற்றிய ஆராய்ச்சி, விசாரணை, சம்பாத்தியம் இவற்றிலேயே காலம் கடத்துவோரே அதிகம் உள்ளனர். அவர்களுக்கு இறைவன் இருக்கிறான் என்பதி லேயே நம்பிக்கை இருப்பதில்லை. எனவே தெய்வ ஜிக்ஞாசை உள்ளவர். ஞான வேட்கை உடையவர் சிறந்தோரே, புண்ணியாத் மாக்களேயாவர். 'ஜிக்ஞாசுரபி யோக்யஸ்ய சப்த பிரம்மாதிவர்த்த தே' - என்று கீதாச்சார்யர் ஞானவேட்கையுடையவர் சப்த பிரம் மத்தை அதாவது சாஸ்திரோக்தமான காரிய அனுஷ்டானங்களை மீறியவர் என்று இதற்கு முன்னரே கூறினார். அத்தகைய ஞான வேட்கை பல பிறவிகள் செய்த நற்பலனால்தான் ஜீவனிடத்துத் தோன்றுகின்றது.

மூன்றாமவர் 'அர்த்தார்த்தி' - அதாவது செல்வத்திற்காவும், ஏனைய சம்பத்துக்களுக்கேயும், ஐசுவரியத்திற்காகவும் மாத்திரமே இறைவனை சேவிப்பவன். இறைவனின் அருளால் தனக்கு இவ்வுல கப் பொருள்கள் அபிவிருத்தியடைதல் வேண்டும் என்பதே அவர்க ளது எண்ணம். இவர்களும் ஏதோவொரு காரணத்தை முன்னிட்டே இறைவனை நினைத்தாலும் அவர்களும் புண்ணியாத்மாக்களே.

இனி நான்காமவன் ஞானி. இறை தத்துவத்தை நன்குணர்ந்த வன். அனுபவித்தறிந்தவன். ஆத்மா அநாத்மா விவேகமுடையவன். சுய ரூபத்தை யுணர்ந்த மகாஞானி. அவன் எப்போதும் உண்மைப் பொருளான ஆன்மாவிலேயே நிலைத்து, ஆத்மாவையே நினைந்த வண்ணம் தியானித்திருப்பான். அர்த்தன், அர்த்தாதி போன்று இத னையே வேண்டி இறைவனை நினைப்பவனல்லன். காம்யபுத்தி யன்றி இருப்பவன். எனவேதான் அனைவரிலும் ஞானியே மகா உத்தமன் என்று பின்வரும் சுலோகத்தில் பகவான் தெரிவிக்கிறார்.

இவ்வாறாக நான்கு விதமானவர்களும் பராமாத்மாவை ஏதோ வொரு விதத்தில் நினைப்பவர் ஆதலால் அனைவரும் புண்யாத்மாக் களேயென்று சொல்லப்பட்டது. துன்பம் நேர்கையில் இறைவனை நினைக்கும் ஆர்தத் பக்தர்களில் கஜேந்திரன் முதலானோர், ஜிக்ஞாசு பக்தர்களில் பரீக்ஷத், உத்தவன் முதலானோர், அர்த்தார்த்த பக்தர்க ளில் சுக்ரீவன், துருவன் முதலானோர், ஞானி பக்தர்களில் சுகர், சனகர், நாரதர், பீஷ்மர், பிரஹ்லாதன் முதலானேரையும் கூறலாம்.

**வினை :** இறைவனைச் சேவிப்பவர்கள் எத்துனை விதமானவர்கள். அவர்கள் எவரெவர்?

**விடை :** நான்கு ரகமானவர்கள் (1) அர்த்தன், (2) ஜிக்ஞாசு, (3) அர்த்தார்த்தி, (4) ஞானி.

## முன்னுரை

இந்நால்வரில் ஞானி சிறந்தவன் என்கிறார்.

*தேஷாம் ஞாணீ நித்யயுக்த ஏகபக்திர் விசிஷ்யதே!*
*ப்ரியோ ஹி ஞாணினோ அத்யர்த்தமஹம் ஸ ச மம ப்ரியஹ்!! - (17)*

## சொற்பொருள்

தேஷாம்-அவர்களில், நித்யயுக்த ஹ-எப்போதும் பரமாத்வு டன் கூடியிருக்கின்ற, ஏகபக்திஹ்-மாறாத பக்தியுடைய, ஞானி-(ஆத்ம ஞானி), விசிஷ்யதே-சிறந்தவன் ஆகின்றான். ஜிக்ஞாசஹ்-(ஆத்ம) ஞானிகி, அஹம்-நான், அத்யார்த்தம்-மிகுந்த, ப்ரியஹ்ஹி-பிரியமானவன். ஸங்ச-அவன், மம-எனக்கு, ப்ரியஹ்-பிரியமானவன்.

## கருத்துரை

அவர்கள் நால்வரில் தினமும் பரமாத்மாவுடன் கூடியிருக்கிறவ னிடத்தே மாறாத பக்தி பூண்ட ஞானி மிகச் சிறந்தவன். அத்தகைய ஞானிக்கு என்னிடத்தே மிகுந்த பிரியம் உண்டு. எனக்கு அவன் மீது பிரியம்.

## விளக்கம்

முன் சுலோகத்தில் சொல்லப்பட்ட பக்தர்களில் எவர் மிகச்சிறந் தவரென்று இங்கு விவரிக்கிறார். அவர்களில் ஞானியே சிறந்தவன்.

ஏனெனில் ஏனைய மூவருக்கு இல்லாத இரண்டு விசேஷ குணங்கள் இவனிடத்து உள்ளது. அவை (1) எப்போதும் இறைவனையே எண் ணியிருத்தல் (2) மாறாத பக்தி.

(1) நித்ய யுக்தத்வம் என்றால் தினமும் எப்போதும் பரமாத்மா வுடன் தொடர்பு கொண்டிருத்தல், அதாவது ஞானி எப்போதும் ஆத்மதியானத்தில் திளைத்திருப்பவன். ஏனையோர் ஆர்த்தன், ஜிக் ஞாசு, அர்த்தார்த்தி அவ்வப்போது தெய்வத்தை நினைப்பவர். அவர் கள் அநித்ய யுக்தர்கள் (Part-time Devotees) அவர்கள் சில சமயங்களில் தெய்வ சிந்தனை செய்து பின்னர் பிற உலக காரியங்களில் ஈடுபட்டு தெய்வத்தை மறந்து விடுவர். ஞானியே எப்போதும் எக்காலத்தும் ஆத்மாவுடன் தொடர்பு கொண்டிருப்பான். அதுவே நித்ய யுக்தத் வம். எப்போதும் ஒளியிலேயே (ஞானத்தில்) இருப்பதால் அவர்க ளுக்கு இருள் (அஞ்ஞானம்) நேர்வதில்லை. எனவே தான் அவர்கள் மாயாமோகத்தினை வென்று எப்போதும் ஒளிவிட்டுப் பிரகாசிக் கின்றனர். ஏனையோர் 'நித்யயுக்தர்கள்' அல்லவாதலால் சிறிது காலமே இறைவனை நினைப்பதால் அவர்களிடத்து அவித்தை வந்து சேர்வதற்கு சந்தர்பம் நிறையவேயுள்ளது. சாதகர்கள் ஆரம்ப நிலையில் சிறிது காலம் இறை தியானம் செய்து, பிறவேலைகளைச் செய்து வந்தாலும், சிறிது சிறிதாக ஆன்மீக பயற்சிகளால், தெய்வ அனுஷ்டானத்தை அதிகப்படுத்திக் கொண்டே போய் இறுதியில் நிரந்தர தெய்வ நிஷ்டையை மேற்கொள்ளுதல் வேண்டும். அப் போதே பக்தர்களில் அவன் சார்ந்தவன் ஆவான். அத்தகைய ஞானிக்கு இறைவன் முதல் தகுதியை (First Mark) அளித்திருக்கிறார்.

இனி ஞானியின் இரண்டாவது இலட்சணம் 'ஏகபக்தி' அதா வது பரமாத்மாவைத் தவிர வேறெதனிடத்தும் பக்தியில்ல..:தவன். உலகில் உள்ள மக்களில் சிலருக்குச் செல்வத்தின் மீது பக்தி, சில ருக்கு சரீர பக்தி, சிலருக்கு விஷய போகங்களின் மீது பக்தி இருக் கும். ஆயின் ஞானிக்கோ, இறைவன் ஒருவனைத் தவிர வேறொரு வன் மீது பக்தி இருப்பதில்லை. ஏனையோர்க்கு பல விஷயங்களின் மீது ஆசையிருப்பதால், ஏகபக்தியில் மனம் ஈடுபடாது. ஒருமைப் பாடு, நிஷ்டை இருப்பதில்லை. மாறாத அத்தகைய பக்தி ஞானிக்கு உண்டு. எனவேதான் அவன் பக்தர்களனைவரிலும் சிறந்தவனாகி றான்.

'அத்யர்த்தம்' (மிகுந்த) என்றதால் ஞானிக்கு பகவான் மீது மிகுந்த பிரியம் இருக்கும் என்பது தெரிகிறது. அழியக்கூடிய

பொருள்களின் மேல் அவன் ஆசை வைப்பதில்லை. நிலையான பரமாத்மாவின் மீதே மிகுந்த ஆசை வைக்கிறான். இவ்வாறு அவன் எப்போது இறைவனை சேவிக்கிறானோ. பகவானும் பக்தனை அவ் வாறே பிரேமிக்கிறார். 'ஸச மம ப்ரியஹ்' என்ற வாக்கியம் அவன் எனக்கு மிகவும் பிரியமானவன் என்ற பொருளே நாட்டுகின்றது.

இச்சுலோகத்தில் ஞானிக்கு 'ஏக பக்தி' இருக்கும் என்று சொல் வதால் உண்மையில் பக்திக்கும் ஞானத்திற்கும் பேதம் இல்லை யென்று தெரிகின்றது. ஞானிக்கு பக்தியிருக்கும் பக்தனுக்கு ஞானமி ருக்கும். ஒன்று சிறியது மற்றொன்று பெரியதென்பதே இங்கு இல்லை. அனுபவத்தில் பார்த்தால் இவ்வுண்மையனைத்தும் நன்கு தெரியும். முதிர்ந்த நிலையில் பக்தி, ஞானம், தியானம் அனைத்தும் ஒன்றே.

**வினா :** மேற்சொன்ன நான்குவித பக்தர்களுள் எவர் சிறந்தவர்?

**விடை :** ஞானி

**வினா :** எதனால்?

**விடை :** அவனுக்கு (1) நிரந்தர தெய்வத் தொடர்பு (2) ஏக பக்தி என்ற இரண்டு சிறந்த குணங்கள் உண்டு. அவை ஏனையோரிடத்து இல்லை. எனவே அவன் சிறந்தவன்.

**வினா :** ஞானிக்கு இவ்வுலகில் அனைவரையும் விட மிகப் பிரியமா னவன் எவன்?

**விடை :** பகவான்

**வினா :** பகவானுக்கு அனைவரையும் விட பிரியமானவன் எவன்?

**விடை :** ஞானி

**வினா :** எனவே, மக்களின் கடமையென்ன?

**விடை :** ஏகபக்தியான ஞானத்தைப் பெறுதல், இறைவனுக்கு மிகப் பிரியமானவனாக மாறுதற்கு முயற்சி செய்தல்.

**முன்னுரை**

அடிப்படையில், ஏனைய பக்தர்கள் எத்தனையோர் என்பதைக் குறித்துக் கூறுகிறார்.

*உதாராஸ்ற ஸர்வ ஏவைதே ஞானீ த்வாத்மைவ மே மதம்!*
*ஆஸ்திதஸ்ற ஸஹி யுக்தாத்மா மாமேவானுத்த மாம் கதிம்!! - (18)*

## சொற்பொருள்

ஏதே ஸர்வ-இவர்களனைவரும், உதாராஹ் ஏவ-நல்லோர்களே, ஞானிது-ஞானி இருக்கையில், ஆத்ம ஏவ-நானே (இதி-என்று), மே-என்ற மாம்-கருத்து, ஹி-ஏனெனில், ஸஹ்-அவன், யுக்தாத்மா (ஸன்)-என்னிடத்தையே மனத்தினை நிலையாக நிலைக்கச் செய்தவனாய், மாம் ஏவ-என்னையே, அனுத்தமாம்-மிக உத்தமமான, கதிம்-கதியான, அஸ்தித-எண்ணிக் கடைப்பிடிக்கிறான்.

## கருத்துரை

இவர்களனைவரும் (மேற்சொன்ன பக்தர்களுள்) நல்லவரே. ஆயின் அதிலும் ஞானியானவன் சாட்சாத் நானே என்பது என் கருத்து. ஏனெனில் அவன் என்னிடத்தே சித்தத்தை நிலையாக நிறுத்தி என்னையே அவன் உத்தமமான யாக நிச்சயித்துக் கொண்டு என்னையே பின்பற்றுகிறான்.

## விளக்கம்

மேற்சொன்ன நான்கு பக்தர்களுள் ஞானி சிறந்தவன் என்று சொன்னதால் ஏனையோர் கண்டிக்கத்தவர் என்பதல்ல. அவர்களும் நல்லோர்களே பக்தி இல்லாத சாமான்யர்களை விட அவர்கள் எவ்வளவோ உத்தமர்கள். ஏனெனில் அவர்கள் சிரத்தையுடன் ஏதோவொரு விதத்தில் தெய்வத்தை ஆராதிக்கின்றனர். எனவே அவர்களனைவரையும் 'உதாரர்கள்' (நல்லவர்கள்) என்று பகவான் இங்குக் கூறுகிறார். அவர்களிலும் ஞானியின் நிலை சிறந்தது. எப்போதும் இறை சிந்தனையுடன் அவன் இருப்பதால் ஸாட்சாத் பிரம்மமேயாகிறான்' என்று சுருதிகள் அறைகின்றன. கடலில் உள்ள லயத்தைப் போன்று பிரம்மாசாகரமாகவே பரிணாமம் அடைகின்றது. 'மே மதம்' - (இது என் கருத்து) என்று பகவான் சொல்வதால் இவ்வாக்கியத்தின் உண்மை வெளிப்படுகிறது.

ஏனைய மூவரும் இறை உலகில் திரிபவரே. ஞானி தெய்வீக வீதிகளில் உலவி வருபவன். இறைவன் தன்னைவிட வேறாக இருக்கிறான் என்றெண்ணி தியானித்தல் ஆரம்ப நிலையில் நடப்பது. ஞானியின் நிலையில் இறைவன் தன்னைவிட வேறாக இருப்ப

தில்லை. ஜீவன் சிவனாகிறான். இத்தகைய நிலை எப்போதும் ஆத்ம சிந்தையுடன் இருப்பதாலும், அஹம்பாவம் நீங்குவதாலும், வாசனைகளற்ற தன்மையாலும் கிடைக்கின்றது. எனவேதான் 'யுக்தாத்மா' என்று கூறப்பட்டது. ஞானி ஆத்மாவிலேயே தன் சித்தத்தை எப்போதும் லயிக்கச் செய்திருப்பான் என்பது பொருள்.

ஆத்ம பதவியை, தெய்வ பதவியை, 'அனுத்தமாம் கதிம்' - மிக உத்தமமான கதியாக, பதவியாக வர்ணிப்பதால் உலகிலுள்ள எல்லாப் பதவிகளும் அதற்கு முன் தாழ்ந்ததே என்பது தெரிகின்றது. எனவே அனைவரும் முயற்சியினால் அத்தகைய ஸர்வ உத்தமமான பிரம்ம பதவிக்கே முயன்று வாழ்நாளைப் பொன்னாளாகச் செய்து கொள்ள வேண்டும்.

கீதையில் இச்சுலோகத்தில் முழுமையான அத்வைத நிலை வர்ணிக்கப்பட்டுள்ளது. பக்தன் சாட்சாத் இறைவனாகவே மாறிப் போதல் இங்குச் சொல்லப்படுகிறது. வாழ்க்கையின் முக்கிய குறிக்கோள் அதுவே. த்வைத நிலை இறைவன் ஒருவாறு ஜீவனிடமிருந்து சிறிது தொலைவிலேயே இருப்பான். விசிஷ்டாத்வைத்தில் இன்னும் சிறிது நெருங்கி வருகிறான். அத்வைதத்தில் தானே இறைவனாக மாறி விடுகிறான். எனவேதான் ஜீவன் முக்தர்களான மகான்களை சாட்சாத் இறைவனாக மக்கள் ஆராதிக்கின்றனர். '!த்விபாஹுர பரோஹரிஹ்' - இரண்டு உள்ளங் கையிலும் ஒளிவிடும் விஷ்ணு என்ற வாக்கியம் அவர்களுக்கே பொருந்தும். அவர்களுக்குப் பகவானுக்கும் இடையில் இடைவெளி என்பதே இராது. அத்தகைய அத்வைத ஞான நிலை ஏற்படும் வரை முமுக்ஷுதான் நிரந்தரம் ஆன்மீக சாதனையில் ஈடுபட வேண்டும். கர்ம, பக்தி, தியானம் முதலான யாவும் அத்தகைய ஞான நிலைக்கே இட்டுச் சென்று முக்திக்குக் காரணமாகின்றன. எனவேதான் பகவான் ஞானத்திற்கு, ஞானிக்கு அதி முக்கியத்துவம் அளித்துள்ளார்.

**வினா :** மேற்சொன்ன நான்கு பக்தர்கள் எத்தகையோர்?

**விடை :** அனைவரும் நல்லோரே.

**வினா :** அப்படியாயின் அதில் ஞானிக்கு ஏன் அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது.

**விடை :** ஞானிக்கும் இறைவனுக்கும் பேதமில்லை. ஞானி இறைவனேயாவான். அதனால்,

வினா : எக்காரணத்தினால் ஞானி அத்தகைய பகவத் சொரூபத்தை அடைகிறான்.

விடை : அவன் தன் மனத்தினை நன்கு அடக்கி ஆன்மாவில் நிலைநிறுத்தி (யுக்தாத்மா) ஆத்மாவையே பரமகதியாக எண்ணி அதிலேயே நிலைத்திருக்கிறான் ஆதலால்,

### முன்னுரை

அத்தகையோர் உலகில் மிக அரிதாகவேயுள்ளனர் என்கிறார்.

*பஹூனாம் ஜன்மனாமந்தே ஞானவான் மாம் ப்ரபத்யதே'*
*வாஸுதேவஹ் ஸர்மிதிஸ மஹாத்மா ஸுதுர்லபஹ!! - (19)*

### சொற்பொருள்

பஹூனாம்-அநேக, ஜன்மனாம்-பிறவிகளின், அந்தே-இறுதியில், ஞானவான் (ஸன்)-ஞானி (ஆகி) ஸர்வம்-எல்லாவற்றையும், வாசுதேவஹ இதி-வாசுதேவனே (பகவானே) என்று (அறிந்து), மாம்-என்னை, ப்ரபத்யதே-வணங்கி வந்தடைகிறான், ஸஹ் மஹாத்மா-அத்தகைய மகாத்மாக்கள், சுதுர்லபஹ்-உலகில் மிக மிக அரிதானவர்.

### கருத்துரை

பல பிறவிகளின் இறுதியில் மனிதன் ஞானம் அடைந்து எல்லாம் வாசுதேவனே என்று ஞானியானவன் அறிந்து என்னை வணங்கி என்னை வந்தடைகிறான். அத்தகைய மகாத்மாக்கள் உலகில் மிகச் சிலரே.

### விளக்கம்

ஜீவன் அநாதிகாலத்தினின்றே இந்த சம்சார சக்கரத்தில் மயங்கிப் போய் நிற்கிறான். புழு பூச்சி முதலான பல பிறவிகள் எடுத்து நற்பலனால் மனிதாய்ப் பிறக்கிறான். அவ்வாறு பிறவியெடுத்த ஒவ்வொரு மனிதனும் முக்திக்காக முயற்சிப்பதில்லை. ஏதோ ஒரு சிலரே புண்யாத்மாக்களே, முயற்சி செய்கின்றனர். அவ்வாறு முயற்சிப்பவருள்ளும் ஏதோ ஒருவரே ஆத்ம ஞானம் அடைகின்றார்.

[ *(1) யததாமபி சித்தானாம் ஜஸ்சின்வேறாம் வேத்தி தத்வதஹ' - (7-3)*
*(2) அநேக ஜன்ம ஸம்சித்ததஸ்தோ யாதி பராங்கதிம்!! - (6-45)* ]

ஒவ்வொரு பிறவியிலும் சிறிது சிறதாகப் புண்ணியத்தைச் சம்பாதித் துக் கொண்டு வந்து இறுதியில் ஏதோவொரு ஜன்மத்தில் தீவிரமான ஆன்மீக சாதனை செய்து பரமேசுவரனின் அனுக்கிரஹத்தால், அவ னுக்கு ஞானம் ஏற்படுகிறது. அப்போது அனைத்தும் இறைமயமாக, ஆத்மமயமாக, 'வாசுதேவ மயமாகக்' காண்கிறான். அவ்வாறு சர் வாத்ம திருஷ்டி உள்ளனவாய் ஞானி இறைவனின் சாட்சாத்காரத்தை அடைகிறான். எனவேதான் ஞானவான்களாகிய மகான்கள் உலகில் மிகவும் அரிதானவர் என்று பகவான் கூறுகிறார். 'துர்லபஹ்' என் னாது 'சுதுர்லபஹ்' என்பதால் அத்தகையோன் நூற்றுக்கு, கோடிக்கு ஒருவரே இருப்பர் என்பது பொருள்.

ஆயின், இனிப் பல பிறவிகளுக்குப் பின்னரே நமக்கு ஞானம் ஏற்படும் என்று சோம்பியிருத்தல் கூடாது. இதுவரை கடந்த பிறவிக ளைப் பல கோடி பிறவிகளாகக் கருதி இப்பிறவியிலேயே கடைத்தே றுவதற்கு, ஞானத்தை அடைவதற்கு முயல வேண்டும். அத்தகைய ஞானம் அடைந்து விட்டோமா இல்லையா என்பதை அறிவதற்கு பகவான் இச்சுலோகத்தில் நல்ல தேர்வு ஒன்றை வைத்துள்ளார். 'எல்லாம் வாசுதேவ மயமாக தனக்குத் தெரிகின்றதா?' என சாதகன் தனக்குத்தானே சோதனை செய்து கொள்ள வேண்டும். அவ்வா றின்றி நாம ரூபங்களே புலப்பட்டால் சாதனை இன்னும் பரிபக்குவ நிலையடையவில்லை என்றெண்ணி தியான, விசாரணை அப்பியா சங்களைத் தொடர்ந்து தீவிரமாகச் செய்தல் வேண்டும். ஞானம் அடைந்ததற்கான அடையாளம் இந்த 'ஸர்வ மலிவ் தம் பிரம்மா' (எல்லாம் பிரம்மமே) என்ற சித்தாந்தத்தை அனுபவபூர்வமாக உணர்த்தலேயாம். ஆரம்ப நிலையில் மனிதன் இவைகளைக் கோயி லிலோ, சிலையிலேயோ, நதிதீரத்திலோ காண்பான். ஞான நிலை யில் அவ்விறைவனையே எங்கும் காண்பான். இவ்வுலகமெல்லாம் ராமமயமாக காணும் நிலை அது.

இச்சுலோகத்தில் 'பஹூ நாம் ஜன்ம நாமன்தே' என்று சொன்ன இடத்தில் ஞானிக்குப் பல பிறவிகளுக்குப் பின் மோட்சம் கிடைக் கும் என்பது பொருளல்ல. பல பிறவிகளுக்குப் பின் மனிதன் ஞானி யாகி மேட்சமடைவான் என்பது பொருள். எந்தக் கணத்தில் அவன் ஞானத்தைப் பெறுகிறானோ அப்போதே அவனுக்கு மோட்சம் கிடைக்கக்கூடும்.

எங்கும், அனைத்தையும் இறைமயமாகக் காண்போனை 'ம ஹாத்மா' என்று இறைவன் பட்டம் அளிக்கிறார். அத்தகைய விரு

தைப் பெறுவதற்கு முயற்சித்தல் வேண்டும். பரந்த நோக்கு கொண்ட மஹாத்மாவாக மாறிப் போக வேண்டும். அப்போதே ஞானத்தைப் பெற முடியும்.

**வினா :** ஜீவன் மோட்சத்தை எப்போது பெறுவான்?

**விடை :** ஞானியானால்

**வினா :** ஞானம் எப்போது அடைவான்?

**விடை :** பல பிறவிகளாகத் தொடர்ந்து முயற்சி செய்தால் இறுதியில் ஏதோ ஒரு பிறவியில் பெறுவான்.

**வினா :** ஞானி எத்தகைய எண்ணம் கொண்டிருப்பான்?

**விடை :** அனைத்தும் 'வாசுதேவ மயம்' என்ற எண்ணம் கொண்டிருப்பான்.

**வினா :** உலகில் 'மஹாத்மா' என்று சொல்லத் தகுந்தவர் யார்?

**விடை :** ஞானியே

**வினா :** அத்தகைய ஞானியர் உலகில் பலர் உள்ளனரா?

**விடை :** இருக்கமாட்டார் ஏதோ ஓரிருவர் இருக்கக்கூடும்.

**வினா :** ஒருவன் ஞானியல்லவா ஞானியா என்று அறிவதற்கான உபாயம் எது?

**விடை :** அவனது பார்வையில் அனைத்தும் வாசுதேவ மயமாக உள்ளதா இல்லையா என்று தெரிந்து கொண்டால் போதும்.

## முன்னுரை

ஆசைகளுடன் இதர தேவதைகளை ஆராதிப்பவர்களைக் குறித்துச் சொல்கிறார்.

*காமைஸ்தைஸ்தைர் ஹ்ருத ஞானாஹ் ப்ரபத்யந்தே அன்யதேவதாஹ்!*
*தம் தம் நியமமாஸ்தாய ப்ரக்ருத்யா நியதாஹ் ஸ்வயா!! - (20)*

## சொற்பொருள்

ஸ்வயா-தத்தம், ப்ருக்தயா-இயற்கையால் (ஜன்மாந்த்ர தொடர்பு), நியதாஹ்-தூண்டப்பட்ட மக்கள் தைஹ் தைஹ்

*காமைஹ்-அந்தந்த ஆசைகளால் (காமங்களால்), ஹ்ருதஞானாஹ்-ஞானம் அபகரிக்கப்ப்ட்டவர்களாய், தம்தம் நியமம்-அந்தந்த நியமத்தை (தேவதை ஆராதனைகளை), அஸ்தாய-கையாண்டு, அன்ய தேவதாஹ்-இதர தேவதைகளை, ப்ரபத்யந்தே-சேவிக்கின்றனர், போற்றுகின்றனர்.*

**கருத்துரை**

*(சிலர்) தத்தம் இயற்கையால் (பிறவித் தொடர்பால்) தூண்டப் பட்டவராய், விஷயங்களின் மீதான ஆசைகளால், விவேகத்தை இழந்து, தேவதை ஆராதனை தொடர்பான அவ்வவ் நியமங்களைப் பின்பற்றி, இதர தேவதைகளைப் போற்றுகின்றனர்.*

**விளக்கம்**

*சிலர் பரமாத்மாவை தியானிக்கிற விஷய சம்பந்தமான ஆசைகள் நிறைவேற்றுவதற்காக ஆராதிக்கின்றனர். அவர்களது விவேகம் அழிந்து போனதால் அவர்கள் அங்ஙனம் செய்கின்றனர். அது எவ்வாறு போனது என்றால் ஆசையெனும் கள்வன் இதயத்தில் உள்ளே நுழைந்து விவேகத்தை அழித்து விட்டான். (காமைஹ் ஹ்ருத ஞானாஹ்) அதன் பலனாக அவர்களது ஆன்மாவின் கம்பீரத்வத்தை அறியவியலாது, பரமாத்மாவை சேவிப்பதை விடுத்து இதர தேவதைகளை ஆராதிக்கின்றனர். அதற்கான நியமங்களை, வ்ரதங்களை மேற்கொண்டு அவர்களைப் போற்றுகின்றனர். அவர்களது இலட்சியம் ஆசைகள் நிறைவேறுவதற்கேயன்றி மோட்சம் அடைவதல்ல. எனவே மோட்சத்தை விரும்பும் தீவிர வைராக்யம் கொண்டவர்கள் அவ்வாறு செய்யார். ஆசைகளற்று, இந்திரியங்களை அடக்கி இதயத்தில் பரமாத்மாவை எப்போதும் தியானித்திருப்பதே முக்திக்கான வழி.*

*''காமைஹ் ஹ்ருதஞானாஹ்' - என்றதால் விஷய வாஞ்சைகள், விக்ஞானத்தை அழித்து விடும் என்பது தெளிவாகிறது. எனவே ஆன்மீக மார்க்கத்தில் அதனை விபத்தாகக் கருதி மிக எச்சரிக்கையாக இருத்தல் வேண்டும்.*

*இவ்வத்தியாயத்தில் 15ஆவது சுலோகத்தில் சொல்லப்பட்ட 'மாயயா ஆபஹ்ருத ஞானாஹ்' - ஆசைகளால் அபகரிக்கப்பட்ட ஞானமுடைய மூடர்களுக்கும், இச்சுலோகத்தில் சொல்லப்பட்ட 'காமைஹ் ஹ்ருத் ஞானாஹ்' ஆசைகளால் அபகரிக்கப்பட்ட ஞானமுடையவர்களுக்கும் நிறைய வேறுபாடு உண்டு. முதலோர், தமோ*

குணம் சத்வ குணம் இரண்டும் கலந்து உள்ளவர். இவர்களுக்கு தெய்வ நம்பிக்கை உண்டு. அவர்களுக்கு இல்லை.

**வினா :** ஜீவனின் ஞானத்தை அழிப்பது எது?

**விடை :** ஆசைகள், விஷய ஆசைகள்

**வினா :** அவை எவ்வாறு ஏற்படுகின்றன?

**விடை :** பிறவிகளாகத் தொடர்ந்து வரும் ஆசைகளின் தொடர்பால்

**வினா :** அதனால் மனிதன் என்ன செய்கிறான்?

**விடை :** ஞானத்தை விட்டு, பரமாத்மாவை மறந்து ஏனைய தேவதை களை ஆராதிக்கிறான்.

**முன்னுரை**

அத்தேவதைகளை ஆராதிப்பவர்களுக்கு உண்டாகும் பலனை அடுத்து வரும் இரு சுலோகங்களில் குறிக்கிறார்.

*யோ யோ யாம் யாம் தனும் பக்தஹ ச்ரத்த யார் சிது மிச்சதி!*
*தஸ்ய தஸ்யா சலாம் ச்ரத்தாம் தாமேவ விததாம்யஹம்!! - (21)*

**சொற்பொருள்**

யஹ்யஹ் பக்தவி-எந்தெந்த பக்தன், யாம் யாம் தனும்-எந்தெந்த தேவதைகளை, ச்ரந்தயா-சிரத்தையுடன், அர்ச்சிதும்-பூஜிப்பதற்கும், இச்சதி-விரும்புகிறார்களோ, தஸ்ய தஸ்ய-அவ்வவனுடைய, தாம் சீரந்தாம் ஏவ-அவற்றிற்கு தகுந்த சிரத் தையை, அசலாம்-ஸ்திரமானதாக (அசையாததாகச் விததாமி-செய்கிறேன்.

**கருத்துரை**

எந்தெந்த பக்தன் எந்தெந்த தேவ வடிவத்தை சிரத்தையோடு அர்ச்சிக்க இருக்கிறானோ அவ்வவனுடைய சிரத்தையை அசையாத தாக நான் செய்கிறேன்.

**விளக்கம்**

மனிதன் பரமாத்மாவையன்றி வேறு தேவதைகளைச் சேவித் தால் அவர்கள் மீது கோபிப்பதில்லை. அவ்வவர்கள் பூஜிக்கும் தேவ

தைகளின் மீது அவனது பக்தியை, சிரத்தையே மேலும் திடப்படுத்து கிறார். (அசலம் சிரத்தாம் விததாமி), அவனது தயாள குணம்தான் எத்தகையது, ஆயின் பக்தி சிரத்தையுடன் பூஜிப்பவர்க்கு மாத்திரமே அவன் உதவுவான். அவையற்றவர்க்கல்ல. எனவே தான் 'சிரத்தயா' என்ற சொல்லைச் சேர்த்துள்ளார். அவ்வாறு சிரத்தையுள்ளவர்களின் சிரத்தையை இன்னும் பலப்படுத்துவதாக ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா கூறுகின்றார்.

இந்து மதத்தின் சிறப்பு இதுவே. ஒவ்வொருவரும் அவரவர் பண்பிற்கேற்ப அவரவர் மார்க்கத்தை தேடிக் கண்டு அவரவர் தேவைகளை உபாசிப்பதற்கான முழுமையான சுந்திரம் இதில் உண்டு. எம்மார்க்கத்தைப் பின்பற்றினாலும், இறுதியில் ஆன்மா வையே அடைதல் வேண்டும். அவரவர் இஷ்ட தேவதைகளை சிரத் தையுடன் பக்தியுடன் பூஜித்தல் வேண்டும். நமது இலட்சியத்தை நோக்கி விரைவாகச் சென்றாலும், மெல்லச் சென்றாலும் அடி எடுத்து வைப்பதை மட்டும் நிறுத்திவிடக் கூடாது. இலட்சியத்தை நோக்கியே அடி எடுத்து வைக்க வேண்டுமேயன்றி பின் நோக்கிச் செல்லுதல் கூடாது. இவ்விரண்டு விஷயங்களால் மனிதன் எப்போ தாயினும் பரம இலட்சியமான ஆத்மாவைச் சேர்தல் கூடும். இதர தேவதைகளை உபாசிப்பவர்களது பக்தி சிரத்தைகளை எதனால் அசைவற்று நிலைபெறச் செய்கின்றார் என்றால், அவர்கள் அத்த கைய திடமான சிரத்தையினால் தேவர்களுக்கெல்லாம் தேவனான பரமாத்மாவை அடையக்கூடும் ஆதலால். எனவேதான் பகவான் அவ்வத் தேவதைகளின் உபாசனையில் திடத்வத்தையளிக்கிறார். இதனால் அவரவர் ஆன்மீக வழியில் எந்த அளவு முயற்சிக்கிறார் களோ அந்த அளவு பலனை அடைகிறார்கள் என்பது தெரிய வருகி றது. இவன் முயற்சி செய்தால் பலன் நிச்சயம் உண்டு. எனவே முமுக்ஷுக்கள் நன் முயற்சியில் ஈடுபட்டு இலட்சியத்தை விரைவில் அடைய வேண்டும்.

**வினா :** பகவானையோ, இதர தேவதைகளையோ உபாசிக்கும் போது முக்கியமாக இருக்க வேண்டியது என்ன?

**விடை :** பக்தி, சிரத்தை.

**வினா :** அவ்வாறு பக்தி சிரத்தையுடன் உபாசிப்பவனுக்கு பகவான் எத்தகைய உதவி புரிகின்றார்?

**விடை :** அவரவர்க்கு அவரவர் தேவதைகளின் மீது சிரத்தை, பக்தி இவற்றை நிலை நிறுத்துகிறார்.

முன்னுரை

இதர தேவதைகளின் மூலமாக பகவானே பலன்களை அவர்களுக்கு அளிக்கிறார் எனத் தெரிவிக்கப்படுகிறது.

*ஸ தயா ச்ரத்தயா யுக்த்ஸதஸ்யா ராதன மீஹதே!*
*லபதே சததஹ காமான் மயைவ விஹிதான் ஹி தான்!! - (22)*

சொற்பொருள்

ஸஹ்-அவன் (காம்யபக்தன்), த யா ச்ரத்தயா-அந்த சிரத்தையோடு, யுக்தஹ-கூடினவனாய், தஸ்ஸ-அத்தேவதைகளின், ஆராதனம்-பூசையை, ஈஹதே-செய்கிறான், மயா ஏவ-என் னாலே, விஹ தான்-விதிக்கப்பட்ட, தான் காமான்-அந்தந்த ஆசைகளை, ததஹ்-அத்தேவதைகளின் மூலம், லபதே-அடைகிறான்.

கருத்துரை

சிரத்தையோடு கூடியவனாகிய அவன் அவ்வத் தேவதைகளை ஆராதித்து அதினின்று ஆசைப்பட்டவைகளை அடையப் பெறுகிறான். ஆயினும் அவ்வாசைப் பொருள்களை உண்மையில் வகுத்து வழங்குபவன் நானே.

விளக்கம்

அவ்வாறு பகவானால் நிலைபெறப்பட்ட சிரத்தையோடு கூடியவனாய் அந்த பக்தன் அந்தந்த தேவதைகளை ஆராதித்து அதன் பலனாக அவர்களினின்றும் தன் இஷ்ட பலனை அடைகிறான். அவ்வாறு அவன் தன் இஷ்ட தேவதைகளினின்று தனது ஆசைகளுக்கு ஏற்ற பலனை அடையப் பெற்றாலும் அவையாவும் இறைவனால் அளிக்கப்பட்டவையேயாகும். எனவே உண்மையில் பகவானிடம் இருந்தே அவை அவனுக்குக் கிடைக்கப்பெறுகிறது. இச்சராசரம் உலகமனைத்தும் ஒரே அரசாங்கமே (Universal Government) பரமாத்மாவே அதற்கு அதிபதி. இந்திரன் முதலான தேவர்கள் அனைவரும் விதவிதமான துறைகளை நிர்வகிக்கும் வேலையாட்கள். உலக பரிபாலன நியமங்கள் அனைத்தையும், சாசனங்களையும் ஜகத் பிரபுவான பராத் பரனே முதன் முதலில் நிர்ணயித்து வைத்துள்ளான். அவற்றை அனுசரித்தே துறை அதிகாரிகள் காரியங்களை அமுல்படுத்துகிறார்கள். எனவே பக்தர்கள் அவரவர் ஆசைப்படும் பலனை அந்தந்த தேவதைகளின் மூலம் அடைந்தாலும் தேவதேவனான ஸர்வேசுவரனே அதனைக் கொடுத்ததாகும்.

இறைவன் கல்பவிருக்ஷம் போன்றவன். அவனை அடைக்கல மடைந்து சிரத்தையுடன் அவர் எதனை விரும்புகிறார்களோ அதனைக் கொடுப்பான். எனவே அவனை அற்பமான அழியக் கூடிய பொருள்களைக் கேட்பதை விட நிலையான மோட்சப் பதவியைக் கேட்பதே மேல்.

இச்சுலோகம் கடைசிப் பகுதியில், 'ஹி', 'தான்' என்ற இரண்டு பதங்களையும் சேர்த்து சிலர் 'ஹி' தான் என்று காட்டி 'ஹிதான் காமான்' - இஷ்டப்பட்ட போக வஸ்துக்களை என்று பொருள் செய்கின்றனர். ஆயின் அற்பமான போகப் பொருளகளை எவரும் விரும்பார். ஆகையால் அதனைச் சிறப்பித்து அச் சொல்லிற்கு ஏற்றிக் கூறுவது பொருத்தமாகத் தோன்றவில்லை.

வினா : அவ்வத் தேவதைகளின் மீது சிரத்தை ஏற்படும் போது பக்தன் என்ன செய்வான்?

விடை : அவர்களை பக்தி சிரத்தையுடன் ஆராதிப்பான்

**வினா** : அதற்குப் பலனாக அவர்கள் எதை அடைவார்கள்?

**விடை** : தாம் ஆசைப்பட்டதை அவர்களால் அடைவர்.

**வினா** : அப்பலனை எவர் நிர்ணயிப்பது?

**விடை** : தேவ தேவனான பரமாத்மாவே. எனவே அவனே அவ்வத் தேவதைகளின் மூலம் அவரவர் ஆசைகளுக்கேற்ற பலனைக் கொடுக்கிறார்.

**முன்னுரை**

அப்படியாயின் அவ்வத்தேவதைகளை ஆராதித்துப் பெறும் பலன்கள் அழியக்கூடியவையேயென்று, தன்னை ஆராதித்து நிலை யான மோட்சப் பதவியை அடையுமாறு பகவான் கூறுகிறார்.

***அந்தவத்து பலம் தேஷாம் தத்பவத்யல்ப மேதஸாம்!***
***தேவான் தேவயஜோ யாந்தி மத்பக்தா மாமபி!! - (23)***

**சொற்பொருள்**

அல்பமேதஸாம்-அல்பபுத்தியுடைய, தேஷாம்-அவர்களுடைய, தத்பலம்து-அப்பலன் உள்ளதோ, அன்தவத்-முடிவுடையதாக (நிலையற்றதாக), பவதி-ஆகிறது, தேவயஜஹ்-

தேவதைகளைப் பூஜிப்பவர்கள், தேவான்-தேவதைகளை, யாந்தி-அடைகின்றனர், மத்பக்தா-என் பக்தர்கள், மாம் அபியந்தி-என்னையே அடைகிறார்கள்.

**கருத்துரை**

அற்ப புத்தியுடையவர்களுடைய பலன் அற்பமானதாக அழிவுடையதாக ஆகிறது. (ஏனெனில்) தேவர்களைப் பூசிப்பவர்கள் தேவர்களையே அடைகின்றனர். என் பக்தர்கள் என்னையே அடைகின்றனர்.

**விளக்கம்**

பரமாத்மாவை விடுத்து ஏனைய தேவதைகளை ஆராதிப்பவர்கள் எத்தகையோர், அவர்கள் எத்தகைய பலனை அடைகின்றனர். பகவானின் பக்தர்கள் எத்தகைய பலனை அடைகின்றனர் என்பதை இச்சுலோகம் விவரிக்கின்றது. சாட்சாத் தேவ தேவனான பரமாத்மாவை விடுத்து இதர தேவதைகளைப் போற்றுபவர் அற்பமான பலனையே அடைவர். எனவே அத்தகைய அற்பமான பலனுக்காக அலைபவர் அற்பபுத்தியுடையவர் (Small brain) என்கிறார். ஏனெனில், நற்புத்தி உடையவராயின் நிலையான பலனைத் தரும், பிறப்பற்ற நிலையைத் தரும் 'பரமாத்மாவையே போற்றுவர் அல்லவா? அற்ப அதிகாரம், அற்ப வாழ்க்கையுடைய தேவதைகளை நம்பி நிலையான பரமாத்மாவை மறந்தவர் அற்ப புத்தியுடையவரே அல்லவா! எனவே அவர்கள் அடையும் பலனும் அற்பமாக இருக்கும். கங்கா நதியை விட்டு அருகிலுள்ள சிறிய கிணற்றைத் தேடிப் போகும் ஒருவன் எத்தகையவனோ, அவ்வாறே பரமாத்மாவை விடுத்து அற்பமான தேவதைகளைப் போற்றுபவரும். எனவேதான் சொற்பமான பலனையும், போக வஸ்துக்களையும் அடைந்து மகிழ்கின்றனர்.

உலகில் உள்ள எப்பொருளாயினும், மனிதர்களாயினும், இந்திரன், சந்திரன் ஆகிய எவராயினும் சரி, காட்சிப் பொருள்களைச் சேர்ந்தவரேயாதலால் காலக்கிரமத்தில் அழிவை அடைவர். காட்சியான ஆத்மா ஒன்றே இவ்வுலகில் அழிவில்லாத ஒரே பொருள். எனவே அறிஞர்கள் அதற்காகவே விரும்பி அதனையே போற்றுவர். அற்ப புத்தியுடையவரே உலக சுகத்தினை அடையக்கூடிய அறிவுடைய தேவதைகளின் உதவியைக் கோருவர். தேவதைகளை ஆராதிப்பவர் தேவர்களையும், என்னை ஆராதிப்பவர்கள் என்னையும்

அடைவர்' என்று பகவான் இங்குத் தெரிவிக்கிறார். எனவே நிரதிசய சுகத்தினை அளிக்கும் பரமாத்மாவின் பக்தர்கள் ஆவது சிறந்ததா? அல்லது அற்ப சுகத்தினை அளிக்கவல்ல தேவதைகளை ஆராதிப்பது சிறந்ததா என்பதை விவேகிகள் யோசித்தல் வேண்டும். அவ்வாறு யோசித்து தம் சக்தியினை, விலை மதிப்பற்ற மனதில் பிறவியை, பிறவியற்ற பெரும் பேறான நிலையான மோட்ச சுகத்தினை அளிக்கும் பரமாத்மாவின் சாட்சாத்காரத்திலேயே செலுத்தி தன்யர்களாதல் வேண்டும். எவர் எதனை ஆராதிக்கின்றாரோ அதனையே அடைவர். அரக்கர்களை ஆராதித்தால் அரக்கர்களையே அடைவர். பரமாத் மாவை ஆராதித்தால் பரமாத்வை அடைவர். பந்தங்களோ, சுவர்க் கமோ, மோட்சமோ அனைத்தும் அவரவர் கையிலே தான் உள்ளது. எனவே சிறிது அறிவை உபயோகித்து, நன்கு ஆலோசித்து தாம் முயற்சிப்பது சம்சார பந்தங்களினின்றும் நம்மை மீட்க வல்லதா அல்லது இன்னும் பந்தங்களை நிலைப்படுத்தக்கூடியதா என்று ஆலோசித்தே சாதகர்கள் காரியத்தில் இறங்க வேண்டும். எனவே மஹாத்மாக்களான சத்குருவினாலும், கீதை போன்ற கிரந்தங்களினாலும், உலகில் மிகச் சிறந்த இலட்சியம் எதுவென்பதை நன்கு அறிந்து அந்த சர்வேசுவரனின் பாதார விந்தங்களையே இடைவிடாத பக்தியுடன் பற்றுதல் வேண்டும்.

**வினா :** தேவதைகளை ஆராதிப்பவர் அடையும் பயன் எத்தகையது?

**விடை :** அழிவடையக்கூடியது.

**வினா :** அத்தகைய அழிவுடன் கூடிய பலனைக்கோரி முயற்சிப்பவர் எத்தகையோர்?

**விடை :** அற்ப புத்தியடையவர்கள் (அல்ப மேத சாம்)

**வினா :** தேவதைகளை ஆராதிப்பவர் எதனை அடைவர்? பரமாத் மாவை ஆராதிப்பவர் எதனை அடைவர்?

**விடை :** தேவர்களையும், பரமாத்மாவையும் முறையே அவரவர் அடைவர்.

**வினா :** எனவே விவேகியானவர் என்ன செய்தல் வேண்டும்?

**விடை :** நிலையான மோட்ச பதவியை அளிக்கும் பரமாத்மாவையே போற்றுதல் வேண்டும்.

### முன்னுரை

ஆயினும் மக்களில் சிலர் தன்னை ஏன் ஆராதிப்பதில்லை என்பதைக் கூறுகிறார்.

*அவ்யக்தம் வ்யக்திமாபன்னம் மன்யந்தே மாமபுத்தயஹ!*
*பரம் பாவமஜானந்தோ மமாவ்யய மனுத்தமம்!! - (24)*

### சொற்பொருள்

அவ்யேயம்-அழிவற்ற, அனுத்தமம்-ஒப்பற்ற, பரம்-இயற்கைக்கு மாறானது (பர), மம-என்னுடைய, பாவம்-சொரூபத்தை, அஜானந்த வி-அறியாத, அபுத்தயஹ்-அறிவிலிகள், அவ்யந்தம்-கண்கள் முதலான இந்திரியங்களுக்கு அப்பாற்பட்ட, மாம்-என்னை, வ்யக்திம் ஆபன்னம்-புலன்களுக்குத் தென்படும் இயல்பை அடைந்ததாக, மன்யந்தே- எண்ணுகிறார்கள்.

### கருத்துரை

என்னுடைய அழிவற்ற, ஒப்பற்ற பர சொரூபத்தை அறியாத அறிவிலிகள், புலன்களுக்கு எட்டாத என்னைப் புலன்களுக்குத் தென்படும் இயல்பை அடைந்தவனாக எண்ணுகின்றனர்.

### விளக்கம்

இறைவன் உண்மையில் உருவமற்றவன், ஸர்வ வியாபி, உலகிற்கு அப்பாற்பட்டவன், இயற்கைக்கு மாறானவன், அனந்தன், அழிவற்றவன். உலக நன்மைக்காக அவன் அவ்வப்போது தேகத்தை எடுத்து துஷ்டர்களைத் தண்டிப்பதற்கும், தர்மத்தை நிலை நாட்டுவதற்கும், நல்லோரைக் காப்பதற்கும் உலகில் அவதரிக்கிறான். மாயையைத் தன்வயப்படுத்தியவன். அவன் தன் இஷ்டப்படி தேகத்தை எடுப்பதற்கு, அழிப்பதற்கு சக்தி பெற்றவன்.

'ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய சம்பவாம்யா த்மமாயயா! (4-6) என்று அவர் இதற்கு முன்பு கூறுகிறார். எனவே அவ்வாறு தேகம் எடுத்து அவதரிக்கும் போது அவனது சமஷ்டித் வத்திற்கு எந்த பங்கமும் நேர்வதில்லை. வ்யசிஷ்ட ரூபம் அவர் தற்காலிமாக கற்பித்துக் கொள்வதேயாகும். நாமரூபத்துடன் கூடிய அந்த தேகமானது அவனது முழுமையான உருவம் அன்று. பக்தர்களை அனுகிரகிப்பதற்காக தற்காலிகமாக எடுத்தரூபமே அது.

ஆயினும், விவேகமற்றவர் மந்த புத்தியுடையவர் அந்தச் சிறிய சொரூபமென்று, இறைவன் மனிதனைப் போன்றவனேயென்றும், எண்ணுகிறான். தேவகி வாசுதேவனுக்குப் பிறந்த கண்ணனுக்குப் புலப்படும் மனித சரீரமே இறைவன் என்றும், அதற்கும் மேலாக வேறொரு உருவம் அவனுக்கு இல்லையென்பதும் அவர்களது அபிப்ராயம். ஆரம்ப நிலையில் பக்தி, சிரத்தை ஏற்படுவதற்கு இறைவனின் சாகார ரூபத்தினை போற்றினாலும், சுதனோடு திருப்தியடைந்துவிடாது அவனது நிராகார உருவைக் கூட தெரிந்து கொள்ள வேண்டும். இறைவனுக்கு பரா அபரா உருவங்கள் இரண்டும் உண்டு. பக்தர்களுக்கு அனுகிரகிப்பதற்காக எடுத்த ராமகிருஷ்ண அவதாரங்கள் அபார உருவங்கள். அவயவங்களுக்கு அப்பாற்பட்ட சத்கன, சித்கன ரூபங்கள் பராரூபம். எனவேதான், 'பரம் பாவம்' என்று அதனைக் குறித்தார். அதுவே இறைவனின் உண்மை சொரூபம்', அதனை அறியாது பஞ்ச பௌதீகங்களால் ஆன பௌதீக சரீரத்தையே போற்றுவோர் விவேகமற்றவர்கள். அற்பபுத்தியுடையவர்கள் எனப்பட்டது. ஏனெனில் அவர்கள் கண்களுக்குப் புலப்படாது அபரிச்சின்ன உருவை அறிய இயலாது. பரிச்சின்னமான ரூபத்தை மாத்திரமே இறைவன் என்கிறான். அது மிகவும் தவறானது. எனவேதான் இவர்களை மந்தபுத்தியுடையவர்கள் என்கிறார்.

இறைவனுக்கு இங்கு நான்கு விசேஷங்கள் சொல்லப்பட்டன. (1) கண்ணுக்குப்புலப்படாத தன்மை (அவ்யக்த்வம்) (2) உலகிற்கு அப்பாற்பட்ட தன்மை (பிரபஞ்சாதீத்வம்) (3) அழிவற்றவன் (அவ்ஸயத்வம்) (4) ஸர்வோந்தவத்வம். பரமாத்மா உண்மையில் அவ்யக்தன். அதாவது ஊனக்கண்களுக்குப் புலப்படாதவன். ஏனெனில், காணப்படும் பொருள்கள் யாவும் ஏதோவொரு சமயத்தில் நசித்துப் போகும். பரமாத்மா கண்ணால் காணப்படும் உருவில் மட்டுமே உள்ளாரென்று கருதினால் இறைவனும் அழிவுடையவனாகவே ஆகிறான்.

இறைவனோ அவிநாசி, எனவே ஊனக் கண்களுக்குப் புலப்படும் ஸ்தூல விக்ரகம் மாத்திரமே. அல்லது உபாதி மாத்திரமே. இறைவன் என்று கருதினால் அது வெறும் பிரமையே யாகும் என்பது இங்குத் தெளிவாக்கப்பட்டுள்ளது. மேலும் இறைவன் மிக மிக சூட்சுமமானவன். ஸ்தூலமான ஆகாசமே கண்களுக்குப் புலப்படுவதில்லை. அப்படியிருக்க மனதைவிட சூட்சுமமான சிதாகாச ரூப பரமாத்மா கண்களுக்கு எவ்வாறு புலப்படுவான்? ஆகவேதான்

இறைவன் அவ்யந்த ரூபன் எனப்பட்டது (ஆயினும் மக்களுக்கு அவரவர் சுத்த புத்தியினால் அவரவர் இதயத்தில் ஆன்மாவில் சாட்சாத்காரம் அளிக்கிறார்). மேலும் காட்சிப் பொருள்களுக்குப் பரமாக திரிக் வஸ்துவாக இருப்பதால் உலகிற்கு அப்பாற்பட்டவன் என்று சொல்லப்படுகிறான். அவனுக்கு அழிவு என்பதில்லையாதலால் அவ்யயன் எனப்படுகிறான். தேச காலத்திற்கு அப்பாற்பட்டவானாய் காட்சி தோஷங்கள் அற்றவனாய் அழிவற்றவனாய் இருப்பதால் ஸர்வோத்தமன் எனப்படுகிறான்.

இச்சுலோகத்தினால் - சுகுண உபாசகர், நிர்க்குண உபாசகர்கள், விக்ரக ஆராதனை செய்பவர்கள், இறைவனை ஒரு தனி மனிதனாக எண்ணி வழிபடுவோர், முறையாக ஒருமுனைப்பாடு, பக்தி இவை நமக்கு திடப்பட்டவுடன், தம் பக்தியை, நோக்கத்தை விசாலமாக்கிக் கொண்டு, மேலேறி இறைவனின் விக்ரகத்தில் மாத்திரமேயன்றி அண்ட சராசரத்திலும் எல்லாப் பொருள்களிலும் வியாபித்து, உலகிற்கு அப்பாற்றபட்டவனாக விளங்குகிறான் என்றும் அதுவே அவனது உண்மை சொரூபம் என்றும் கருதுவது நன்று என இங்குக் காண்பிக்கப்பட்டது.

**வினா :** இறைவனின் உண்மை சொரூபம் எத்தகையது?

**விடை :** *(1)* ஊனக் கண்களுக்குப் புலப்படாதவன் (அவ்யத்தன்) (2) உலகிற்கு அப்பாற்பட்டவன் (3) அழிவற்றவன் (4) ஸர்வோத்தமன்.

**வினா :** இறைவன் ஒரு சிறிய தேகமே என்று கருதுவோர் எத்தகையவர்?

**விடை :** விவேகமற்றவர்கள்

**முன்னுரை**

எக்காரணத்தினால் மக்கள் பரமாத்மாவை அறிவதில்லை, அறிந்தாலும் ஒரு சாமான்ய மனித ரூபமாகவே உணர்கிறார்கள் என்பதை எடுத்துக் கூறுகின்றார்.

*நாஹம் ப்ரகாச ஹ ஸர்வஸ்ய யோகமாயா ஸமாவ்ருதஹ!*
*மூடோ அயம் நாபிஜானாதி லோகோ மாமஜ மவ்யயம்!! - (25)*

### சொற்பொருள்

*யோக மாயாஸமாவ்ருதஹ-யோக மாயையினால் நன்கு மூடப் பட்டுள்ள, அஹம்-நான், ஸர்வஸ்ய-அனைவருக்கும், ப்ரகாசஷ-பிரகாசிப்பதில்லை, மூடஹ அயம் லோகஹ்-இந்த மூட உலகம் (மக்கள்), மாம்-என்னை, அஜம்-பிறவாத, அவ்யயம்-அழியாதவனாக, ந அபி ஜானாதி-அறிகிறதில்லை.*

### கருத்துரை

யோக மாயையினால் நன்கு மூடப்பட்டுள்ள நான் எல்லோரு டைய அறிவிற்கும் எட்டுவதில்லை. விவேகமற்றவர்களான மக்கள் என்னைப் பிறவாதவனாயும், அழிவில்லாதவனாகவும் அறிகிற தில்லை.

### விளக்கம்

இறைவன் ஸர்வ வியாபியாயின் எதனால் எல்லோருக்கும் பார்க்க இயலவில்லை? எல்லா மக்களுக்கும் ஏன் அவனை அறிய இயலவில்லை? என்ற வினாக்களுக்கு இங்கு விடை அளிக்கப்பட் டுள்ளது. பரமாத்மா யோக மாயையினால் மூடப்பட்டு அதில் மறைந்திருக்கின்றான். எனவே மக்களுக்கு வெளிப்படையாகத் தெரிவதில்லை. எவர் அம்மாயையை விவேகம் முதலியவற்றால் விலக்குகின்றாரோ அவர்கள் இறைவனை நேருக்கு நேர் காண இய லும். இறைவனுக்கும் மக்களுக்கும் இடையில் ஒரு திரை (Curtain) உள்ளது. அது திரிகுணங்களால் ஆனது. அதாவது சத்வ, ரஜஸ், தமோ குணங்கள் என்ற மூன்று திரைகள் கொண்டது. தமோ குணம் கறுப் பான கெட்டியான முதல் திரை, ரஜோ குணம் சிவப்பு நிறத்துடன்கூ டிய சாதாரண திரை, சத்வ குணம் வெள்ளையான மெல்லிய திரை. இம்மூன்று திரைகளுடன் கூடியது மாயை என்னும் ஆவரணம். ஜீவன் நிஷ்காம கர்மா, பக்தி, வைராக்கியம், ஆன்ம விசாரணை இவற்றாலும், சாதனைகளாலும் ஒவ்வொரு திரையாக விலக்கிக் கொண்டே போய் மாயை எனும் பந்தத்தை முழுமையாக அழித்து விட்டால் அப்போது அதற்கு அப்பாற்பட்ட பரமாத்மாவை நேருக்கு நேர் காணலாகும். ஆன்ம அரங்கில் தெரிவிக்கப்பட்ட எல்லா சாத னைகளும் ஜீவனுக்கும் இறைவனுக்கும் இடையில் உள்ள மாயை யெனும் சுவரை தகர்த்தெறிவதற்கேயாம். அதுவேயன்றி இறை வனை நாம் புதிதாக வேறெங்கும் காண இயலாது. நம்முள் இருக் கும் இறைவனை நாம் அடைந்தே தீருவோம்.

ஆயின் மூடர்கள் மாயையெனும் திரையை விலக்குவதில்லை யாதலால் அவர்களுக்கு தெய்வ தரிசனம் சாத்தியமில்லை. இறைவன் இருக்கிறான். ஆயின் அஞ்ஞானிகளால் அவனைக் காணவியலாது. சூரியனை எவ்வாறு குருடன் காணவியலாதோ அதைப் போல, குடத்திலிட்ட விளக்கைப் போல இருக்கிறது. குடத்தை அகற்றிவிட்டால் விளக்கு கண்ணுக்குப் புலப்படுவதைப் போல மாயையை அகற்றிவிட்டால் இறைவன் புலப்படுவான். உண்மையில் இறைவன், பிறப்பில்லாதவன். அழிவற்றவன் அவ்விஷயத்தை மாயையைத் தாண்டிய விவேகிகள் மாத்திரமே அறிகிறார்கள், என்றும் மாயையில் சிக்குண்டிருக்கும் மூடர்கள் அல்லர் என்றும் கீதாச்சாரியன் போதிக்கிறார்.

விவேகமற்றவர்கள் மாயையைப் போற்றிப் பாதுகாக்கின்றனரேயன்றி அதனை விலக்குவதில்லை. விஷய வாசனைகள், துக்கங்கள், லோகலம்படம், காமக்குரோதம் முதலானவற்றால் அவர்கள் அம்மாயையை இன்னும் பலப்படுத்துகிறார்கள். அதனால் இன்னும் நன்கு கால் ஊன்றி இறை தரிசனத்திற்கு கனமான சுவராக இருந்து ஜீவனுக்கு மோட்ச மார்க்கத்தில் தடைக்கல்லாக ஆகிவிடுகின்றது. எனவே ஞானியானவன் மாயையெனும் ஆவரணத்தினை பக்தி, ஞான, வைராக்கியத்தினால் சின்னாபின்னமாக்கி இறைவன் சாட்சாத்காரத்தைப் பெறுதல் வேண்டும்.

இச்சுலோகத்தில், 'ஸர்வஸ்ய' (எவருக்கும் புலப்படுவதில்லை) என்று சொல்வதின் பொருள் அஞ்ஞானிகள் எவருக்கும் புலப்படுவதில்லை என்று பொருள். மேலும் பகவான் யோகமாயையால் மூடப்பட்டிருப்பதாகக் கூறப்படுவது தெய்வ திருஷ்டியில் சொல்லப்பட்டதேயாகும். ஏனெனில், உண்மையில் இறைவனுக்கு எவ்வித வலயமும் இல்லை. அவர் நிர் ஆவரண சுத்த, சின்மய மூர்த்தி, அஞ்ஞானிகளின் பார்வையை அனுசரித்தே அவ்வாறு சொல்லப்பட்டது. சூரியனுக்கும் மேகத்திற்கும் உண்மையில் எந்த விதமான சம்பந்தமும் இருப்பதில்லை. ஆயின் மேகத்திற்குக் கீழேயுள்ளவர்களின் பார்வையில் சூரியன் மேகத்தால் மறைக்கப்பட்டிருப்பதைப் போலப் புலப்படுகிறது. அவ்வாறே இறைவன் யோக மாயையயால் மூடப்பட்டிருக்கிறான் என்பதும்.

சிலர் 'யோக மாயை ஸமாவ்ருதஹா' என்பதற்கு மூடனுக்கு சிறப்பித்துக் கூறி யோக மாயையக்கு மூடர்கள் (அஞ்ஞானி) இறைவனை அறிதல் இயலாது என்று பொருள் சொல்கின்றனர்.

**வினா :** இறைவன் எதனால் அனைவருக்கும் புலப்படுவதில்லை?

**விடை :** யோக மாயையால் மூடப்பபடிருப்பதால்.

**வினா :** இறைவனது சொரூபம் எத்தகையது?

**விடை :** (1)பிறப்பற்றவன் (2) அழிவில்லாதன்

**வினா :** பகவானின் சொரூபத்தை எவரால் அறிய இயலாது.

**விடை :** அஞ்ஞானிகள்

**வினா :** எதனால்?

**விடை :** இறைவனைச் சுற்றியுள்ள மாயாரூபமான வலயத்தினை அவர்கள் அழிக்கவில்லையாதலால்.

**வினா :** எனவே விவேகி என்ன செய்தல் வேண்டும்?

**விடை :** இறைவனுக்கும் தனக்கும் இடையே தடையாயுள்ள மாயையை விரைவில் (இப்பிறவிலேயே) முயன்று ஆன்மீக சாத னைகளால் விலக்கினால் இறைவனை நேருக்கு நேர் காணுதல் இய லும்.

**முன்னுரை**

யோக மாயை இறைவனின் வயப்பட்டதாகையால் அவனது தன்மைக்கு அது இடையூறல்ல. எனவே பந்தம் இல்லை. எனவே தான் முக்காலமும் அறிவேன் என்று பகவான் தெரிவிக்கிறார்.

*வேதாஹம் ஸமதீதானி வர்த்மானானி சா அர்ஜுன்!*
*பவிஷ்யாணி ச பூதானி மாம் து வேத ந கஸ்சன!! - (26)*

**சொற்பொருள்**

அர்ஜுன் - அர்ஜுனா! அஹம்-நான் ஸமதீதானி-கடந்துபோன, வர்த்தமானானிச-இருக்கின்ற, பவிஷ்யாணிச்-வருவனவும் ஆகிய, பூதானி-உயிர்களை, வேத-அறிவேன், மாம்து-என்னையோ, கஸ் சன-எவரும், ந வேத-அறியார்.

**கருத்துரை**

அர்ஜுன, சென்றனவும், இருப்பனவும் வருவனவும் ஆகிய

உயிர்களையெல்லாம் நான் அறிவேன். ஆனால் என்னை யாரும் அறியார்.

**விளக்கம்**

இறைவனின் சர்வசக்தி இங்கு விளக்கப்படுகிறது. உயிர்கள் அனைத்தும் காலத்திற்குட்பட்டவர்கள். அக்காலமோ இறைவனுக்கு வயிற்றில் உள்ளது. எனவே எல்லா சராசரங்களும் சர்வேசுவரனிடத்தே தோன்றுவதாகையால் அவனுக்குத் தெரியாத பிராணியோ, விஷயமோ, இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் எதுவும் இராது. எல்லா பிராணிகளையும் எல்லாகாலத்திலும் அவன் விழிப்புடனும் பார்த்துக் கொண்டிருக்கிறான். இவ்வுண்மையை அறிந்தவன் பாவம் செய்வதற்கு எவ்வாறு தூண்டப்படுவான்? அவன் பாவத்தைக் கண்டு பயந்து தர்ம மார்க்கத்திலேயே தான் செல்வான்.

மேலும் இச்சுலோகத்தினால் ஜீவன்களின் சிறுமையை எடுத்துக் காண்பித்தது போலாகின்றது. ஜீவன் காலக்கட்டினன், இறப்பிற்குட்பட்டவன். கண நேர அற்ப வாழ்க்கையையுடையவன். எதிர்கால, நிகழ்காலம் குறித்துத் தெரியாதவன். பரமேஸ்வரனோ, காலாதீதன், அமரன், ஸர்வக்ஞன், அத்தகையோனின் முன் ஜீவன் எத்தகையோன்? ஆயினும் அற்பஜீவன் தன் செல்வத்தை, பலத்தை, வித்தையை, அதிகாரம், அழகு இவற்றைக் கண்டு கர்வம் கொள்கிறான். செல்வம், அதிகாரம் இவற்றால் இறைவன் உள்ளான் என்று கூட எண்ணுவதில்லை. இது அஞ்ஞானத்தினால்தான் ஆகும். உண்மையை அறிந்தவன் தன் சிறுமையை எண்ணி இறைவனின் ஆற்றலைப் போற்றுவான். பக்தியுடன் அவனை வணங்குவான். உலகில் சிறிதளவு சக்தி சாமார்த்தியம் உடையவர்களைக்கூட உலகில் எவ்வளவோ போற்றுகின்றனர். அவ்வாறிருக்கையில் பேராற்றல் படைத்த ஸர்வேசுவரனை இன்னும் எவ்வளவு போற்றி பூசித்தல் வேண்டும்? எனவே இச்சுலோகத்தின் மூலம் ஜீவனானவன், பராத்பரனின் திரிகால ஞானத்தினை, பேராற்றலை, அமரத்வத்தை அறிந்து இடைவிடாத பக்திபூண்டு அவனை சேவித்துக் கடைதேர்தல் வேண்டும். கர்வம் அகங்காரம் இவற்றை விட்டுவிடுதல் வேண்டும்.

இச்சுலோகத்தில், 'என்னை எவரும் அறிவதில்லை' (மாம் துவேத நசஸ்சன்) என்ற வாக்கியத்தின் பொருள், 'சிரத்தை, பக்தி இல்லாதவர் ஆத்ம ஞானம் அற்றவர் தெரிந்து கொள்வதில்லை'என்பதாகும். அவனை அறிந்தவர் மிக மிக அரிதானவர். அந்தப்புரத்தில்,

மேல் மாடியில் ஜன்னல் வழியாகப் பார்த்து ஒரு ராணி கீழ் வீதியில் போகும் மக்கள் அனைவரையும் பார்க்க முடியும். ஆயின் வீதியி லுள்ள மக்களால் அந்த ராணியைப் பார்க்க முடியாது. அவ்வாறே பரமாத்மா எல்லா ஜீவர்களையும் பார்க்க முடிந்தாலும் அவனைப் பார்ப்பவர் மிக அரிதாகவேயுள்ளனர். எனவே ஜீவன்தான் கடைத் தேற வேண்டுமாயின், சம்சார சாகரத்தினைத் தாண்ட வேண்டுமா யின், தன் சிறுமையை, இறைவனின் பேராற்றலை உணர்ந்து அவனி டத்து பக்தி, அடைக்கலம் அடைதல் இவற்றுடன் மழை நீர் கடல் நீரில் கலப்பதைப் போல தன் சித்தத்தினை பரமாத்மாவிடத்தில் லயிக்கச் செய்தல் வேண்டும். இறைவன் ஜீவனை அறிந்து கொள்ளு மாறு, ஜீவனும் இறைவனை அறிந்து கொண்டால் அக்கணத்தி லேயே அவனுக்கு முக்தி ஏற்படும். அதுவரை அவன் பந்தத்தினால் அலைப்புற்று அவதிப்படுகிறான்.

**வினா :** இறைவனது பேராற்றலை விவரிக்க?
**விடை :** அவன் திரிகால ஞானி, காலாதீதன், எல்லா பிராணிகளை யும், பொருள்களையும் அறிந்தவன்.

### முன்னுரை

தன்னை ஏன் மக்கள் அறிந்து கொள்ள இயலவில்லை என்ப தைக் கூறுகிறார்.

*இச்சாத் வேஷஸமுத்தேன த்வந்த்வ மோஹேன பாரத!*
*ஸர்வபூதானி ஸம்மோஹம் ஸர்கேயாந்தி பரந்தப!! - (27)*

### சொற்பொருள்

பரந்தப-பகைவரை வாட்டுகின்ற, பாரத!-அர்ஜுனா! ஸர்கே-பிறக்கும்பொழுதே, (அல்லது இவ்வுலகில்), இச்சாத் வேஷ ஸமுத் தேன - விருப்பு வெறுப்புகளினால் (அல்லது காமக்குரோதத்தி னால்) பிறந்த, த் வந்த்வ மோஷேவ-இன்ப துன்பம் முதலான இரு மைகளான மோகத்தினால், (விவேகமற்ற தன்மையால்) ஸர்வபூ தானி-எல்லா உயிர்களும், ஸம்மோஹம்-மிகுந்த குழப்பத்தை, யாந்தி-அடைகின்றன.

### கருத்துரை

எதிரிகளை வாட்டுகின்ற அர்ஜுனா! எல்லா உயிர்களும் பிறந்த வுடனேயே விருப்பு வெறுப்பு இவற்றின் காரணமாக இன்பம் துன் பம் முதலான இருமைகளின் மோகத்தினால் குழப்பமடைகின்றன.

**விளக்கம்**

எல்லா உயிர்களும் பிறந்தவுடனேயே அஞ்ஞானத்தை அடைகி றார்கள். மஹாமாயை (வைஷ்ணவீ மாயை) அவர்களை அலைக்க ழிக்கின்றது. அதனால்தான் அவர்கள் இறைவனை தரிசிக்க இயலா மல், சம்சார குகையில் சிக்கிக் கொள்கின்றனர். மோட்சத்தை அடைய இயலாமல் போகின்றனர். அது சாதாரணமான அஞ்ஞான மல்ல, மிகவும் சக்திவாய்ந்ததாகையால் 'மோஹம்' எனாது 'சம்மோ ஹம்' என்றார். அஞ்ஞானத்திற்கான காரணம் என்ன? இன்ப துன்பம் முதலான இருமைகளினால் உண்டாகும் மோகம். அதுவோ விருப்பு வெறுப்புகளினால் - அதாவது காமக் குரோதத்தினால் பிறக்கின்றது. எனவே மோட்சத்திற்கு தடையான அஞ்ஞானத்தினை ஒழிக்க வேண்டுமானால் விருப்பு வெறுப்பு அடியோடு அழிய வேண்டும். (ஒன்றை அனுபவிக்க வேண்டும், அல்லது அடைய வேண்டும் என்று ஆசையை விருப்பு எனவும், அதனை அனுபவித்தற்குத் தடை யாக இருப்பவர் மீது கோபம் கொள்ளுதல் வெறுப்பு என்றும் சொல் வர்) ஏதோவொரு காட்சிப் பொருள்களின் மீதான ஆசை, இச்சை எப்போது ஏற்படுகிறதோ, அப்போது சித்தம் அதனை அடைய வேண்டும் என்ற அதனைக் குறித்த எண்ணத்தோடு நிறைந்து சபலம டைந்திருக்கம். ஒருமுனைப்பாடு இராது. சபலசித்தத்தில் ஆத்மா பிரதிபலிப்பதில்லை. எனவே அமைதியின்மை, துக்கம் ஏற்படுதல். அதன் ஆசை அவை அதிகரிக்கும். அவை அனுபவிக்க அதிகரிக்கு மேயன்றிக் குறையாது. எனவே இச்சையெனும் முதல் எதிரியை விவேக, வைராக்கியத்தினால் இதயத்தினின்றும் நீக்கி விடுதல் வேண்டும்.

'துவேஷம்' - நமக்கு பிடித்தமில்லாத பொருளின் மீது, பிடித்த மான பொருளைக் கிடைக்காமல் செய்தவர் மீதும், மனிதனுக்கு சாதரணமாக வெறுப்பு ஏற்படும். அவ்வெறுப்பே குரோதமாக மாறி விடும். குரோதத்தினால் மோஹம், மோஹத்தினால் பண்பாடற்ற தன்மை, அதனால் புத்தி நாசம், அதனால் பேரழிவு ஜீவனுக்கு உண் டாகும். எனவே ஜீவனின் பேரழிவிற்குக் காரணமான விருப்பு வெறுப்புகளை, பேரெதிரிகளை, அனைத்தும் இறை சொரூபம் என்ற விவேகத்தினாலும், ஆன்மீக யுக்திகளினாலும் அழித்து துஷ்ட இருமைகளை மறுபடியும் எழவொட்டாது தடுத்துப் பேரமைதியை அனுபவித்தல் வேண்டும்.

'ஸர்கே'-என்பதால் தாயின் கர்ப்பத்திலிருந்து பிறக்கும் போதே அஞ்ஞானம் மூடிவிடுகின்றது என்றும், இளமை, முதுமை இவற்றில் அல்ல என்பதும் தெளிவாகிறது. எனவே சிறுவயதிலேயே ஆன்மீக சாதனைகளை மேற்கொண்டு அஞ்ஞானத்தை அழிப்பவர் தன்யர்கள். கள்வனை வீட்டினின்று எவ்வளவு விரைவில் வெளியில் துரத்துகிறோமோ அவ்வளவு நல்லதல்லவா? எனவே அத்தகைய விவேகம் எந்தக் கணத்தில் ஏற்படுகிறதோ, அக்கணமே சிறந்த சாதனைகளின் மூலம் இதயக் கள்வர்களைத் துரத்தியடித்து ஆத்மானந்தத்தை அடைய வேண்டும்.

இங்கு 'பரந்தப' - என்று அழைப்பதில் ஒரு சிறப்பு உள்ளது. 'அர்ஜுனா, நீ எதிரிகளை வாட்டுகிறவன். எனவே மன எதிரிகளான விருப்பு வெறுப்புகளைக்கூட வெல்வாயாக! என்று போதிப்பதைப் போல் உள்ளது.

'ஸர்வ பூதானி' என்ற சொல்லிற்குச் சிரத்தை பக்தியுடன் இறைவனை அர்ச்சித்தற்கு, ஞானிகளைத் தவிர ஏனையோர் என்பது பொருள்.

**வினா :** இன்ப துன்பம் முதலான இருமைகள் எதனின்று தோன்றுகின்றன?

**விடை :** விருப்பு வெறுப்புகளின்று.

**வினா :** எல்லா உயிர்களும் அஞ்ஞானத்தை எப்போது அடைகின்றன.

**விடை :** பிறக்கும் போதே.

**முன்னுரை**

(மேற்சொன்ன) அஞ்ஞானத்தினின்றும் எவர் விமுக்தி அடைவர் என்பதைத் தெரிவிக்கிறார்.

*யேஷாம் த்வந்த கதம் பாபம் ஜனானாம் புண்யகர்மணாம்!*
*தே த்வந்த வமோஹ நிர்முக்தா பஜந்தே மாம் த்ருடவ்ரதாஹ்!! (28)*

**சொற்பொருள்**

புண்ய கர்மாணாம்-புண்ய கர்மங்களைச் செய்கின்ற, யேஷாம் ஜனானாம்-எந்த ஜன்மத்தில் செய்த, பாபம் அந்தகதம்-பாவம் முடி

வடைகிறதோ, தே-அவர்கள், த்வந்தவ மோஷ நிர்முகக்தாஹ்-இருமைகளால் ஆன அஞ்ஞானத்திலிருந்து விடுதலையடைந்தவர்களாய், த்ருடப்ருதாஹ்-உறுதியான விரதமுடையவர்களாய், மாம் பஜந்தே-என்னைப் பூஜிக்கிறார்கள்.

**கருத்துரை**

*புண்ணிய கருமங்களையுடைய எந்த ஜனங்களின் பாவங்கள் முடிவடைகின்றதோ, அத்தகையோர் (இன்ப துன்பங்கள்) முதலான இருமைகளின் மோகத்திலிருந்து விடுபட்டவர்களாய், திடமான விரதமுடையவர்களாய் என்னைப் பூசிக்கிறார்கள்.*

**விளக்கம்**

பரமாத்மாவை விட விரதர்களாய் சேவிப்பவர்களுக்கே பந்த விமுக்தி கிடைக்கும். ஆகவேதான் பலரும் தெய்வ சாட்சாத்காரத்திற்காகப் பல விரதங்களும், நியமங்களையும் மேற்கொள்கின்றனர். மௌன விரதம், உபவாசம் இருத்தல், பிரம்மச்சரிய விரதம், வேத அத்யயனம் முதலானவற்றை மேற்கொள்வர். ஆயின் அவற்றில் பலருக்கும் திடத்வம், நிலைத் தன்மை ஏற்படுவதில்லை அதற்குக் காரணம் என்னவென்று பகவான் இங்குத் தெரிவிக்கிறார். பல ஜன்மங்களாகத் தொடர்ந்து வரும் பாவமே அதற்குக் காரணம் என்றும் அப்பாவம் இதயத்தில் இருக்கும் வரை ஆன்மீக சாதனையில் தடை ஏற்படுத்திக் கொண்டேயிருக்கும். அழுக்குத் துணியில் சாயம் ஏறியதைப் போல, தரிசு நிலத்தில் விதை முளைக்காததைப் போல, பாபமெனும் குற்றம் நிறைந்த இதயத்தில், ஆன்மீக சாதனைகள் செய்தல் இயலாது. அத்தகையோர் விரதங்களை ஆரம்பித்தால் நன்கு தொடர்ந்து மேற்கொள்ள முடியாது போய்விடும். திடத்தன்மை ஏற்படாது. பாவம் ரஜோ குணம் இவை சித்தத்தில் இருப்பவர் தியான நிஷ்டையில் அமர்ந்தாலும், அவை அவனை அமரவிடாது செய்துவிடும். எனவே இறைவனை திடவிரதங்களால் சேவிக்க வேண்டுமெனினும் உள்ளிருக்கும் பாவம் நசித்துப் போக வேண்டும். எது எவ்வாறு நாசம் அடையும் என்பதை ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா இந்த சுலோகத்தில் விவரிக்கிறார்.

புண்ய கர்மங்களினாலும், அநேக நற்காரியங்களைச் செய்வதாலும், நிஷ்காமகர்ம யோகத்தினைப் பின்பற்றுவதாலும், ஜீவனின் பாவமனைத்தும் நசித்துப் போகும். எனவே சாதகன் முதன் முதலில் பல நற்காரியங்களையும், தான தர்மங்களையும், பரோபகாரத்தினை

யும், திவ்ய மந்தர ஜபத்தினையும் விரிவாகச் செய்தல் வேண்டும். சில வேதாந்திகள், புண்ய காரியங்கள் கூட பந்தத்தை ஏற்படுத்தும். எனவே அவற்றைச் செய்தல் கூடாது என்று சொல்வர். அது அவர்க ளின் நற்பலனேயன்றி, வேறில்லை. ஏனெனில் பகவான் கீதையில் புண்ணிய காரியங்களை, நற்காரியங்களை தவறாது ஆற்ற வேண் டும் என்றே ஆணையிடுகிறார். மேலும் அதனை ஒருகாலும் செய்யா திருத்தல் கூடாது என்று கூட எச்சரிக்கிறார். (18-5, 6-40) இறைவனின் வாக்கில் நம்பிக்கையுள்ளவர் அவரது ஆணையைத் தவறாது நிறை வேற்றுதல் வேண்டும். புண்ணிய காரியங்களைச் செய்பவர்க்கும், நன்னடத்தை உடைய சீலர்களுக்கும் எந்நாளும் துர்க்கதி நேர்வதில் லையென இதற்கு முன்பு கூறியது கவனத்தில் கொள்ளத்தக்கது. அதீத ஸ்திதியில் இருப்பவனுக்கு, இந்திரியமனங்களைக் கடந்தவ னுக்கு, நிர்விகல்ப சமாதியில் இருப்பவனுக்கு புண்ய, பாவங்கள் இல்லையென்று சொன்ன வாக்கியத்தை சாதாரண மனிதர்களுக்கு ஏற்றிச் சொல்ல முடியாது. ஏனெனில் அதனால் அச்சாதனைகளைத் தடுத்தது போலாகும். துரீய நிலையில் உள்ள ஜீவன் முக்தர்கள் கூட உலக நன்மைக்காக புண்யகாரியங்களை நற்செயல்களைச் செய்வர்.

இவ்வாறாக புண்ய காரியங்களால் பாவம் நாசம் அடைந்தவர் கள் சுக, துக்கம் முதலான இருமைகளற்று பரமாத்மாவை திடமான விரதங்களுடன் சேவிப்பர். அதனால் அவர்கள் ஆத்ம சொரூபத்தை அடைந்து பந்த விமுக்தியடைவர். இச்சுலோகத்தின் மூலம் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா மக்களுக்கு இவ்வாறான எச்சரிக்கை விடுக்கி றார். 'மக்களே! முதல முதலில் உம் சித்தத்திலிருக்கும் பாவமெனும் விலங்கினை, நற்காரியங்கள், புண்ணிய செயல்கள் மூலம் விலக் குங்கள்! அப்போதே உமக்கு இன்ப துன்பம் முதலான இருமைகளி னால் ஏற்படும் மோஹம் தொலைந்து தெய்வ விரதங்களில் திடத் தன்மை ஏற்படும். அதனால் மோட்சம் கிடைக்கும்' எனவே சாதகர் கள் பகவானின் வாக்கில் நம்பிக்கை வைத்து புண்யகாரியங்களை ஆற்றுக.

இச்சுலோகத்தின் மூலம் வேறொரு விஷயமும் தெளிவாகிறது. அதாவது, ஆன்மீக அரங்கில் சாதகன் சில திடமான நியமங்கள், விரதங்கள் இவற்றை மேற்கொள்ள வேண்டும். இல்லையெனில் மாயை விலகாது. பலமற்ற நியமங்களுக்கு மாயை கட்டுப்படாது. மனம் கட்டுப்படாது. தகரத்தினால் ஆன கோடாலியால் ஒரு பெரிய மரத்தைத் தகர்க்க முடியாதல்லவா? இன்று இத்துனை ஆயிரம் ஜபித் தாலொழிய உண்ணமாட்டேன். இத்துனை அத்தியாயங்கள் பாராய

ணம் செய்தாலொழிய வேறு பணி செய்ய மாட்டேன் என்று இவ் வாறு திடநிச்சயம் செய்து கொள்ள வேண்டும்.

இச்சுலோகத்தினால் கீழ்க்கண்ட விஷயங்கள் தெளிவாகின்றன.

1) மோட்சம் அடைய வேண்டுமானால் சாதகன் திடமான விரதங் களை மேற்கொள்ள வேண்டும்.
2) திட விரதம் ஏற்பட வேண்டுமாயின் சித்தத்தில் பாவம் அழிய வேண்டும்.
3) பாவம் நசித்துப் போக வேண்டுமானால் புண்ய காரியங்களை யும், நற்கர்மங்களையும் செய்தல் வேண்டும்.

**வினா :** இறைவனை திடவிரதத்துடன் எவரால் சேவிக்க முடியும்?

**விடை :** பாவம் தொலைந்தவர்கள்.

**வினா :** பாவம் எவ்வாறு தொலையும்?

**விடை :** புண்ணிய காரியங்களினால்

**வினா :** பாவம் நசிப்பதால் ஏற்படும் பலன் என்ன?

**விடை :** (1) இருமைகளினால் ஏற்படும் மோஹம் அழிதல் (2) தியான திடத்வம்

**முன்னுரை**

சிரத்தை பக்தியுடன் இறைவனை அடைந்து முயற்சிப்பவர்க் குக் கிடைக்கும் பலனைப் பற்றிக் கூறுகிறார்.

*ஜரா மரண மோக்ஷாய மாமாச்ரித்ய யதந்தியே!*
*தே ப்ரஹ்ம தத்விதுஹ் க்ருதஸ்ன மத்யாத்மம் கர்ம சாகிலம்!! - (29)*

**சொற்பொருள்**

யே-யார், ஜராமரண மோக்ஷாம்-மூப்பினின்றும், மரணத்தி னின்றும் விடுபடுவதற்கு, மாம்-என்னை, ஆச்ரித்ய-வழிபட்டு, யதந்தி-முயற்சி செய்கிறார்களோ, தே-அவர்களால், க்ருத்ஸனம்- எல்லாவிதமான, அத்யாத்மம்-அத்யாத்மம் முழுவதையும், அகிலம் கர்மச-கர்மங்கள் அனைத்தையும், தத் ப்ரஹ்ம- அப்பிரம்மமேயென்று, விதுஹ்-அறிகின்றனர்.

**கருத்துரை**

எவர் மூப்பினின்றும் மரணத்தினின்றும் விடுபடுவதற்கு என்னை வழிபட்டு முயற்சி செய்கிறார்களோ அவர்கள். எல்லா அத்யாம சொரூபம் முழுவதையும், எல்லா கர்மங்களையும் அப்பி ரம்மமே என்பதை அறிகின்றனர்.

**விளக்கம்**

ஜீவன் சம்சார துக்க விமுக்திக்காக, பரமானந்த பிராப்திக்காக இறைவனை வேண்டி அந்த இலட்சியத்தினை அடைவதற்காக முயல்கிறான். பிறப்பு இறப்பு, மூப்பு, வியாதி முதலியவற்றுடன் கூடிய இந்த சம்சார துக்கம் மிகவும் பயங்கரமானது. அதினின்றும் விடுதலையடைவதற்கே சர்வேசுவரனை மக்கள் வேண்டி நிற்கின்ற னர். எல்லா ஆன்மீக சாதனைகளும் இதற்காகவே ஏற்பட்டவை. அதாவது பிறப்பிறப்பே உருவான சம்சார துக்க விநாசத்திற்காக நிரத சிய ஆத்மானந்த பிராப்திக்காக. அவ்வாறு சர்வேசுவரனை அடைக்க லமடைந்து தியானம் முதலானவற்றைச் செய்வோர் முறையான அவரவர் முயற்சியில் பக்குவமடைந்து பின்னர் அதாவது ஞான நிலையை அடைந்த போது எல்லா கர்மங்களும், எல்லா உயிர்கள் அனைத்தும் அத்வைத பரபிரம்மாகவே அவர்கள் அறிவர் எனக் கூறப்பட்டது. அதாவது அவர்கள் பார்வையில் பிரம்மத்திற்குப் புறம்பானவை எவையும் இராது. எல்லாம் ஆத்மாமயமாக, பிரம்ம மயமாகத் தோன்றும்.

இந்த பிரம்மானுபூதியை அனைவரும் அடைவதில்லை. எவர் மோட்சத்திற்காக தீவிரமான முயற்சி செய்கிறார்களோ, எவர் பந்த விமுக்திக்காக, ஸர்வேசுவரனை அடைந்து தியானம் முதலானவற் றைச் செய்கிறார்களோ, அவர்களுக்கே கிடைக்கும். அப்போது அவர்களே பரபிரம்மமாகவும், தன்னிடத்தேயே எல்லா கர்ம ஸமூ கம், எல்லா ஜகத்தும், ஜீவராசிகளும் இருப்பதாக, எல்லா ஜீவர்க ளின் ஆத்மாவும் தானே ஆனதாகவும் காண்பர். இதுவே 'அஹம் பிரம்மாஸ்மி' என்ற மகா வாக்கியத்தின் அனுபவம்.

இந்த சுலோகத்தில் 'யதந்தி' - (முயற்சி செய்கிறார்கள்) என்று சொன்னதால் பிரம்மானுபூதி தீவிரமான முயற்சி செய்தால்தான் கிடைக்கும் என்பது தெரிகிறது. மேலும் 'ஆச்ரித்ய', 'யதந்தி' என்ற இரண்டு பதங்களையும் சேர்ப்பதால், இறைவனை வணங்கினால் மட்டும் போதாது என்பதும், இறைவனது காட்சிக்கு முயற்சி செய்

தல் வேண்டுமென்பதும் தெரிகிறது. இறைவனை வணங்குவதால் அவன் அனுகிரகித்து நமக்கு வழி காட்டுவான். அவ்வழியைப் பின் பற்றி நாமே நடத்தல் வேண்டும். முயற்சி செய்து தன்மனத்தைத் தானே தூய்மைப்படுத்திக் கொண்டு பிரம்மானுபூதியை அடைதல் வேண்டும்.

**வினா :** இறைவனை எதற்கு வணங்குதல் வேண்டும்?

**விடை :** பிறப்பு இறப்புடன் கூடிய சம்சார பந்த விமோசனத்திற்காக.

**வினா :** பகவத் பிராப்தி எவ்வாறு கிடைக்கும்?

**விடை :** சுய முயற்சியினால், சுயமாக ஆன்மீக பயிற்சிகளை மேற் கொள்ளுவதால்.

*ஸாதி பூதாதி தைவம் மாம் ஸாதியக்ஞம் சயே விதுஹ்!*
*ப்ரயாண காலே அபி சமாம் தேவிதுர் யுக்த சேதஸஹ!!*

**சொற்பொருள்**

யே-எவர், ஸாதி பூதாதி தைவம்-அதிபூதம், அதி தெய்வம், அதியக்ஞத்துடனும் கூடினவனாகவும், மாம்-என்னை, விதுஹ்-அறிகிறார்களோ, தே-அவர்கள், ப்ரயாண காலே அபி ச-மரண காலத்திலும், யுக்த சேத ஸஹ்-(தெய்வத்திடம்) நிலைபெற்ற மனமுடையவராய், (மனக்கட்டுப்பாடுடையவராய்), மாம்-என்னை, விதுஹ்-தெரிந்து கொள்வர்.

**கருத்துரை**

யார் என்னை அதிபூத, அதி தெய்வ, அதியக்ஞத்துடன் கூடினவனாக அறிகிறார்களோ, யோகத்திலே நிலை நின்ற மனதையுடைய அவர்கள், சாகும் தறுவாயிலும் என்னை அறிகின்றனர்.

**விளக்கம்**

எவர் வாழ்நாள் முழுவதும் ஆத்ம சிந்தையுடன் இருக்கிறார்களோ, அவர்கள் அந்திம காலத்தில் நியமித சித்தத்துடன் தெய்வானுபவத்தையே அடைகின்றனர் என்று இங்குச் சொல்லாப்பட்டது. அதிபூத, அதி தெய்வ, அதி யக்ஞ ரூபங்களுடன் கூடிய எல்லாப் பொருள்களும் இறை சொரூபங்களே என்ற ஆத்மானுபவம் வாழ்நாளில் இருப்பவர்களுக்கு, இறுதிக் காலத்தில் அத்தகைய பிரம்மானுப

வமே அடைந்திருப்பர். எல்லாம் பிரம்மமே. அப்பிரம்மன் நானே என்ற பிரம்மானுபவத்தை மக்கள் எக்காலத்தும் பெற்றிருத்தல் வேண்டும்.

அவ்வனுபவம் எவ்வாறு கிட்டும்? அதற்கு சமாதானம் இங்குக் கூறப்பட்டுள்ளது. 'யுக்த சேதஸஹ்' (மனக் கட்டுப்பாட்டினால் மனதை வெற்றி கொள்வதால்) சித்திக்கும், இந்திரியங்களுக்கு அடிமைப்பட்டவர்க்கு பிரம்மானுபவம் கிட்டாது. வாழ்நாள் முழுவதும் இத்தகைய நியமசித்தம் உடையவர்க்கே இறுதிக்காலத்தில் கூட (ப்ரயாண காலே அபிச) என்று சொல்லப்பட்டது. எனவே ஆரோக்கியம் நன்கு உள்ளபோதே, இந்திரியங்கள் சிதலம் அடங்குவதற்கு முன்பே, தேகசக்தி அடங்குவதற்கு முன்பே, எல்லா சாதனைகளையும் செய்து, ஆத்மானுபவம் அடைதல் வேண்டுமென்றும், அவ்வாறிருந்தால்தான் அந்திமக் காலத்தில் கூட தெய்வ நினைப்பு ஏற்படும் என்பதும் தெளிவாகிறது. பிரயாணம் தொடங்குவதற்கு முன்பே எவ்வாறு அதற்கு வேண்டியவற்றைத் தயார் செய்து கொள்கிறோமோ, வழியில் வேண்டுவனவற்றைச் சேகரித்துக் கொண்டு ஏற்பாடு செய்து கொள்வரோ அவ்வாறே தொலைதூரப் பிரயாணமான இந்த தேகம் அழிந்துபடுவதற்கு முன்பே தெய்வானுபவத்தினை அடைந்திருத்தல் வேண்டும். இளமையிலேயே, அதற்குத் தயார் செய்து கொள்ள வேண்டும். சக்தியனைத்தும் அடங்கிப் போனபின் ஆன்மீக முயற்சியில் இறங்க முடியாது. எனவே இந்த சுலோகம் ஆத்ம சாட்சாத்காரமெனும் இலட்சியத்தினை வாழ்நாளில் இளமையிலேயே பெற்றிருத்தல் வேண்டுமெனக் காண்பிக்கிறது.

'வாழ்நாளில் எவர் என்னை அறிகின்றார்களோ, அந்திம காலத்தில் அவர்கள் என்னை அறிவர்' என்று பகவான் இங்குச் சொல்வதால் இறுதியில் செய்து கொள்வோம் என்றெண்ணி வாழ்நாள் முழுவதும் சோம்பித் திரியாது இருத்தல் வேண்டுமென எச்சரிப்பது போல் உள்ளது. மேலும் அந்திம காலம் எப்போது வரும் என்பது எவருக்கும் தெரியாது. எனவே வாழ்நாள் முழுவதும் இறை சிந்தனையுடன் நடத்தி வந்தால் இனி மரணம் எப்போது வரினும் பயம் இல்லை. கடைசி காலத்தில் மாத்திரம் இறை சிந்தனை செய்தல் வேண்டுமென்பர் இங்குக் கண்டிக்கப்படுகின்றனர். கீதாச்சாரியன் ஆன்மீக அரங்கில் சோம்பேறிகளுக்கு ஒருபோதும் இடமளிக்கவில்லை.

அதிபூதா, அதி தெய்வ, அதியக்ஞங்கள் யாது என்பது வரும் அத்தியாயத்தில் விவரமாகக் கூறப்பட்டுள்ளது.

**வினா :** தேகம் அழிவுபடுகையில் எவர் நியமசித்தத்துடன் ஆத்மானு பவம் அடைந்திருப்பர்?

**விடை :** எவர் நன்கு சாதனைகள் பல புரிந்து, வாழ்நாள் முழுவதும் முயற்சி செய்து பரமாத்ம அனுபவத்தினை சம்பாதித்துக் கொண்டுள் ளனரோ அவர்கள்.

ஓம்

இது ஸ்ரீமத் பகவத் கீதையெனும் உபநிஷத் சாரமும், பிரம்ம வித்தை, யோக சாஸ்திரமும், ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்வாதமாக வந்துள்ள ஸ்ரீ பகவத் கீதையில் விஞ்ஞான யோகமெனும் ஏழாம் அத்தியாயம்.

ஓம் தத் ஸத்

ஓம்

# ஸ்ரீ பகவத் கீதை

## எட்டாம் அத்தியாயம்

## அக்ஷர பரபிரம்மயோகம்

### அத்தியாயத்தின் பெயர் விளக்கம்

'அக்ஷர பரபிரம்மயோகம்' - 'க்ஷர' என்றால் அழிவுடையது. அக்ஷரமென்றால் அழிவற்றது. அழிவில்லாத பரபிரம்மத்தைக் குறித்துப் போதிக்கும் அத்தியாயமானதால் இதற்கு அக்ஷர பரபிரம்ம யோகமென்ற பெயர் ஏற்பட்டது.

### இவ்வத்தியாயத்தின் முக்கிய விஷயங்கள்

1. *பிரம்மம், ஆன்மீகம், கர்மம் முதலானவற்றைக் குறித்து அர்ஜுனனின் கேள்விகள் அதற்கான பகவானின் பதில்கள் (1 முதல் 7 வரை)*

2. *பிரணவ உபாசனை, அதன் அற்புத பலன் (8 முதல் 16 வரை)*

3. *சிருஷ்டி பிரளயம் குறித்த விவரங்கள் (17 முதல் 18 வரை)*

4. *இறைவனின் ஸநாதன சொரூபம் (20 - 21 வரை)*

5. *சுக்ல, கிருஷ்ண மார்க்கங்களின் வருணனை (23 முதல் 26 வரை)*

6. *யோகியின் மகிமை (27 முதல் 28 வரை)*

## முன் அத்தியாத்திற்கும் இவ்வத்தியாயத்திற்கும் உள்ள தொடர்பு

முன் அத்தியாயத்தின் இறுதியில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா பிறப்பு இறப்பில்லா பெருவாழ்வான முக்தியடைவதற்கு, தன்னை அடைக்கலமடைந்து முயற்சி செய்வோர் பிரம்மத்தினை நன்கு அறி வர் என்று கூறி அப்பிரம்மத்தின் சில சிறப்புக்களையும் தெரிவித் தார். அவையெவையெனின் பிரம்மத்தின் சகல ஆன்மீக சொரூபம், சகல கர்ம சொரூபம், அதிபூத சொரூபம், அதிதெய்வ சொரூபம், அதியக்ஞ சொரூபமென்று சொல்லி, அத்தகைய பிரம்மத்தினை அடைவதற்கு முயற்சி செய்வோர், நியமத்துடன் கூடிய சித்தமுடை யவராய், மரண காலத்தில் கூட அந்த பரமாத்மாவை நன்கு அறிவர் என்று கூறினார். அவ்வாக்கியத்தினைக் கேட்டவுடனேயே அர்ஜுன னுக்கு ஐயம் ஏற்பட்டு பகவான் போதித்த ஏழு விஷயங்களையும் விரிவாக விளக்கம் கேட்கிறான் - 'பிரம்மம் என்றால் என்ன? ஆன்மீ கமென்றால் என்ன?' - என்பது போன்ற அர்ஜுனனின் ஏழு கேள்விக ளுடன் இவ்வத்தியாயம் தொடங்குகிறது.

### அர்ஜுன உவாச

*கிம் தத்ப்ரஹ்ம கிமத்யாத்மம் கிம்கர்ம புருஷோத்தம!*
*அதிபூதம் சகிம் ப்ரோக்த மதிதைவம் கிமுச்யதே!! (1)*

*அதியக்ஞஹ கதம் கோஅத்ர தேஹே அஸ்மின் மதுஸுதன!*
*ப்ரயாண காலே சகதம் ஞேயோஅஸி நியதாத்மபிஹி!! (2)*

### அர்ஜுனன் கேட்டது

சொற்பொருள்

புருஷோத்தம - புருஷர்களில் சிறந்தவனான அர்ஜுனா!, தத்பி ரஹ்ம -அப்பிரம்மானது, கிம் - எது?, அதியாத்மம் - அத்யாத்மம், கிம் - எது?, கர்ம - கர்மம், கிம், எது?, அதிபூதம்ச - அதிபூதம், கிம் - எத்தகையதாக, ப்ரோக்தம் - சொல்லப்பட்டுள்ளது. அதிதைவம் - அதிதெய்வம், கிம் - எதாக, உச்யதே - சொல்லப்படுகிறது, மதுசூ தன - கிருஷ்ணா!, அஸ்மின் தேஹி - இந்த தேகத்தில், அதியக்ஞஹ - அதியக்ஞன், கஹ் - எவர், அத்ர - இவற்றைக் குறித்து, கதம் - எவ்வாறு (அறிதல் வேண்டும்), பிராயணகாலே ச - உயிரின் பயண காலத்தில், நிலதாத்மபிஹ் - நியமத்துடன்கூடிய மனம் உடையவர்க ளால் (மணக்கட்டுப்பாடு உடையவர்களால்) (த்வாம் - நீ), கதம் - எவ்வாறு, ஞேயஹ் - அறியப்படுபவர், அஸி - ஆகின்றீர்?

**கருத்துரை**

புருஷர்களில் மேலானான ஸ்ரீ கிருஷ்ணா! பிரம்மம் எது? அதி யாத்மம் எது? கர்மமென்றால் என்ன? அதிபூதம் என்று சொல்லப்ப டுவது எது? அதிதெய்வமென்று எதனைச் சொல்வர்? இந்த தேகத் தில் அதியக்ஞன் என்பவர் யார்? அவனை அறிவது எங்ஙனம்? தன்னடக்கம் பழகியவர்களால் மரண காலத்திலும் நீர் எங்ஙனம் அறியப்படுகின்றீர்?

**விளக்கம்**

முன் அத்தியாயத்தின் கடைசி இரண்டு சுலோகத்தில் ஸ்ரீ கிருஷ் ணர் பிரம்மம், ஆன்மீகம் முதலியவற்றைக் குறித்துச் சுருக்கமாகத் தெரிவிக்கவும், உடனேயே அர்ஜுனன் அவற்றைக் குறித்து விவர மாக போதிக்குமாறு வேண்டி ஏழு கேள்விகள் கேட்கிறான், அதற்கு பகவான் முதல் ஆறு கேள்விகளுக்குச் சுருக்கமாக விடையளித்து, இறுதிக் கேள்வியான இறுதிக்கால பகவத் சிந்தனையைக் குறித்து விரிவாகப் போதித்தார். இவ்வாறு முதல் அத்தியாயத்தில் இறுதி யில் குறிப்பாகத் தெரிவிக்கப்பட்டதை, அடுத்த அத்தியாயத்தில் விரிவாக போதிப்பதற்கு அர்ஜுனனின் வினாக்களுடன் முடிகிறது. இறுதிக் காலத்தில் யோக நிட்டையாளன் எத்தகைய மனோபாவம் கொண்டிருப்பினும், பிரம்மசாயுஜ்ய அடைவானோ, என்ற விஷயம் மிக முக்கியமானதால், வாழ்நாள் முழுவதும் தியானம் முதலான அனுஷ்டானங்கள் செய்தல் அத்தகைய இறை நிலையில் நிலைபெ றுவதற்கே யாதலாலும், அந்த கட்டத்தை கீதாச்சாரியார் விரிவாக விளக்கினார்.

'புருஷோத்தமா', 'மதுசூதனா', என்ற சொற்களின் மூலம் ஸ்ரீ கிருஷ்ணரைத் துதிப்பதில் அர்ஜுனனின் பக்திபாவம் நன்கு வெளிப் படுகின்றது.

மேல் அத்தியாயத்தின் இறுதி வாக்கியத்தில் பகவான் 'யுக்தசே தஸஹ' (நியமத்துடன் கூடிய சித்தத்தினையுடையவரால்) என்று சொல்வதால் இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் அர்ஜுனன் 'நிய தாத்மபிஹி' (மனக் கட்டுப்பாடுடையவர்களால்) என்று மறுபடியும் சொல்வதால் நியம சித்தர்களுக்கு மனதினை தன்வயப்படுத்திய வர்க்கு மாத்திரமே ஆன்மீக அரங்கில் நல்ல பலன் கிட்டும் என்பது, அத்தகைய மனக்கட்டுப்பாடு மோட்சத்திற்கு மிக மிக அவசியமென் பதும் தெளிவாகின்றது.

### முன்னுரை

அர்ஜுனனின் ஏழு கேள்விகளுக்கு பகவான் வரிசையாக விடையளிக்கிறார்.

### ஸ்ரீ பகவானுவாச

*அக்ஷரம் ப்ரஹ்ம பரமம் ஸ்வபாவோ அத்யாத்ம முச்யதே!*
*பூதபாவோத்பவகரோ விஸர்கஹ கர்ம ஸம்ஞிதஹ!! (3)*

### ஸ்ரீ பகவான் சொன்னது

### சொற்பொருள்

*பரமம் - மிகவும் மேலான தாயும் (நிரதிசயமான), அக்ஷரம் - அழிவற்றதாயும், ப்ரஹ்ம - பிரம்மம் (எனப்படும்), ஸ்வபாவஹ் - இயல்பு, அத்யாத்மம் - அத்யாத்மம் என்று, உச்யதே - சொல்லப்படு கின்றது, பூரபாவோத்யவகரஹ் - எல்லா உயிர்களுக்கும், பொருள்க ளுக்கும் உற்பத்தி செய்து நிலைக்கச் செய்யும், விஸர்கஹ் - தியாக பூர்வமான கிரியை (தேவதைகளை எண்ணி மந்திரபூர்வமாக அக்னி யில் ஆஹுதி செய்யும் யக்ஞம் முதலானவை), கர்ம ஸம்ஞிதஹ' - கர்மம் எனப்படுகிறது.*

### கருத்துரை

*ஸ்ரீ பகவான் சொல்கிறார் - மிகவும் உத்தமமான (நிரதிசயமான) அழிவற்ற ஒன்றே பிரம்மம் எனப்படுகிறது. தனிப்பட்ட ஆத்மபா வம் அத்யாத்மம் எனப்படுகிறது. உயிர்களின் உற்பத்தியை ஏற்படுத் தும் (யக்ஞம் முதலான) தியாக பூர்வமான கிரியைகளே கர்மம் என்ற பெயருடன் விளங்குகிறது.*

### விளக்கம்

*அர்ஜுனன் கேட்ட ஏழு வினாக்களுக்கு முறையாக பகவான் இங்கு பதிலுரைக்கிறார். அதில் முதல் வினாவான பிரம்மமென்றால் என்ன என்பதற்கு மிகவும் சிறந்ததான (நிரதிசயமான) அழிவற்ற பொருளே பிரம்மம் என்கிறார். உலகில் உள்ள எல்லாக் காட்சிப் பொருள்களும் காலக்கிரமத்தில் அழியக்கூடியவையே. அவை கண நேரமே இருக்கக்கூடியவை. அழிவற்ற பொருள் ஒன்றேயுள்ளது. அதுவே 'திரிக்' (காட்சி) எனப்படும் பரபிரம்மம். அது அழிவற்றது. 'பரமம்', 'அக்ஷரம்' என்று சொல்வதால் அது நிரதிசய அக்ஷர சொரூப*

மென்றும், எக்காலத்தும் அது அழிவதில்லை என்றும், தேசம், காலம் இவற்றால் எந்நாளும் கட்டுப்படுவதில்லை என்பதும் தெளி வாகின்றது.

இனி, இரண்டாவது வினாவான அத்யாத்மம் என்றால் என்ப தற்கு 'இயல்பு' (ஸ்வபாவம்) அத்யாத்மம் எனப்பட்டது. ஸ்வ+பா வம்-ஸ்வபாவம். தனது இயல்பு அதாவது தன் ஆத்ம சொரூபமே அத்யாத்மம் என்று பொருள். சாதாரணமாக மக்கள் அவரது இயல்பு அவரது தன்மை என்கிறோம். அது தவறு என்பது இச்சுலோகத்தின் மூலம் தெரிய வருகிறது. ஜீவனின் உண்மை இயல்பு அத்யாத்மம், அதாவது தான் தேகமென்றும், மனம் என்றும், உலகப் பொருள் களை என்னும் வரை எவருக்கும் அமைதியோ, இன்பமோ இருப்ப தில்லை. ஏனெனில் அவை அழியக்கூடியவை. அழிவற்ற பொருளி னிடத்தேதான் சுகம் இருக்கிறது. எனவே தன் இயல்பு, தன் சொரூ பம், ஆத்மாவேயன்றி அழியக்கூடிய பொருள்களால் ஆனதல்ல என்ற திடமான எண்ணத்துடன் இருத்தல் வேண்டும்.

இனி மூன்றாவது வினா - கர்மமென்றால் என்ன? இப்பூவுல கில் உள்ள உயிர்களின் உற்பத்திக்குக் காரணமான யக்ஞம் முதலா னவை கர்மா எனப்படுகிறது. ஏனெனில் யக்ஞத்தினால் மழை, மழையினால் செடி கொடிகள் அவற்றால் பிராணிகளின் உற்பத்தி நேர்கிறது.

இங்கு 'வியர்கஹ்' என்றால் விடுதல் அதாவது தியாகம். யக்ஞத் தில் ஹோம திரவியங்களை விடுவர். ஹோமத்தில் ஆஹுதிகளை விடுவர். எனவே 'விஸர்கஹ்' என்ற சொல்லிற்கு ஹோமம் முதலிய வற்றால் கடின யக்ஞாதி கிரியைகள் எனலாம். அல்லது 'விஸர்ஹ்' என்றால் தியாகம். தியாகத்துடன் கூடிய கிரியை என்றும் சொல்ல லாம். (தானத்தில் செல்வத்தை விட்டு விடுதல் முதலானவை). 'வி ஸர்கஹ கர்மஸமஞ்தி ஹ' என்று சொல்லப்பட்டதால், தியாகத்து டன் கூடிய கிரியையே உண்மையான கிரியையென்று தெரிகிறது. அதுவே உத்தமமான பிறவிக்கு, மோட்சத்திற்குக் காரணமாகிறது.

**வினா :** பிரம்மமென்றால் என்ன?

**விடை :** மிகவும் உத்தமமான அல்லது நிரதிசய வஸ்துவே பிரம்மம்.

**வினா :** அத்யாத்மம் என்றால் என்ன?

**விடை** : இயல்பு, தனிப்பட்ட ஆத்மபாவம், அத்யாத்மம் எனப்படும்.

**வினா** : கர்மம் என்றால் என்ன?

**விடை** : பிராணிகளின் (உயிர்களின்) உற்பத்திக்குக் காரணமான (யக்ஞம் முதலான) தியாகத்துடன் கூடிய கிரியைகள் கர்மம் எனப்படும்.

*அதிபூதம் க்ஷரோபாவஹ புருஷஸ்சாதி தைவதம்!*
*அதியக்ஞோ அஹமேவாத்ர தேஹே தேஹப்ருதாம் வர!!* (4)

## சொற்பொருள்

தேஹப்ருதாம்வர - உடல் எடுத்தவர்களுள் உயர்ந்தவனான அர்ஜுனா!, க்ஷரஹ் - அழியக்கூடிய, பாவஹ் - பொருள், அதிபூதம் - அதிபூதம் (எனப்படும்), புருஷ ஹ்ச - விராட் புருஷன், அல்லது ஹிரண்ய கர்ப்பன், அதிதைவம் - அதி தெய்வம் (எனப்படுவான்), அத்ரதேஹே - இத்தேகத்தில், அஹமேவ - நானே (பரமாத்மாவே), அதியக்ஞஹ் - அதியக்ஞன் (எனப்படுவான்).

## கருத்துரை

உடல் எடுத்தவர்களுள் உயர்ந்த அர்ஜுனா! அழியும் பொருள் அதிபூதம் எனப்படுகிறது. விராட்புருஷன் அல்லது ஹிரண்ய கர்ப்பன் அதிதெய்வம் எனப்படுகின்றான். இந்த தேகத்தில் நானே (பரமாத்மாவே) அதியக்ஞன் எனப்படுகிறேன்.

## விளக்கம்

'இத்தேசத்தில் அதியக்ஞன் நானே' என்று பகவான் சொல்வதால், எல்லா சரீரத்திலும் அதியக்ஞ ரூபமாக சாட்சாத் பராத்பரனே வசிக்கிறான் என்பது தெளிவாகிறது. இறைவன் எங்கோ தொலைதூரத்தில் இருக்கிறான் என்றும், வானத்திலோ அல்லது பாதாளத்திலோ இருக்கிறார் என்றோ எண்ணுவது மடத்தனம். அவன் தேகத்தினுள் நமக்கு மிகவும் அருகில் இருக்கிறார். எனவே ஆத்ம பரிசோதனை செய்து கொண்டு, பஞ்சகோசங்களையும் வேறாக்கி, அவனை அறிந்து கொண்டு பேரமைதியைப் பெறுதல் வேண்டும். இறைவனின் அருகாமையை உணர்ந்து பாவகாரியங்களை ஒருநாளும் செய்தல் கூடாது. எல்லா தேகத்திலும் அதியக்ஞனனாக பகவானே இருப்பதால் மக்களில் உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற எண்ணம் கொள்ளாது

எல்லா உயிர்களிடத்தும் சமத்வ எண்ணத்துடன், கீழான எண்ணங் கள் தோன்றாத வண்ணம் ஆத்ம காம்பீரியத்துடன் நடந்து கொள்ளு தல் வேண்டும்.

'தேஹப்ரு தாம்வர' - (தேகம் எடுத்தவர்களுள் (உயர்ந்தவன்) என்ற பதத்தின் வாயிலாக மனிதன் சரீரத்தை அவ்வப்போது தரிப்ப வனேயன்றி உண்மையில் அவன் சரீரமல்ல என்பது இங்குப் புலப்ப டுகின்றது.

**வினா :** அதிபூதம் என்றால் என்ன?

**விடை :** அழியக்கூடிய பொருள் (எல்லாக் காட்சிப் பொருள்களின் கூட்டமே) அதிபூதம் எனப்படும்.

**வினா :** அதிதெய்வம் என்றால் என்ன?

**விடை :** விராட் புருஷன் அல்லது ஹிரண்ய கர்ப்பன் அதிதெய்வம் எனப்படுகிறான்.

**வினா :** அதியக்ஞன் யார்?

**விடை :** இந்த தேகத்தில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவே (சாட்சாத் இறைவனே) அதியக்ஞன்.

**முன்னுரை**

இவ்வாறாக அர்ஜுனனின் முதல் ஆறு கேள்விகளுக்குச் சுருக்க மாக விடையளித்து இனிக் கடைசி கேள்வியான அந்திமகால பகவத் சிந்தனை குறித்து விரிவாகத் தெரிவிக்கத் தொடங்குகிறார்.

*அந்தகாலே ச மாமேவ ஸ்மரன் முக்த்வா கலேவரம்!*
*யஹ் ப்ரயாதி ஸ மத்பாவம் யாதி நாஸ்தி யத்ர ஸம்சயஹ!!* (5)

**சொற்பொருள்**

யஹ் - எவன், அந்த காலேச - மரண காலத்திலும் கூட, மாம்ஏவ -என்னையே ஸ்மரன் - நினைத்த வண்ணம், கலேபரம் - சரீரத்தினை, முக்த்வா - விடுத்து, ப்ரயாதி - போகிறானோ, ஸஹ் - அவன், மத்பாவம் - என் சொரூபத்தினை, யாதி - அடைகிறான், அத்ர - இவ்விஷயத்தில், ஸம்சயஹ் - சந்தேகமே, நாஸ்தி - இல்லை.

### கருத்துரை

எவர் மரண காலத்திலும் என்னையே நினைத்த வண்ணம் சரீரத்தை விடுத்துப் போகிறார்களோ, அவர் என் சொரூபத்தினை அடைகிறார்கள். அதில் ஐயமேதுமில்லை.

### விளக்கம்

இனிக் கடைசியான ஏழாவது வினாவிற்குப் பகவான் இங்குப் பதிலுரைக்கிறார். அந்திம காலத்தில் நியமித்த எண்ணத்துடன் இருப்பவர் பரமாத்மாவை எங்ஙனம் அறிந்து கொள்ளும் விதத்தை இங்கு விவரிக்கிறார்.

'அந்தகாலேச' - மரணத்திலும் கூட எவனொருவன் பரமாத்மாவையே நினைத்த வண்ணம் சரீரத்தை விட்டுச் செல்கிறானோ, அவன் தவறாது அந்த பரமாத்ம சொரூபத்தினையே அடைகிறான் என்று சொல்லப்பட்டது. இங்கு ''ச'' என்னும் பதம் நன்கு கவனிக்கத் தந்தது, சமஸ்கிருதத்தில் 'ச' என்றால் 'கூட' என்னும் பொருள். அந்திமகாலத்தில் கூட என்னையே நினைப்பவன் முக்தியை அடைவான் என்று ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சொல்வதால், வாழ்நாளின் எல்லா நாளிலும், மரண காலத்திலும் கூட தெய்வ சிந்தனை செய்ய வேண்டும் என்பது தெளிவாகிறது. அவ்வாறில்லையாயின், 'கூட' என்ற பதத்திற்கு பொருளே இல்லை. பகவான், 'அந்த காலே ஏவ' (அந்திம காலத்திலேயே என்று சொல்லவில்லை. அவ்வாறு கூறியிருப்பின் சோம்பித்திரிபவர்க்கு நல்ல சந்தர்ப்பம் கிடைத்திருக்கும். ஆயின் மனிதர்களைச் சோம்பேறிகளாகத் தயார் செய்தல் பகவானின் அபிப்ராயம் இல்லை. 'தஸ்மார் ஸர்வேஷு காலேஷு மாமனுஸ்மர' (எனவே எப்போதும் என்னை நினையுங்கள்) என்று முதலில் சொன்னதையே இந்த சுலோகத்தில் இன்னும் தெளிவாக எடுத்துக் கூறியுள்ளார்.

வாழ்நாள் முழுவதும் தெய்வ சிந்தனையுடன் இருப்பவர்க்கே இறுதி காலத்தில் தெய்வ நினைப்பு உண்டாகும். முற்பிறப்பின் புண்யத்தின் பலனால் ஏதோ ஒரு சில புண்யவான்களைத் தவிர ஏனையோரில் எவருக்கும் மரண காலத்தில் திடீரென்று தெய்வ சிந்தனை ஏற்படாது. அதற்கு நல்ல பயிற்சி (Preparation) இருத்தல் வேண்டும். ஒரு நாடகம் நடத்த வேண்டுமாயினும், அதிலுள்ள பாத்திரங்களின் குணநலன்களை, நடிப்பைக் குறித்துப் பல மாதங்கள் நன்கு ஆலோசித்துப் பயிற்சி செய்தல் வேண்டும். ஒரு மாண

வன் தேர்வில் தேற வேண்டுமாயின் வருடம் முழுவதும் நன்கு கற்றல் வேண்டும். தேர்வு நாளில் புத்தகத்தைத் திறந்தால் ஒரு பல னும் இராது. அவ்வாறே மரண காலத்திற்குப் பல காலம் முன்பே மனிதன் தன் சித்தத்தினை நன்கு பகவத்மயமாக ஆக்கிக் கொண்டு, பயன்படுத்தி வைத்துக் கொள்ள வேண்டும். அப்போதே இறுதிக் காலத்தில் தெய்வ நினைப்பு எளிதில் வரும். மேலும் பகலில் நாம் என்ன எண்ணம் கொண்டிருக்கிறோமோ, அதுவே இரவில் கனவி லும் பிரதிபலிக்கும். அவ்வாறே வாழ்நாள் முழுவதும் எத்தகைய எண்ணம், சிந்தனை கொண்டிருக்கிறோமோ அவையே இறுதிக் காலத்திலும் நினைவிற்கு வரும். எனவே அந்திம காலத்தில் இறைநி னைவு வருவதற்கு உதவியாக வாழ்நாள் முழுவதும் இறை சிந் தனை, தியானம், விசாரணை இவற்றை நன்கு ஆற்றுதல் வேண்டும். மனம் உத்தமமான தெய்வப் பண்பாட்டுடன் திகழ்தல் வேண்டும். மரண காலத்தில் தேகம் கபம், வாதம், பித்தம் இவற்றால் அவதியு றும் அல்லது நினைவு தவறிப் போய்விடும். எனவே அச்சமயத்தில் இறை சிந்தனை ஆரம்பிப்பது மிகவும் கடினமாயிருக்கும். ஒவ் வொரு சமயம் அது சாத்தியம்கூட இல்லை. எனவே அந்திம கால பண்பாட்டிற்காக வாழ்நாள் முழுவதும் சித்தத்தினை இறைமயமாக ஆக்கிக் கொள்ளுதல் வேண்டும்.

'அந்தகாலேச' என்று சொல்வதில் இன்னுமொரு இரகசியம் கூட அடங்கியுள்ளது. மாயை மிகவும் பலம் பொருந்தியது. அது ஜீவனை மோசம் செய்வதற்கு எப்போதும் காத்துக் கொண்டிருக்கும். எனவே முமுக்ஷு தெய்வ விஷயங்களில் கடைசி மூச்சு உள்ளவரை மிகவும் எச்சரிக்கையாக இருத்தல் வேண்டும். எனவேதான், கீதாச் சார்யன், 'அந்திம காலத்தில் கூட என்னை நினைப்பதை விட்டுவி டக் கூடாது, என்றும், அவ்வாறு நினைப்பவர் முக்தி அடைவர்! என்றும் சொல்கிறார்.

ஏதேனும் சிறிது தெய்வ நினைப்பு இல்லாதிருப்பினும், அத னையே மாயை பெரும் ஊற்றாகக் கருதி, அதனை இன்னும் விரிவுப டுத்தி, ஜீவனை சம்சாரக் கடலில் தள்ளிவிடும். படகினால் பெரிய கடலை கஷ்டப்பட்டு தாண்டிக் கரைக்கு பத்து கஜ தூரம் இருக்கை யில் எச்சரிக்கையின்றி இருப்பினும் எவ்வாறு நாம் விழுந்து, முழுகி விடுவோமோ, ஏணியில் ஏறி இனி ஒரு படியே மீதம் இருக்கையில் எச்சரிக்கையைத் தவறவிட்டால் எவ்வாறு கீழே விழுந்து விடு வோமோ, அவ்வாறே வாழ்நாள் முழுவதும் தெய்வத்தை குறித்து முயற்சி செய்து, இறுதி நாட்களில் அதனை விட்டு விட்டால் மாயை

உள் நுழைந்து மோகத்தை ஏற்படுத்தும். எனவே இங்கு எச்சரிக்கை செய்யப்பட்டது. இச்சந்தர்ப்பத்தில் ஸ்ரீ வசிஷ்ட மகரிஷி ஸ்ரீ ராமசந்திரனுக்குச் சொன்ன இதபோதனை நினைக்கத்தக்கது.

*'தவ நாவஹிதம் சித்தம் காமஹகவல யிஷ்யதி*
*பாவ தாநஸ்ய சித்தஸ்ய பிசாசஹ கிம் கரிஷ்யதி' - (யோக வாசிஷ்டம்)*

ஸ்ரீ ராமசந்திரா! அஜாக்கிரதையாக இருந்தால் உன் சித்தத்தினை காமம் விழுங்கி விடும். எச்சரிக்கையாக இருப்பவர்களின் சித்தத்தினை (காமம் எனும்) பிசாசும் என்ன செய்ய முடியும்?

'மாமேவ' - (என்னையே நினை) 'ஏவ' என்னும் சொல்லைப் பயன்படுத்தியதால் இறைவனைத் தவிர வேறெதனையும் சிந்தித்தல் கூடாது என்று தெரிவிக்கப்பட்டது. ஏனெனில் அவ்வாறு காட்சிப் பொருள்களைப் பற்றிய சிந்தனை இருப்பின் சித்தத்தில் தடையேற்பட்டு, தெய்வதியானம் சரியாக செய்ய முடியாது. தேய வஸ்துவான இறைவனின் மீது மனம் நிலைபெறாது. மனம் ஒருமுனைப்பட்டு இருந்தால்தான் அதன் பலம் அதிகரிக்கும். எனவே இறைவனின் மீது மாத்திரமே சித்தத்தினை லயிக்கச் செய்திருத்தல் வேண்டும் எனப் போதிக்கப்பட்டது.

இனி அவ்வாறாக அந்திம காலத்தில் கூட இறை நினைப்புடன் இருப்பவனுக்குக் கிடைக்கும் பலன் என்ன? 'மத்பாவம்யாரி' - என் சொரூபத்தையே அடைகிறான். காரியத்தைச் செய்வதற்கு முன் அதன் பலன் தெரிந்திருந்தால் அதன்மீது சிறந்த ஈடுபாடு ஏற்படும். தெய்வஸ்மரணையின் பலன், தெய்வ சாட்சாத் காரமே, தன் சொரூபத்தை ஆத்மாவாக உணர்த்துவது மோட்சமேயாகும். எனவே அவ்வாறு அந்திம காலத்தில் கூட எப்போதும் இறை நினைப்பு, சிந்தனை செய்பவன் கோரமான சம்சார துக்கத்தினின்றும் விடுபட்டு, மறுபிறப்பு என்பது இன்றி, நிலையான பிரம்ம பதவியை அடைவான் எனப்பட்டது. இதுவேயன்றி இவ்விஷயத்தில் எவருக்கும் ஐயம் எழக் கூடுமென்று கருதி, 'நாஸ்யன்திர ஸம்சயஹ்' - 'இதில் எவ்விதத்திலும் ஐயமென்பதே இல்லை. கண்டிப்பாக அவர்கள் பிரம்ம பதவியை பரமாத்மா கருணையுடன் உபதேசித்துள்ளார். கருணாமூர்த்தியான பகவான் பக்தர்களின் மீது அபார கருணையை இவ்வாறு பொழிந்து மக்களுக்குத் தன் வாக்கியத்தில் நம்பிக்கை ஏற்படுத்துகிறார். எனவே முமுக்ஷுக்கள் தயங்காது சின்ன பலன்களேயன்றி சாட்சாத் மோட்சமே பலனாக அளிக்கவல்ல, நிரதிசய ஆனந்தமே அளிக்கக்கூடியதுமான இந்த உத்தமமான தெய்வ

நினைப்புடன் எப்போதும் சிரத்தையுடன் இருந்து ஆன்மீக அரங்கில் முன்னேறுதல் வேண்டும்.

**வினா :** ஜீவன் அந்திம காலத்தில் கூட எத்தகைய எண்ணம் கொண்டிருத்தல் வேண்டும்?

**விடை :** இறைவனையே நினைத்த வண்ணம் இதர எண்ணங்கள் இல்லாதிருக்க வேண்டும்.

**வினா :** எனவே ஜீவர்கள் எவ்வாறிருத்தல் வேண்டும்?

**விடை :** வாழ்நாள் முழுவதும் இறுதிக் காலத்திலும் கூட தெய்வ சிந்தனையிலேயே கழித்தல் வேண்டும்.

*யம்யம் வாபி ஸ்மரன்பாவம் த்யஜத் யந்தே கலேவரம்*
*தம்தமே வைதி கௌந்தேய ஸதா தத்பாவ பாவித!!* (6)

**சொற்பொருள்**

கௌந்தேய - ஓ அர்ஜுனா! (யஹ் - எவன்) அன்தே - மரண காலத்தில், யம்யம் வாபிபாவம் - எந்தெந்த எண்ணங்களை (அல்லது உருவங்களை) ஸ்மரன் - நினைக்கிறார்களோ, கலேபரம் - சரீரத்தை, த்யஜதி - விட்டுச் செல்கிறானோ, (ஸஹ் - அவன்) சதா - எப்போதும், தத்பாவ பாவிதஹ் (ஸன்) - அவ்வெண்ணத்தின் நினைப்பினால் ஏற்பட்ட பண்பினையுடையவனாய், தம்தம் ஏவ (பாவம்) - அவ்வவ்வுருவத்துடன் ஏதி - அடைகிறார்கள்.

**கருத்துரை**

அர்ஜுனா! மரண காலத்தில் எப்பொருளை, (அல்லது உருவத்தை) எண்ணிக் கொண்டு ஒருவன் தேகத்தை விடுக்கிறானோ, அப்பாவத்தின் நினைப்பிற்குத் தொடர்புடைய பண்பாட்டுடன் இருப்பதால் அந்த உருவத்தினையே அடைகிறான்.

**விளக்கம்**

மனிதன் எப்போதும் எதனைக் குறித்து எண்ணுகிறானோ அதனைக் குறித்த பண்பாடே அவனுக்கு ஏற்படும். எனவே மரண காலத்தில் சித்தத்தில் எந்த எண்ணத்தைக் கொண்டுள்ளானோ அதற்கு ஏற்ப பிறவியை (சரீரத்தையே) அவன் அடைகிறான் என்று சொல்லப்பட்டது. ஜடபரதன் இறுதிக் காலத்தில் ஒரு மானைக் குறித்து நினைத்த

வண்ணம் இறந்ததால் மறுபிறவியில் மானாகவே பிறந்தான் என்று பாகவதத்தில் சொல்லப்பட்டுள்ளது. 'யத்பாவம் தத்பவதி' எத்தகைய எண்ணம் கொண்டுள்ளானோ அத்தகைய உருவினையே அடைவான். ஆயின் அந்த அந்திம கால பண்பாடு வாழ்நாளின் நிரந்தர முயற்சியின் மீது ஆதாரமாயுள்ளது. (ஸதா தத்பவா பாவிதஹ்) வாழ்நாள் முழுவதும் எதனைப் பற்றிச் சிந்திக்கிறோமோ இறுதிக் காலத்திலும் அதே சிந்தனை மனதில் தோன்றும். மரண காலத்திலும் அதுவே முன்னணியில் நிற்கும். அதனால் மரணத்திற்குப் பின் வரும் பிறப்பானது அந்த எண்ணத்தின் ஸ்தூல அமைப்பையே அடைகிறான். எனவே வாழ்நாள் முழுவதும் கணநேர காட்சிப் பொருள்களில் விசாரணையில் செலுத்தாது, பரமாத்ம சிந்தனை செய்து கொண்டிருந்தால் அத்தகைய தெய்வ நினைப்பு மனத்தில் நன்கு வேரூன்றி அந்திம காலத்திலும் தெய்வ நினைப்பே அவனுக்கு ஏற்படும். அதன் பலனாக அவன் இறை ஐக்கியத்தை, ஆத்ம ஸாயுஜ்ய ரூபமான மோட்சத்தினை அடையப் பெறுவான், (ஸயாதி பரமாம்கதிம்). எனவே அந்திம கால நினைவினை, பண்பாட்டினை உருவாக்குவதற்கு வாழ்நாள் முழுவதும் அதன் தொடர்பான பயிற்சிகள் செய்து வர வேண்டும். உலகில் உள்ள அனைத்திலும் உயர்ந்த பதவி, துக்கமற்ற நிரதிசய ஆனந்த பதவி, ஆத்ம சாட்சாத்காரமே (சாயுஜ்யமே), எனவே அத்தெய்வ சிந்தனை மனதில் நிலை பெறுவதற்கு பகவத் சிந்தனை, நினைப்பு, விசாரணை, தியானம் இவற்றை எப்போதும் செய்து வர வேண்டும். தெய்வ நினைப்பு ஒரு கணத்தில் வருவதல்ல. இடைவிடாத முயற்சி தேவை. வாழ்நாள் முழுவதும் சதா போக விஷயங்களில் கடத்தி வந்தால் அந்திம காலத்தில் தெய்வ நினைப்பு, எவ்வாறு ஏற்படும்? எனவே அப்போது வருந்திப் பயனில்லை.

இக்காரணத்தினால் சிறு வயது, இளமைக் காலத்திலிருந்தே சரீரம் ஆரோக்கியமாக இருக்கும் போதே, வயோதிகம் வரும் முன்பே, ஜீவன் ஆன்மீக சாதனையில் நன்கு தேறியிருத்தல் வேண்டும். மேன்மையான தெய்வப் பண்பாட்டுடன் திகழ்தல் வேண்டும். பந்தத்திற்கும், மோட்சத்திற்கும் தானே காரணம். மேலான பிறவியோ, கீழான பிறவியோ, பிறவியற்ற நிலையோ, நம் கையிலேயே இருக்கின்றது. அவையனைத்தும் ஜீவனின் அந்திம காலத்தில் ஏற்படும் எண்ணத்தின் மீது, பண்பாட்டின் மீது ஆதாரமாய் உள்ளதாகையால் அப்பண்பாடு இளமையிலே செய்து வந்த பயிற்சிகளின் மீது ஆதாரமாய் உள்ளது. எனவே ஜீவன் முதலிலிருந்தே மிகவும் எச்சரிக்கையாகத் தன் சிந்தனையைத் தெய்வமயமாக்கிக்

கொள்ள வேண்டும். 'தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு' என்னும் அடுத்து வரும் சுலோகத்தில் இவ்விஷயத்தையே பகவான் இன்னும் விவரமாகப் போதிக்கிறார். ஆயின் வாழ்நாள் முழுவதும் நற்பண் போடு, இருந்தும், அந்திம காலத்தில் ஒருவேளை கபம், வாதம், பித்தம் இவற்றால் எவருக்கேனும் தடை ஏற்படினும், அவனது நற்க திக்கு எதுவும் தடை நேராது என்று நாம் ஊகித்துக் கொள்ளுதல் வேண்டும்.

**வினா :** ஜீவன் மரணத்திற்குப் பின் எவ்வுருவை அடைகிறான்?

**விடை :** மரண காலத்தில் எந்த எண்ணத்தைக் கொண்டுள்ளானோ, அல்லது எந்த உருவைக் குறித்து எண்ணுகின்றானோ, அந்த ரூபத் தையே அடைவான்.

**வினா :** அந்திம காலத்தில் தெய்வப் பண்பாடு எவ்வாறு ஏற்படும்.

**விடை :** வாழ்நாள் முழுவதும் தெய்வ நினைப்பு, சிந்தனை, தியா னம் முதலானவற்றைச் செய்வதனால், (ஸதாததா யவபாவிதஹ).

முன்னுரை

அந்திம கால தெய்வப் பண்பாட்டிற்காக இளமையிலேயே தெய்வ நினைப்பினைக் கொள்ள வேண்டுமென்கிறார்.

*தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு மாமனுஸ்மர யுத்யச!*
*மய்யர்பித மனோபுத்திர் மாமே வைஷ்யஸ்ய ஸம்சயஹ!!* (7)

சொற்பொருள்

தஸ்மாத் - ஆகையினால், ஸர்வேஷு காலேஷு - எல்லாக் காலத்திலும் (எப்போதும்), மாம் - என்னையே, அனு ஸ்மர - நினைக்க, யுத்யச - யுத்தம் கூட (உன் தர்மத்தை) செய்யலாம், மய - என்னிடத்தே, அர்ப்பித - சமர்பிக்கப்பட்ட, மனோபுத்திகள் - மனம், புத்தியுடையவனாய், மாம்ஏவ - என்னையே, ஏஷ்யஸி - அடைவாய், அஸம்சயஹ் - (இவ்விஷயத்தில்) ஐயமே இல்லை.

கருத்துரை

**எனவே எல்லாக் காலத்திலும், என்னை நினைத்த வண்ணம் (உன் சுயதர்மமான) யுத்தத்தினைக் கூட செய்யலாம். இவ்வாறு என்னிடத்தே நிலைபெற்ற மனம் புத்தியுடையவனாய், இருந்தால்**

நீ என்னையே அடைவாய் இதில் ஐயமில்லை.

**விளக்கம்**

5-ஆவது சுலோகத்தில் அந்திமகாலத்தில் கூட (அந்த்காலேச) பகவத் சிந்தனை செய்வோர்க்கு பரமாத்மா பதவி கிட்டும் என்று தான் சொன்ன வாக்கியத்தை 'அந்திம காலத்தில் மட்டும் தெய்வ சிந்தனை செய்தால் போதும்' எனத் தவறாகப் பொருள் கொண்டு வாழ்நாள் முழுவதும் சோம்பேறிகளாகயிருந்து, விஷயங்களில் மீதான சிந்தனையுடன் காலம் கடத்தி, தெய்வ தியானத்திற்காக, வயோதிக வயதிற்கோ, அல்லது மரண காலம் வரைக்கோ தள்ளிப் போட்டு விடுவர் என்று கருதி அத்தகையவர்க்கு தகுந்த பாடம் கற்பிக்க எண்ணியோ என்னவோ, மேலும் அவர்களை தீவிரமாக எச்சரிப்பதற்காகவோ என்னவோ பகவான் இச்சுலோகத்தில் மறுபடியும் அதனையே கூறுகிறார். 'அந்த காலேஷு' என முன் சுலோகத்தில் கூறிய வாக்கியத்திற்கு 'தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு' என்ற இச்சுலோகத்தின் வாக்கியம் பொருள் விளக்கத்தை உள்ளது, அதனால் எல்லாக் காலத்திலும் என்னை நினையுங்கள்! 'தஸ்மாத்' என்னும் பதத்தினை உபயோகிப்பதால் நிரந்தர தெய்வ சிந்தனையால் தான் மேற் சொன்ன அந்திம காலத்தில் இறை நினைப்பு எனும் பாக்கியம் கைகூடும் என்பது தெளிவாகிறது. இதனால், வயோதிகமே, மரண காலமே பகவத் நினைப்பிற்குக் காலமல்ல என்றும் பால்ய, யௌவன பருவத்தில் கூட தெய்வ சிந்தனை செய்ய இயலும் என்பதும் அர்த்தமாகிறது.

ஒளி குறைந்து போனால் உடனேயே இருள் சூழ்ந்து விடுவதைப் போல, பகவத் சிந்தனையை மறந்து விட்டால் மாயை அக்கணமே வந்து உள் புகுவதற்குத் தகுந்த அவகாசம் கிடைத்து விடும். எனவே மஹோற்சவத்தில் அகண்டதீபம் ஏற்றுவதைப் போல இதயக் குகையில் தெய்வ நினைப்பினை தினந்தோறும் ஏற்றி வைத்தல் வேண்டும்.

'ஸமரன்' என்று மட்டும் சொல்லாது 'அனுஸ்மரன்' என்பதால் பரமாத்மாவை ஒவ்வொரு சமயமும் துதித்த வண்ணமே இருத்தல் வேண்டும் என்பது தெரிகிறது. சிரவணம், மனனம் போன்ற பயிற்சிகளை விட்டு விடாது அனுசரித்தல் வேண்டும். ஏதேனும் ஒரு எண்ணம் மனத்தில் வேரூன்ற வேண்டுமாயினும், நினைப்பு மட்டும் போதாது. அனுஸ்மரணை (இடைவிடாது ஸ்மரித்தல்) செய்தல் வேண்டும். முதலில் 'டிக்கட்' (Ticket) வாங்கிப் பயணத்திற்குத் தயா

ராக இருப்பவனுக்கு, இரயில் எப்போது வந்தாலும், திகிலடைவ தில்லை. அதுபோல வாழ்நாள் முழுவதும் இறை சிந்தனை உடைய வனுக்கு சித்தம் இறைமயமாக, தெய்வ பண்புடன் கூடி முழுமை யாக இருப்பதனால், அவனுக்கு மரணம் எப்போது நேரிட்டாலும் மகிழ்ச்சியாகவே இருக்கும்.

ஆயின் சிலர் இங்ஙனம் கேட்பர், 'அய்யா!' எப்போதும் தெய்வ சிந்தனை இருக்க வேண்டும் என்கிறாரே, அவ்வாறு செய்து கொண் டிருந்தால் எமது வாழ்க்கை சரியைகளை எவ்வாறு ஆற்றுவது? குடும்பத்தைக் காப்பாற்றுவது எங்ஙனம்?! - அத்தகையோருக்குத் தகுந்த விடை இச்சுலோகத்தில் கொடுக்கப்பட்டுள்ளது. 'மா மனுஸ் மர யுத்யச' - 'என்னை நினைத்த வண்ணம் யுத்தம் கூட செய்யலாம்' - இதுவே அந்தப் பதில். அர்ஜுனன் க்ஷத்திரியன் ஆதலால் அவனது சுயதர்மமான யுத்தத்தைப் பற்றி எடுத்துரைக்கப்பட்டது. ஏனை யோர் அவரவர் வர்ணத்திற்கு தக்க தொழில்களைச் செய்து கொண்டு பரமாத்மாவை எண்ணியிருத்தல் வேண்டுமென்பது இங்குச் சொல் லப்பட்டதன் பொருள். மக்கள் அவரவர் தினசரி காரியங்களை - புரோஹிதம், வியாபாரம், விவசாயம், சேவை முதலான தொழில்க ளைத் தடையின்றிச் செய்து கொண்டு இறை தியானம், நினைப்ப தினை விட்டு விடாது இருத்தல் வேண்டும். அர்ஜுனன் ஸ்ரீ கிருஷ் ணர் முன்னால் நின்று, அவரையே பார்த்த வண்ணம், நினைத்த வண்ணம் யுத்தம் என்னும் பயங்கரமான காரியத்தையே செய்ய இயலும் போது, ஏனையோர் இறை நினைப்புடன் அவரவர் தொழிலை, சம்சாரக் காரியங்களை நிர்வகித்தல் ஏன் இயலாது? தவறாது செய்தல் இயலும், அவ்வாறு செய்தல் வேண்டுமென்பதே இறைவனது எண்ணமும்கூட.

'மய்யர்பித மனோயுத்திஹ்' - மனிதனின் மனம், புத்தி எப் போது இறைவனிடத்தே சமர்பிக்கப்படுகின்றதோ, அப்போது அவன் பகவத் சாயுஷ்யத்தை தவறாது அடைய முடியும் என்று இங் குச் சொல்லப்பட்டது. இங்கு மனத்துடன் கூட புத்தியையும் சேர்ப்ப தில் ஒரு விசேஷம் உள்ளது. மனது எண்ணுகிறது. புத்தி நிச்சயிக்கின் றது. மனம் எண்ணியதை புத்தி நிச்சயிக்காவிடில் நிரூபிக்காவிடில் அப்பொருளில் மனம் சலனமின்றி நிலைக்காது. எனவே மனத்து டன் புத்தியையும் சேர்த்து பரமாத்மாவிடம் நிலைக்க வேண்டும்.

'அஸம்ஸயஹ' - அவ்வாறு செய்யின், சந்தேகத்திற்கிடமின்றி தெய்வ சாட்சாத்காரம் கிட்டும் என்று வலியுறுத்திச் சொல்லப்பட்டது. இரண்டு சுலோகங்களுக்கு முன்பே (5 ஆவது) 'நாஸ்யன்த்ர ஸம்சயஹ' - என்று சொல்லப்பட்டதால், அவ்வாக்கியம் நிலையான உண்மையென்றும், அதன்மீது நம்பிக்கை வைத்து அதில் சொல்லிய வண்ணம் தவறாது அனுஷ்டித்தல் வேண்டுமென்பதும் போதிக்கப்பட்டதாயிற்று. ஜீவன் தான் செய்ய வேண்டியதைச் செய்தால், ஈசுவரன் தான் கொடுக்க வேண்டியதைத் தவறாது கொடுப்பான். ஜீவன் தன் மனம், புத்திகளை நிரந்தரம் தெய்வத்திற்கு அர்ப்பித்தால், பிரம்மஸாயுஜ்யம் தானாகவே வந்து சேரும். எனவே மக்கள் தம் மனம் புத்திகளை காட்சிப் பொருள்களின் விஷயங்களினின்றும் மாற்றித் தெய்வத்திடம் நிலைநிறுத்தல் வேண்டும். அப்போதே தாம் விரும்பும் பரமானந்தமெனும் இலட்சியத்தை அடைய முடியும்.

**வினா :** இறைவனை எப்போது நினைத்தல் வேண்டும்?

**விடை :** எப்போதும் இடைவிடாது நினைத்தல் வேண்டும்.

**வினா :** அவ்வாறு எப்போதும் தெய்வ சிந்தனை செய்து வந்தால், தினசரி வாழ்க்கையை நிர்வகித்தல் எவ்வாறு நடக்கும்?

**விடை :** தெய்வ ஸ்மரணையுடன் அவரவர் நியமிக்கப்பட்ட தொழில்களை, காரியங்களை தர்மத்தினின்றும் மாறாது செய்து வரக் கூடும். (மாமரஸ்மர புத்யச)

**வினா :** இறைவனை அடைவதற்கான உபாயம் என்ன?

**விடை :** அவரவர் மனம், புத்தி இவற்றை இறைவனுக்கு அர்ப்பித்தலே (இடைவிடாத தெய்வ சிந்தனை செய்தலே) (மய்யர்ப்பித மனோ புத்திஹ)

**முன்னுரை**

பரமாத்மாவை அடைவதற்குப் பின்பற்ற வேண்டிய தியான முறையை விவரிக்கிறார்.

*அப்யாஸ யோகயுக்தேன சேதஸா நான்ய காமினா!*
*பரமம் புருஷம் திவ்யம் யாதி பார்த்தானு சிந்தயன்!! (8)*

### சொற்பொருள்

பார்த்த - ஓ அர்ஜுனா! அப்யாஸ யோகயுக்தேன - அப்பியாசம் என்னும் யோகத்தோடு கூடிய, ந அன்ய காமினா - வேறு விஷயங்களில் செல்லாத, சேதஸா - மனத்தினால், திவ்யம் - தேஜோமயமான சுல்துயம் பிரகாசமான, புருஷம் - பரமபுருஷனை, அனுசிந்தயன் - சிந்தனை செய்பவனாக, (தம் ஏவ - அந்த பரபிரம்மத்தினையே), யாதி - அடைகிறான்.

### கருத்துரை

ஓ அர்ஜுனா! அப்யாசமெனும் யோகத்துடன் கூடியதும், ஏனைய விஷயங்களின் மீது செல்லாததுமான மனத்தினால், தேஜோமயமான (ஒளிவிட்டுப்பிரகாசிப்பனான) ஸர்வோத்தமனான பரம புருஷனை இடைவிடாது எண்ணி, மனிதன் அவனையே அடைகிறான்.

### விளக்கம்

எவ்வாறு பின்பற்றினால், மனிதன், ஆத்மசாட்சாத் காரம் அடைவானோ, அம்முறை இங்குச் சொல்லப்பட்டது. இந்த சுலோகத்தில் ஆத்மாவின் உருவான பரம புருஷனைச் சேர்வதற்கு மூன்று நல்லுபதேசம் கொடுக்கப்பட்டுள்ளது.

1. அப்யாச யோகத்தைச் செய்தல் வேண்டும்.
2. சித்தம் (பரமாத்மாவை விட்டு) ஏனைய விஷயங்களில் செல்லுதல் கூடாது.
3. ஆத்மாவைக் குறித்தே பலமுறை சிந்தித்தல் வேண்டும்.

(1) 'அப்யாச யோகம்' - கீதையில் பகவான் மோக்ஷத்தை அடைவதற்கு கர்மா, பக்தி, தியானம், ஞானம் முதலான பலவிதமான யோகங்களைக் குறித்துச் சொல்லியிருக்கிறார். இப்போது இச்சுலோகத்தில் வேறொரு விசித்திரமான யோகத்தைக் குறிப்பிடுகிறார். அதுவே அப்யாச யோகம். இது தனிப்பட்ட யோகமல்லவாயினும் எல்லா யோகங்களுடன் இணைந்துள்ளது. அப்யாசத்திற்கு ஒரு யோகத்தின் உயர்ந்த நிலை (Status) யைக் கொடுத்து பகவான் இதனை

வெகுவாக கௌரவித்துள்ளார்.

எனவே முமுக்ஷுக்களுக்கு அது எத்தனை முதன்மையானது என்பது இதனால் தெரிகின்றது. எந்த யோகமாயினும் அப்யாசம் இல்லாவிடில் பலன் எவ்வாறு கிட்டும்? எனவே எல்லா யோகங்க ளுக்கும் அப்யாசம் மிக அவசியம். கீதையின் 6-ஆவது அத்தியாயத் தில் மனக் கட்டுப்பாட்டிற்கு அப்யாசம், வைராக்கியம் இவை மிக வும் தேவை என்று பகவான் இதற்கு முன்பே கூறியுள்ளார் (அப்யா சேனது கௌந்தேய வைராக்யேண சக்ருஹ்யதே' - 6-35) 'அப்யா வைராக்யாய்யாம் தன்னி ரோதஹ் என்று பதஞ்சலி மகரிஷியும் இத னையே கூறுகிறார். இவ்வாறாக ஆன்மீக அரங்கில் அப்யாசம் முக் கிய ஸ்தானம் வகிக்கிறது. லௌகீக அரங்கில் அப்யாசத்தின் அவசி யத்தைப் பற்றி அனைவரும் அறிந்ததே. துர்வாசனைகள், கெட்ட எண்ணங்கள், அப்யாசத்தினால் எங்ஙனம் வேரறுக்கப்படுகிறதோ, அவ்வாறே சத்வாசனைகள், நல்ல எண்ணங்கள், தெய்வ விசாரணை இவை அப்யாசத்தில் ஸ்திரத்தன்மை பெறுகின்றன. அழுக்கு போவ தற்கு சோப்பு, சீயக்காய், கடலை மாவு முதலான பல பொருள்கள் இருக்கின்றன. தண்ணீருடன் அவை கலந்தால்தான் அவை அழுக்கை நீக்க முடியும். அதைப் போன்று, எந்த யோகமாயினும் அப்யாச யோகத்தில் கலந்திருந்தால்தான் பலன் கிட்டும்.

''சேதஸா நான்யகாமினா' - இனி இரண்டாவது விஷயம் சித்தத் தினை ஏனையவற்றில் செலுத்தாமல் இருத்தல்.

சித்தம் காட்சிப் பொருள்களின் மீது செலுத்தாமல் தேய வஸ்து வான பரமாத்மாவினிடத்திலேயே நிலையாக இருத்தல் வேண்டும். திரிகிவஸ்துவான ஆத்மாவிற்கு மாறாகத் தோன்றுவன அனைத்தும் நசித்துப் போவதே என்று நிச்சயமான எண்ணம் கொண்டு அதனின் றும் மனத்தை விவேகத்தினால் திருப்பி, ஆன்மாவிலேயே நிலைநி றுத்துதல் வேண்டும். சித்தம் செயலின்றி இருத்தல் இயலாது.

ஆகையால் அது சிந்திப்பதற்கு ஏதேனும் ஒரு பொருளை அளித் தல் வேண்டும். எனவே உலக விஷயங்களின் மீது அதனைப் போக விடாமல் தடுத்து தெய்வத்தின் மீது செலுத்துதல் வேண்டும் என்று இங்குச் சொல்லப்பட்டது.

'அனுசிந்தயன்' - பரமபுருஷனான ஆத்மாவைக் குறித்தே பல முறை சிந்தித்தல் வேண்டுமென்று போதிக்கப்பட்டது. 'சின்தயன்' எனாது 'அனுசிந்தயன்' - என்றதால் மறுபடியும் மறுபடியும்

நினைத்த போதெல்லாம் தெய்வ சிந்தனைக்கு முயற்சித்தல் வேண்டுமெனப்பட்டது. இவ்வாறாகச் சாதனை செய்து வந்தால் மனிதன் தவறாது பரமாத்ம பதவியைச் சேர்வான் 'யாதி' என்னும் சொல்லினால் கீதாச்சார்யன் தெளிவாக நிரூபித்துள்ளார். எனவே முமுக்ஷுக்கள் பகவத் வாக்கியத்தில் முழு நம்பிக்கை வைத்து அவ்வச் சாதனைகளை நன்கு ஆற்றி வந்து கடைத் தேறுதல் வேண்டும்.

**வினா :** இறைவன் எத்தகையோன்?

**விடை :** தேஜோமயன், தானே ஒளிவிட்டுப் பிரகாசிப்பவன், ஸர்வோத்தமன்

**வினா :** அவனை அடைவதற்கான வழி என்ன?

**விடை :** சித்தத்தைக் காட்சி விஷயங்களில் செல்லவொட்டாது. (2) பரமாத்மாவை எப்போதும் சிந்தித்து - எப்போதும் இவ்வாறான பயிற்சியில் ஈடுபட்டிருத்தல் வேண்டும். இதுவே மோட்சத்திற்கான உபாயம்.

**வினா :** பகவத் அப்யாசம் செய்வோனின் சித்தம் எவ்வாறிருத்தல் வேண்டும்?

**விடை :** தேயமாக பரமாத்விடத்தில் தவிர வேறு எதிலும் அது செல்லுதல் கூடாது.

**முன்னுரை**

அத்தகைய தேய சொரூபமான பரமாத்மாவை வர்ணித்து, தியானமுறையையும், அதன் பலனையும் அடுத்து வரும் இரண்டு சுலோகங்களில் தெரிவிக்கிறார்.

*கவிம் புராண மனுசாஸிதார மணோரணீ யாம்ஸ மனுஸ்மரேத்யஹ!*
*ஸர்வஸ்ய தாதார மசிந்த்யரூப மாதித்யவர்ணம் தமஸஹ பரஸ்தாத்!!* (9)

*ப்ரயாண் காலே மனஸா அசலேன பக்த்யா யுக்தோ யோகபலேன சைவ!*
*ப்ருவோர்மத்யே ப்ராணமாவேச்ய ஸம்யக் ஸதம் பரம் புருஷமு பைதி திவ்யம்!!* (10)

**சொற்பொருள்**

யஹ் - எவன், பக்தியா - பக்தியுடன் யுக்தஹ் - கூடியவனாய், ப்ரயாணகாலே - அந்திம காலத்தில், யோக பலேவ - தியான அப்சாயத்தினால் உண்டான யோக பலத்தோடும், ப்ராணம் - பிராண

வாயுவை, புருவோஹ் - புருவங்களின் 'முழுவதுமாக, மத்யே, இடையில், ஸம்யக் - நன்கு ஆவேச்ய - வைத்து, ச - அதன்பின், கவிம் - முற்றும் உணர்ந்தவனை, புராணன் - தொல்லோனை, அனு ஸாஸிதாரம் - இவ்வுலகனைத்தையும் ஆள்பவனை, அணோஹ் அணுவைவிட அணியாம்சம் - மிக்க சூட்சுமமானவனும், ஸர்வஸ்ய - எல்லா உலகையும், தாதாரம் - தாங்குபவனும், (காத்து, நிற்பவன்), அசிந்த்ய ரூபம் - சிந்தனைக் கெட்டாத வடிவுடையோனும், ஆதித்ய வர்ணம் - கதிரவனைப் போன்று ஒளிர்பவனும் (சுயம்பிரகாஷ்), தமஸஹ் - அஞ்ஞானமெனும் இருளிற்கு, பரஸ்தாத் - அப்பாற்பட்ட வனும், (ஆன) புருஷம் - பரமாத்மாவை, அசலேன மனஸா - சலனமற்ற மனத்துடனும், அனுஸ்மரேத் - இடைவிடாது சிந்திக்கி றானோ, ஸஹ் - அவன், திவ்யம் - ஒளிமயமான, பரம் - ஸர்வோத்த மனான, தம்ஏவ - அப்பரமாத்மாவையே, உபைதி - அடைகிறான்.

### கருத்துரை

எவனொருவன் பக்தியுடன், மரண காலத்தில், யோக பலத்தி னால் (தியானப்யாசம் முதலான பண்பட்ட செயலின் பலத்தினால்) பிராணவாயுவை, புருவங்களின் இடையில் நன்கு நிலைநிறுத்தி அதன் பின் முற்றும் உணர்ந்தவனை, தொல்லோனை, அனைத்தை யும் ஆள்பவனை, அணுவிற்கும் நுண்மையானவனை, எல்லா உல கிற்கும் ஆதாரமானவனை (அளித்துக் காப்போனை), சிந்தனைக்கு எட்டாத வடிவுடையோனை, கதிரவனைப் போன்று ஒளிர்பவனை, அஞ்ஞான இருளுக்கு அப்பாற்பட்டவனை, சலனமற்ற புத்தியுடன் இடைவிடாது சிந்தனை செய்தால் அவன் அத்திவ்விய பரமபுரு ஷனை அடைகிறான்.

### விளக்கம்

பரமாத்மா எத்தகையவன் என்பதைத் தெரிவித்து அவனை எவ் வாறு தியானித்தல் வேண்டுமென்பதையும் சொல்கிறார். தியானிப் பவனுக்கு தேய வஸ்துவின் மீது முழுமையான நம்பிக்கை ஏற்பட வேண்டுமென்றால் முதலில் அவனின் வடிவம், மகிமை இவற்றை நன்கு அறிந்திருத்தல் வேண்டும். ஒரு பொருளின் வடிவம், தன் மையை அறிந்திருந்தால் மாத்திரமே அதனைக் குறித்துச் சிந்திப்ப தற்கு இயலுமல்லவா! எனவே இங்குக் கூட தியானமுறை விவரிப்ப தற்கு முன்பாக தேய வஸ்துவான பரமாத்மாவின் வடிவத்தை 'கவிம் புராணம்' என்னும் சுலோகத்தின் மூலம் எட்டு இலட்சணங்களால் விவரிக்கிறார்.

1. 'கவி' - பரமாத்மா 'கவிஞன்' - அதாவது முற்றும் உணர்ந்தவன் கவிஞர்களுக்கெல்லாம் கவிஞன். அந்தக் கவிஞனை உணர்வதே கவியின் திறமை.

2. 'புராண புருஷன்' - அவன் சநாதனன். பழமைக்கும் பழமையானவன். உலகில் உள்ள எல்லாவிதமான காட்சிப் பொருள்களுக்கும் முதல் என்பது உண்டு. பரமாத்விற்கு ஆதி என்பது இல்லை. முதல் என்பது இருப்பின் முடிவு என்பதும் உண்டு. எனவே காட்சிப் பொருள்களுக்கு அழிவுண்டு. பரமாத்மா நிலையானவன்.

3. 'ஆள்பவன்' - எல்லா ஜீவர்களையும், எல்லா உலகையும் ஆள்பவன், நியதியில் இயக்குபவன், அரசன். சிறிய அரசர்களையே மக்கள் போற்றும் போது, பிரம்மாண்டத்தையும் ஆள்பவனான பரமேசுவரனை எத்துணை பக்தியுடன் போற்றுதல் வேண்டும்.

4. 'சூட்சும வடிவுடையோன்' - அணுவினும் அணுவானவன், 'அணோரணீயான் மஹதோ மஹீயான்' - அணுவிலும் சிறியோன், மகிமை பொருந்திய எல்லாப் பொருள்களினும் மகிமை கொண்டவன் என்று பகவானைக் குறித்து உபநிஷத்துகள் கோஷிக்கின்றன. எனவே ஒவ்வொரு அணுவிலும் சூட்சுமமாக வியாபித்துள்ள அந்த பரமாத்மாவின் சந்நிதானத்தை எப்போதும் அனுபவித்த வண்ணம் பக்தியுடன் இருத்தல் வேண்டும்.

5. 'ஸர்வாதாரன்' - எல்லா உலகையும், படைத்துக் காத்து அளிப்பவன். அனைத்திற்கும் ஆதாரமானவன் 'காட்சிப் பொருள்கள், ஜடங்கள், சைதன்யத்தின் ஆதாரமின்றி அவை இராது' அந்த சைதன்ய ஆதாரமே பரமாத்மா.

6. 'அசிந்தயன்' - சிந்தைக் கெட்டாதவன் - இந்திரிய மனங்களுக்கு அப்பாற்பட்டவன். ஆயினும் தூய்மையான மனத்தினால், இடைவிடாத தியானத்தினால் கடலில் நதி கலப்பதைப் போல லயித்து அவ்வுருவமாகவே மாறி ஒளிவிடும். தூய்மையற்ற சித்தத்திற்கு பரமாத்மா ஒரு நாளும் புலப்படுவதில்லை.

தூய்மையான இதயத்தினால் அவனை உணர முடியும். அனுபவித்தறிய முடியும். ஆயின் ஏதோவொரு காட்சிப் பொருளை அறிந்ததைப் போலன்றி, அவனின் வடிவில் லயித்து ததாகாரமாக மாறிப் போவதால் அவனது அனுபூதியை அடைய முடியும். அவ்வாறில்லையாயின் (புத்தி க்ராஹ்யம்' என்று 6 ஆவது அத்தியாயத்திலும், 'அனு ஸ்மரேத்' என்று இச் சுலோகத்திலும் ஏன் சொல்கிறார்?

7. 'ஆதித்ய வர்ணன்' - ஒளியுடையவன் என்பது பொருள். சூரியனைக் கூடப் பிரகாசிக்கச் செய்யும் ஞானசூரியன் அவன் (தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி').

8. தாமஸ குணத்திற்கு எதிரானவன் - மாயைக்கு, அஞ்ஞானமெ னும் இருளிற்கு அப்பாற்பட்டவன் பரமாத்மா.

இவ்வாறான இலட்சணத்துடன் கூடிய பரமாத்மாவை அந்திம காலத்தில் மனிதன் ஒருமுனைப்பட்ட சித்தத்துடன், பக்தியுடனும் எப்போதும் சிந்தித்திருத்தல் வேண்டும். இங்கு அந்திம காலத்திற்கு பிரயாண காலமென்று பெயரிடப்பட்டுள்ளது. அதாவது வாழ்நா ளும் ஒரு பிரயாணம் போன்றதே யாதலால், வாழ்க்கையையும் ஓர் நீண்ட பயணமாக பாவித்து, பிரயாணத்திற்கு முன் எவ்வாறு பொருள்களைச் சேகரித்துக் கொண்டு, வழித் தேவைகளை முன்கூட் டியே எச்சரிக்கையுடன் இருந்து பயணம் புறப்படுவரோ, அவ் வாறே பரலோக பிரயாணத்திற்குத் தேவையான புண்யங்களை முன்பே சேகரித்து வைத்துக் கொள்ள வேண்டும்.

அவ்வாறு அந்திம காலத்தில் பரமாத்மாவை எவ்வாறு தியா னித்தல் வேண்டுமென்பதும் இங்குக் கூறப்பட்டுள்ளது. (1) பக்தியு டன், (2) யோகத்தினால் பிராணவாயுவை அல்லது பார்வையைப் புருவங்களுக்கிடையில் நிறுத்திச் சலனமற்ற மனத்துடன் மேற் சொன்ன எட்டு இலட்சணங்களுடன் கூடிய பரமாத்மாவை தியா னித்தல் வேண்டும். இங்கு பக்தி, யோகம் இரண்டும் தெரிவிக்கப் பட்டன. இரண்டுமே தியான யோகிக்கு மிக மிகத் தேவையே என் பது தெளிவாகிறது. அகங்காரமும் அழிவதற்கு இறைவனின் அரு ளைப் பெறுவதற்கு பக்தி மிகவும் தேவையாக இருக்கின்றது. அவ் வாறே சித்தத்தின் ஒரு முனைப்பாட்டிற்கு இந்திரிய மனோ கட்டுப் பாட்டுடன் கூடிய யோகமும் தேவையே. எனவேதான், 'பக்தியா', 'யோக பலேன' என்ற சொற்களால் பக்தி, யோகம் இரண்டினையும் போதித்தார். 'அனுஸ்மரன்' என்று சொல்வதால் இறைவனிடத்து இடைவிடாத சிந்தனை இருத்தல் வேண்டும் என்பது பொருள். 'அசலேன மனஸா' என்று சொல்வதால் மனம் மிகமிக அமைதியாக, சலனமற்று இருத்தல் வேண்டுமென்பதும், சபல சித்தன் பரமாத் மாவை உணர்தல் இயலாது என்பதும் நிரூபிக்கப்பட்டது.

இவ்வாறான, இறைதியானம் அந்திம காலத்தில் செய்ய வேண் டுமென போதிக்கப்பட்டாலும், அத்தகைய சிறந்த பண்பாடு ஏற்பட வேண்டுமாயின் அதற்கு வாழ்நாள் முழுவதும் அவ்வாறு பயிற்சி

செய்தல் வேண்டுமென்பது பொருள்' இல்லையெனில் இங்குத் தெரிவிக்கப்பட்ட 'யோக பலம்' (யோக பலேன) மரண காலத்தில் திடீரென எவ்வாறு கிட்டும்? எனவே வாழ்நாள் முழுவதும் எப்போதும், எந்த நிலையிலும், பராத்பரனை சலனமற்ற மனத்துடன், பக்தியுடனும், இடைவிடாது நினைத்த வண்ணம் இருந்து அந்திம காலத்தில் கூட அவ்வாறே இருத்தல் வேண்டும். அவ்வாறிருப்பின் அதன் பலன் மோட்சமே. பகவத் ஐக்கியமே (புருஷமுடைதி திவ்யம்), ஆஹா! எத்தகைய அபூர்வமான பலன்! எனவே சிறிய உலக விஷயங்களின் பலனுக்காக இரவும் பகலும் துன்புறுவோர் பகவானின் இவ்வாக்கியத்தை மனதில் கொண்டு நிரதிசயானந்த மிக உன்னதமான பரமாத்மா பதவிக்காக முயற்சித்தல் மேன்மை தரும்.

**வினா :** பரமாத்மா எத்தகையோன்?

**விடை :** (1) முற்றும் உணர்ந்தவன், (2) தொல்லோன், (3) அனைத்தையும் ஆள்பவன். (4) அணுவிலும் நுண்மையானவன், (5) அனைத்தையும் படைத்து, காத்து அளிப்பவன், (6) சிந்தனைக்கு எட்டாத வடிவுடையோன், (7) கதிரவனைப் போன்று ஒளிர்பவன், (8) அக்ஞான இருளுக்கு அப்பாற்பட்டவன்.

**வினா :** அந்திம காலத்தில் எவ்வாறு அவனைத் தியானித்தல் வேண்டும்.

**விடை :** (1) சலனமற்ற மனத்துடன், (2) பக்தியுடன், (3) யோக பலத்தினால் பிராணவாயுவை அல்லது பார்வையை புருவ மத்தியில் நிறுத்தி, மேற்சொன்ன இலட்சணங்கள் உடைய பரமாத்மாவை இடைவிடாது தியானிக்க வேண்டும்.

**வினா :** அவ்வாறு செய்தவன் பலன் யாது?

**விடை :** சாட்சாத் பரமாத்மாவின் பதமே கிட்டும்.

**வினா :** எனவே இறைவனை அடைவதற்கான வழி என்ன?

**விடை :** சலனமற்ற புத்தி, தூய்மையான பக்தி, இவற்றுடன் எப்போதும் தியானிப்பதே வழி.

*யதக்ஷரம் வேதவிதோ வதந்தி விசந்தி யத்யதயோ வீத ராகாஹ!*
*யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி தந்தே பதம் ஸங்க்ரஹேண ப்ரவக்ஷ்யே!!* (11)

## சொற்பொருள்

*வேத விதஹ் - வேதத்தை அறிந்தவர்கள், யத் - எதனை, அக்ஷரம் - அழிவற்றதாக, வதந்தி - சொல்கின்றனரோ, வீரராகாஹ் - பற்று நீங்கிய (ஆசைகளற்ற, காமக்குரோதங்களை வென்ற), யதயஹ் - முயற்சி செய்யும் யதிகள் (ஜிரேந்திரியர்கள் - சந்நியாசிகள்), யத் - எதனில், விசந்தி - புகுகின்றனரோ, யத் - எதனை, இச்சந்தி - இச்சிக்கின்றார்களோ, பிரம்மச்சரீயம் - பிரம்மச்சரியத்தை, சரந்தி - பின்பற்றுகிறார்களோ, தித்பவம் - அந்த நிலையை, தே - உனக்கு, ஸங்கிரஹேண - சுருக்கமாக, ப்ரதுக்ஷ்யே - சொல்கிறேன்.*

## கருத்துரை

*வேதத்தை அறிந்தவர்கள் எதனை அழிவற்றதாகச் சொல்கிறார்களோ, விருப்பு வெறுப்பற்ற, சந்நியாசிகள் எதனில் புகுகின்றனரோ, எதனை விரும்பி மக்கள் பிரம்மச்சரியத்தைப் பின்பற்றுகின்றனரோ அத்தகைய (பரமாத்ம) பதத்தைக் குறித்து உனக்குச் சுருக்கமாகச் சொல்கிறேன்.*

## விளக்கம்

*பரமாத்மா பதத்தினைக் (மோட்ச நிலை) குறித்துச் சுருக்கமாகச் சொல்கிறேன் என்று கூறி கிருஷ்ணர் சொல்கிறார். அது யுத்த சமயம் ஆதலால் விரிவாகச் சொல்வதற்கு அவகாசமில்லை யாதலாலும், பிரம்ம பதத்தினை எத்துணை வர்ணித்தாலும் எல்லையிராதலாலும், சுருக்கமாகச் சொல்கிறேன் என்று வாக்களிக்கின்றார். முமுக்ஷுக்களுக்கு இது மிக மிக முக்கியமான போதனையாக இருக்கும். ஏனெனில், வேதங்களின் சாரமனைத்தும் பிழிந்து அதன் உருவேயாக சாட்சாத் இறைவனே இங்கு இவ்வாறு கூறுகிறார். பிரணவ உபாசனையைப் போதிக்கப் போகின்றார். பரபிரம்ம பதம் எத்தகையது எனின் -*

*1. வேத விற்பன்னர்கள் அதனை அழிவற்றது என்பதாகக் கூறுகின்றனர். உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் அழியக் கூடியவை. கணநேரமே இருக்கக்கூடியவை. பிரம்மம் (ஆத்மா) ஒன்றே அழிவற்றது. திரிகாலங்களுக்கும் அப்பாற்பட்டது. ஒவ்வொருவரும் அவரவர் வாழ்க்கையில் முக்கியமாக தெரிந்து கொள்ளத்தக்கது இந்த பரபிரம்மமேயாகும். ஏனையவை எவ்வளவு அறிந்து கொண்டாலும் அவை நிலையான பதத்தை அளிக்க வல்லவையல்ல. எனவே தான் சிறுவயதில் சிறுமியர்க்கு 'அக்ஷராப்யாசம்' செய்வித்*

தல் என்ற ஒரு முறை ஏற்பட்டது. அக்ஷரமான பரமாத்வைக் குறித்து போதித்தலே அக்ஷராப்யாசம். அக்ஷரங்களைக் கற்றுக் கொடுக்க ஆரம்பிக்கையில் 'ஓம்'காரத்தை முதன் முதலில் எழுதுவதற்கு இதுவே காரணம். எனவே இதர வித்தைகள் எவ்வளவு கற்றாலும் பரவித்தையான அக்ஷர் (பிரம்ம) வித்தையை மட்டும் ஒதுக்கி விடு தல் கூடாது. மேலும் வேதங்கள் அறிதல் என்றால் வேதங்களில் சொல்லப்பட்டவற்றை அனுபவத்தில் அறிதல், அவற்றை தினசரி வாழ்க்கையில் பயன்படுத்துதல். (படிப்பறிவு) 'வாசா' ஞானம் மட் டும் பெற்றிருத்தல் அல்ல. எனவேதான் வேத வித்தகர்கள் பரமாத்மா வினை நன்கு அனுபவத்தில் அறிந்து சாட்சாத்காரத்தினை அனுப வித்து இறைவனை, 'அக்ஷரன்' (அழிவற்றவனாக) கண்டுணர முடிந் தது (அக்ஷரம் வேத வேதோ வதந்தி).

2. அத்தகைய பரமாத்மா பதத்தில் எவர் நுழைதல் கூடும்? என்ற வினாவிற்குக் கூட பதிலுரைக்கப்பட்டுள்ளது. விருப்பு வெறுப்பற்ற வர்கள். காமக் குரோதம் முதலான துர்வாசனைகளை ஒழித்தவர்கள், (வீத ராகிகள்) மாத்திரமே மோட்சத்தின் வாயிலை அடையக்கூடுமே யன்றி ஏனையோர் அல்ல. மோட்சத்தின் வாயிலில் நுழைவதற்கு விருப்பு வெறுப்பற்ற தன்மை ஒரு 'டிக்கட்' (Ticket) போன்றது. டிக் கட் இன்றி, அனுமதி பத்திரம் இல்லாமல் எவ்வாறு பெரிய அரண்ம னைக்குள் எவ்வாறு நுழைய அனுமதிப்பதில்லையோ, அவ்வாறே காமம், ஆசைகள், விருப்பு இவைகளை அழிக்காதவர்கள் அக்ஷரபி ரம்ம பதத்தில், மோட்சத்தின் வாயிலில் நுழைய முடியாது. துர்வாச னைகளை அழித்தவரே நுழைய முடியும். அவற்றை வசப்படுத்திய வரே தடையின்றி, பயமின்றி உள்ளே போக முடியும். எனவே 'எ னக்கு இன்னும் மோட்சம் கிட்டவில்லையே' என்று எவரும் தளர்ச் சியுறாது பகவான் தெரிவித்த விருப்பு வெறுப்பற்ற தன்மையை நடைமுறையில் பயின்று வந்தால் போதும்.

'யதயஹ்' - (முயற்சிப் போர்) என்று சொல்வதால் தெய்வ விஷயத்தில் நன்கு முயற்சிப் போர், நன்கு கஷ்டப்பட்டு தீவிரமான சாதனைகளைச் செய்வோர், இந்திரியங்களைக் கட்டுப்படுத்தியவர் மாத்திரமே மோட்ச மார்க்கத்தில் பிறவிப்பயனை அடைவரேயன்றி ஏனைய சோம்பேறிகளுக்கு அல்ல என்பது தெளிவாகிறது.

ஒரு சிறிய உலகியல் தொடர்பான பொருளைச் சம்பாதிக்க வேண்டுமாயினும் எத்துணை முயற்சி உழைப்பு தேவைப்படுமா யின், பல பிறவிகளாகத் தொடரும் துஷ்டவாசனைகளை, கெட்ட

பண்புகளை ஒழித்து, பரபிரம்மமெனும், மிக உன்னதமான பதத்தினைப் பெறுவதற்கு எத்துணை முயற்சி தேவைப்படும்?

3. இனி மூன்றாவது விஷயம் பிரம்மச்சரியம். 'எந்த பரம தெய்வ பதத்திற்கு ஆசைப்படும் மக்கள் பிரம்மச்சரியத்தை அனுஷ்டிக்கிறார்களோ!' என்று இங்குச் சொல்லப்படுவதால் தெய்வ பிராப்திக்கு, மோட்சத்திற்கு பிரம்மச்சரியம் மிக மிக அவசியமென்பது தெரிகிறது. ஆன்மீக அரங்கில் பிரம்மச்சரியத்திற்கு எத்தகைய முக்கியத்துவம் இங்கு பகவான் அளித்துள்ளார் என்பது தெளிவாகிறது. சரீரத்தினாலும், வாக்கினாலும், மனத்தாலும் விஷயங்களைக் குறித்துத் தொடர்பின்றி இருத்தல், பிரம்மத்தில் சித்தத்தை நிலைநிறுத்துதல் பிரம்மச்சரியம் எனப்படும்.

'ப்ரவக்ஷ்யே' - (நன்கு சொல்கிறேன்) - 'வக்ஷ்யே' எனாது 'ப்ரவகக்ஷ்யே' - என்பதால் பகவான் இனி சொல்லப்போகும் பிரம்மோபாசன விஷயம் எவ்வளவு முக்கியமானது. அதன் மீது முமுக்ஷுக்களில் எத்துணை நம்பிக்கை வைத்தல் வேண்டுமென்பதும் தெள்ளத் தெளிவாகிறது.

இந்த சுலோகத்தைப் போன்ற சுலோகம் கடோபநிஷத்தில் காணப்படுகிறது.

*'ஸர்வே வேதா யத்பதமாமனந்தி த பாம்சி ஸர்வாணி சயத்வதந்தி*
*யதிச்ச பிரம்மச்சர்யம் சரந்தி தத்தே பதம் சங்கிரஹேண ப்ரவீம்யோ மித்யே தத்'* (கடோப. 1-2-15)

**வினா :** பரமாத்ம பதம் எத்தகையது?

**விடை :** அழிவற்றது (அக்ஷரம்)

**வினா :** இவ்வுண்மையை எவர் அறிந்து கொள்கின்றனர்?

**விடை :** வேத வித்தகர்களான மகான்கள்.

**வினா :** அத்தகைய பரமாத்ம பதத்தில் எவர் நுழையக்கூடும்?

**விடை :** ஆசைகள் அழிந்தவர் (வீதராகிகள்), பிரம்மச்சாரிகள்.

**வினா :** இதனால் மோட்சத்தை அடைவதற்கு எவை தேவையென்பது தெரிகிறது?

**விடை :** *1. ஆசைகள் அற்றுப் போதல்.*
*2. பிரம்மச்சரியத்தைக் கடைபிடித்தல்.*

**முன்னுரை**

*பிரணவ உபாசனையின் தியான முறையை அடுத்து வரும் இரண்டு சுலோகங்களில் விரிவாகக் கூறுகிறார்.*

*ஸர்வத்வாராணி ஸம்யம்ய மனோ ஹ்ருதி நிருத்யச!*
*மூர்த்ன்யாதாயாத்மனஹ ப்ராண மாஸ்திதோ யோக தாரணாம்!! (12)*

*ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரன் மாமனுஸ்மரன்!*
*யஹ் ப்ரயாதி த்யஜன் தேஹம் ஸ யாதி பரமாம் கதிம்!! (13)*

**சொற்பொருள்**

*யஹ் - எவன், ஸர்வத்வாராணீ - இந்திரிய துவாரங்களனைத்தை யும், ஸம்யம்ய - நன்கு கட்டுக்குள் வைத்து (நியமத்துள் வைத்து), மனஹ் - மனத்தினை, ஹ்ருதி - இதயத்தில் (ஆத்மாவில்), நிரத்யச - நன்கு நிறுத்தி மூர்த்தன் - தலையில் (பிரமாந்திரத்தில்), ப்ராணம் - பிராணவாயுவை, ஆதாய - இருத்தி, ஆத்மனஹ் யோகதாரிணாம் - ஆத்மாவைக் குறித்த யோகதாரணையை (ஒரு முனைப்பட்ட சித் தத்தினை) அஸ்திதஹ் - அடைந்தவனாய் (திடமாக நிலைநிறுத்திய வனாய்), பிரம்ஹ - பரபிரம்மவாசகமான, ஓம்இதி - 'ஓம்' எனும், ஏகாக்க்ஷரம் - ஒரு அக்ஷரத்தை, வியாஹரன் - உச்சரித்த வண்ணம், மாம் - என்னை, அனுஸ்மரன் - இடைவிடாது சிந்தித்து, தேஹம் - சரீரத்தின், த்யஜன் - விடுத்தவனாய், ப்ரயாதி - இறக்கிறானோ, ஸஹ் - அவன், பரமாம்கதிம் - மிக உத்தமமான கதியை (மோட்சத் தினை), யாதி - அடைகிறான்.*

**கருத்துரை**

*எவன் இந்திரிய துவாரங்களனைத்தையும் நன்கு கட்டுப்ப டுத்தி, மனத்தினை இதயத்தில் ஆத்மாவில் நன்கு நிலைநிறுத்தி, சிரசில் (பிரமாந்திரத்தில்) பிராண வாயுவை நிறுத்தி, ஆத்மாவைக் குறித்து ஒருமுனைப்பாட்டுடன் கூடிய சிந்தனை (யோகதாரணை) உடையவனாய், பரபிரம்மத்தின் வாசகமான 'ஓம்' என்ற அக்ஷரத்தை உச்சரித்த வண்ணம் என்னை இடைவிடாது சிந்தித்த வண்ணம் சரீ ரத்தை விடுகிறானோ, அவன் உத்தம நிலையான மோட்சத்தினைப் பெறுகிறான்.*

**விளக்கம்**

பரமகதியான மோட்சத்தினை அடையும் முறை இங்குச் சொல்லப்படுகிறது. இம்முறையை அந்திம காலத்தில் மட்டுமே செய்தல் வேண்டுமென்பது பொருளல்ல. வாழ்நாள் முழுவதும் அவ்வாறு செய்து வந்து, அந்திம காலத்தில் கூட அத்தகைய நிலையிலேயே இருத்தல் வேண்டுமென்பது அதன் பொருள்.

இங்கு நான்கு சாதனைகள் பற்றிச் சொல்லப்பட்டுள்ளன. (1) இந்திரிய துவாரங்களைக் கட்டுதல், (2) மனத்தினை இதயத்தில் நிறுத்துதல், (3) பிராண வாயுவை சிரத்தில் வைத்து ஆத்ம சிந்தனை யெனும் யோகதாரணையை மேற்கொள்ளுதல், (4) ஓம்காரத்தினை உச்சரித்த வண்ணம் பிரம்மத்தை எண்ணுதல் இவற்றைக் குறித்துச் சுருக்கமாக விசாரிப்போம்.

(1) இந்திரிய துவாரங்களனைத்தையும் கட்டுவதற்கு தியானம் மிக மிக அவசியம். அவை திறந்திருந்தால் மனம் இந்திரியங்களின் பின்னால் வெளிமுகமாகச் செல்வதால், தேயமான ஆத்மாவில் ஒரு முனைப்பாடு சித்திக்காது. காற்று வேகமாக அடிக்கும் போது ஜன்னல்கள் திறந்திருந்தால் இல்லத்தில் இருக்கும் எரியும் விளக்கு அணைந்து விடுவதைப் போல, இந்திரிய துவாரங்களை அடைக்காவிட்டால் ஞானஜோதி அணைந்து விடும். எனவே தான் இந்திரியங்களை இந்திரியார்த்தங்களில் செல்லவிடாது கட்டுப்படுத்த வேண்டுமென்று இங்குச் சொல்லப்பட்டது. 'சர்வேந்திரியாணி' என்பதால் ஒன்றிரண்டு இந்திரியங்களை மட்டும் கட்டுப்படுத்தினால் போதாது என்பதும், அனைத்தையும் கட்டுப்படுத்த வேண்டுமென்று போதிக்கப்பட்டது. ஒரு ஜன்னல் திறந்திருந்தாலும் விளக்கு அணைந்து போகுதல்லவா? மோட்சத்தை அடைவதற்குள் நான்கு சாதனைகளிலும் இங்கு இந்திரியக் கட்டுப்பாட்டை முதன் முதலில் சொல்வதில் ஒரு சிறப்பிருக்கிறது. அது எதுவெனில் - அவற்றைக் கட்டுப்படுத்தினால் ஒழிய இதர சாதனைகள் எதனையும் செய்தல் இயலாது. எனவேதான் 'தஸ்மாத் மவிந்திரியாண்யாதௌ நியம்ய பரதர்ஷப' என்று பகவான் இதற்கு முன்பே கூறியுள்ளார். 'ஆதௌ' முதன் முதலில் அந்தப் பணியைச் செய்தல் வேண்டும் என்று ஆணையிடுகிறார். எனவே மோட்சத்தை அடைய விரும்புவோரனைவரும் இந்திரியங்களை வெளியில் செலுத்தாது தன் அவயங்களை ஆமை போன்று உள்ளடக்கி வைத்தல் வேண்டும்.

2. அதன்பிறகு மனத்தினை இதயத்தில் சேர்த்தல் வேண்டும். இதயமென்றால் பரமார்த்த நிலை. வெளியில் மனத்தை அதன் போக்கில் திரிய விடாமல், உள்புறமாக இழுத்து இதயத்தில் (ஆத்மாவில்) நிலைநிறுத்த வேண்டும். மனத்தின் பிறப்பிடம் இதயம். எனவே அதனை அங்கேயே லயிக்கச் செய்ய வேண்டும். முதல் சாதனையால் இந்திரியங்களை எவன் கட்டுப்படுத்துகிறானோ அப்போது அவற்றின் நாயகனான மனதும் சக்தியிழந்து எளிதாக வசப்பட்டுவிடும்.

3. அதன்பின் பிராணவாயுவை சிரசில் (பிரமாந்திரத்தில்) நிறுத்தி 'யோகதாரணை'யைச் செய்தல் வேண்டும். மனம் பரமாத்மாவிடம் சலனமின்றி நிலைக்கச் செய்து ஒருமுனைப்பாட்டுடன் தியானிப்பதே யோகதாரணை.

4. இனி தியானிப்பதற்குச் சரியான மந்திரம் இங்குத் தெரிவிக்கப்பட்டுள்ளது. அதுவே ப்ரணவம் (ஓம்காரம்). அது பரபிரம்மத்தின் வாக்கு. வேதத்தின் சாரம். மந்திரங்கள் அனைத்திற்கும் தலைமையான மந்திரம் அது. 'வ்யாஹரன்' (உச்சரித்த வண்ணம்) என்று சொன்னவுடனேயே 'மாமனுஸ்மரன்' (என்னை இடைவிடாது சிந்தித்தல் வேண்டும்) என்று சொல்வதால் அத்தகைய ஓம்காரத்தை உச்சரித்தால் மட்டும் போதாது, அதன் பொருளையும் கூட நன்கு மனத்தில் சிந்திக்க வேண்டுமென்பது தெளிவாகிறது. ஏனெனில் மந்திரத்தை மட்டும் உச்சரித்து மந்திரார்தத்தை உணராவிட்டால் அம் மந்திரத்தினால் முழுமையான பலன் கிட்டாது.

பீரங்கியில் மருந்தினை மட்டும் அடைத்து விட்டு குண்டு இல்லாது வெடித்தால் சப்தம் மாத்திரமே வருமேயன்றி இலக்கினை அடையாது. அவ்வாறே பிரணவ ஜபத்தை பொருளுடன் உணர்ந்து செய்தால் பிரம்மமெனும் இலக்கினை அடையக்கூடும். 'அனுஸ்மரன்' என்று சொல்வதால் மறுபடியும் மறுபடியும் இடைவிடாது பரமாத்மாவை சிந்தனை செய்தல் வேண்டும் என்று போதிக்கப்பட்டது.

இவ்வாறாக மேற்சொன்ன நான்கு சாதனைகளையும் செய்பவர் பரமாத்மா பதத்தினை விரைவாகச் சேர முடியும் என்று சொல்லப்பட்டது. யஹ் (எவராயினும்) என்று சொல்லப்பட்டதால், எந்த ஜாதி, மதம், ஆண், பெண் எவராயினும் மேற்சொன்ன சாதனைகளை அனுசரித்தால், பிரணவத்தை ஜபித்தால், பரமகதியினைத் தவறாது அடைவர் என்பது தெளிவாகிறது. 'பிரமாம் கதிம்' என்பதால், பிரம்ம பதவி உலகில் உள்ள எல்லா பதவியைவிட மிக உயர்ந்தது

என்பதும் தெரிகிறது. எனவே சின்னசின்ன உலகியல் பதவிக்காகச் சக்தியை வீணாக்காமல் நிரதிசய ஆனந்த ரூபமான உத்தமமான ஆத்ம பதவிக்காக முயற்சித்தல் மேல்.

இச்சுலோகத்தில் கீழ்வரும் விஷயங்கள் தெளிவாகின்றன.

(1) ஜபம் செய்தால் மந்திரம் போதாது. தியானம் கூட செய்தல், அதாவது மந்திர உச்சாடனத்தோடு அதன் பொருளையும் சிந்தித்திருத்தல் வேண்டும்.

(2) எல்லா மந்திரங்களை விட ஓம்காரமே சிறந்தது.

(3) இறைவனை எப்போதோ ஒருமுறை சிந்தித்தால் மட்டும் போதாது. எப்போதும் சிந்தித்து இருத்தல் வேண்டும்.

(4) இந்திரியங்கள் அனைத்தையும் கட்டுப்படுத்துதல் வேண்டும்.

(5) மனம் லயிக்கும் இடம் இதயம்.

(6) தெய்வத்தின் மீது பக்தி சிரத்தையுடன் இருப்பவனாயினும் ஓம்காரத்தை ஜபித்த வண்ணம், தியானித்த வண்ணம் பரமாத்ம பதத்தினை அடைய முடியும். இங்கு ஜாதி, மதம், குலம், இனம் என்ற பேதமேதுமில்லை.

**வினா :** இவ்வுலகில் மிகவும் உத்தமமான நிலை எது?

**விடை :** பரமாத்ம நிலை (பிரம்ம பதவி)

**வினா :** அப்பதவியை எவர் அடையக்கூடும்?

**விடை :** எவன் (1) எல்லா இந்திரியங்களையும் கட்டுப்படுத்தி, (2) மனத்தை இதயத்தில் நிறுத்துதல், (3) பிராண வாயுவை அல்லது பார்வையை சிரசில் (பிரமாந்திரத்தில்) நிறுத்தி ஆத்ம சிந்தனையான யோகதாரணையைச் செய்து, (4) ஓம் என்ற ஏகாக்ஷரமான பிரணவ மந்திரத்தை ஜபித்த வண்ணம் பிரணவத்தின் பொருளான பரபிரம்மத்தை நன்கு சிந்தித்திருக்கிறானோ, அத்தகையோன் மிக உத்தமமான தெய்வ பதத்தினை அடைவான்.

### முன்னுரை

*நிரந்தர முயற்சியுடைய சீலர்களினால் பரமாத்மாவை எளிதாக அடைய முடியும் என்கிறார்.*

*அனன்ய சேதாஹ் ஸததம்யோ மாம் ஸ்மரதி நித்யசஹ!*
*தஸ்யாஹம் ஸுலபஹ பார்த்த நித்யயுக்தஸ்ய யோகினஹ்!! (14)*

### சொற்பொருள்

*பார்த்த - அர்ஜுனா!, யஹ் - எவன், அனன்ய சேதாஹ் - இதர விஷயங்களைப் பற்றிய எண்ணமில்லாத மனத்தையுடையவனாய், மாம் - என்னை, நித்யசஹ் - ஒவ்வொரு தினமும், ஸததம் - எப்போதும், ஸ்மரதி - ஸ்மரிக்கின்றானோ, நித்யயுக்தஸ்ய - நிரந்தரமான தியானத்தோடு கூடியவனான, தஸ்ய - அவனுக்கு, அஹம் - நான், சுல பஹ - எளிதாக அடையக் கூடியவனாவேன்.*

### கருத்துரை

*அர்ஜுனா! எவன் வேறு சிந்தனையின்றி என்னைக் குறித்து ஒவ்வொரு தினமும், எப்போதும் நினைத்த வண்ணம் இருக்கிறானோ, அத்தகைய தியானம் செய்பவனுக்கு நான் எளிதாக அடையக் கூடியவனாய் உள்ளேன்.*

### விளக்கம்

*இறைவனை எவன் எளிதாக அடைய முடியும் என்பது இங்குச் சொல்லப்படுகின்றது. மோட்சத்தை அடைவது, இறைவனது சாட்சாத்காரம் பெறுதல் மிகவும் கடினமானது என்று மக்கள் எண்ணுகின்றனர். ஆயின் செய்ய வேண்டிய முறைப்படி முயற்சி செய்து வந்தால் மிக எளிதாக பரமாத்வினை அடைய முடியும் என்று இங்குச் சொல்லப்படுகிறது. எவன் வேறு சிந்தினையின்றி இடைவிடாது எப்போதும் இறைவன் சிந்தனையாகவே இருக்கிறானோ அவன் தெய்வத்தினை மிக எளிதாக அடைய முடியும் எனப்பட்டது.*

*'அனன்ய சேதாஹ்' - சித்தத்தில் இதர சிந்தனைகள் ஏதுமின்றி இறை தொடர்பான எண்ணங்களே நிறைந்திருத்தல் 'அனன்ய சித்தத்தின்' இலட்சணம். மனம் விஷயங்களின் மீது செல்லவொட்டாது, காட்சிருபமான பரமாத்மாவினிடத்தேயே லயித்து இருத்தல் வேண்டும். சாதாரணமாக மக்களின் மனம் பெரிதும் விஷயங்களின் மீதே செல்லும். அத்தகைய சித்தம், 'அனன்ய சித்தமல்ல', 'அன்ய சித்த*

மே' ஆகும். இன்னும் சிலரது சித்தம் சிறிது உலக விஷயங்களின் மீதும் சிறிது இறைவனின் மீதும் விவகரிக்கும். இதுவும் 'அனன்ய சித்தமல்ல' 'அனனயம்' என்பதன் பொருளை நன்கு விவரிப்பதற்காகவோ என்னவோ இங்கும் 'ஸததம்' (எப்போதும்), 'நித்யஸஹ' (ஒவ்வொரு தினமும்) என்ற இரண்டு சொற்களைக் கையாண்டுள்ளார். இதனால் இடைவிடாத நிரந்தர ஸ்மரணையை இறைவன் வலியுறுத்தியதாயிற்று. சிலர் ஒரு நாள் முழுவதும் இடைவிடாது தெய்வத்தை நினைப்பர். இன்னும் சிலர் சில நிமிடங்கள் தெய்வத்தை பூஜிப்பர். இரண்டும் நல்ல முறையேயாயினும் அவை போதாது. பிரதி தினமும், நிரந்தரம் இடைவிடாது தெய்வஸ்மரணை செய்வதற்கு நன்கு பயிற்சித்தல் வேண்டும். அதுவே அனன்ய சித்தனின் இலட்சணம். அத்தகையோனுக்கே பகவான் எளிதில் புலப்படுவார். அவனே நித்யயுக்தன். அத்தகைய நிரந்தர தெய்வ சிந்தனை ஆரம்பத்தில் இயலாது போயினும் எப்போதாவது அந்நிலையைப் பயிற்சித்தே ஆக வேண்டும்.

ஏனெனில், இறைவனை எக்கணம் நினையாது இருக்கிறோமோ, அக்கணமே மாயை உள்நுழைந்து சித்தத்தில் இடம் பெற்று ஜீவனை மறுபடியும் விஷயங்களின் மீது செலுத்துவதற்கு முயற்சி செய்யும். எனவே இவ்விஷயத்தில் சாதகன் மிக எச்சரிக்கையாக இருந்து இறை நினைப்பு எக்காலத்தும் இருக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும். 'நாஸ்தி ஜாகரதோ பயம்' என்பதைப் போல் தெய்வ விஷயத்தில் எப்போதும் விழிப்புடன் இருப்பவனுக்கு சம்சார பயம் இருப்பதில்லை. எனவே நிரந்தர இறைநினைப்பினால் மாயைக்கு ஒரு சிறிதேனும் இடம் கொடாது இருத்தல் வேண்டும். அத்தகைய நிரந்தர தெய்வ ஸ்மரணையுடையவனே பரமாத்மாவை எளிதாக அடைய முடியும் என்று இங்குச் சொல்லப்பட்டது. இதனால், (அனன்ய) இடைவிடாத தெய்வ சிந்தனை, நித்ய, யுக்ததவம் இல்லாதவனுக்குத் தெய்வ பிராப்தி எளிதன்று என்பது வெளிப்படை. எனவே தெய்வ பிராப்திக்கு எளிதான வழியைக் கடைபிடிக்க விரும்புவோரனை வரும் ஸ்ரீகிருஷ்ணர் கருணையுடன் போதித்த இந்த உபாயத்தைக் கடைபிடித்து ஜன்ம ஈடேற்றம் அடைதல் வேண்டும்.

**வினா :** இறைவனை எவர் எளிதாக அடையக்கூடும்?

**விடை :** (1) அனன்ய சித்தத்துடன், (2) தினமும் இடைவிடாது நிரந்தரம் இறை நினைப்புடன் சிந்தித்திருப்பவர் (அதாவது நித்திய யுக்தர்கள்), இறைவனை எளிதாக அடையக்கூடும்.

**வினா :** *இதனால் பகவத் பிராப்திக்கு (மோட்சத்தை அடைவதற்கு) எளிதான வழி எதுவெனத் தெரிகிறது?*

**விடை :** *(1) அனன்ய சித்தம், (2) நிரந்தர தெய்வஸ்மரணை.*

**முன்னுரை**

*அவ்வாறு இறைவனை அடைந்தவர் மறுபடியும் துக்கத்தின் இருப்பிடமான சம்சாரத்தை அடைவதில்லை என்கிறார்.*

*மாமுபேத்ய புனர்ஜன்ம துஹ்காலயம் அசாச்வதம்!*
*நாப்னுவந்தி மஹாத்மாநஹ் ஸம்சித்திம் பரமாம் கதாஹ்!!* (15)

**சொற்பொருள்**

*பரமாம் - மிக உத்தமமான, ஸம்சித்திம் - மோட்சத்தினை, கதா அடைந்த, மகாத்மான ஹ் - மகாத்மாக்கள், மாம் - என்னை, உபேத்ய அடைந்து, (பிரம்மத்துவத்தை அடைந்து), புனஹ் - மறுபடியும், துக்காலயம் - துக்கத்திற்கு இருப்பிடமான, அசாச்வதம் - நிலையற்ற துமான, ஜன்மக - ஜன்மத்தினை, நஆப்னுவந்தி - அடைவதில்லை.*

**கருத்துரை**

*மிக உத்தமமான மோட்சத்தினை அடைந்த மகாத்மாக்கள் என்னை அடைந்து, அதன்பின் மறுபடியும் - துக்கத்திற்கு இருப்பிடமான, நிலையற்ற மறுபிறப்பை எடுப்பதில்லை.*

**விளக்கம்**

*இறைவனை அடைந்தவர் மறுபடியும் சம்சாரமெனும் இருட்கு கையில் அடைவதில்லை என்கிறார். தெய்வத்தினை அடையும் வரை ஜீவன் பிறப்பு, இறப்பு எனும் ஜனனமரண பிரவாகமான சம்சார சக்கரத்தில் சிக்கி பலவிதமான துன்பங்களை அனுபவிக்கி றான். பரமாத்மாவை அடைந்தபின் மறுபடியும் அவனுக்கு புனர் ஜன்மம் இல்லை. மறுபடியும் - சம்சாரத்தில் பிறப்பதோ, துக்கத் தினை அனுவிப்பதோ இருப்பதில்லை. பகவத் பிராப்தியோ, மோட்சமோ எதற்காகப் பெறுதல் வேண்டும் எனச்சிலர் கேட்கக்கூ டும். அவர்களுக்கு இச்சுலோகத்தில் தகுந்த விடை அளிக்கப்பட்டுள் ளது. பகவானை அடையாவிட்டால் ஜனன மரணத்தினின்றும் விமுக்தி கிடைப்பதில்லை அதனால் துக்கத்திற்கும் முடிவென்பதே யில்லை. எனவே துக்கநிவாரணத்திற்காகத் ய்வத்தினைத் தவறாது*

சரணடைதல் வேண்டும்.

ஆயின், சிலர் - பிறப்பென்பது பல விஷய போகங்களுடன் கூடி மிகவும் இன்பத்தை அளிப்பதாய் உள்ளதே எனக்கூடும். இத்த கைய விபரீத புத்தியுடையவர்களுக்கு ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா இச்சுலோகத்தில் நன்கு பதில் அளித்துள்ளார். 'ஜன்மம்' என்பது எத்த கைய இயல்புடையது என்பதைத் தெளிவாகத் தெரிவித்துள்ளார். (1) துக்கத்திற்கு இருப்பிடம், (2) நிலையற்றது -என்னும்இரண்டு சிறப் புச் சொற்களால் கூறுகிறார். அதாவது அது துக்கத்தின் இருப்பிடம், நிலையற்றது என்பது பொருள். இவ்விரண்டு குற்றங்களும் பிறப் பென்பதில் உண்டு. எனவே அத்தகையது எங்ஙனம் சௌக்கியத்தை அளிக்க இயலும்? ஒருவேளை சிறிது சுகத்தினை அளித்தாலும், அது ஆபாச சுகம், பிரதிமீம்ப சுகம், துக்கத்துடன் தொடரும் சுகமே யன்ன அவிச்சின்ன நிரதிசய சுகமல்ல. உலகியல் சுகங்கள் துக்கத்தினைக் கூட தன் பின்னரே கூட்டி வரும். எனவேதான் ஞானிகளின் பார்வை அதன்மீது படுவதில்லை. இக்காரணத்தினால் பகவான் பிறப்பினை 'துக்காலயம்' என்கின்றார். ஆலயம் என்றால் இருப்பிடம். ராமால யம், கிருஷ்ணாலயம், சிவாலயம் என்பவை எவ்வாறு அத்தேவதை களின் இருப்பிடமாக உள்ளனவோ, அவ்வாறே பிறப்பென்பது துக் கத்திற்கு இருப்பிடமாக இருப்பதால் துக்க தேவதைக்கு இருப்பிட மாக உள்ளது என்பது பொருள். விவேகமற்ற தன்மையால் மக்கள் இங்கு சுகமிருக்கிறது என்றெண்ணுகிறார்களேயன்றி உண்மையில் அங்கு துக்கமே இருக்கிறது என்பது பகவானின் வாக்கியத்தினால் தெளிவாகிறது. திரிகால ஞானியும், ஸர்வக்ஞனுமான ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா மக்களின் தவறான எண்ணத்தைக் கவனித்து உலகின் யதார்த்த நிலையை, பிறவியின் உண்மை சொரூபத்தை இங்கு வெளிக்கொணர்கிறார். ஏ ஜீவர்களே! உலகியல் சுகங்களினால் ஏமாந்து விடாதீர்கள்! அதில் சுகமிருக்கிறதென்றெண்ணி அதன்பின் தொடர்ந்து சென்று வாழ்க்கையை வீணாக்கிக் கொள்ளாதீர்கள். அவை துக்கத்தின் இருப்பிடமேயன்றி சுகாலயம் அல்ல. கணநே ரமே இருப்பவையேயன்றி நிலையானவை அல்ல. என்று பர மாத்மா மக்களை எச்சரிக்கிறார். உண்மையில் விசாரித்தால் அவித் தையின் பிரபாவத்தினால் மக்கள் துக்கத்தினைச் சுகமாக நினைக்கின் றனர்.

*'அநித்யா சுசிதுக் காணாத்மசு நித்ய*
*சுசி சுகாத்மக்யாதிரவித்யா'* (பதஞ்சலி)

*(அநித்யமானவற்றை நித்யமாகவும், தூய்மையற்றதை தூய்மை யுடையதாகவும், துக்கத்தினை சுகமாகவும், அநாத்மாவை ஆத்மாக வும் புலப்படச் செய்வதே அவித்தையாகும்).*

எனவே துக்காலயமான, நிலையற்றதான இந்தப் பிறவியெ னும் சக்கரத்தில் மறுபடியும் சிக்கிவிடாது பார்த்துக் கொள்ள வேண் டும். ஆயின் அதற்கான உபாயமென்ன? 'மாமு பேத்ய' - இதுவே உபாயம். அதாவது, பகவானை அடைவதே, எனவே பக்தி, ஞான வைராக்ய, தியானம் முதலானவற்றால் பரமாத்மாவை அடைவ தற்கு மக்கள் இந்தப் பிறவியிலேயே தீவிரமான முயற்சிகளை மேற் கொள்ளுதல் வேண்டும். பகவத் சாயுஜ்யத்தை 'பரமாம் ஸத்சித்திம்' - மிக உயர்ந்த பதவியாக, சித்தியாக வர்ணிக்கப்படுவதால் பிற எல்லாப் பதவிகளும் அதனை விட தாழ்ந்ததே என்பது தெளிவாகி றது. மேலும் மகாத்மாக்கள் எத்துணையோ பேர் அத்தகைய மேன்நி லையை அடைந்துள்ளனரென்பதும் தெரிகிறது. ஆயின் மகாத்மா வாக ஆக வேண்டுமே தவிர அல்பாத்மாக்களாக அல்ல நிர்மலமான சித்தத்துடன், பரமாத்மாவை சேர்பவர் மகாத்மாக்காள்; தூய்மை யற்ற சித்தத்துடன் போகங்களின் பின் செல்வோர் அல்பாத்மாக்கள். 'மகாத்மா' என்பது ஒரு விருது. அசத்தியம் என்பதனைப் பின்பற் றாது சத்தியத்தினையே பின்பற்றுவோரனைவருக்கும், கணநேரமே இருப்பவற்றை விரும்பாது நிலையான சுகத்தை விரும்புவோரனை வருக்கும், அநாத்மாவின்றி ஆத்மாவையே விரும்புவோர்க்கு அந்த விருது தப்பாது கிடைக்கும். பரமாத்வையே சரணடையும் அத்த கைய மகனீயர்கள் பிறப்பற்ற பெருவாழ்வான கைவல்யத்தை அடைவதால் மறுபடியும் துக்கத்தின் பிறப்பிடமான இந்த சம்சாரத் திற்குத் திரும்பி வருவதில்லையென்றும், மறுபிறப்பினை அடைவ தில்லை என்றும் இங்குச் சொல்லப்பட்டது. நதி கடலை அடைந்த பின் திரும்பவும் நதிக்குச் செல்வதில்லை அல்லவா? அவ்வாறே ஜீவன் முக்தர்களும். எனவே துக்கத்தை விரும்பாதரனைவரும், சுகத் தினையே வேண்டுவோரனைவரும், மேற்சொல்லப்பட்ட பகவத் வாக்கியத்தில் நம்பிக்கை வைத்து, பிறவியினையும், சம்சாரத்தை யும் துக்கத்தைத் தருபவையாக எண்ணி அதனை விடுத்துச் செல்வ தற்கு இறைவனை நாடுவதொன்றே வழி. அதனையே நாடி கடைத் தேறுவராக!

**வினா** : இவ்வுலகின் (அல்லது இப்பிறவியின்) வடிவம் இயல்பு எத்தகையது.

**விடை :** இது (1) துக்கத்தின் இருப்பிடம், (2) நிலையற்றது.

**வினா :** இத்தகைய சம்சாரம் (அல்லது பிறவியை) எவர் அடைவதில்லை?

**விடை :** இறைவனை அடைந்த மகனீயர்கள்.

**வினா :** பகவத் சாயுஜ்யம் எத்தகைய பதவியாய் உள்ளது?

**விடை :** மிக உத்தமமான பதவி (சித்தி)யாக உள்ளது.

**வினா :** துக்கத்தினின்றும் விடுபடுவதற்கான வழி யாது?

**விடை :** மறுபிறவி இன்மையே.

**வினா :** பிறவி இல்லாதிருப்பதற்கு வழி என்ன?

**விடை :** இறைவனை அடைவதே.

**முன்னுரை**

பரமாத்ம நிலை ஒன்றைத் தவிர, வேறு எந்த உலகை அடைந்தாலும் மறுபிறவி, தப்பாது என்று தெரிவிக்கிறார்.

*ஆப்ரஹ்மபுவனால்லோகாஹ் புனராவர்த்தினஹ் அர்ஜுன!*
*மாமுபேத்ய து கௌந்தேய புனர்ஜன்ம ந வித்யதே!!* (16)

**சொற்பொருள்**

அர்ஜுன - அர்ஜுனா! ஆ ப்ரஹ்மபுவனால் லோகாஹ் - பிரம்ம லோகம் வரையுள்ள உலகம் அனைத்தும், புனர் ஆவர்த்தினஹ் - பிறவி தரும் இயல்புடையவை, கௌந்தேய - குந்தியின் மைந்தா! மாம் - என்னை, உபேத்யது - என்னை அடைந்தால்தான், புனர்ஜன்ம - மறுபிறவி, நவித்யதே - இல்லை.

**கருத்துரை**

அர்ஜுனா! பிரம்மலோகம் வரையுள்ள உலகங்கள் அனைத்தும் மறுபடியும் வரும் இயல்புடையவை (அதாவது அவற்றை அடைந்தவர்கள் மறுபிறவி பெற்றே தீருவர்) என்னை அடைந்தவர்க்கோ மறுபிறவியில்லை.

**விளக்கம்**

பிரம்மாண்டமெனும் குகையில் எத்துணையோ உலகங்கள் இருக்கின்றன. பூலோகம், சுவர்க்கலோகம், பிரம்மலோகம் முதலியவை. ஆயின் அவையனைத்தும் புனர்ஜன்மம் உடையவைகள். அதாவது அவற்றையடைந்தவர் மறுபிறவி எடுப்பர். ஆயின் பரமாத்மாவை அடைந்தவர்க்கு ஒருபோதும் மறு பிறவி இல்லை. இதுவே தெய்வ சாட்சாத்காரத்தின் சிறப்பு இதற்குக் காரணம் உண்டு. பிரம்மலோகம் வரை உள்ள எல்லா உலகங்களும் காட்சிப் பொருள்களில் அடங்கியுள்ளன. எனவே தன் பிறவிக்குக் காரணமான ஆத்மா (தெய்வம்) ஒன்றே இவ்வுலகில் காட்சியில் அடங்காத பொருள். அதுவொன்றே சாட்சியாய் நிற்பது, த்ரிக்வஸ்து (அதுவொன்றே, தேசம், காலம், கிரியை இவற்றிற்கு வசப்படாது பரிணாமமற்று, அழிவற்று இருப்பது. அத்தகைய பரமாத்மா பதத்தை அடைந்தவர்க்கு கர்மம் இல்லை, பிறவியில்லை.

எனவே மறுபிறவியுடன் கூடிய ஸ்வர்க்கம் முதலான ஏனைய உலகங்களையடைய வேண்டுமென முயற்சிக்காது பக்தி, வைராக்கியம், விசாரணை முதலான சாதனைகளின் மூலம் ஆத்ம உலகினைச் சேர்வதே மேல். அதாவது பகவத் சாயுஜ்யத்தை அடைவதே மேன்மையானது.

**வினா :** மறுபிறவி ஏற்படாதிருப்பதற்கு என்ன செய்தல் வேண்டும்.

**விடை :** பரமாத்மாவை அடைவதே.

**வினா :** பிரம்மலோகம் வரைக்கும் உள்ள எல்லா உலகங்களின் இயல்பு யாது?

**விடை :** மறுபிறவியை அளிக்கக்கூடியவை.

**முன்னுரை**

பிரம்மலோகம் வரையுள்ள ஏனைய உலகங்களின் அழியும் தன்மை, காலத்திற்குட்பட்ட தன்மை இவற்றை அடுத்துக் கூறுகிறார்.

*ஸஹஸ்ரயுகபர்யந்த மஹர்யத் ப்ரஹ்மணோ விதுஹ்!*
*ராத்ரிம் யுக ஸகஸ்ராந்தாம் தே அஹோ ராத்ர விதோஜனாஹ்!!* (17)

**சொற்பொருள்**

*ஜனாஹ் - மக்களே! ப்ரஹ்மணஹ் - பிரம்மதேவனின், யத்அ ஹஹ் - எந்த பகல் (உள்ளதோ அதனை), சகஸ்ரயுக பர்யந்தம் - ஆயிரம் யுகங்களை முடிவாயுடையதாயும், விதுஹ் - அறிகிறார் களோ, தே - அத்தகையவன், அஹோராத்ரஹ் - இரவு பகலின் (காலத்தின்) தத்துவத்தை அறிந்தவர்களாவர் (கால தத்துவத்தை அறிந்தவர்களாவர்).*

**கருத்துரை**

*மக்களே! ஆயிரம் யுகம் பிரம்மாவிற்கு ஒரு பகல் என்றும், ஆயிரம் யுகம் அவருக்கு ஒரு இரவு என்றும் அறிபவர் இராப்பகலின் தத்துவத்தை அறிந்தவர்களாகின்றனர்.*

**விளக்கம்**

*பிரம்மலோகம் வரையுள்ள எல்லா உலகங்களும் காலத்திற்குட் டவையென்றும், அழியக்கூடியவையென்றும், பரிணாமம் (வளர்ச்சி)யுடையவை என்றும், பிறவிக்கு காரணமென்றும் இதற்கு முன் சுலோகத்தில் சொல்லப்பட்டது. இங்கு பிரம்மதேவனின் கால வரையறையை எடுத்துக்கூறி, அதன்மூலம் பிரம்மலோகமும் கால மெனும் வரையறைக்குட்பட்டவையே என்பதை பகவான் குறிப் பாக எடுத்துக்காட்டுகிறார்.*

*பிரம்மதேவனின் பகல் ஆயிரம் யுகம் உடையதும், இரவு ஆயி ரம் யுகம் கொண்டதும் ஆகும். இவ்வாறு பிரம்மதேவனின் ஒரு நாள் என்பது இரண்டாயிரம் யுகங்களைக் கொண்டது. மஹாயுகம் என் றால் மூன்று இலட்சத்து இருபது ஆயிரம் வருடங்களைக் கொண் டது. எவ்வாறெனின் -*

*கலியுகம் - 4,32,000 - வருடங்கள்*

*துவாபரயுகம் - 8,64,000 - வருடங்கள் (கலியுகத்தை விட இரண்டு பங்கு உடையது)*

*திரேதா யுகம் - 12,96,000 - வருடங்கள்*

*க்ருத யுகம் அல்லது சத்ய யுகம் - 17,28,000 வருடங்கள் (கலியு கத்தை விட நான்கு பங்கு அதிம்)*

மொத்தம் - 43,20,000 வருடங்கள் - 1 மஹாயுகம்.

மொத்தமாக 43,20,000 வருடங்கள் சேர்ந்தது ஒரு மஹாயுகம் - அவ்வாறு ஓராயிரம் மஹாயுகங்கள் பிரம்மாவிற்கு ஒரு பகல் - இன்னுமோர் ஆயிரம் மஹாயுகங்கள் ராத்திரி. அதாவது, 43,20,000 x 1000 = 43200,00,000 வருடங்கள் பிரம்மாவிற்கு ஒரு இரவு. 43200,00,000 x 2 = 8640000000 வருடங்கள் பிரம்மதேவனின் ஒரு நாள்.

இவ்வாறு பகலும் இரவும் 360 சேர்ந்தால் பிரம்மதேவனுக்கு ஒரு வருட காலம். அவ்வாறு வருடங்கள் 100 சேர்ந்தால் பிரம்மதேவனின் ஆயுட்காலம் முடிவடையும். இதனின்றும் பிரம்மலோகமும் காலத்திற்குப் பட்டதேயென்றும், ஏதோவொரு சமயத்தில் அதுவும் அழியக்கூடியதே என்பதும் தெளிவாகிறது. எனவே ஞானியானவன், அத்தகைய அழியக்கூடிய உலகினையோ, அவ்வுலகில் உள்ள போகக் கூட்டத்திற்காகவோ, ஆசைப்பட்டு அலைப்புறாது காலாதீதன் ஆன பரமாத்மாவையே எண்ணியிருந்தால் பிறவியினைக் கடக்க இயலும். எல்லாப் பொருள்களையும், பிரம்மாண்டத்தையும் காலம் விழுங்கக் கூடியது. காலத்தை பரமாத்மா ஒருவனே அழிப்பான். அவன் அந்த காந்தகன். எனவே எந்த மகானிடத்து தேச, காலம் முதலானவை அனைத்தும் கற்பனையாக இருக்கின்றனவோ அத்தகைய சத்ய சொரூபனையே பரமாத்மாவையே அடைக்கலமாகக் கொள்வது, காலத்திற்கு உட்பட்டவையிடத்து விரக்தியுடன் இருப்பது ஆகியவை காலதத்துவத்தை அறிந்தவனது இலட்சணம். இவ்வாறாகக் காட்சிப் பொருளான இவ்வுலகின் அழியும் தன்மை (காலதீனத்வம்), ஆத்மாவின் நிலையான தன்மை ஆகியவற்றை அறிந்தவனே காலஞானம் உடையவன். இரவு பகல் அறிந்தவன்.

**வினா :** பிரம்மதேவனின் பகல், இரவு எவ்வளவு காலப்பரிமாணம் கொண்டது?

**விடை :** ஒவ்வொன்றும் ஆயிரம் மஹாயுக காலம் கொண்டது.

**வினா :** இதனால் தெரிந்து கொண்டதென்ன?

**விடை :** பிரம்மலோகம் கூட காலத்திற்குட்பட்டது என்பது தெரிகின்றது. காலத்திற்கப்பாற்பட்டவன் பரமாத்மா ஒருவனே. எனவே பிறவியற்ற பெருவாழ்விற்கு, மோட்சத்திற்கு பரமாத்மாவையே அடைக்கலமடைதல் வேண்டும்.

முன்னுரை

இவ்வுலகின் அழியும் தன்மையையும் பரிணாமத்தையும் தெரிவிக்கிறார்.

*அவ்யக்தாத் வ்யக்தயஹ ஸர்வாஹ் ப்ரபவந்த்ய ஹராகமே!*
*ராத்ர்யாகமே ப்ரலீயந்தே தத்ரைவாவ்யக்த ஸம்ஞகே!! (18)*

சொற்பொருள்

*அஹராகமே* - பகலின் ஆரம்பத்தில், *அவ்யக்தாத்* - தோன்றாத (இயற்கை) நிலையிலிருந்து, *ஸர்வாஹ்* - எல்லா, *வ்யக்தயஹ்* - சராசரவஸ்துக்களும், *ப்ரபவந்தி* - வெளிப்படுகின்றன. (பிறக்கின்றன) *ராத்ரி ஆரமே* - இரவு வரும்போது, *அவ்யந்த ஸம்ஞகே* - தோன்றாதவை என்று சொல்லப்படுகின்ற, *தத்ரைவ* - அதனுள்ளேயே (இயற்கையிலேயே) *ப்ரலீயந்தே* - ஒடுங்குகின்றன.

கருத்துரை

பிரம்மாவின் பகல் வரும் போது தோன்றா நிலையிலிருக்கும் (இயற்கை) எல்லா சராசரி வஸ்துக்களும் பிறக்கின்றன. மறுபடியும் இரவு வரும் போது அவ்வியற்கையிலேயே ஒடுங்கி மறைகின்றன.

விளக்கம்

பரமாத்மாவைத் தவிர ஏனைய வஸ்துக்களனைத்தும், பிறப்பு, இறப்பு உடையவையே ஆகும். அப்பொருள்கள் அனைத்தும் பரமாத்வினிடத்திலேயே கற்பிதம் ஆக உள்ள மாயையில் (அவ்யக்தம் அல்லது மூலப்பிரகிருதி) உற்பத்தியாகி, லயித்து இருக்கும். நித்திரை என்னும் தாமத நிலையில் கனவுப் பொருள்கள் அனைத்தும் சிருஷ்டிக்கப்பட்டு மறுபடியும் அவ்வுறக்கத்திலேயே மறைந்து விடுவதைப் போல, விழித்துக் கொண்டவனுக்கு அப்பொருள்களுடன் எந்தவிதமான தொடர்பும் இல்லாததைப் போல, இவ்வுலகமனைத்தும் பரமாத்மாவிடத்து இயற்கை உற்பவித்து, மறுபடியும் அதனிடத்தேயே மறைகின்றது. எனவே சிருஷ்டியில் உண்மையில் பரமாத்மாவிற்கு எந்தவிதமான தொடர்பும் இல்லை. ஆயினும் அவை அனைத்திற்கும் ஆதாரமாக, இருப்பிடமாக அவன் உள்ளான்.

**வினா :** இவ்வுலகின் பொருள்களனைத்தும் எதனின்றும் உற்பத்தி ஆகின்றன?

**விடை :** *அவ்யக்தம் எனப்படும் மூலப்பிரகிருதி அல்லது மாயையி னின்றும் உற்பத்தி ஆகின்றன.*

**வினா :** *எப்போது அடங்கும்? எங்கு ஒடுங்கும்?*

**விடை :** *பிரம்மதேவனின் இரவு தொடங்கும் போது ஒடுங்கும். எங்குத் தோன்றியதோ அந்த மூலப்பிரகிருதியிலேயே ஒடுங்கும்.*

### முன்னுரை

தெய்வ தத்துவத்தை அறியும் வரை மக்கள் இவ்வாறே மறுபடி யும் மறுபடியும் பிறந்தும் இறந்தும் இருப்பர் என்கிறார்.

*பூதக்ராமஷ் ஸ ஏ வாயம் பூத்வா பூத்வா ப்ரலீயதே!*
*ராத்ரியாக மே அவசஷ பார்த்த ப்ரபவத்ய ஹராகமே!! (19)*

### சொற்பொருள்

*பார்த்த - அர்ஜுனா! ச ஏவ அயம் பூத - அத்தகைய இந்த உயிர்த்தொகை, அவச ஹ - தன் வசத்தில் இன்றி கர்மாவிற்கு உட் பட்டு, பூத்வா பூத்வா - பிறந்து பிறந்து (பல பிறவிகளெடுத்து), ராத்ரி ஆகமே - (பிரம்மதேவனின்) இரவின் ஆரம்பத்தில், ப்ரலீய தே - ஒடுங்குகிறது, (மறுபடியும்), அஹராகமே - (பிரம்மதேவனின்) பக லின் ஆரம்பத்தில், ப்ரபவதி - பிறக்கின்றது.*

### கருத்துரை

*அர்ஜுனா! இந்த உயிர்த்தொகை (முன்கல்பத்திலிருந்த) கர்மா விற்கு வசப்பட்டுப் பிறந்து பிறந்து (பிரம்மதேவனின்) இரவின் ஆரம்பத்தில் (மறுபடியும்) ஒடுங்குகின்றது. மறுபடியும் (பிரம்மதே வனின்) பகலின் ஆரம்பத்தில் பிறக்கின்றது.*

### விளக்கம்

*முன் கல்பத்தில் இருந்த உயிர்த்தொகையே கர்மாவிற்குட் பட்டு மறுபடியும் இந்த கல்பத்திலும் பிறக்கின்றது. மறுபடியும் இறந்து மறுபடியும் பிறந்து - இவ்வாறு சம்சாரமெனும் பெரிய சக்கரத்தில் சுழல்கிறது.*

'பூர்வாபூத்வா'' என்று சொல்வதால் ஜீவனுக்கு ஒன்றிரண்டு பிறவி மட்டுமே யல்ல (ஞானத்தை அடைவதால்), கர்மம் முடியும் வரை எத்துணையோ பிறவிகள் எடுக்க வேண்டுமென்பதும் தெளி

வாகிறது. ஜீவன் கர்மத்திற்கு உட்பட்டவன் ஆதலால் 'அவசன்' எனப்படுகிறான். ஆசை, பாசம் எனும் சங்கிலியால் பிணைக்கப்பட்டுள்ள அவன் தனக்கென்று ஒரு சுதந்திரமற்று இருக்கிறான். எனவே கடுமையாக முயற்சி செய்து ஆத்மஞானத்தினைப் பெற்று அதன் வழி கர்ம பந்தத்தினைத் தொலைத்து, பிறப்பிறப்புடன் கூடிய சம்சார சக்ரம் என்னும் வலயத்தினின்றும் விடுதலை பெற வேண்டும். ஜீவன் இதுவரை எத்துணையோ கோடி பிறவிகள் எடுத்துள்ளான். நமது நற்பலன் காரணமாக மனிதப் பிறவி எடுத்துள்ளோம். அத்தகைய மனிதப் பிறவியை நல்ல முறையில் பயன்படுத்திக் கொண்டு, இறைஞானத்தை அடைந்து பிறப்பெனும் தொடருக்கு ஒரு முற்றுப் புள்ளி வைத்தல் வேண்டும். இதுவரை விவேகமற்ற தன்மையால் மக்கள் 'கமா' (, Coma) வைத்து வந்துள்ளன. இப்போதாவது உணர்ந்து இறைவனை அடைக்கலமடைந்து பிறவியெனும் தொடரை முடித்துக் கொள்வது சிறந்தது.

**வினா :** கர்மம் முடியும் வரை ஜீவனின் கதி எப்படியிருக்கும்?

**விடை :** அவர்கள் சிருஷ்டி ஆரம்பத்தில் பிறந்து, அதன் முடிவில் ஒடுங்கி நிற்பர்.

**வினா :** கர்ம பந்தம் எதனால் தொலையும்?

**விடை :** ஆத்மஞானத்தினால், சுயரூப அனுபவத்தினால் (ஞானாக்கனி ஸஸ்ர்வ கர்மாணி பஸ்ம ஸாத்க்ருதே ததா - 4-37)

முன்னுரை

இவ்வியற்கையை விட பரமாத்மா அதீதன், அழிவற்றவன் என்கிறார்.

*பரஸ்தஸ்மாத்து பாவோ அன்யோ அவ்யக்தோ அவ்யக்தாத் ஸநாதனஹ்!*
*யஹ் ஸ ஸர்வேஷு பூதேஷு நச்யத்ஸு ந விநச்யதி!!* (20)

சொற்பொருள்

யஹ் பாவஹ் - எந்த பரமாத்மவஸ்து (அக்ஷரபரபிரம்மம்), தஸ்மாத் அவ்யக்தாத் - அவ்யக்தத்தைக் காட்டிலும் (இயற்கை) அன்யஹ - வேறானது, பரஹ் - சிறந்தது, அவ்யக்தஹ் - இந்திரியங்களுக்குப் புலப்படாதது, ஸநாதனஹ் - ஸநாதனமாய் புராதனமாய் (அநாதியாய்) உள்ளதோ, ஸஹ் - (பாவஹ்) - அந்த பரமாத்மா, ஸர்வேஷு பூதேஷு - எல்லா உயிர்களும், நச்யதஸு - அழிகையில், ந விநச்யதி - அழிவதில்லை.

**கருத்துரை**

எந்த பரமாத்மா, இயற்கையை விட மேலான, நிலைத்துள்ள, இந்திரியங்களுக்கு எட்டாத, புராதனமான உள்ள இயற்கையொன் றுள்ளதோ. அது உலகின் எல்லா உயிர்களும் அழிந்தாலும் அழிவற்ற தாகவே இருக்கும்.

**விளக்கம்**

இதற்கு முன் சுலோகத்தில் அவ்யதத்தைக் (மாயா பிரகிருதி) குறித்துச் சொல்லப்பட்டது. இப்போது அதனைவிட மேலான பொருள் ஒன்று உண்டு என்றும், அதுவே நிலையான பரபிரம்மம் என்றும் இங்குத் தெரிவிக்கிறார். மாயைக்குட்பட்ட இவ்வுலகில் எல்லா உயிர்களுக்கும், பரமாத்மாவிற்கும் இடையே பல வேற்று மைகள் உண்டு. எவ்வாறெனின் -

| உயிர்கள் | பரமாத்மா |
|---|---|
| 1. மாயையைக்குட்பட்டவர்கள் | 1. மாயாதீதன் இயற்கையை தன் வசத்து வைத்திருப்பவன் |
| 2. அற்பவடிவினர் | 2. மிக உன்னதமான சித் வடிவினன் |
| 3. இந்திரியங்களுக்குப் புலப்படுவோர் | 3. இந்திரியங்களுக்கு எட்டா தவன் |
| 4. முதல் உடையவர் | 4. அநாதி வடிவினன் (சநாதனன்) |
| 5. அழிவடையக்கூடியவர் | 5. அவிநாசி - அழிவற்றவன் |

இவ்வாறாக, எல்லா உயிர்களுக்கும் இறைவனுக்கும் இடையே உள்ள வேற்றுமைகள் இந்த சுலோகத்தில் நன்கு நிரூபிக் கப்பட்டுள்ளன. இதனால், ஜீவன் இறைவனை ஏன் பூசித்தல் வேண் டும், அர்ச்சித்தல் வேண்டும், தியானித்தல் வேண்டும் என்பது தெளி வாகிறது. அழிவடையக் கூடியவை அழிவற்றவனை பூசித்தேயாக வேண்டும்.

எனவே ஜீவர்கள் தம் அழியக்கூடிய உடலத்தோடு ஒன்றிவிடா மல், தம் அழியக்கூடிய உலகம் ஐசுவரியங்களுக்கு கர்வமடையா மல், தம் உள்ளிருக்கும் ஒளிமயமாக பிரகாசிக்கும் பராத்பரனை, இதயத்திலிருக்கும் பரமாத்மாவினை வேண்டி, தியானித்து, முறை யாக அவனுடன் ஐக்கியமடைந்து பிறவிப் பலனைப் பெறுவாராக.

**வினா :** பரமாத்மா எத்தகையோன்?

**விடை :** *(1)* அவ்யந்தரிதைவிட (மாயை) வேறானவன், *(2)* மிக மேன்மையான உருவையுடையோன், *(3)* இந்திரியங்களுக்கு எட்டா தவன், *(4)* அநாதி வடிவினன் (சநாதனன்) *(5)* எல்லா உயிர்களும் அழிந்தாலும், தான் அழியாதவன்.

### முன்னுரை

அத்தகைய பரமாத்மாவை அடைந்தவர்க்கு மறுபிறவி இல்லை என்கிறார்.

*அவ்யக்தோ அக்ஷர இத்யுக்த ஸ்தமாஹு; பரமாம் கதிம்!*
*யம் ப்ராப்ய ந நிவர்தந்தே தத்தாம பரமம்மம!!      (21)*

### சொற்பொருள்

(யஹ் - எந்தபரமாத்மா), அவ்யந்தஹ் - (இந்திரியங்களுக்கு) புலப்படாதவனென்றும், அக்ஷரஹ் இதி - அழிவற்றவன் என்றும், உக்தஹ - சொல்லப்படுகின்றதோ, தம் - அவனை, பரமாம் - மிக உத்தமமான, கதிம் - அடையக் கூடிய நிலையாக, ஆஹுஹ் - (வேதவித்தகர்கள்) சொல்லுவர், யம் - எதனை, ப்ராப்ய - அடைந்து ந நிவர்தந்தே - திரும்பவும் பிறப்பதில்லையோ, தத் - அது, மம - என்னுடைய பரமம் - மேன்மையான, தாம - நிலை (வடிவம்).

### கருத்துரை

எந்த பரமாத்மா இந்திரியங்களுக்குப் புலப்படாதவன், அழி வற்றவன் என்று சொல்லப்படுகிறதோ, அவனையே மிக உன்னத மான பரமகதியாக (வேத விற்பன்னர்கள்) சொல்லுகிறார்கள். எதனை அடைந்தால் மறுபிறவி இல்லையோ அதுவே என் மிக உன்னதமான நிலை (சொரூபமாகி)யாக உள்ளது.

**விளக்கம்**

*உலகில் உள்ள எல்லாப் பதவிகளையும் விட அடையக்கூடிய மிகச் சிறந்தது எது, (மறு பிறவி) இல்லையோ அவற்றை இங்குச் சொல்கிறார். ஸதூலப் பார்வைக்கு எட்டாதவன் அழிவற்றவன் என பரமாத்மாவே மிக உன்னதமான பரமகதி என்று வேத சாஸ்திரங்கள் அனைத்தும் சொல்கின்றனன. எனவே அழியக்கூடியவற்றுக்கு ஆசைப்படுவதில் எந்தவிதமான பலனும் இல்லை. அக்ஷரம் - அழி வற்ற ஒன்றையே நாம் விரும்புதல் வேண்டும். அழியக்கூடியவை ஜீவர்கள் அடைய வேண்டிய மேன்மை நிலையாக ஆக முடியாது. பரமகதி எதுவோ அதனையே விரும்ப வேண்டுமே தவிர அற்ப கதியை, அற்ப நிலையையல்ல. மனிதன் அடையக்கூடிய பரமகதி அக்ஷரபரபிரம்மமே. எனவே விவேகிகள் மாயைக்கு உட்படாது மிகச் சிறந்த பரமாத்மகதியையே அடைய முயற்சித்தல் வேண்டும்.*

(Aim at the lion and miss it rather than hunt a jackal and catch it) - *சிம்மத்தை வேட்டையாடி குறிதவறினாலும் தவறில்லை. கையில் சிக்கிய நரியினால் பலன் என்ன? என்பது ஆங்கிலப் பழமொழி.*

*இனி அத்தகைய பரமாத்மாவை அடைந்தவர்க்கு ஏற்படும் பலன் என்ன? அதுவே மறுபிறவியின்மை, உலகில் எதனை அடைந் தாலும் மனிதன் பிறக்க வேண்டியதே, ஆயின் பரமாத்மாவை அடைந்தவர்க்கு மறுபிறவியில்லை. சம்சார துக்கமில்லை. மாயைக் குட்பட்ட எந்த நிலையையடைந்தாலும், எந்த நிலையாயினும் விகாரமடைந்து, வளர்ச்சியடைந்து, பிறப்பு, இறப்பு எனும் இவற் றோடு கூடியிருக்கும் - மாயைக்கு உட்படாத நிலை தெய்வநிலை யொன்றே. அத்தகைய பரந்தாம நிலையையடைந்தவர் பிறப்பு இறப்பினின்றும் விமுக்தி அடைந்து, பிறவியற்ற நிலையான கைவல்ய பதவியை அடைகிறார்கள். மீண்டும் இந்த சம்சார துக்கத் தும் சிக்காது அழிவற்ற பரமாத்மா நிலையை அடைய வேண்டும்.*

**வினா :** *உலகில் உள்ள எல்லா நிலைகளை விட மேன்மையானது எது?*

**விடை :** *புலப்படாத, அழிவற்ற பரமாத்ம நிலையே அது.*

**வினா :** *அதனை அடைந்தவர் அடையும் பலன் யாது?*

**விடை :** *அவர்கள் மீண்டும் ஜனனமரணம் என்ற சம்சார துக்கத்தினுள்*

எந்நாளும் சிக்குவதில்லை. மறுபிறவி இல்லை.

**வினா :** எதனைக் கடந்தால் மனிதன் பிறவியடைய மாட்டான்?

**விடை :** பரமாத்மா பதவியை

**வினா :** பரமாத்மா எத்தகையோன்?

**விடை :** இந்திரியங்களுக்கு அப்பாற்பட்டவன், அழிவற்றவன்.

*புருஷஹ ஸ பரஹ பார்த்த பக்த்யா லப்யஸ்த்வனன்யயா!*
*யஸ்யாந்தஹ ஸ்தானி பூதானி யேன ஸர்வமிதம் ததம்!!* (22)

### சொற்பொருள்

பார்த்த - அர்ஜுனா!, பூதானி - உயிர்கள், யஸ்ய - எவன், அந்தஹ ஸ்தானி - உள் இருக்கின்றனவோ, யேன - எவனால், இதம் ஸர்வம் - இவ்வுலகமனைத்தும், ததம் - பரவியிருக்கின்றதோ, ஸஹ பரஹ புருஷ ஹ - அந்த பரமபுருஷன், அனன்யா - (பிற விஷயங்களற்ற, சலனமற்ற) அனன்ய, பக்த்யாது - பக்தியினால், லப்யஹ - அடையப்படுகிறான்.

### கருத்துரை

அர்ஜுனா! எவனிடத்து, உயிர்களனைத்தும் வசிக்கின்றனவோ, எவனால் இவ்வுலகமனைத்தும் வியாபித்து இருக்கின்றதோ, அத்தகைய பரமபுருஷன் (பரமாத்மா) சலனமற்ற அனன்ய பக்தியினாலேயே அடையப்படுகிறான்.

### விளக்கம்

பரமாத்மாவின் வடிவம், அவனை அடையும் மார்க்கம் அதாவது அடையக்கூடிய பொருள் அடையும் வழி இரண்டும் இச்சுலோகத்தில் தெரிவிக்கப்பட்டுள்ளது. பலவிதமான உயிர்களால் நிறைந்து, வியாபித்து, இவ்வுலகமனைத்தும் எங்குளது?

அதற்கு ஆதாரம் எது? பரமாத்மா எனும் ஆதாரத்தின் மீது, இருப்பிடத்தின் மீது இந்த சராசரமனைத்தும் கயிற்றின் மீது பாம்பைக் கற்பிப்பது போல் கற்பிக்கப்பட்டுள்ளது. உருவகப்படுத்தப்பட்ட வஸ்துவின் நிலை, இருப்பிட வஸ்துவேயாகும். எனவே இவ்வுலகமனைத்தும் சத்வஸ்துவான பரமாத்மாவினுள் அடங்கியி

ருக்கின்றன. கனவுலகமனைத்தும் விழித்திருப்பவனிடத்திலேயே இருப்பதைப் போல இவ்வுலகின் தாவர, ஜங்கம பொருட்கள், உயிர்களனைத்தும், உலகமனைத்தும் ஆத்மாவிலேயே அடங்கியிருக்கின்றன. எனவே ஆத்மாவினால் தான் அது வியாபித்துள்ளது. வெண்ணை எவ்வாறு பாலில் பரவிநிற்கிறதோ, அவ்வாறே பரமாத்ம உலகமனைத்தும் வியாபித்துள்ளார். (யேன ஸர்வமிதம் ததம்)

அத்தகைய சர்வ வியாபியான பரமாத்மாவை ஜீவர்களுக்கு எவ்வுபாயத்தினால் காணக்கூடும்? என்ற வினாவிற்குச் சரியான விடை அளிக்கப்பட்டுள்ளது. அனன்ய பக்தி என்பதால் மோட்ச பிராப்திக்கு சாதாரணமான பக்தி போதாது என்பதும், தீவிரமான பக்தி தேவையென்பதும் புலப்படுகின்றது. அன்யமற்றது 'அனன்யம்' அதாவது இறைவனைத் தவிர வேறெதெனையும் விரும்பாதிருத்தல் என்பது பொருள். அழியக்கூடிய உலக விஷயங்களின் மீது சிறிது ஆசை, இறைவனின் மீது சிறிது பக்தி என்பது அனன்ய பக்தியல்ல. பக்தி மார்க்கம் மிகவும் எளிதானது. எனவே அநேகமாக ஒவ்வொரு அத்தியாயத்தின் இறுதியிலும் அதனைப் பற்றிச் சிறிது கூறுகிறார். எந்த யோகத்தைப் பற்றிப் போதித்தாலும் அதன் இறுதியில் பக்தியை வலியுறுத்துகிறார். ஏனெனில் அது எளிதானது மட்டுமின்றி இன்றியமையாதது.

இவ்வாறாக அன்பு பக்தியினால் அப்பரமபுருஷன் அடையக்கூடியவன் என்று பகவான் இங்குத் தெரிவிப்பதால், இவ்விஷயத்தில் மக்கள் எவ்வித ஐயமுமின்றி, அத்தகைய நிலையை உடனேயே மேற்கொண்டு மோட்ச சாம்ராஜ்யத்தில் இடம்பெற வேண்டும். இறைவனை அடைவதற்கான மார்க்கம் எது? என்று பலரும் கேட்கின்றனர். அத்தகையோர் இந்தச் சுலோகத்தை நன்கு கிரகித்து அனன்ய பக்தியே அதற்கான மார்க்கம் என நிச்சயித்துக் கொண்டு அதன் வழியில் முயற்சி செய்து சாதித்தல் வேண்டும்.

இங்கு இறைவனை 'பரம புருஷன்' என வர்ணிக்கிறார். ஏனையோரனைவரும் சாமான்ய புருஷர்கள். அவன் ஒருவனே பரமபுருஷன். புருஷன் பக்தி முதலான சாதனைகளால் பரமாத்மாவிடம் ஒன்றி பரமபுருஷன் ஆதல் வேண்டும். அதுவே வாழ்க்கையின் இலக்கு என ஒவ்வொருவரும் உணர்தல் வேண்டும்.

**வினா :** இவ்வுலகமனைத்தும் எவனிடத்து நிலை பெற்றிருக்கின் றது? எவனால் வியாபித்து இருக்கின்றது?

**விடை :** பரமாத்வினுள் அடங்கியிருக்கின்றது. அவனால் வியாபிக் கப்பட்டுள்ளது.

**வினா :** பரமாத்மாவை எங்ஙனம் அடைதல் வேண்டும்?

**விடை :** அனன்ய பக்தியினால்.

### முன்னுரை

எம்மார்க்கத்தில் சென்றால் மக்கள் மறுபடியும் சம்சாரத்தில் பிறக்காதிருக்கின்றனரோ எதில் திரும்பவும் பிறப்பதில்லையோ அவ் வழிகள் இரண்டையும் நான்கு சுலோகங்களில் அடுத்துச் சொல் கின்றனர்.

*யத்ர காலே த்வனாவ்ருத்தி மாவ்ருத்திம் சைவ யோகினஹ்*
*ப்ரயாதா யாந்தி தம் காலம் வக்ஷ்யாமி பரதர்ஷப!!* (23)

### சொற்பொருள்

பரதர்ஷப - பரதகுல சிரேஷ்டனான அர்ஜுனா!, யத்ரகாலே - எந்த காலத்தில், ப்ரயாதாஹ் - (சரீரத்தை விடுத்து), போன, யோகி னஹ் - யோகிகள், அநாவிருத்திம்து - மறுபிறவி வராமையும் ஆவ் ருத்திம் உரவ - திரும்பி வருதலையும் யாந்தி - அடைகிறார்களோ தம்காலம் - அந்தக் காலத்தினை, வக்ஷ்யாமி - சொல்கிறேன்.

### கருத்துரை

பரத குல சிரேஷ்டனான அர்ஜுனா! எக்காலத்தில் சரீரத்தை விடுத்துப் போகிற யோகிகள் முக்தியடைந்து மறுபடியும் பிறப்ப தில்லையோ, எக்காலத்தில் போகின்றவர்கள் மறுபடியும் பிறக்கின் றனரோ அக்காலத்தைப் பற்றிச் சொல்கிறேன் கேள்!

### முன்னுரை

மறுபிறப்பற்றவர்களது 'அர்ச்சிராதி' மார்க்கங்களைப் பற்றித் தெரிவிக்கின்றார்.

*அக்னிர் ஜ்யோதி ரஹ சுக்ல ஹ் ஷண் மாஸா உத்தராயணம்!*
*தத்ர ப்ரயாதா கச்சந்தி ப்ரஹ்ம ப்ரஹ்ம விதோ ஜனாஹ் (24)*

### சொற்பொருள்

அக்னிஹ் - அக்னி, ஜ்யோதிஹ் - ஒளி, அஹஹ் - பகல், சுக்லஹ் - சுக்ல பட்சம், ஷண்மாகாஹ் - ஆறு மாதங்களையுடைய, உத்தாய ணம் - உத்தராயணம், (யத்ர ருந்தி - எந்த காலத்தில் சரீரத்தை விட்டுப் போகிறார்களோ), தத்ர - அந்த, காலத்தில், ப்ரயாதாஹ் - விடுத்த - ப்ரம்மவிதஹ் - பிரம்மஞானியான ஜனாஹ் - மக்கள் பிரம்ஹ - பிரம்மத்தை, கச்சந்தி - அடைகிறார்கள்.

### கருத்துரை

அக்னி, பிரகாசம், பகல், சுக்ல பட்சம், ஆறு மாதங்களையுடைய உத்தராயணம் இவையுள்ள காலத்தில் உடலை நீத்துப் போகின்ற பிரம்ம ஞானிகள் பிரம்மத்தையே அடைகிறார்கள்.

### விளக்கம்

ஞானமென்பது ஒளி, அஞ்ஞானம் இருள். ஒளி வடிவான பிரம்மஞானம் உடையவன் பிரம்மத்தையே அடைவான். தேகத்தை விட்டுச் செல்லும் போதும், தேகத்துடன் இருக்கையிலும், அவன் பிரம்ம வடிவினனாகவே இருக்கிறான். ப்ரஹ்மவித்ப்ஹைபவ பவதி பிரம்ம ஞானி பிரம்மமேயாகிறான் என சுருதிகள் கூறுகின்றன. இந்த சுலோகத்தில், 'பிரம்ம விதோஜனாஹ்' என்று சொல்வதால் பிரம்மத்தையறிந்த (அனுபவித்த)வர்களோ அத்தகைய மகோன்னதமான நிலையை அடைய முடியுமே அன்றி ஏனையோரால் இயலாது என்பது தெளிவாகிறது. மேலும் 'ஜனாஹ்' (மக்கள்) என்று மிக எளிதான சொல்லைப்பயன்படுத்தியிருப்பதால் ஜாதி, மதம் என்ற பாகுபாடின்றி அனைவரும் தகுதி பெற்றிருப்பின் பிரம்மபதம் அடைய முடியும் என்பது தெரிகிறது.

பிரம்ம ஞானம் ஒளிபொருந்தியதாதலால், ஒளியுடன் கூடிய சில பொருள்கள் இங்கு அதனுடன் உவமிக்கப்பட்டது - (1) அக்னி, (2) ஜோதி, (3) பகல், (4) சுக்லபட்சம், (5) உத்தராயணம். இதில் முதல் நான்கும் ஒளியைக் காட்டும். ஐந்தாவதான உத்தராயணம் ஊர்த்தவ முகமாக (வடக்கு) செல்வதைக் குறிக்கின்றது. ஒளி வடிவான ஞானத்தை அடைந்தவன் பிரம்மத்தைத் தவறாது அடைவான் என்பது இந்த சுலோகத்தின் உட்பொருள். ஜீவன் பரமாத்மாவை

அடைய வேண்டுமாயின் ஒளியினிடத்தே - அதாவது ஞானத்திலே, ஆத்மாவை அறிவதிலேயே நிலைபெற்றிருத்தல் வேண்டுமே தவிர இருள் வடிவான அஞ்ஞானத்தில் அல்ல. உண்மைவழியிலேயே ஊர்த்துவ மார்க்கமாகவே செல்ல வேண்டுமே தவிர, அதோ மார்க்கத்தில், அசத்திய வழியில் அல்ல. ஊர்த்தவ திருஷ்டி (ஆத்ம திருஷ்டி)யே பெற்றிருத்தல் வேண்டுமேயன்றி. அதோ திருஷ்டி (உலகியல் பார்வை, பாவ திருஷ்டி) இல்லை. இவ்வாறான ஊர்த்துவ திருஷ்டியை, ஒளிபொருந்திய ஞான திருஷ்டியை உத்தராயணம், அக்னி முதலான ஒளிபொருந்திய பொருள்கள் காட்டுகின்றன.

**வினா :** பிரம்ம ஞானி எந்த வழியில் செல்வர்?

**விடை :** (1) அக்னி, (2) பிரகாசம், (3) பகல், (4) சுக்லபட்சம், (5) உத்தராயணம் என்ற உயர்ந்த வழியில் செல்வர்.

**விடை :** பிரம்மஞானி எதனை அடைவான்?

**விடை :** பிரம்மத்தையே அடைவான்.

### முன்னுரை

இனி மறுபிறவியுடைய 'தூமாதி' மார்க்கத்தினைக் குறிக்கிறார்.

*தூமோ ராத்ரிஸ்ததா க்ருஷ்ணஹ ஷண்மாஸா த க்ஷிணாயனம்!*
*தத்ர சாந்த்ரமஸம் ஜ்யோதிர் யோகீ ப்ராப்ய நிவர்ததே!! (25)*

### சொற்பொருள்

தூமஹ் - புகை, ராத்ரிஹ் - ராத்திரி, தா - அவ்வாறே, க்ருஷ்ணஹ் - கிருஷ்ணபட்சம், ஷண்மாஸாஹ் - ஆறுமாதங்களையுடைய, தக்ஷிணாயனம் - தக்ஷிணாயனம், (யத்ர ஸன்தி - எந்த வழியில் இருக்கின்றதோ), தத்ர - அவ்வழியில் யோகி - யோகி (சகாம கர்மயோகி), சாந்திரமஸம் - சந்திரன் தொடர்பான, ஜோதிஹ் - பிரகாசத்தை, ப்ராப்ய - அடைந்து, விவர்த்ததே - மறுபடியும் பிறக்கிறான்.

### கருத்துரை

புகை, இரவு, கிருஷ்ணபட்சம், ஆறுமாதங்களையுடைய தக்ஷிணாயணம் எந்த மார்க்கத்தில் உள்ளத்தில் அம்மார்க்கத்தில் தேகத்தை விடுத்த சகாமகர்ம யோகி சந்திரனது ஒளியைப் பெற்றிருந்து மறுபிறவியை அடைகிறான்.

**விளக்கம்**

ஞானம் ஒளியுடன் கூடியிருப்பதைப் போல் அஞ்ஞானம் இருள் வடிவாகயுள்ளது. அத்தகைய இருள் பொருந்திய பொழுதில் இறப்பவன் மறுபடியும் பிறக்கிறான். சம்சார சக்கரத்தில் சிக்கிக் கொள்கிறான். இங்கு யோகி என்றால் பலனைக் கருதி கர்மங்களைச் செய்பவன் என்று பொருள். ஆத்ம ஞானம் இல்லாமையினால் அவன் மறுபடியும் பிறக்கிறான். அஞ்ஞான இருளைக் காட்டுவ தற்கு இங்கு சில பொருள்கள் உவமிக்கப்பட்டுள்ளன. அவையா வன - (1) புகை, (2) இரவு, (3) கிருஷ்ணபட்சம், (4) தஹிணாயனம். இதில் முதல் மூன்றும் இருளைக் குறிப்பவை. நான்காவது அதோ மார்க்கத்தைக் காட்டுகிறது. இவ்வாறாக இருள் நிறைந்த சமயத்தில் இறப்பவன் அதாவது ஆத்மஞானமற்றவன் அவனது கர்மாவின்படி சந்திரலோகம் முதலானவற்றையடைந்து மறுபடியும் சிறிது காலத் தில் பூலோகத்தில் பிறக்கிறான். (க்ஷீணே புண்யே மர்த்ய லோகம் விசந்தி) மேற்சொன்ன தக்ஷிணாயனம் அவித்தையினால் மனித னுக்கு ஏற்படும் அதோ திருஷ்டியைத் தெரிவிக்கின்றது.

முன் சுலோகத்தில் 'உத்தராயண், தக்ஷியாணயன்' என்பவற்றின் உட்பொருளை உணர்தல் நன்று, ஏனெனில் மகான்கள் பலர் தக்ஷி ணாயனத்தில் கூட தேகத்தை விட்டுச் செல்கின்றனர். மூர்க்கர்கள் பலரும் உத்தராயணத்தில் கூட தேகத்தை விட்டுச் செல்கின்றனர், வெளிப்பொருளை மட்டும் எடுத்துக் கொண்டால் தக்ஷிணயனத்தில் தேகத்தை விட்டுச் செல்லும் ஞானிகள் மறுபடியும் பிறக்கின்றனர் என்றும், உத்தராயணமுன தேகத்தை விட்டு மூடர்கள் பிறவி எடுப்ப தில்லை என்றும் சொல்ல வேண்டிவரும். அது உண்மைக்கப்பாற் பட்டதேயாகும். எனவே உத்தராயண, தக்ஷிணயம் என்பதை உத்தர மார்க்கம், தக்ஷிண மார்க்கம் என்றும், ஞான, அஞ்ஞானம் என்றும் கூட பொருள் கொள்வதே சரி என்று படுகிறது.

**வினா :** ஸகாமயோகி (அல்லது அஞ்ஞானி) ஏ மார்க்கத்தில் இறக்கி றான்?

**விடை :** புகை, இரவு, கிருஷ்ணபட்சம், தக்ஷியாணயனம் - என்னும் இருள் நிறைந்த மார்க்கத்தில் இறக்கிறான்.

**வினா :** அவனுக்கு பிறவி ஏற்படுமா?

**விடை :** ஏற்படும். அவன் திரும்பவும் பிறந்தே தீருவான்.

**வினா :** ஆத்ம ஞானத்தையடைந்து, ஊர்த்தவ மார்க்கத்தில் சென்று, பிறவியற்ற பெருவாழ்வை பெறுவதே சரியானது.

*சுக்லக்ருஷ்ணே கதீ ஹ்யேதே ஜகதஹ சாச்வதே மதே!*
*ஏகயா யாத்யனா வ்ருத்தி மன்யயா வர்ததே புனஹ!! (26)*

**சொற்பொருள்**

சுக்ல கிருஷ்ணே - சுக்ல, கிருஷ்ண என்னும் ஏதே கதீஹி - இரண்டு பிரசித்த பெற்ற மார்க்கங்களும், ஜகரஹ - உலகிற்கு, சாச்வதே மதே - சாசுவதமானவை என்று கருதப்படுகின்றன, ஏகயோ - அந்த ஒன்றினால் அனாவ்ருத்திம் - பிறவாமையை (யோகி) யாதி - அடைகிறான், அனன்யா - ஏனைய ஒன்றினால், புனஹ - மறுபடியும், ஆவர்ததே - பிறக்கின்றான்.

**கருத்துரை**

சுக்ல, கிருஷ்ண மார்க்கங்கள் இரண்டும், உலகில் எப்போதும் நிலையாக இருப்பவையாக எண்ணப்படுகின்றன. அதில் ஒன்றினில் பிறவாமையும், மற்றொன்றில் பிறப்பையும் யோகி எய்துகிறான்.

**விளக்கம்**

உலகில் இரண்டு மார்க்கங்கள் உள்ளன. அவை மனிதனை ஊர்த்துவமாக அழைத்துச் செல்லும் என்றும், மற்றொன்று மிகவும் கீழான நிலைக்கு இட்டுச் செல்லும் என்றும் இங்குச் சொல்லப்பட்டது. ஒளியுடன் கூடிய ஞானமார்க்கத்தினைப் பின்பற்றுபவன் பிறவாமையை (மோட்சத்தை) அடைகிறான் என்று, இருள் நிறைந்த அஞ்ஞான மார்க்கத்தைப் பின்பற்றுபவன் மறுபடியும் பிறவியை அடைகிறான், சம்சாரத்தில் பிறப்பு, இறப்பு இரண்டையும் மறுபடியும் என்று சொல்லப்பட்டது. இவ்வாறாக ஒன்று முக்தியையும் இன்னொன்று பந்தத்தையும் ஏற்படுத்துகிறது. எனவே மக்கள் தம் அறிவைப் பயன்படுத்தி மேல்நிலையை அளிக்கவல்ல சுக்ல மார்க்கத்தையே பின்பற்றுதல் வேண்டும். பந்தத்தை அளிக்கவல்ல இரண்டாவது மார்க்கத்தை ஒதுக்குதல் வேண்டும்.

**வினா :** உலகில் எத்தனை வழிகள் உள்ளன? அவை எவை?

**விடை :** இரண்டு மார்க்கங்களே உள்ளன. (1) ஒளிமயமான உத்தராயண மார்க்கம் (ஞானமார்க்கம்), (2) இருள் நிறைந்த தக்ஷிணாஅயனம் (அஞ்ஞான மார்க்கம்).

**வினா :** எனவே ஞானி என்ன செய்தல் வேண்டும்?

**விடை :** *முதல் மார்க்கத்தையே அனுசரித்தல் வேண்டும்.*

**முன்னுரை**

இவ்விரண்டு வழிகளையும் பற்றி அறிந்தவர்களைப் போற்றிப் புகழ்ந்து, அர்ஜுனனை நீ யோகியாவாய் என்று கூறுகின்றார்.

*நைதே ஸ்ருதீ பார்த்த ஜானன் யோகீ முஹ்யதி கஸ்சன!*
*தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு யோகயுக்தோ பவார்ஜுனா!!* (27)

## சொற்பொருள்

பார்த்த - அர்ஜுனா! ஏதேஸ்ருதீ - இவ்விரண்டு மார்க்கங்களும், ஜானன் - அறிகிற யோகீ கஸ்சன - எந்த யோகியும், நமுஹ்யதி - மோகத்தை அடைகிறதில்லை. தஸ்மாத் - ஆகையினால், அர்ஜுனா- அர்ஜுனா! ஸர்வேஷு காலேக்ஷு - எப்பொழுதும், யோக யுக்தஹ் - யோகத்தில் நிலைத்தவனாக, பவ - இரு.

**கருத்துரை**

அர்ஜுனா! இவ்விரண்டு மார்க்கங்களையும் அறிந்த எந்த யோகியும் மோகத்தை அடைகிறதில்லை. ஆகையால் அர்ஜுனா நீ எப்பொழுதும் யோகத்தில் நிலைத்தவனாய் இரு.

**விளக்கம்**

மேற்சொன்னவாறு ஊர்த்தவமார்க்கத்தில் இருள் நிறைந்த அதோ மார்க்கம் - இரண்டையும் அறிந்த யோகி எவனும் இனி மோகத்தை அடைவதில்லை என்கிறார். அதாவது அத்தகையோர் மறுபடியும் எக்காலத்தும் இருள் நிறைந்த அஞ்ஞான மார்க்கத்தில் செல்லார், ஒளிபொருந்திய ஞான மார்க்கத்தையே பின்பற்றுவர் என்றும், பிரமையில் சிக்கார் என்பதும் பொருள். 'இது நல்லது, இது கெட்டது, என்று அறிந்த அறிஞன் எந்நாளும் தீமையை நாடான். நன்மையையே நாடுவான்.

'விஷந்த்ருஷ்ட்வா அம்ருதம் துருஷ்ட்வா விஷம் த்யஜதி புத்த மான்' விஷத்தையும், அமிர்தத்தையும் கண்டில் அறிவாளியானவன் விஷத்தை விடுத்து அமிர்தத்தையே எடுத்துக் கொள்வான். அவ் வாறே இது ஆத்மா, இது அநாத்மா, இது ஒளி, இது இருள், இது மோட்சம், இது பந்தம், இது ஞானம், இது அஞ்ஞானம் என்று அறிந்தவன் பந்தவடிவான பொருள்களை வேண்டாது முக்தியளிக்க

வல்ல ஞானத்தையே விரும்புவான். எனவே அத்தகையோன் ஏனை யோரைப் போல பிரமையில் (மோகத்தில்) விழுந்து விடுவதில்லை என்று சொல்லப்பட்டது. இவ்வாறு விசாரணை உருவான ஞானம் ஜீவனை மறுபடியும் எந்நாளும் மோகத்தில் விழுந்து விடாமல் காப் பாற்றும். ஒளிமயமான பிரம்ம சைதன்யத்தை வேண்டுவோனாக இரு என்று ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா அர்ஜுனனை எச்சரிப்பதற்குக் காரணம் இதுவே, இங்கு 'சர்வேஷு காலேஷு' என்றதால் ஏதோ வொரு சமயத்தில் மட்டுமின்றி எப்போதும் தெய்வ நினைப்புடன் இருத்தல் வேண்டுமென்பது தெளிவாகிறது. ஏனெனில், எந்த கணத் தில் மனிதன் இறைவனை மறக்கிறானோ, தன் ஆத்ம சொரூபத்தை எண்ணுவதில்லையோ, அந்தக் கணமே 'மாயை' உள் நுழைந்து ஜீவனுக்கு பெரும் கேடு விளைவிக்கும். எனவே அவ்வாறு நேர்ந் தால் அது பெரும் ஆபத்தில் முடியும் என அறிதல் வேண்டும்.

'யக்ஷணமபி வாசுதேவ நசிந்த்யதே ஸாஹனிஸ்த நம்ஹ சித்ரம் ஸா ப்ராந்தி ஸ்ஸாச விகாரயா' எந்த கணத்தில் வாசுதேவனைக் குறித்த சிந்தனை இல்லையோ, அந்தக் கணமே பெரும் கேடு, மோகம், விகாரம் இவை உண்டாகும். ஒளியின் எதிர்சக்தி இருள். தெய்வ நினைப்பே மாயையைக் கட்டுப்படுத்தக்கூடியது. எனவே 'நீ எப் போதும் தெய்வ யோகியாய் இருப்பாயாக' என்று பகவான் அர்ஜு னனை எச்சரிப்பதற்குக் காரணமாயிற்று. அப்போது மாயை நுழைவ தற்கு, ஜீவனை ஆக்ரமிப்பதற்கு இடமேயிராது.

'யோகயுக்தோபவ' - 'யோக என்றால் ஐக்கியம்' மனத்தை எப் போதும் ஆத்மாவுடன் ஐக்கியப்படுத்துதலே யோகம். தியானத்தி னால், அல்லது ஞானத்தினால் அல்லது பக்தியினால் ஏதோ ஒன்றி னால் மனதினை காட்சியான ஆத்ம சொரூபத்தில் லயிக்கச் செய் வதே யோகம். அத்தகைய யோகமே எப்போதும் நிலைத்திருக்க வேண்டுமென இங்குப் போதிக்கப்பட்டது.

**வினா :** எத்தகையோன் உலகில் மாலையின் மோகத்தில் விழுவ தில்லை?

**விடை :** இது ஒளிபொருந்திய ஞான மார்க்கம், இது இருள் நிறைந்த அஞ்ஞான மார்க்கம் என இரண்டையும் நன்கு அறிந்தவன் மாயை யில் மோகத்தில் விழுவதில்லை.

**வினா :** எனவே முமுட்சு எவ்விதமாக நடந்து கொள்ள வேண்டும்?

**விடை :** எல்லா காலத்திலும் தெய்வ சிந்தனையுடன், யோக யுக்தா னாய் இருத்தல் வேண்டும்.

**வினா :** சிறிது காலம் மட்டும் பகவத் நிட்டையில் இருந்தால் போதாதா?

**விடை :** போதாது. எப்போதும் (ஸர்வேஷு காலேக்ஷு) தெய்வ நிட்டையுடன் இருத்தல் வேண்டும். ஏனெனில் மாயை மிகவும் அபாயகரமானது.

## முன்னுரை

யோகியின் மிக மேன்மையான நிலையை, யோகத்தின் பல னைத் தெரிவிக்கிறார்.

*வேதேஷு யக்ஞேஷு தபஹ ஸுசைவ தானேஷு யத்புண்யபலம் ப்ரதிஷ்டம்!*
*அத்யேதி தத்ஸர்வமிதம் விசித்வா யோகீ பரம் ஸ்தானமுபைதி சாத்யம்!! (28)*

## சொற்பொருள்

யோகி - யோகியானவன், இதம் விதித்வா - எதனை (இவ்வத்தி யாயத்தில் சொல்லப்பட்ட அக்ஷர பரபிரம்ம தத்துவத்துக்கு முதலா னவற்றை) அறிந்து, வேதேஷு - வேதங்களிலும், யக்ஞேஷு - யக்ஞங்களிலும் யக்ஞேஷு - யக்ஞங்களிலும், தானேஷு தானங்களி லும், தபஹ்ஸு ச - தபங்களிலும், யத் - எந்த, புண்யபலம் - புண்ய பலன், ப்ரதிஷ்டம் - சொல்லப்பட்டிருக்கிறதோ, தத்ஸர்வம் - அவை யனைத்தையும் அத்யேதி - கடந்து செல்லுகிறான் (அவற்றிற்கும் மேலான புண்ய பலத்தினை அடைகிறான்), ச - மேலும், அத்யம் - அநாதியானது (அல்லது எல்லாவற்றிற்கும் ஆதி காரணமானது), பரம்ஸ்தானம் - பரநிலையை (மேன்மையான நிலையை), உபைதி - அடைகிறான்

## கருத்துரை

யோகியானவன் எதனை (இவ்வத்தியாயத்தில் சொல்லப்பட்ட அக்ஷர பரபிரம்ம தத்துவம் முதலானவற்றை) அறிந்து, வேதங்களின் யக்ஞங்களின், தானங்களின் தவங்களின் புண்ய பலன் சொல்லப்பட் டிருக்கிறதோ, அவை அனைத்திற்கும் மேலான பலனை அடைகி றான். மேலும் அநாதியான ஸர்வோத்தம நிலையை (பிரம்ம நிலையை) அடைகிறான்.

**விளக்கம்**

இவ்வத்தியாயத்தில் சொல்லப்பட்ட அக்ஷர பரபிரம்ம தத்து வத்தை அறிந்தவன் எத்தகைய உயர்ந்த பலனை அடைகிறான். எத்த கைய மேலான நிலையை அலங்கரிக்கிறான் என்பது இங்குக் கூறப் பட்டது. (1) வேத அத்யயனத்தினால், (2) யக்ஞங்களைச் செய்வ தால், (3) தவம் செய்வதால், (4) தானங்கள் செய்வதால் ஜீவனுக்கு எத்தகைய புண்ணியம் ஏற்படுமோ அதனைவிட அதிகமான புண் ணியத்தினை பரபிரம்ம தத்துவத்தை அறிந்த யோகி அடைகிறான் என்று இங்கு மிகத் தெளிவாகச் சொல்லப்பட்டுள்ளது. இதனால் எல்லா புண்ணியங்களை விட மிக அதிக பலனை அளிக்கவல்லது எதுவோ; எதனைச் செய்தால் புண்ணியகளனைத்தையும் விட மிக மேலான நிலையை ஜீவன் அடைய முடியுமோ அது இங்கு நிரூபிக் கப்பட்டுள்ளது. உலகில் பரபிரம்ம பொருள் ஒன்றே உண்மையா னது. ஏனையவையனைத்தும் அழியக்கூடியவையே. எனவே உண் மைப் பொருளை அடைந்தவர்க்கே முழுமையான புண்ய பலன் கிடைக்கக்கூடும்.

வேதங்களினால், யக்ஞத்தினால், தவத்தினால், தானங்களி னால் சிறிது பலன் ஜீவனுக்குக் கிடைக்கிறது. ஆயின் பரமாத்மாவை அனுபவிக்கும் யோகி, அல்லது ஆத்ம ஞானம் பெற்ற யோகி அவை யனைத்தையும் மீறிய பலனைப் பெறுகிறான். ஆத்மாவை அடைவ தால் அவன் கோடி பலனைப் பெறுகிறான். கடலில் நீர்த்துளிகள் மறைந்திருப்பதைப் போல் 'சதே பஞ்சா ஸதி' என்பதைப் போல் நூறினுள் ஐம்பது அடங்கியுள்ளதைப் போல பிரம்ம ஞானத்தில் கிடைக்கும் பெரும் பலனுள் ஏனைய பலன்கள் அனைத்தும் அடங் கியுள்ளன. மேலும் அச்சிறிய புண்யங்கள் யாவும் அதன் பலனை அனுபவித்த உடனேயே காலக்கிரமத்தில் அழிந்து விடும். ஆயின் பிரம்மானுபூதியினால் கிடைக்கும் புண்யமோ அழிவற்றது, நிரதிச யமானது, ஏனைய புண்யங்களனைத்தும் சிறந்தவையே யானாலும் அவற்றிற்கெல்லாம் சிறந்ததாக ஆத்மபிராப்தி விளங்குகின்றது. எனவே அறிஞர்கள் அதற்காகவே முயற்சித்தல் வேண்டும்.

உலகில் சிலர் கல்வியறிவு இல்லாததால் வேத அத்யயனம் செய்ய இயலாது போகக்கூடும். செல்வம், ஆள் பலம் இவை இல் லாததால் யக்ஞங்களை ஆற்ற இயலாது போகக்கூடும். சரீர ஆரோக் கியம் இல்லாவிடின் தவங்கள் இயற்ற முடியாது போகக்கூடும். ஏழையாய் இருப்பதால் தானம் செய்ய இயலாமல் போகக்கூடும்,

இனி அத்தகையோர் புண்யத்தைப் பெறுவதற்கான வழி எது? அவர்கள் இதனைக் குறித்து அஞ்ச வேண்டியது தானா? தேவையில்லை. இதனால் கிடைக்கும் பலன்களைவிட அதிகமான புண்யத்தைப் பெறக்கூடிய உபாயத்தை பகவான் இங்கு கருணையுடன் உபதேசித்துள்ளார். அதுவே பரமாத்மா தியானம். பிரம்ம விஞ்ஞானம். அதற்கு கல்வி, யக்ஞம், தானம் இவற்றிற்கு வேலையே இல்லை. அதற்கு மனத்தூய்மையே, இதயத் தூய்மையே, நிர்மலமான பக்தியே தேவை. அவையுடையவர் ஆத்ம (பிரம்ம) ஞான பெறுவதின் மூலம் ஏனைய புண்ய பலங்களை அனைத்தையும் மீறிவிடும். அதன் பொருள் மேற்கூறிய தான் ம்வேத அத்யயனம்முதலானவற்றைச் செய்யத் தேவையில்லை என ஒதுக்குவதல்ல. அவற்றைப் பலனைக் கருதாது செய்து வந்து, படிப்படியாக சித்த சுத்தியினை அடைந்து அதன் மூலம் ஆத்மானு பூதியினால் மஹாபுண்யத்தைப் பெறுதல் வேண்டும்.

அதுமட்டுமல்ல. அத்தகைய பிரம்ம தத்துவம் அறிந்த யோகி மிகச் சிறந்த நிலையான பிரம்மத்தையே அடைகிறான் எனப்பட்டது. பிரம்ம ஞானி பிரம்ம சொரூபனே யாவான் சுருதிகள் கூறுகின்றன. 'பரம்ஸ்தானம்' என்று சொல்வதால் உலகிலுள்ள எல்லா பதவிகளையும் விட, ஸ்தானங்கள், ஆஸ்திகளனைத்தும் கணநேரமே இருப்பவை. தேச காலத்திற்குட்பட்டவை. தேகம் அழிந்துபட்ட பின் அவையும் அழிவடையவை. ஆயின் பிரம்ம பதவி, ஆத்ம நிலை அத்தகையதல்ல. நிலையானது. எனவே தான் 'பரம் ஸ்தானம்' என்று பகவான் அதனைக் கூறுகிறார்.

எனவே முமுக்ஷுக்கள் சின்ன சின்ன புண்யங்களினால் திருப்தியடைந்து விடாமல் புண்ய நிதி (Fountain of Virtue) யாக, மிக உன்னதமான நிலையாக விளங்கும் பரபிரம்ம பதவியை ஆத்ம நிலையை இங்கு கீதையில் பகவான் சொன்ன பயிற்சிகளைச் செய்து மனித வாழ்க்கையை பயனுள்ளதாகச் செய்து கொள்ள வேண்டும்.

'யோகி - யோகமென்றால் ஜீவனை பிரம்மத்துடன் சேர்க்கும் வழி. அது நிஷ்காம கர்மயோகம், பக்தியோகம், தியானம், ஞானம் இவற்றில் எதனை அனுசரித்தாலும் அவன் யோகியேயாவான்.

இந்த சுலோகத்தின் மூலம் வேதம், யக்ஞம், தவம், தானம் - இவற்றை விட பிரம்ம ஞானம், ஆத்மானுபவம், சிறந்தது, மேன்மையானது என்பது தெளிவாகிறது. எனவே ஆரம்ப நிலையில் இவற்றை அனுசரித்தாலும் இதனோடு திருப்தியடைந்து விடாமல்

இன்னும் முன்னேறி முறையாகச் சித்த சுத்தியடைந்து ஆத்ம ஞானம், பிரம்மானுபூதி இவற்றைப் பெறுதல் வேண்டும்.

**வினா :** (அக்ஷர) பரபிரம்மத்தினை அறிந்தவன் எத்தகைய புண் யத்தை அடைவான்?

**விடை :** (1) வேத அத்யயனம் செய்தல், (2) யக்ஞங்களைச் செய்தல், (3) தவம், (4) தானம் செய்தல் - இதனால் என்ன புண்ய பலன் கிடைக்குமோ, பிரம்ம ஞானிக்கு இவையனைத்திற்கும் அதிகமான புண்ய பலன் கிடைக்கும்.

**வினா :** பரபிரம்மம் எத்தகையது?

**விடை :** (1) அனைத்திற்கும் மூல காரணம், (2) மிக மேன்மையான நிலையையுடையது.

**வினா :** உலகிலுள்ள அனைத்தையும் விட பதவிகளிடையே சிறந்தது எது?

**விடை :** பரமாத்ம நிலை (பரபிரம்ம பதவி)

**வினா :** எல்லாவற்றையும் விட மேன்மையான புண்ணியத்தை விரும்புவோன் என்ன செய்தல் வேண்டும்?

**விடை :** சித்த சுத்தியுடன் புண்ய நிதியான பரமாத்மாவைப் போற்று தல் வேண்டும். அதனால் மரத்தின் மூலமான வேரைக் காப்பாற்றி னால் அதன் கிளைகள் தரும் பலன் அனைத்தையும் காப்பாற்றியது போல, எல்லா தேவதைகள், புண்யங்கள் இவற்றை அடைந்தது போலாகும்.

ஓம்

இது ஸ்ரீ மகவத் கீதையெனும் உபநிஷத்தும் பிரம்ம வித்தை, யோக சாஸ்திரம் இவை ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன சம்வாதமாக வந்துள்ள ஸ்ரீமத் பகவத்கீதையின் அக்ஷரபரபிரம்ம யோகம் எனும் எட்டாவது அத்தியாயம்.

ஓம் தத்ஸத்

ஓம்

# ஸ்ரீ பகவத் கீதை

## ஒன்பதாம் அத்தியாயம்

## *ராஜ வித்யா ராஜ குஹ்ய யோகம்*

### இவ்வத்தியாயத்தின் பெயர் விளக்கம்

*'ராஜ வித்யா ராஜ குஹ்ய யோக' - 'ராஜ' என்னும் பதம் மேன்மையைக் குறிப்பது. ராஜ வித்யமென்றால் வித்தைகளில் மிகவும் மேன்மையானது. 'ராஜ குஹ்யம்' என்றால் இரகசியத்திற்கெல்லாம் பரம இரகசியமானது என்பது பொருள். அல்லது ராஜ வித்ய என்றால் பண்டைக் காலத்தே அரசர்கள் பயின்று வந்த சிறந்த வித்தை எனவும் சொல்லலாம். இவ்வத்தியாயத்தில் சொல்லப்பட்டுள்ள விலை மதிப்பற்ற ஆன்மீக போதனையானது வித்தைகள் அனைத்திலும் மிகவும் சிறந்ததாகையாலும், இரகசியங்கள் அனைத்திலும் பரம இரகசியமானது ஆதலாலும் இவ்வத்தியாயத்திற்கு ராஜ வித்யா ராஜ குஹ்ய யோகம் என்ற பெயர் வந்தது.*

### இவ்வத்தியாயத்தில் சொல்லப்பட்டுள்ள முக்கிய விஷயங்கள்

*1) ஆன்மீக வித்தையின் இயல்பு (1 முதல் 3 வரையில்)*

*2) இறைவடிவின் வர்ணனை (4 முதல் 6 வரை)*

*3) ஜகத் உற்பத்தி (7 முதல் 10 வரை)*

4) *அசுர இயல்புடையோர், தெய்வ இயல்புடையோர் இலட்சணங்கள் (11 முதல் 15 வரை).*

5) *இறைவனின் சர்வாத்ம சொரூபம் (18 முதல் 19 வரை)*

6) *சொர்க்கம் முதலானவற்றைக் கோரி செய்யப்படும் உபாசனையின் பலன், நிஷ்காம உபாசனையின் பலன் (20 முதல் 25 வரை)*

7) *இறை பக்தியுடன் கூடிய நிஷ்காம கர்மத்தின் மிக்க மகிமை (26 முதல் 34 வரை)*

## முன் அத்தியாயத்திற்கும் இவ்வத்தியாயத்திற்குமுள்ள தொடர்பு

*ஏழாவது அத்தியாயமான விஞ்ஞான யோகத்தில் பகவான் கண்ணன், நிர்க்குண பரபிரம்ம சொரூபத்தினை வர்ணித்துச் சொல்லி முதன் முதலில் அதிபூத, அதிதெய்வத்துடன் கூடிய பிரம்மத்தினை காண்பதற்கான விஷயங்களைக் குறித்துக் குறிப்பாக மட்டுமே சொல்ல அதனைப் பற்றி மேலும் விவரமாக அறிய விரும்பிய அர்ஜுனன் ஏழு வினாக்களைக் கேட்டான். அவ்வினாவிற்கு எட்டாம் அத்தியாயம் முழுமையும் பகவான் விடையளித்தார். இனி ஏழாம் அத்தியாயத்தில் தான் சொன்ன விஞ்ஞான விஷயத்தையே மறுபடியும் இந்த ஒன்பதாம் அத்தியாயத்தில் விவரிக்கத் தொடங்குகிறார். முன்பு சொன்ன ஞான விஞ்ஞான விஷயங்களையே மறுபடியும் இவ்வத்தியாயத்தின் ஆரம்பத்தில் தொடங்கி விவரிக்கின்றார். 'மிகவும் இரகசியமான மோட்சபதமான ஆன்மீக ஞானத்தினை விஞ்ஞானத்துடன் இப்போது சொல்லப் போகிறேன்' என்ற பகவானின் கூற்றுடன் இவ்வொன்பதாம் அத்தியாயம் தொடங்குகிறது.*

### ஸ்ரீ பகவானுவாச

*இதம் துதே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்யனஸூயவே!*
*ஞானம் விஞ்ஞான ஸஹிதம் யஜ்ஞாத்வா மோக்ஷ்யஸே அசுபாத்!!* (1)

### சொற்பொருள்

*பகவான் சொன்னது - யத் - எதனை, ஞாத்வா - அறிந்து, அசுபாத் - சுபமற்ற சம்சார பந்தத்தினின்றும், மோக்ஷயஸே - விடுபடுவாயோ, (தத் - அத்தகைய), குஷ்யதமம் - மிகவும் இரகசியமான, விஞ்ஞான ஸஹிதம் - அனுபூதியோடு கூடிய, இதம் ஞானம் து - இந்த பிரம்ம ஞானத்தை, அனுஸூயவே - பொறாமைப்படாத, தே - உனக்கு, ப்ரவக்ஷ்யாமி - நன்கு உரைக்கிறேன்.*

**கருத்துரை**

*அர்ஜுனா! எதனை அறிந்தால், அசுபமான இந்த சம்சார பந்தத்தினின்றும் நீ விடுபடுவாயோ, அத்தகைய மிகவும் இரகசியமான, அனுபவ விஞ்ஞானத்துடன் கூடிய இந்த பிரம்ம ஞானத்தினைப் பொறாமையற்ற உனக்கு நன்கு உரைக்கிறேன்.*

**விளக்கம்**

இனி வித்தைகளனைத்தினும் மிகச் சிறந்த, மிகவும் இரகசியமான பிரம்ம வித்தையை அனுபவபூர்வமாக பகவான் போதிக்கிறார். ''குஹ்யதமம்' என்று சொல்வதால் இந்த போதனையின் இரகசியத்தின் முக்கியத்தை தெரிவிக்கின்றது. பிரம்மோபதேசம் சாதாரணமாக அதற்குத் தகுதியுடையவர்க்குப் போதிக்கப்படும். அதனைக் கேட்பதற்கும் தகுதி பெற்றிருத்தல் வேண்டும். அத்தகுதி எது? பொறாமை முதலான துர்குணங்கள் இல்லாதிருத்தலே, சித்த சுத்தியுடன் இருத்தலே. சாதனை செய்து வந்தால் இந்தத் தகுதி ஏற்படும். ஆயின் இங்கு பிரம்மஞானம் போதனை பெறுவதற்கு அர்ச்சுனனுக்கு அத்தகைய தகுதி உள்ளதா? எனக் கேட்கத் தோன்றும். அசுயை முதலான துர்குணங்கள் இல்லாதவன் என்று அறிந்தே ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா அர்ஜுனனுக்கு கீதோபதேசம் செய்தார். எனவே அருகில் இருந்து பிரம்ம ஞானத்தை நமக்குப் போதிக்கவில்லையே என்று குருவிடம் கோபம் கொள்ளும் சீடர்கள் முதன் முதலில் தம்மிடத்துப் பொறாமை முதலான துர்குணங்கள் போயினவா என்று ஆத்ம பரிசீலனை செய்து கொள்ள வேண்டும். தூய்மையான துணியிலேயே சாயம் ஏறுவதைப் போலத் தூய்மையான சித்தத்திலேயே பிரம்மஞானம் ஏற்படும்.

இவ்வாறாக 'அனசூயவே' என்ற சொல்லினுள் பிரம்மவித்தைக்கு முதல் தகுதியாகப் பொறாமை இன்மையைக் கூறுகிறார். எனவே சாதகர்கள் இவ்விஷயத்தில் மிகவும் எச்சரிக்கையாகயிருந்து பிரம்மஞானத்தை அடைவதற்கு முன்பு, பொறாமையின்றி இருக்கிறோமா என்பதை நமக்கு நாமே கேட்டுக் கொண்டு, இல்லையெனில் அதனைப் பயிற்சி செய்து அத்தகுதியைப் பெறுதல் வேண்டும். ஆடம்பரம், செருக்கு முதலிய குணங்கள் அனைத்திற்கு முதலிடம் வகிப்பது பொறாமையே. எனவே தான் அது இங்கு முதலில் சொல்லப்பட்டது. அது ஒரு வேர்ப்புழு போன்றது. வேர்ப்புழு செடி முழுவதையும் படிப்படையாக அரித்துத் தின்றுவிடுவதைப் போல பொறாமை மனத்தில் நுழைந்து விட்டால், அவன் அதுவரை செய்து

வந்த சாதனைகள் அனைத்தும் ஒரு கணத்தில் வீணாகிவிடும். ஆன் மீக நெறியில் பலமான சாதனையாளர்கள் கூட இம்மாதிரி பொறா மைக்குச் சில சமயங்களில் இடம் கொடுத்து விட்டுச் சாதனைகளின் பலன் அனைத்தும் தொலைத்து விட்டுள்ளார்கள். எனவே பகவான் பொறாமையைத் தொலைத்து அர்ஜுனனைப் போன்று பிரம்ம வித் தைக்கான தகுதி பெறுமாறு போதிக்கின்றார். அத்தகைய தகுதிய டைந்தவர்க்கே சத்குருமார்கள் மிகவும் இரகசியமான அம்சங்களை வெளிப்படுத்துவர். இக்காரணத்தினாலேயே 'வக்ஷ்யாமி' என்று கூறாது 'ப்ரவக்ஷ்யாமி' என்று பகவான் சொல்கிறார். 'அதாவது நன்கு கூறுகிறேன், கேள்' என்கிறார். அர்ஜுனனின் மீது இத்தகைய அன்பு ஸ்ரீ கிருஷ்ணருக்கு ஏன் ஏற்பட்டது? அர்ஜுனனிடத்துப் பொறாமை யில்லை அதனால்தான். சாதாரணமாக மக்கள் இரகசியத்தை அனை வருக்கும் சொல்லமாட்டார். மிகவும் நம்பிக்கைக்குரியவர்க்கே சொல்வர். இப்போது பகவான் சொல்லப் போவது மிகவும் இரகசிய மான வித்தை. அதனைப் போதிக்கப்படுவர் மிகவும் நம்பிக்கைக்குரி யவராதல் வேண்டும். அந்நம்பிக்கை சிஷ்யனின் இதயத்தூய்மை யைக் கண்டு குருவிற்கு ஏற்படும்.

மேலும் 'அனுபவ பூர்வமாக உனக்கு ஞானத்தைப் போதிக்கி றேன்' என்று ஸ்ரீ கிருஷ்ணர் சொல்வதில் ஒரு சிறப்புள்ளது. சாஸ்தி ரங்களில் ஞானம் என்றும் விஞ்ஞானம் என்றும் இரண்டு உள்ளது. ஞானமென்றால் சாஸ்திரங்களால் ஏற்படும் ஞானம்; பரோக்ஷ ஞானம். விஞ்ஞானமென்றால் அனுபவ ஞானம், அபரோக்ஷ ஞானம். போதனை அனுபவபூர்வமாக இருந்தால்தான் முழுமை யான பலன் கிட்டும். எனவேதான் ஞான போதனையுடன் நின்று விடாமல் ஸ்ரீ கிருஷ்ணர் அனுபவத்தைக் கூட பகவத் கீதையில் போதிக்கிறார்.

இனி அத்தகைய அனுபவ ஞானத்தைப் பெறுவதால் பலன் என்ன? அதன் ஜனனமரணமென்னும் அமங்கலத்தினின்றும் விடுப டுதலேயாகும். பிறப்பு, இறப்பு, துக்கம், வியாதி, மூப்பு முதலான அசுபத்துடன் கூடிய பயங்கரமான சம்சாரத்தினின்றும் அது விடுவிக் கும். எனவே துக்கத்தினின்றும் விடுபட விரும்புவோர் இந்த பிரம்ம ஞானத்தினைத் தவறாது சம்பாதித்துப் பெற வேண்டும். இவ்விஷ யத்தை இங்கு பகவான் தெளிவாக்குகிறார். சம்சாரத்தை மிகவும் பெரிதாக மக்கள் நினைக்கின்றனர். ஆயின் ஸ்ரீ கிருஷ்ணர் அதனை 'அசுபம்' என்று வர்ணிக்கிறார். ஏனெனில் அது பொய்யாக, காட்சி யாக, கணநேரமே இருக்கக்கூடியதாக, அழிவுடையதாக இருக்கி

றது. அசுபத்தை விரும்புவோர் அசுபத்தையே பெறுவர். சுபத்தை விரும்புவோர் சுபத்தையே பெறுவர். இவ்வுலகில் ஆன்மாவொன்றே தெய்வம் ஒன்றே சுபமானது. எனவே அதனையே அடைய விரும்புதல் வேண்டும். அப்போது அசுபத்தினின்றும் அவன் விடுபடுவான். இவ்வாறு ஞான விஞ்ஞானத்தை விரும்புவோர் பெறும் பிரத்யட்ச பலன் சம்சார துக்கத்தினின்றும் விடுதலை, நிரதிசய ஆத்மானந்த சுகம் எனவே மக்கள் பகவான் போதிக்கப்போகும் அனுபவபூர்வமான பிரம்ம தத்துவத்தையறிந்து மகிழ்தல் வேண்டும்.

**வினா :** *பிரம்ம வித்தை எத்தகையது?*

**விடை :** *வித்தைகள் அனைத்திலும் சிறந்தது, மிகவும் [illegible]யமானது.*

**வினா :** *அது எவருக்குப் போதிக்கப்படும்?*

**விடை :** *பொறாமை என்ற துர்க்குணம் இல்லாதவர்க்கு*

**வினா :** *பிரம்ம வித்தை தகுதி என்ன?*

**விடை :** *இதயத் தூய்மை, பொறாமை முதலான கெட்ட குணங்களின்மை.*

**வினா :** *மனிதன் கடைத்தேற வேண்டுமாயின் எதனை அறிதல் வேண்டும்?*

**விடை :** *ஞானம், விஞ்ஞானம் இரண்டையுமறிதல் வேண்டும்.*

**வினா :** *அதனை அறிவதால் ஏற்படும் பயன் என்ன?*

**விடை :** *ஜீவன் பிறப்பு இறப்பெனும் அசுவத்தினின்றும் விடுபடுகிறான்.*

**வினா :** *இந்த சம்சாரம் எத்தகையது?*

**விடை :** *அசுப வடிவானது.*

**வினா :** *அதனின்றும் தப்பிப்பது எங்ஙனம்?*

**விடை :** *அனுபவ பூர்வமாக பிரம்மஞானத்தை அடைவதே.*

முன்னுரை

அத்தகைய பிரம்மஞானத்தைப் புகழ்கிறார்.

*ராஜ வித்யா ராஜகுஹ்யம் பவித்ரமித முத்தமம்!*
*ப்ரத்யக்ஷாவகமம் தர்ம்யம் ஸுஸுகம்கர்துமவ்யயம்!! (2)*

சொற்பொருள்

இதம் - இந்த பிரம்மஞானமானது, ராஜ வித்யா - வித்தைகளுக் கெல்லாம் சிறந்தது, ராஜகுஹ்யம் - மறைபொருள்களுக்கெல்லாம் மறைபொருளானது, உத்தமம் - மிகவும் உத்தமமானது, பவித்ரம் - தூய்மையானது, ப்ரத்யக்ஷவகம் - கண்கூடாக உணர்தற்குரியது, தர்ம் யகம் - தர்மத்தோடு கூடியது, கர்தும் - செய்வதற்கு, ஸுஸுகம் - மிகவும் எளிதானது, அவ்யயம் - அழிவற்றது.

கருத்துரை

இந்த பிரம்மஞானமானது வித்தைகளனைத்திற்கும் மேன்மை யானது, மறைபொருள்களுக்கெல்லாம் மறைபொருளானது, தூய் மையானது, கண்கூடாக உணர்தற்குரியது, பின்பற்றுதற்கு மிகவும் எளிதானது, தர்மத்தோடு கூடியது. அழிவற்றது.

விளக்கம்

இவ்வத்தியாயத்தில் கூறப்போகும் பிரம்மஞானத்தின் மகி மையை இச்சுலோகம் விவரிக்கின்றது. உலகில் எத்துணையோ வித் தைகள் இருப்பினும் அவற்றில் எவையும் ஜீவனைப் பிறப்பு இறப்பி னின்றும் மீட்பதில்லை, பிரம்ம வித்தையொன்றே விடுவிக்கவல் லது. காட்சிப் பொருள்கள் அனைத்தும் அழியக்கூடியவை. எனவே அவற்றைக் குறித்து வித்தை எதுவும் மனிதனுக்கு முழுமையான அமைதியைத் தருவதில்லை. நிலையான பிரம்மத் (ஆத்மா)தைப் பற்றிய வித்தையே அமைதியைத் தரும். எனவேதான் பிரம்ம வித் தையே வித்தைகள் அனைத்திலும் மேலானது. ராஜ வித்தையென்று இங்குச் சொல்லப்பட்டது. மேலும் உலகில் தூய்மையான பரமாத் மாவை அளிப்பதனால் இது மிக மிகப் புனிதமானது, தூய்மையான தேயாகும்.

'ப்ரத்யக்ஷாவகமம்' - இந்த பிரம்ம வித்தையை அனுபவபூர்வ மாக உணர்தல் இயலும். இது நேரிடையான பலனையே தருமே யன்றி மறைமுகமான பலனையல்ல. ஏனெனில் எந்தக் கணத்தில்,

*சாதகன் இந்த பிரம்ம வித்தையை அனுபவபூர்வமாக உணர்கி றானோ, அக்கணமே அவன் பிரம்மமேயாதலைக் காணலாம். எனவே இது பலனைத் தருவதா இல்லையா என ஐயப்பட வேண்டி யதே இல்லை.*

*சுகம் - இந்த பிரம்ம வித்தையைப் பின்பற்றுதல் மிகவும் எளிது எனப்பட்டது. மனதில் கெட்ட பண்புகள், வாசனைகள் முதலிய வற்றை முயன்று ஒதுக்கிவிட்டால், ஆன்மாவின் சாட்சாத் காரத்தைப் பெறுவதில் எத்தகைய முயற்சியும் தேவையில்லை. எனவேதான் சாஸ்திரங்களில் இவ்வாத்மா அனுபவம் என்னும் மலர்களைக் கசக் குவதை விட, சுவாசக் காற்று இழுத்து விடுவதைவிட எளிதானது என்று சொல்லப்படுகிறது. பிரம்மானுபவம் மிகவும் எளிதானது பகவான் கீதையில் இவ்வாறாகச் சொல்லி சாதகர்களுக்கு தைரி யத்தை உண்டாக்குகிறார். மேலும் இந்த வித்தை தர்மங்களுக்கு மூலம் என்றும் மிகத் தொன்மையானது, அழியாதது என்றும் இங் குக் கூறுகிறார்.*

*ஸ்ரீ கிருஷ்ணர் தான் போதிக்கப் போகும் பிரம்மஞானத்தின் மகிமையை ஆரம்பத்திலேயே வெளிப்படுத்தி அதனால் முமுட்சு விற்கு அதனிடம் பிரியமும், நம்பிக்கையும் தோன்றச் செய்கிறார்.*

**வினா :** *பிரம்மஞானம் எத்தகையது?*

**விடை :** *(1) வித்தைகளனைத்தினும் சிறந்தது, (2) மிகவும் இரகசிய மானது, (3) மிகவும் புனிதமானது, (4) உத்தமமானது, (5) வெளிப்ப டையாக உணர்தற்குரியது, (6) தர்மத்தோடு கூடியது, (7) எளிதாகப் பின்பற்றக் கூடியது, (8) அழிவற்றது.*

**முன்னுரை**

*அதில் சிரத்தையற்றவர்கள் தெய்வத்தை அடைய இயலாது. சம்சாரக் குகையிலேயே திரிய வேண்டியதுதான் என்கிறார்.*

***அச்ரத்த தானஹ் புருஷா தர்மஸ் யாஸ்ய பரந்தப!***
***அப்ராப்ய மாம் நிவர்தந்தே ம்ருத்யுஸம்ஸார வர்த்மனி!!*** (3)

**சொற்பொருள்**

*பரந்தப - எதிரிகளை வாட்டும் அர்ஜுனா! அஸ்ய - இந்த, தர்மஸ்ய - (ஆத்ம ஞானமெனும்) தர்மத்தினில், அச்ரத்ததானாஹ் - சிரத்தையில்லாத, புருஷாஹ் - மனிதர்கள், மாம் - என்னை, அப்*

ராப்ய - அடையாது, ம்ருத்யு சம்சாரவர்த்மனி - மரண வடிவான இந்த சம்சார மார்க்கத்தில், நிவர்தந்தே - திரும்பவும் வருகின்றனர் (இச் சம்சாரத்திலேயே உழலுகின்றனர். மறுபடியும் மறுபடியும் பிறக்கின் றனர்).

**கருத்துரை**

அர்ஜுனா! ஆத்ம ஞானமெனும் இத் தர்மத்தில் சிரத்தையில் லாத மனிதர்கள் என்னை அடைய முடியாது மரணத்தோடு கூடிய இந்த சம்சார மார்க்கத்திலேயே திரும்பவும் வருகின்றனர். (திரிகின் றனர் அல்லது இங்கேயே உழலுகின்றனர்).

**விளக்கம்**

உலகியலிலோ, ஆன்மீகத்திலோ, ஒவ்வொரு காரியத்திலும் சிரத்தை மிகவும் அவசியம். ஒரு பொருளின் மீது, ஒரு காரியத் திலோ எத்துணை சிரத்தையிருக்கிறதோ அதற்கேற்ப அதன் பலன் இருக்கும். எனவே பகவான் இச்சுலோகத்தில் சொல்லப் போகும் பிரம்மஞானத்தில் எவருக்குச் சிரத்தையிருக்கிறதோ, அவன் அதனை சிரத்தையுடன் அனுசரித்து என்னை வந்தடைவான் என் றும், சிரத்தையற்றவன் தன்னையடைய இயலாது மரணத்தோடு கூடிய சம்சாரத்திலேயே உழல்வான் என்கிறார். எனவே அறிவுடை யோர் துக்கத்துடன் கூடிய சம்சாரத்தில் உழலாது, ஆனந்தத்தைத் தரக்கூடிய தெய்வ சாட்சாத்காரத்தை அடைவதற்கு, சிரத்தையென் னும் நற்குணத்தைப் பெற்று பிரம்மவித்தையை நன்கு அனுஷ்டித் துக் கடைத்தேறுதல் வேண்டும். உலகில் சாதாரணமான சமையல், உழவு, முதலானவை நன்கு செய்வதற்கே எத்தனையோ சிரத்தை தேவையாய் இருக்க ஆன்மீக விஷயத்தில் வேறாக எப்படி இருக்க முடியும்? எனவே கீதாச்சார்யன் தன் போதனையில் அவ்வப்போது சிரத்தையை வலியுறுத்திச் செல்கிறார்.

இனி இச் சம்சார மார்க்கம் எத்தகையது என இச்சுலோகத்தில் வெளிப்படுத்தப்பட்டுள்ளது. சாதாரணமாகச் சிலர் போகத்திற்கு இடமளிக்கும் இச்சம்சாரத்தினை சுவர்க்கமாக பாவிப்பர். அமிருதத் தையளிக்க வல்லதாக அதனை வர்ணிப்பர். ஆயின் ஸர்வக்ஞன் ஆன பரமாத்மாவோ அதனை மரணத்தின் வடிவாக வர்ணிக்கிறார். அதுவே அதன் உண்மை வடிவம். மாயையினால் இந்த சம்சாரம் மேலுக்குப் பகட்டாகத் தோன்றினும் மரண வடிவானதே. இந்த இரகசியத்தினை பகவான் இந்த சுலோகத்தில் வெளிப்படையாகக்

கூறுகின்றார். நன்கு அலங்கரிக்கப்பட்ட சவமானது எவ்வாறு மேலுக்கு அழகாகத் தோன்றினும் கவனித்துப் பார்த்தால் அழுகிய வாசனையுடன் இருக்குமோ இந்த சம்சாரத்தின் நிலையும் அத்தகை யதே. எனவே அறிவுடையோர் அதனால் ஏமாந்து விடலாம் அமிர்த வடிவான பரமாத்மாவையே அடைந்து தன்யர்கள் ஆக வேண்டும் 'நிவர்தந்தே' என்ற சொல்லிற்கு 'நிதராம் வர்தந்தே' - மிகவும் நிலை யாக இங்கேயே தங்கி விடுகின்றனர் - என்று சொல்லலாம்.

**வினா :** *பரமாத்மாவை எவர் அடைய முடியும்?*

**விடை :** *பிரம்மஞானத்தில் சிரத்தையுடையவர்.*

**வினா :** *அவ்வாறு சிரத்தையில்லாதவரின் கதி என்னவாகும்?*

**விடை :** *அவர்கள் பரமாத்மாவை அடைய இயலாமல் மரணத்தோடு கூடிய சம்சாரத்திலேயே உழல்கின்றனர்.*

**வினா :** *இந்த சம்சாரத்தின் சொரூபம் எத்தகையது?*

**விடை :** *அது மரணத்தோடு கூடியது; அதாவது பிறப்புடன் கூடி, துக்கத்தின் இருப்பிடமாக உள்ளது.*

**வினா :** *பரமாத்மாவின் சொரூபம் ஏழு சுலோகங்களில் வர்ணிக்கப்ப டுகிறது.*

*மயா ததமிதம் சர்வம் ஜகதவ்யக்தமூர்திநா!*
*மத்ஸ்தானி ஸர்வபூதானி நசாஹம் தேஷ்வ வஸ்திதஹ!!* (4)

**சொற்பொருள்**

இதம் - இந்த, ஸர்வம் ஜகத் - உலகம் யாவும், அவ்யக்த மூர்த் தினா - இந்திரியங்களுக்கும் புலப்படாத வடிவினன் ஆகிய, மயா - என்னுள், ததம் - வியாபிக்கப்பட்டிருக்கிறது, ஸர்வ பூதானி - உயிர்கள் அனைத்தும், மத்ஸ்தானி - என்னிடத்தில் இருக்கின்றன. தேஷு - அவைகளிடத்து, அஹம் - நான், நச அவஸ்த்தஹ் - இருப்ப தில்லை (அவை எனக்கு ஆதாரம் அல்ல).

**கருத்துரை**

இவ்வுலகம் அனைத்தும் அவ்யக்த மூர்த்தியான என்னுள் வியா பிக்கப்பட்டிருக்கிறது. எல்லா உயிர்களும் என்னிடத்து இருக்கின் றன. நான் அவைகளிடத்து இல்லை.

**விளக்கம்**

'அவ்யக்தமூர்த்திநா'' - இந்திரியங்களுக்கும் புலப்படாத மிகவும் சூக்ஷ்மமான பொருளே பரமாத்மா. சாதாரணமான நிகழ்காலத் திருப்பே கண்களுக்குப் புலப்படாத போது மிகவும் நுணுக்கமான சிதா காச வடிவினனான பரமாத்மாவைக் கண்களால் பார்ப்பது எங்ஙனம்? எனவேதான் பரமாத்மா கண்களுக்குப் புலப்படாதவன் எனச் சொல்லப்பட்டது. வெளி ஆகாசத்தில் எவ்வாறு உலகமனைத்தும் பரவி உள்ளதோ அவ்வாறே சதா காசத்தினால் வெளிப்படையான சூக்ஷ்ம உலகமனைத்தும் உயிர்கள் அனைத்தும் வியாபித்து இருக்கின்றன. எனவே அவை அனைத்தும் பரமாத்மாவின் இடத்திலேயே இருப்பதாகின்றன.

நசாஹம் தேஷ வஸ்த்திதஹ - அவை அனைத்தும் என்னிடத்தில்; நான் அவையிடத்து இல்லை; என்று பகவான் கூறுகிறார். உண்மையில் நம் கண்ணுக்குப் புலப்படுபவை அனைத்தும் நாம் உருவத்துடன் கூடிய இவ்வுலகம் அனைத்தும் கனவைப் போலப் பொய்யானது. ஆத்மா ஒன்றே நிலைத்த உண்மை. அவ்வாத்மாவினிடத்திலேயே காணும் பொருள்கள் அனைத்தும் கயிற்றில் பாம்பு மறைந்துள்ளதைப் போல் பொய்யான காட்சிப் பொருள்களில் உண்மைப் பொருளான பரமாத்மா எவ்வாறு இருக்க முடியும். எனவே தான் பகவான் இங்கு என்னிடத்தே இப்பூதங்கள் அனைத்தும் இருப்பினும் நான் அவற்றில் இருப்பதில்லை என்று கூறுகிறார்.

ஸ்தூல சூக்ஷ்மமான சராசரமனைத்தும் பரமாத்மா வியாபித்திருப்பதால் அவன் இல்லாத இடம் இல்லை. எனவே சாதகன் அவன் இருப்பினை உணர்ந்து பாவங்களைச் செய்யாது உயிர்களிடத்துக் கருணையுடன் இறைவனிடத்துப் பக்தியுடனும் இருத்தல் வேண்டும்.

**வினா :** பரமாத்மா எத்தகைய உரு உடையவன்?

**விடை :** இந்திரியங்களுக்குப் புலப்படாத அதி சூக்ஷ்ம வடிவினன்.

**வினா :** அவன் எங்கிருக்கிறான்?

**விடை :** சூக்ஷ்ம உலகனைத்தும் வியாபித்துள்ளான்.

**வினா :** உயிர்கள் அனைத்தும் எங்குள்ளன?

**விடை :** பரமாத்மாவிடத்தே நிலைத்துள்ளன.

*ந ச மத்ஸ்தானீ பூதானீ பச்யமே யோக மைச்வரம்!*
*பூத ப்ருன்ன ச பூதஸ்தோ ம மாத்மா பூதபாவனஹ!!* (5)

### சொற்பொருள்

*பூதானீ - உயிர்கள் மத் ஸ்தானீன ச - என்னிடத்து நிற்பவைகள் அல்ல, மே - என்னுடைய, ஐஸ்வரம் - ஈஸ்வர சம்மந்தமான, யோகம் - யோகத்தின் மகிமையை, பஸ்ய - பார், மம - என், ஆத்ம - ஆத்மஸ் வரூபம், பூதல்ருத் - பூதங்களைத் தாங்குகிறது, பூதபா வனஹ அபி - உயிர்களை உண்டு பண்ணுகிறது, பூதஸ்த ஹ - பூதங்களிடத்து, நச - இல்லை.*

### கருத்துரை

*உயிர்கள் உண்மையில் என்னிடத்து நிற்பவை அல்ல. ஈஸ்வர சம்மந்தமான என்னுடைய யோக மகிமையைப் பார். என் ஆத்ம ஸ்வரூபம் உயிர்களை ஆக்கவும், காக்கவும் செய்யினும், அவைகளி டத்து இருப்பதில்லை. (அவற்றின் மீது ஆதாரப்பட்டு இருப்ப தில்லை).*

### விளக்கம்

*இதற்கு முன் ஸ்லோகத்தில் என்னிடத்தில் எல்லா உயிர்களும் இருக்கின்றன என்று சொல்லி இதில் என்னிடத்தில் உயிர்கள் இல்லை என்கிறாரே எனக் கேட்கக்கூடும். சாமான்யர்கள் பார்வை யில் காட்சி என்பது ஒன்று உண்டாகையால் அது இறைவனிடத்தி லேயே நிலைபெற்று இருக்கின்றது. அதற்கு ஆதாரம் இறைவனே என்றும் சொல்லப்பட்டது. ஆன்மீக திருஷ்டியில் தெய்வத்வம் என் பதே இராது. எனவே உலகமோ உயிர்களோ அதனால் இராது. ஒரே சித்ரூபமான பரமாத்மாவே மிகுந்திருக்கும். எனவே அத்தகைய தெய்வ திருஷ்டியில் என்னிடத்தே பூதங்கள் இருக்கின்றன என்னும் வாக்கியம் எவ்வாறு பொருந்தும்? ஆகவே ''என்னிடத்தில் எந்தவித மான உயிர்களும் இல்லை. காட்சிகள் இல்லை. நான் காட்சியில் இல்லை'' என்று உன்னதமான தெய்வ திருஷ்டியுடன் பகவான் இவ் வாக்கியத்தைக் கூறுகிறார். ஏனெனின் விழித்த பின்பு மனிதன் தான் கனவுலகில் இல்லை, கனவுலகம் என்னிடத்தில் இல்லை என்று எவ்வாறு சொல்வானோ, பாம்பின் மீதான பிரமை போயினபின் கயிற்றில் பாம்போ அல்லது பாம்பின் மீது கயிறோ இல்லை என்று எவ்வாறு சொல்கிறோமோ அவ்வாறே மேல் வாக்கியத்தையும் பக வான் காட்சி அற்ற முழுமையான தெய்வ திருஷ்டியுடன் சொல்கி*

றார். இவ்வாறான பூர்ணமான நிலையில் பிரம்மத்தைத் தவிர வேறெதுவும் இருத்தல் இயலாது. ஆகவே தெய்வ திருஷ்டியில் பகவான் தன் உண்மை வடிவில் உயிர்களைத் தாங்கி இருப்பினும், காத்து இருப்பினும் ஆன்மிக திருஷ்டியில் உயிர்களுடனோ உலகத்தினுடனோ எவ்விதமான தொடர்பும் இன்றி இருக்கிறார். இவ்வுண்மையையே கீதாசார்யன் இச்சுலோகத்தில் வெளிப்படுத்தி உலகத்துடன் தனது பற்றின்மையை, ஒட்டாத் தன்மையை வெளிப்படுத்தியவராய்த் தன் மஹிமையைப் போற்றுமாறு அர்ஜுனனுக்கு உபதேசிக்கிறார். இதுவே ஈஸ்வர சம்மந்தமான யோக மகிமை. ஆன்மீக திருஷ்டியில் உலகம் பிரம்ம வடிவாகவே மிகுந்திருக்கும். உலகம் என்ற வஸ்து தனியாக வேறாக இராது. கற்பிக்கப்பட்ட பொருள் உண்மை நோக்கில் இருப்பதாகவே தோன்றுமல்லவா? இத்தகைய முழுமையான பார்வையே கிருஷ்ண பரமாத்மா இச்சுலோகத்தில் விளக்குகிறார்.

**வினா :** ஈஸ்வரனின் யோக மகிமை எத்தகையது? நிரூபிக்க.

**விடை :** பரமாத்மா உயிர்களைத் தாங்கி இருப்பினும் காத்திருப்பினும் அவை அனைத்தும் உண்மையில் அவனிடத்து இன்றி அவன் அவற்றிடத்து இன்றி இருக்கிறான். இதுவே ஈஸ்வர மஹிமை.

**வினா :** முழுமையான தெய்வ திருஷ்டியில் உலகத்தின் நிலை என்ன?

**விடை :** அன்னிலையில் உலகம் என்பதே இல்லை. அது பிரம்ம வடிவாகவே இருக்கும்.

முன்னுரை

இனி தெய்வ திருஷ்டியில் உலகின் நிலையை விவரிக்கிறார்.

*யதாகாச ஸ்திதோ நித்யம்வாயுஹு சர்வத்ர கோமஹான்!*
*ததாசர்வாணி பூதானீ மத்ஸ்தானீஸ்யுபதாரய!!* (6)

**சொற்பொருள்**

யதா - எப்படி, சர்வத்ரகஹ - எங்கும் சஞ்சரிக்கின்ற - மஹான் வாயு - பெரும்காற்றானது, நித்யம் - எப்போதும், ஆகாசஸ்திதஹ் - ஆகாசத்தில் நிலைத்திருக்கிறதோ (இருந்தும் ஆகாசத்துடன் தொடர்பின்றி இருக்கின்றதோ), ததா - அவ்வாறே, சச்வானி - எல்லா விதமான, பூதானீ - உயிர்களும், மத்ஸ்தானீஇதி - என்னிடத்தில் இருக்கின்றன என்று, உபதாரய - தெரிந்து கொள்.

**கருத்துரை**

எப்போதும், எங்கும் சஞ்சரிக்கின்ற பெரும் காற்று வானத்தில் நிலை பெற்றிருப்பது போன்று, பூதங்கள் எல்லாம் என்னிடத்தில் இருக்கின்றன என்று தெரிந்து கொள்.

**விளக்கம்**

எல்லா உயிர்களும் இறைவனிடத்தே எவ்வாறு நிலைத்திருக்கின்றன என்பதை உவமானத்தின் வழி இங்கு விளக்குகிறார். வாயு மிகவும் அகண்டது. சஞ்சரிப்பது. மிகவும் சக்தி வாய்ந்தது. ஆயினும் அது எப்போதும் ஆகாசத்தில் ஒரு மூலையில் அடங்கியே இருக்கின்றது. அவ்வாறே உலகமும் விசாலமானது. பல உயிர்களுடன் கூடியது. ஆயினும் இறைவனிடத்தே அது ஏதோ ஒரு மூலையில் அடங்கி இருக்கிறது. மேலும் ஆகாசம் தன்னிடத்து உள்ள வாயுவுடன் நெருங்கியிருப்பினும் அதனுடன் எவ்விதத்திலும் தொடர்பின்றி ஒட்டாதிருக்கும், அவ்வாறே பரமாத்மா உலகைத் தன்னிடத்தே கொண்டிருப்பினும் அதனிடத்தில் தொடர்பின்றி இருக்கிறார். வாயுவின் தன்மையானது ஆகாசத்தை, பாதிக்காததைப் போல உயிர்களின் தன்மையானது கர்மங்கள் முதலானவை பரமாத்மாவை பாதிக்காது. ஆகாசத்தைக் கண்ணால் காண இயலாது. மிகவும் சூக்ஷ்மமானது. எங்கும் வியாபித்திருப்பது. அவ்வாறே பரமாத்மாவும் கண்ணுக்குப் புலப்படாதவன். சூக்ஷ்மமானவன். எங்கும் வியாபித்திருப்பவன். ஆகாசத்திற்கும், பரமாத்மாவிற்கும் இவ்வாறாகப் பல ஒற்றுமைகள் இருப்பதால், இறைவனை வர்ணிக்கும் போது ஸ்தூல திருஷ்டி உடையவர்க்கு விளங்கும் வகையில் ஆகாசத்தினை உவமையாக்கிக் கூறுவர். ஆயின் உண்மையில் பரமாத்மா ஆகாசமல்ல. ஏனெனில் ஆகாசம் ஜடமானது. பரமாத்மாவோ சைதன்ய வடிவினன்.

ஆகாசத்தைப் போன்றே இறைவனும் எங்கும் வியாபித்திருக்கிறான் என்று சொல்வதால் அவனது அசித்வத்தை உணர்தல் வேண்டும். ஒவ்வொரு அணுவிலும் இறைவன் வியாபித்திருக்கிறான். இவ்வுண்மையை உணர்ந்தவர் எவரும் இறைவன் தன்னை எப்போதும் கவனித்துக் கொண்டிருக்கிறார் என்று உணர்ந்து பாவகாரியங்களை ஒதுக்கி நற்குண சீலராய் இருப்பர். மேலும் எல்லா பிராணிகளையும் கொல்வதால் மக்கள் தம் அற்பமான பலம், தனம், அதிகாரம், அழகு இவற்றிலும் கர்வப்படாமல் அகங்காரத்தை விட்டு இறைவனிடத்தில் பக்தி பூண்டு ஒழுகுதல் வேண்டும் என்பது தெளிவு.

**வினா :** எல்லா உயிர்களும் எங்கு நிலைத்திருக்கின்றன?

**விடை :** இறைவனிடத்தே.

**வினா :** எவ்வாறு?

**விடை :** ஆகாசத்தில் உள்ள வாயுவைப் போல.

**முன்னுரை**

உலகின் சிருஷ்டி, ஸ்திதி, லயத்திற்கு தானே காரணம் என்று பகவான் கூறுகிறார்.

*சர்வ பூதானி கௌந்தேய ப்ரக்ருதிம் யாந்திமாமிகாம்!*
*கல்பக்ஷயே புனஸ்தானி கல்பாதௌவிஸ்ருஜாம்யஹம்!!* (7)

**சொற்பொருள்**

கௌந்தேய - குந்தியின் புதல்வா!, சர்வ பூதானி - எல்லா உயிர்களும், கல்பக்ஷயே - ப்ரணயகாலத்தில், மாமிசம் - என்னுடைய (எனக்கு உட்பட்ட), ப்ரக்ருதிம் - இயற்கையை (மாயையை) யாந்தி - அடைகின்றன, கல்பாதௌ - சிருஷ்டியின் ஆரம்பத்தில், தானி அவற்றை, புனஹ் - மறுபடியும், அஹம் - நான், விஸ்ருஜாமி - தோற்றுவிக்கின்றேன்.

**கருத்துரை**

அர்ஜுனா! பிரளய காலத்தில் எல்லா உயிர்களும் என் இயற்கையை (மாயையை) அடைந்து அங்கு அடங்கி இருக்கின்றன. மறுபடியும் சிருஷ்டி காலத்தில் நான் அவற்றைத் தோற்றுவிக்கின்றேன்.

**விளக்கம்**

ஜீவர்கள் இயற்கையில் அடங்கி இருக்கின்றன. இயற்கை பரமாத்மாவுடன் அடக்கம். எனவே தான், "மாயாம்" - எனக்குத் தொடர்பான இயற்கை அதாவது என் கட்டுக்குள் உள்ள இயற்கை என ஸ்ரீ கிருஷ்ணன் சொல்கிறார்.

"மாயாம் து ப்ரக்ருதிம் வித்தி மாயினம் து மஹேஸ்வரம்" என்ற சுருதி வாக்யம் இப்பொருளையே போதிக்கிறது. இயற்கையே மாயை. இயற்கையையும்மாயையும் தன் கட்டுக்குள் வைத்திருப்பவன் மஹேஸ்வரன். எனவே இயற்கையை வெல்ல வேண்டுமாயி

னும், மாயையைக் கட்டுப்படுத்த வேண்டுமாயினும் இறைவனின் உதவி, அருள் மிகவும் தேவை என்பது தெளிவாகிறது. எனவே ஆன்மீக அரங்கில் முன்னேற வேண்டுமாயின் இதற்கு முன்பே அம் மாயையை வென்ற ஜீவன் முக்தர்களை மஹான்களின் அருளைப் பெறுதல் வேண்டும். அப்போதே சாதகன் எளிதாக முன்னேற முடியும். வருவதும் போவதுமான சம்சாரமாயையினின்றும் தப்பித்துக் கொள்ள வேண்டுமாயின் மாயாதீதன் ஆன இறைவனடி சேர்தல் வேண்டும்.

**வினா :** இயற்கை எவரது ஆதிக்கத்தில் உள்ளது?

**விடை :** இறைவனின் ஆதிக்கத்தில் உள்ளது.

**வினா :** இயற்கைக்கு உட்பட்டவர் நிலை எவ்வாறு இருக்கும்?

**விடை :** சிருஷ்டி காலத்தில் பிறந்தும் பிரளய காலத்தில் நிலைத்தும் இருப்பர்.

*ப்ரக்ருதிம் ஸ்வாம வஷ்டப்ய விஸ்ருஜாமி புனஹ் புனஹ்!*
*பூதக்ராமமிமம் க்ருத்ஸ்னமவசம் ப்ரக்ருதேர்வஸாத்!! (8)*

**சொற்பொருள்**

ப்ரக்ருதேஹ் - இயற்கைக்கு, வஸாத் - வசப்பட்டு இருப்பதால், அவஸம் - தன்வசம் இல்லாது, இமம் - இந்த, க்ருத்ஸ்னம் - எல்லாவிதமான, பூதக்ராமம் - உயிர் வகைகளையும் (அஹம் - நான்), ஸ்வாம் - என்னுடைய, ப்ரக்ருதிம் - இயற்கையை, அவஷ்டப்ய - ஸ்வீகரித்து, புனஹ்புனஹ் - திரும்பத் திரும்ப, விஸ்ஸ ஜாமி - படைக்கிறேன்.

**கருத்துரை**

இயற்கைக்கு உட்பட்டு இருப்பதால் சுதந்திரம் அற்ற இவ்வுயிர் சமூகம் அனைத்தையும் நான் என்னுடைய இயற்கையினுள் திரும்பத்திரும்பத் தோற்றுவிக்கிறேன்.

**விளக்கம்**

இச்சுலோகத்தில் ஜீவன் ஈஸ்வரன் இடையே இருக்கும் வேற்றுமை நன்கு காட்டப்பட்டுள்ளது. ஜீவன் இயற்கைக்குட்பட்டவன். ஈஸ்வரன் இயற்கையை ஆட்கொண்டவன். ஜீவர்கள் அவரவர்

செயல்களுக்கு உட்பட்டு, இயற்கையின் வசப்பட்டு சுதந்திரம் இன்றி இருக்கின்றனர். ''க்ருத்ஸ்னம்'' - என்று சொல்வதால் ஓரிருவர் மட்டுமன்று இயற்கையை வென்ற ஜீவன்முக்தர்களைத் தவிர எல்லா உயிர்களும் இயற்கையின் கட்டுக்குள்ளேயே இருக்கின்றது என்பது தெளிவாக்கப்பட்டுள்ளது. எதுவரை செயல் இருக்கின்றதோ, வாசனைகள் உள்ளதோ அதுவரை பிறப்பும் தப்பாது. இத்தகைய அஞ்ஞானிகளைத் திரும்பத் திரும்ப தோற்றுவிக்கிறேன் என்று பகவான் சொல்கிறார்.

எனவே பிறப்பு இறப்பு அற்ற பெருவாழ்வைப் பெற விரும்புவோர், இறைவனைச் சரண் அடைந்து இயற்கையினை மனத்தினை வெல்லுதல் வேண்டும். அஞ்ஞானிகள் எத்தகைய சரீரபலம் உடையவராயினும் இயற்கைக்கு உட்பட்டவரே ஆதலாலும், இந்திரியங்களுக்கு அடிமையானவர்களே ஆதலாலும் சுதந்திரம் அற்றவர்களே ஆவர். அவர்களது கர்மங்கள் பிறவிதோரும் பலாத்காரமாகவே அவர்களை வந்து அடைகின்றது. எனவே ஆன்ம ஞானத்தைப் பெற்று இறைவனின் அருளைச் சம்பாதித்து இயற்கையை வெல்வதன் மூலம் சம்சார பந்தவிமுக்தி அடைதல் வேண்டும். ரங்கராட்டினத்தில் மக்கள் சுழல்வதைப் போல மாயச் சக்கரத்தில் சிக்கிய ஜீவர்கள் இயற்கைக்கு வசப்பட்டு சுதந்திரம் இன்றிச் சம்சாரத்தில் உழலுகின்றனர். ரங்கராட்டினத்தை நிறுத்த வேண்டுமென்றாலும், திருப்ப வேண்டுமென்றாலும், அதை இயக்குபவன் கையில் அடங்கி இருப்பதைப் போல் மாயச் சக்கரத்தினைத் திருப்பக்கூடிய இறைவனை முக்திக்காக ஜீவர்கள் சரணடைதல் வேண்டும்.

**வினா :** ஜீவர்கள் எதற்கு வசப்பட்டவர்கள்?

**விடை :** அவரவர் இயற்கைக்கு (கர்மாவிற்கு)

**வினா :** எனவே ஆத்ம சுதந்திரத்திற்கு ஜீவர்கள் என்ன செய்ய வேண்டும்?

**விடை :** மாயா தீததான இறைவனிடத்து இடைவிடாத பக்தி செய்து தம் இயற்கையை மனத்தினை இந்திரியங்களை, கர்மங்களை, வெல்லுதல் வேண்டும்.

**முன்னுரை**

இவ்வாறு மக்களை அவரவர் கர்மங்களுக்கேற்ப திரும்பத் திரும்ப தோற்றவித்தாலும் அவர் கர்மங்களுடன் தனக்கு எவ்விதமான தொடர்புமில்லை என பகவான் கூறுகிறார்.

*நச மாம் தானி கர்மாணி நிபத்னந்தி தனஞ்ஜய!*
*உதாஸீனவதாஸீனமஸக்தம் தேஷு கர்மஸு!! (9)*

### சொற்பொருள்

தனஞ்ஜெய - அர்ஜுனா! தேஷு கர்மஸு - அந்த கர்மங்களில், அஸக்தம் - பற்றின்றி, உதாஸீனவத் - சமநோக்குடன், ஆஸீனம் - இருப்பவனை, மாம் - என்னை, தானி கர்மாணி - அக்கர்மங்கள், நநிபத்னந்தி - பந்தப்படுத்துவதில்லை.

### கருத்துரை

தனஞ்ஜயா! (அவ்வாறாக ஜீவர்களைத் தோற்றுவிப்பவனாயினும்) அந்த சிருஷ்டிகளின் கர்மங்களில் பற்றற்று, சமநோக்குடன் இருப்பவனான என்னை அவை கட்டுப்படுத்துவதில்லை.

### விளக்கம்

இவ்வாறாக மக்களைத் திரும்பத் திரும்ப தோற்றுவிப்பினும், அக் கர்மங்களால் பரமாத்மாவிற்கு எந்தவிதமான சம்பந்தமும் இல்லை. அவன் சமநோக்குடையவன்; சாட்சியாய் நிற்பவன். சூரியனுக்கு முன்பாகவே மக்கள் அவரவர் கர்மங்களைச் செய்யினும், அவற்றால் சூரியன் எவ்வாறு கட்டுறுவதில்லையோ, அவ்வாறே இறைவனின் அருளால் நடக்கும் இயற்கையின் செயல்கள் ஆன சிருஷ்டி முதலான கர்மங்களினால் இறைவனுக்கு எந்தவிதமான தொடர்புமில்லை. பந்தப்படுவதில்லை என இங்குக் கூறப்பட்டது. இதனால் இறைவனுடன் ஐக்கியம் அடைந்த ஜீவர்களுக்கு அத்தகைய பந்தம் ஏதுமிராது என்பது தெளிவாகிறது.

### முன்னுரை

இறைவனின் அருளினால் இயற்கை இச்சராசரமனைத்தும் தோற்றுவிக்கிறது என்கிறார்.

*மயாத்யக்ஷேண ப்ரக்ருதிஹ் ஸூயதே ஸசராசரம்!*
*ஹேதுனானேன கௌந்தேய ஜகத் விபரிவர்த்ததே!! (10)*

### சொற்பொருள்

கௌந்தேய - அர்ஜுனா! அத்யக்ஷேண - கண்காணிப்பாளராகவுள்ள (சாட்சியாய் உள்ள) மயா - என்னால், ப்ரக்ருதி - இயற்கை

(மாயை), சராசரம் - தாவர ஜங்கமபொருட்களை, ஜகத்தை, ஸூயதே - தோற்றுவிக்கின்றது, அனேனஹேதுனா - இதன் காரணத் தால், ஜகத் - இவ்வுலகமானது விபரி வந்ததே - சுழல்கிறது.

### கருத்துரை

அர்ஜுனா! என்னில் கண்காணிக்கப் பெற்று, பிரகிருதியானது தாவர ஜங்கம பொருட்கள் கொண்ட இவ்வுலகை சிருஷ்டிக்கின்றது. இதன் காரணத்தால் ஜகத் சுழல்கின்றது.

### விளக்கம்

இயற்கை ஜடமானது; பரமாத்மா ஒளிமயமானவன். பரமாத்மா வின் அருளினால்தான் இயற்கை சராசரமனைத்திலுமுள்ள பிராணி கள் அனைத்தையும் தோற்றுவிக்கிறது. காந்தத்தின் முன்னால் இரும்பு ஆணிகள் நகர்ந்தாலும், காந்தத்திற்கு எவ்விதமான கர்த்தருத் துவமும் இல்லை. அதாவது அதுவாக எதுவும் செய்வதில்லை. அது சாட்சியாக மாத்திரமேயுள்ளது. அவ்வாறே பரமாத்மாவும் இவ்வு லக சிருஷ்டியின் சாட்சியாய் இருக்கிறார். அவனது அருளின் மகி மையால் இயற்கை இவ்வுலக காரியங்களனைத்தையும் செய்கிறது. பரமாத்மாவின் இத்தகைய நடுநிலைமையை சைதன்ய சக்தியை வர்ணிப்பதற்கு இச் சுலோகத்தில் 'அத்யக்ஷேண' என்ற பொருத்த மான சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஒரு சபையில் பல பெரி யோர்கள் கூடினாலும் சபைக்கு அழகு இராது. தலைவர் ஒருவர் வந்தமர்ந்தால்தான் சபைக்குக் கலை ஏற்படும். அவ்வாறே ஒரு கோர்ட்டில் பலர் இருந்தபோதிலும் 'ஜட்ஜ்' வந்தமர்ந்தால்தான் கோர்ட்டு செயல்படும். அவரது முன்னாலேயே கோர்ட் நடவடிக் கைகள் யாவும் நடைபெறும் அவ்வாறே இயற்கை இறைவனின் ஆணையில்லையேல் ஜடமாக செயலற்று இருக்கும். சித்த வடிவின னான பரமாத்மாவினால்தான் இயற்கைக்கு சிருஷ்டிக்கும் சக்தி ஏற்ப டுகிறது. இக்காரணத்தினால்தான், இவ்வுலகமனைத்தும் சுழல்கி றது. இல்லையெனில் இன்ஜின் இல்லாத இரயிலைப் போன்று செயலற்று, வீரியமற்று இருக்கும்.

சாதாரணமாக மக்களின் பார்வை வெளி உலகம் வரையே போகிறது. எனவே அதனையே உண்மையென்று நம்பி அதன் பின் னாலேயே ஓடுகின்றனர். அவர்கள் தவறு செய்கின்றனர் என்பது இச் சுலோகத்தினால் தெரிய வருகிறது. ஸ்தூலப் பிரபஞ்சம் ஜடமானது. அதனைத் திருப்புவது, திசை மாற்றுவது, அதற்கு சிருஷ்டி சக்தியை

யளிப்பதுமான, மிக சூட்கமமான ஆத்ம வஸ்துவானது அதன் பின்னே இருந்து அதனைத் தூண்டுகிறது. விஞ்ஞான பார்வையால் அதனைக் காண வேண்டும். அதுவே பரமாத்மா. இவ்வுலகமனைத் தும் அப்பரமாத்மாவினிடத்திலேயே கற்பிக்கப்படுகின்றது. கற்பிக் கப்பட பொருளுக்கு, சுயமாக பலமோ, தனித்தன்மையோ இராது. அது தன் சக்தியை இருப்பிடமான பரமாத்வினிடத்திலிருந்து தான் பெறுகிறது. அவ்வாறே கற்பிதமான இவ்வுருவத்தின் சக்தியனைத் தும், அதிர்ஷ்டமான பரமாத்மாவினிடமிருந்தே ஏற்படுகின்றது. (ஆயினும் பரமாத்மா கர்த்ருத்துவமமின்றி, சாட்சி மாத்திரமாகவே, இருந்து உலகின் சுழற்சியில் சிக்காது இருக்கின்றார்). இதனின்றும் பௌதீக சக்தியோ, மானசீக சக்தியோ எத்துணை சிறந்ததாயினும் ஆன்மீக சக்தியின் முன் குறைவானதே ஆகும். ஆத்ம சக்தி முதன்மை யானது. ஒளியுடையது. ஏனைய சக்திகளனைத்தும் இயற்கைக்குரிய தாய் ஆன்மீக சக்திக்கு அடுத்தப்படியானவையாகவே உள்ளன. எனவே அறிவுடையோன் சின்ன சின்ன பௌதிக சக்திகளைப் பெறு வதில் மட்டும் வாழ்க்கையை வீணாக்கி விடாமல், அதனைக் கண்டு மனத்தைப் பறி கொடுத்து விடாமல், தெய்வ சக்தியைப் பெறுதல் வேண்டும். மேலும் சின்ன சின்ன அதிகார பதவிகளுக்கு ஆசைப்ப டாமல், உலகத்திற்கே தலைமை வகிக்கும் இறைவனின் சாந்நித்யத் தைப் பெறுவதற்கு, அவனோடு ஐக்கியமடைவதற்கு முயற்சித்தல் வேண்டும். எதனால் இச்சராசரமனைத்தும் இயங்குகின்றதோ அத்த கைய அதிஷ்டான சைதன்ய பரமாத்மாவின் சாக்ஷசாத்காரத்திற்காக முயற்சித்தல் வேண்டுமே தவிர, ஜடமான காட்சிப் பொருள்களைப் பெற்றுத் திருப்தியடைந்து விடக்கூடாது.

**வினா :** இவ்வுலகிற்குத் தலைவன் யார்?

**விடை :** பரமாத்மா. அவனது அருளினால்தான் இந்த சராசரம், ஜகத்த னைத்தும் இயங்குகின்றன.

**முன்னுரை**

பகவானின் அத்தகைய மகிமையை அறியாத அசுர இயல்பு டைய மூடர்களின் நடவடிக்கையை இரண்டு சுலோகங்களில் கூறுகி றார்.

*அவஜானந்தி மாம் மூடா மானுஷீம் தனுமாச்ரிதம்!*
*பரம் பாவமஜானந்தோ மம பூத மஹேச்வரம்!! (11)*

### சொற்பொருள்

மம - என்னுடைய, பரம்பாவம் - பரம தத்துவத்தை (மேன்மை யான இயல்பை), அஜானந்தஹ - அறியாத, மூடாஹ் - விவேகமற்ற மூடர்கள், பூத மஹேச்வரம் - எல்லா உயிர்களையும் நியமிப்பவன் ஆன, மானுஷீம் தனும் - (உலகைக் காப்பதற்காக), மனித தேகத் தினை, ஆச்ரிதம் - எடுத்துள்ளவனுமான, மாம் - என்னை, அவஜா னந்தி - அவமதிக்கிறார்கள். (அலட்சியம் செய்கிறார்கள்).

### கருத்துரை

என்னுடைய பரசொரூபத்தையும், நான் உயிர்களுக்கெல்லாம் ஈசுவரனாயிருப்பதையும், அறியாத விவேகமற்ற மூடர்கள் (உல கைக் காப்பதற்காக) மானிட தேகம் எடுத்துள்ள என்னை அவமதிக் கின்றனர் (அலட்சியம் செய்கின்றனர்).

### விளக்கம்

பரமாத்மா எல்லா உயிர்களையும் படைப்பவன், தலைவன், ஈசுவரன். தர்மத்தைக் காப்பதற்காக, உலகைக் காப்பதற்காக, அவ் வப்போது உலகில் அவதரிப்பான். அவ்வாறு மானுட தேகத்தை எடுத்து உலகில் அவதரித்துள்ள சாட்சாத் இறைவனை மூடர்கள் அறிய இயலாது, எவனோ சாதாரண மனிதன், என்றெண்ணி அவம திக்கின்றனர். அலட்சியம் செய்கின்றனர். அவனது பரதத்துவத்தை அவர்கள் அறியார். அவர்களை மூடர்கள் என்று ஸ்ரீ கிருஷ்ண பர மாத்மா அழைக்கின்றார். ஏனெனில் ஒருவாறு சிறிதளவேனும் விவேகமுடையவர் இறைவனை தூஷிப்பதில்லை. சிலர் அகம்பா வத்துடன், தம் செல்வத்தையும், அதிகாரத்தையும் கண்டு கர்வம டைந்து கண் மண் தெரியாது மகான்களை, சாதுக்களை தூஷிப்பர். ஏளனம் செய்வர். சிசுபாலன், துரியோதனன் முதலானோர் இவ்வ குப்பைச் சேர்ந்தவர்கள். எனவேதான் அவர்கள் கேடுற்றனர்.

ஆன்மீக சாதனை செய்பவர்களுக்குத் தம் வாழ்நாளில் ஏற்றுத லுக்கும் போற்றுதலுக்கும் உரியவராகும் சந்தர்ப்பம் ஏற்படக்கூடும். அப்போது சமநிலையில் இருந்து தம்மிடத்துள்ள குறைகளைக் களைந்து, எக்குற்றமும் இல்லாவிடின் கம்பீரமாய் தைரியத்துடன் இருந்து தூற்றுதலுக்குச் செவி சாய்த்தல் கூடாது. உலகில் சிலர் அத்த கைய இயல்புடையோராய் இருப்பர் என்றறிந்து வாளா இருந்துவி டல் வேண்டும். சாட்சாத் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவே விவேகமற்ற வர்களின் காரணமற்ற தூற்றுதலுக்கு ஆளான போது சாமான்யர்க

ளில் விஷயம் எவ்வாறிருக்கும்? என்று கருதி தைரியத்துடன் சகஜ மாக இருத்தல் வேண்டும். மாயையின் இயல்பு இது என்று அறிந்து சலனமற்ற சித்தத்துடன் இருத்தல் வேண்டும். எவரையும் தூற்றுதல் கூடாது. எவரேனும் இறைவனை நிந்தித்தால் அவ்வாக்கியங்களை இலட்சியம் செய்யாது நாஸ்திகர்களின் வசனங்களை நம்பாது இறை பக்தியைப் பெருக்கிக் கொண்டு அதன் மூலம் அவர்களுக்கும் சரி யான பாடம் கற்பித்தல் வேண்டும்.

**வினா :** இறைவன் எத்தகையோன்?

**விடை :** (1) எல்லா உயிர்களையும் நியமிப்பவன், (2) உலகினைக் காப்பதற்கு அவ்வப்போது மனிதவுடலை எடுப்பான்.

**வினா :** ஈசுவரனின் பரதத்துவத்தை யறியாது விவேகமற்றோர் எங்ங னம் நடந்து கொள்வர்?

**விடை :** உலகைக் காப்பதற்கு மனித தேகம் எடுத்துள்ள இறைவனை யறிந்து கொள்ளாது அவமதிப்பர்.

**வினா :** இதனின்றும் நாம் பெற வேண்டிய கருத்து யாது?

**விடை :** (1) மூடத்துவத்தை ஒழித்தல் வேண்டும், (2) பிறரை நிந்தித் தல் கூடாது, (3) இறைவனது உண்மை தத்துவத்தையறிந்து அவனி டத்து பக்திபூண்டிருத்தல் வேண்டும்.

*மோகாசா மோக கர்மாண மோக ஞானா விசேதஸஹ!*
*ராக்ஷஸீ மாஸுரீம் சைவ ப்ரக்ருதிம் மோஹினீம் ச்ரிதாஹ்!!* (12)

## சொற்பொருள்

(தே - அவர்கள்), மோஹாசா - வீணான ஆசைகள் உடையவர் கள், விசேதஸஹ் - புத்தியற்றவர்கள், (ஆகி), மஹினீம் - மோகத் தினை அடையச் செய்கின்ற, ராக்ஷஸீம் - அரக்க சம்பந்தமுடைய தும், ஆசுரிம்ச - அசுர இயல்புடையதான, ப்ரக்ருதிம்ஏவ - இயல் பினை, ச்ரிதாஹ் - அடைகின்றனர்.

## கருத்துரை

வீண் ஆசையுடைவர்களாயும், வீணான செயல்கள் புரிபவராக வும், வேண்டாத அறிவுடையவர்களாகவும், புத்தியற்றவர்களாக வும் ராக்ஷஸ அசுர இயல்பினை அடைகின்றனர்.

**விளக்கம்**

மக்களின் இயற்கை சாதாரணமாக இரண்டு விதமாக இருக்கும் (1) தெய்வ இயல்பு, (2) அசுர இயல்பு - ஆகியவை. அதில் அசுர இயல்புடையோர் குறித்து இதற்குமுன் சுலோகத்திலும் இந்தச் சுலோகத்திலும் தெரிவிக்கிறார். தெய்வ இயல்புடையோர் குறித்து அடுத்து வரும் சுலோகத்தில் சொல்கிறார். அசுர இயல்புடையோர் வீணான ஆசைகள், செயல்கள் உடையவராயிருப்பர். அவருக்குள்ள சிறிதளவு ஞானமும் அழியக்கூடிய காட்சிப் பொருள்களைக் குறித்த வையே ஆகையால், அதுவும் இறைவனின் பார்வையில் பயனற் றதே ஆகும். அவர்களது சித்தம் உண்மைப் பொருளான ஆத்மா வைக் குறித்த அறிவோ, விவேகமோ இராது. எனவே தான் அவர்கள் மூளையற்றவர்கள் (Brainless People) என்று புத்தி கலங்கியவர்களாக, புத்தியற்றவர்களாக வர்ணிக்கப்பட்டுள்ளனர். மேலும் அத்தகை யோர் அரக்க இயல்புடையவராகவே இருப்பர். இங்கு 'ராக்ஷஸம்', 'ஆசுரீம்' என்று இரண்டு சொற்களையும் ஒரே இடத்தில் அடுத்தடுத் துப் பயன்படுத்தியிருப்பதால் அவர்களது கொடூர இயல்பினை, ராஜ தாமஸ இயல்பினை நன்கு எடுத்துக் கூறுவதற்கேயாம். அத்தகை யோர் ஆன்மீகப் பார்வையில் எதற்கும் பயன்படாதவர் ஆவர். என வேதான் அவர்களது வாழ்க்கை மூடர்களின் வாழ்க்கை (வீணான வாழ்க்கை)யென்று பகவான் தெளிவாகக் கூறுகிறார். அதனால் தான் 'மோஹம்' என்ற பதம் இந்தச் சுலோத்தில் வரிசையாக மூன்று முறை பயன்படுத்தப்பட்டுள்ளது. பொய்யான காட்சிப் பொருள்க ளுக்காக அலைந்து திரிந்து உண்மையான பரமாத்மாவை எண்ணாத வாழ்க்கை உண்மையில் வீணான வாழ்வேயாகும்.

எனவே மக்கள் இராட்சச இயல்பை, அசுரத் தன்மையை, காமம் முதலான துர்குணங்களை, ராஜஸ, தாமஸ முதலான நடவ டிக்கைகளை விடுத்து தெய்வீக இயல்பைக் கொண்டு உண்மைப் பொருளான பரமாத்மாவை நம்பித் தத்தம் வாழ்க்கையைப் பயனுள் ளதாகச் செய்து கொள்ள வேண்டும். இச்சுலோகத்தில் அஞ்ஞானி கள் வீணான ஆசை, வீணான செயல்கள், வீணான அறிவு இவைக ளைக் கொண்டிருப்பர் என்று சொல்லப்பட்டதாகையால், அறிவு டையோர் அதற்கு எதிரான குணங்களையே நடவடிக்கையையே மேற்கொண்டு அதாவது இறைசிந்தனை, ஆசை, இறை சம்பந்த மான செயல்கள், தெய்வத்தைப் பற்றிய அறிவு இவற்றுடன் 'மூடர்க ளாக' இராது 'தெய்வ சித்தத்தையுடையவராய் ஒளிர்தல் வேண்டும்.

**வினா :** *அசுர இயல்பு எத்தகையது?*

**விடை :** *மக்களை மோகம் அடையச் செய்வது, அஞ்ஞானத்தில் ஆழ்த்துவது.*

**வினா :** *அசுர இயல்புடையோரது குணங்கள் யாவை?*

**விடை :** *1) வீணான ஆசைகள், 2) வீணான செயல்கள் 3) வீணான வேண்டாத அறிவு இவற்றுடன் இருப்பர்.*

**வினா :** *எனவே ஜீவர்கள் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும்?*

**விடை :** *அசுர இயல்பினை விடுத்துத் தெய்வ இயல்பையே கொள்ள வேண்டும். தெய்வத்தைக் குறித்த ஆசை, செயல்கள், அறிவு இவற்று டன் இருத்தல் வேண்டும்.*

**முன்னுரை**

*இனித் தெய்வ இயல்புடையோரின் இலட்சணங்களை இரண்டு சுலோகங்களில் கூறுகிறார்.*

*மஹாத்மானஸ்து மாம் பார்த்த தைவீம் ப்ரக்ருதி மாச்ரிதாஹ்!*
*பஜந்த்யனன்யமனஸோ ஞாத்வா பூ தாதிமவ்யயம்!! (13)*

**சொற்பொருள்**

*பார்த்த - அர்ஜுனா! மஹாத்மானஸ்து - மகாத்மாக்கள், தைவீம் - தெய்விக, பாருதிம் - இயல்பை, ஆசீரிதாஹ் - (ஸன்தஹ்) அடைந்த வர்களாய், மாம் - என்னை, பூதாதிம் - எல்லா உயிர்களுக்கும் பிறப்பி டமும், அவ்யயம் - அழிவற்றவனும் ஆன, ஞாத்வா - அறிந்து கொண்டு, அனன்யமனஸஹ - பிற சிந்தனைகளற்றவராய், பஜந்தி - பூசிக்கிறார்கள்.*

**கருத்துரை**

*அர்ஜுனா! மஹாத்மாக்களாயின், தெய்வீக இயல்புடையவ ராய், என்னை எல்லா உயிர்களின் பிறப்பிடமாகவும், அழிவற்றவ னாகவும் அறிந்து, வேறெதிலும் மனத்தைச் செலுத்தாதவராய் என் னையே பூசிக்கின்றனர்.*

**விளக்கம்**

தெய்வீக இயல்பையுடையவர்களும், சத்வகுணமுடைய மகாத்மாக்களும் இறைவனிடம் (அனன்ய பக்தி) இடைவிடாத பக்தி கொண்டொழுகுகின்றனர். எதற்குப் பூசிக்கின்றனர்? அவர்கள் இறைவனிடத்தில் இரண்டு சிறந்த குணங்களைக் கண்டு சேவிக்கின் றனர். அவையெவையெனில் - 1) ஆதிகாரணன், 2) அழிவற்ற தன்மை. இறைவன் அண்டராகத்திற்கும் ஆதிகாரணன் என்றும், அழிவற்றவன் என்றும் அறிந்தனர். இவ்வியல்பு வேறெந்த பொருளி லும் எவரிடத்திலும் இல்லை. இறைவன் சநாதனன், அநாதி ஏனை யவை அனைத்தும் ஆதிஅந்தமுடையவை. எனவே அவை அற்பமா னவை. இறைவன் அழிவற்றவன். ஏனையவை அனைத்தும் அழிவு டையவை. பிறப்பு இறப்பு இவையுடையவை. இவ்வாறாக மகனீ யர்கள் காட்சி, காட்சிப் பொருள்கள் இவற்றைப் பாகுபடுத்தி அறி யும் பரிசோதனையுடையவராய், தெய்வ இயல்பு எத்தகையது என விசாரித்தறிந்து, இறைவனை நிலையானதாகவும் உணர்ந்து அவ னையே இடைவிடாது பக்தி செய்கின்றனர்.

'அனன்ய மனஸஹ்' - மனத்தினை வேறெதிலும் செலுத்தாது ஏனைய செயல்கள் எதுவுமின்றி, தேயவஸ்துவின் மீதே நிலைநிறுத் தினால் அதனை அனன்ய பக்தி என்பர். அத்தகைய மாறாத மனத்து டன் இறைவனை தியானிக்க வேண்டுமென்றால் ஏனையவற்றின் **அழியக்கூடிய தன்மை முதலான குற்றங்கள்**, இறைவனிடத்து உள்ள **நிலைத்தன்மை முதலான குணங்கள்** இவற்றை நன்கு கிரகித்துக் கொள்ள வேண்டும். இதனையே இங்கு ''ஞாத்வா'' - அறிந்து எனப் பட்டது. தேயவஸ்துவினைப் பற்றி அறிந்தால்தான் அதன்மீது நம் பிக்கை ஏற்படும். அப்போதே மாறாத மனம் உண்டாகும். அவ் வாறே காட்சிப் பொருள்களின் குறைகளை அறிந்து அவற்றின் மீது விரக்தி ஏற்பட்டால்தான் மனம் அவற்றின் மீது செல்லாது உன்முக மாகத் திரும்பி இறைவனிடத்தே நிலைபெறும்.

''மகாத்மனஹ்'' - மஹாத்மா என்றால் அது ஒரு விருது. அவ்வி ருதினை முயற்சித்தால் அனைவரும் பெறலாம். எவர் 1) தெய்வ இயல்பைக் கொண்டவராய் 2) இறைவனின் அழிவற்ற தன்மை, ஆதிகாரணன் என்றும் அறிந்து 3) இடைவிடாத மாறாத மனதுடன் அவனை தியானித்து இருந்தால் மஹாத்மாவாக முடியும். அசுர இயல்பினைக் கொண்டோர், காமக்குரோதம் முதலானவற்றை கொண்டோர் இறைவனை ஒரு முனைப்பட்ட மனத்துடன் வணங்

காதவர் எக்காலத்தும் மஹாத்மாவாக முடியாது. அவர்கள் அற்பாத் மாக்களே.

உலகில் பலரும் இறைவனைத் தியானித்திருப்பினும் மாறாத பக்தி பூண்டவர் சிலரே. பலரும் மனத்தை ஒருபக்கம் காட்சிப் பொருள்களின் மீதும் ஒரு பகுதியை இறைவனின் மீதும் வைக்கின்ற னர். அத்தகையோர் இறை தத்துவத்தை நன்கறிந்து அவனது மகி மையை உணர்ந்து படிப்படியாகக் காட்சிப் பொருள்களின் மீதான சிந்தனையை ஒழித்து இறைவனைச் சேவிப்பதற்குப் பயிற்சி செய் தல் வேண்டும். மனதில் நூறுசதம் தெய்வத்தன்மை இருக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும். அப்போது மனமான சித்வடிவமாக இறைவடிவமாக, சத்வமாக மாறிப் போகும். (ஞசித்தம் சத்வமுச் யதே) அத்தகைய நிலையே மோக்ஷம்.

**வினா :** தெய்வ இயல்புடைய மஹாத்மாக்கள் எங்ஙனம் நடந்து கொள்வர்?

**விடை :** இறைவனை எல்லா உயிர்களின் ஆதி காரணமாகவும், அழிவற்றவனாகவும் அறிந்து மாறாத மனத்துடன் அவனைச் சேவித் திருப்பர்.

**வினா :** பரமாத்மாவின் லக்ஷணம் என்ன?

**விடை :** ஆதிகாரணன், அழிவற்றவன்.

**வினா :** இறைவனிடத்து மாறாத மனம் எவ்வாறு ஏற்படும்?

**விடை :** அவனது வடிவம் இயல்பினை நன்கு அறிந்தால், அத்தகைய ஞானத்தினால் அவன்மீது முழு நம்பிக்கை ஏற்பட்டு வேறொன்றை யும் நினைக்காது அவன் மீது மனம் நிலைக்கும். அதுவே மாறாத மனம்.

*சததம் கீர்த்தயந்தோ மாம் யதந்தஸ்ச த்ருடவ்ருதாஹ!*
*நமஸ்யந்தஸ்சமாம் பக்த்யா நித்யயுக்தா உபாசதே!! (14)*

**சொற்பொருள்**

(தே அவர்கள்), ஸததம் - எப்போதும், மாம் - என்னையே, கீர்த்யந்த - புகழ்பவராய், த்ருடவ்ரதாஹ் - உறுதியான விரதத்தோடு, யதந்தஸ்ச - இடைவிடாத முயற்சியுடன், பக்த்யா - பக்தியுடன், நமஸ்யந்தஹச - வணங்குபவராய், நித்யயுக்தாஹ் - எப்போதும்

என்னிடத்துச் சித்தத்தை வைப்பவராய், மாம் - என்னை, உபாசதே - உபாசிக்கிறார்கள்.

**கருத்துரை**

எப்போதும் என்னைப் புகழ்பவராய் உறுதியான நிட்டையுடன் முயல்பவராய், பக்தியுடன் வணங்குபவராய், எப்போதும் என்னி டத்தே சித்தத்தை வைத்தவராய், தெய்வ இயல்புடையோர் என்னை சேவிக்கிறார்கள்.

**விளக்கம்**

மஹாத்மாக்கள் இறைவனை எம்முறையின் சேவிக்கின்றனர் என்று இங்குச் சொல்லப்பட்டது. எக்காலத்தும் எச்செயல்களைப் புரிந்தாலும் அவர்கள் இறைவனையே நினைத்த வண்ணம் புகழ்கின் றனர். வெளிப்படையான பக்தி பூண்டோர் இறைவனது நாமங் களை உச்சரித்த வண்ணம் இருப்பர். ஆத்மபூஜை செய்வோர் இதயத் திலேயே இறைவனைக் குறித்து எக்காலத்தும் தியானித்த வண்ணம் இருப்பர்.

அவர்கள் இடைவிடாத முயற்சியில் ஈடுபட்டு இருப்பர். இந்தி ரியக் கட்டுப்பாட்டினைப் பயிற்சி செய்த வண்ணம் இருப்பர். முயற்சி செய்பவர்க்கே இறைநிலை கிட்டும் என்பதனை "எதன்சதஸ்ய" என்ற சொல் தெளிவாக்குகிறது. அவர்கள் செய்யும் முயற்சியோ "த்ருடவ்ரதா" அதாவது பற்றுதலுடன் செய்யப்படும் ஆன்மீக சாதனை.

''தே த்வன்த்வ மோஹநிர்முக்தா பஜன்தேமாம் த்ருடவ்ருதாஹ் '' (7-28) திடமான விரதத்தைப் பற்றி மேன்மை, அதன் அவசியம், நிரூபணமாகிறது. பல பிறவிகளாகத் தொடர்ந்து வரும் பாவங்க ளின் வாசனைகளால் குறைவுடைய பண்புகளுடையதாய் உள்ள மனத்தினைக் கட்டுக்குள் கொணர வேண்டுமாயின் சில பயிற்சி களை சாதகன் தவறாது செய்தல் வேண்டும். (உபவாசங்கள், மௌன விரதம், ஜபம், தியானம், ப்ரும்மசரியம் முதலானவை).

திட விரதமிருக்க வேண்டுமேயன்றி இடையிடையே நிறுத்தி விடுதல் கூடாது. விரதங்கள் நியமங்கள், ஆன்மீக நிஷ்டையில் இத்த கைய திடத்தன்மையில்லாததால்தான் பலரும் இம்மார்க்கத்தில் அடி யெடுத்து வைத்து மாயையின் சக்தியால் தோல்வியுற்றுப் பின் வாங்கி விடுகின்றனர். மாயை ஒரு பயங்கரமான எதிரி, எனவே அது

சாதாரணமான போருக்குப் பயப்படுவதில்லை. எனவே திடவிதரம் என்னும் சிறந்த அஸ்திரத்தைப் பிரயோகித்தால்தான் அதனைத் தோற்கடிக்க முடியும்.

'**நித்**யயுக்தாஹ்' - என்பதால் அவர்கள் எப்போதும் மாறாத **சிந்தனை**யுடன் இருப்பர் என்பது தெளிவாகிறது. ஆயின் 'பக்த்யா' **என்ற** சொல்லினால் அவர்கள் செய்யும் வழிபாடு, தியானம் இவை நிர்மலமான பக்தியுடன் கூடியிருக்கும் என்பது தெளிவு. இறை வனை தியானிப்பவர் பலரிருப்பினும் பக்தியுடன் தியானிப்பவர் மிகவும் அரிதானவர்.

'ஸது தீர்க்க காலனை ரன்தர்ய ஸத்கார சேவிதோ திருடபூமிஹி' என்று பதஞ்சலி முனிவர் அன்புடன் கூடிய தியான முதலான இடை விடாத முயற்சிக்கே அதிகமான முக்கியத்துவம் அளித்துள்ளார். இவ்வாறாக நிரந்தர தெய்வ நினைவு, திடவிரதம், பக்தியுடன் கூடிய நிரந்தர தியானம் இவை பகவத் சாட்சாத்காரத்திற்கான வழிகள் என்று இச்சுலோகத்தால் தெளிவாகின்றது. எனவே முழுக்க இவற்றை நன்கு பயிற்சித்து, தெய்வ இயல்புடையோராய் யத்தனித் தால் பிரம்ம சாயுஜ்ய பதவியை விரைவில் அடையலாம்.

**வினா :** மகாத்மாக்கள் இறைவனை எவ்வாறு சேவிப்பர்?

**விடை :** 1) எப்போதும் புகழ்ந்து கொண்டிருப்பர், 2) திட விரதம் மேற்கொள்வர், 3) இறைவனை பக்தியுடன் வணங்குவர், 4) சித் தத்தை வேறெதிலும் செலுத்தாது இறைவனிடத்தேயே நிலைநிறுத் துவர்.

**வினா :** இதனின்றும் பகவத் பிராப்திக்கு உபாயம் எவையெனத் தெரிகின்றது?

**விடை :** 1) நிரந்தர இறை நினைவு, 2) திட விரதத்துடன் கூடிய முயற்சி, 3) பக்தியுடன் கூடிய வணக்கம், தியானம், 4) ஒருமுகப் பட்ட நிரந்தர தெய்வ சிந்தனை ஆகியவை.

**வினா :** இறைவனை எவ்வப்போது நினைத்தல் வேண்டும், புகழ்தல் வேண்டும்?

**விடை :** எப்போதும்.

**வினா :** எத்தகைய விரதத்துடன் முயல வேண்டும்?

**விடை :** திட விரதத்துடன்.

**வினா :** இறை சிந்தனை எவ்வாறு செய்தல் வேண்டும்?

**விடை :** பக்தியுடன் செய்தல் வேண்டும்.

## முன்னுரை

மக்கள் தம்மை பலவிதமாக உபாசிக்கிறார்கள் எனத் தெரிவிக்கிறார்.

*ஞான யக்ஞேன சாப்யன்யே யஜந்தோ மாமுபாஸதே!*
*ஏகத்வேன ப்ருதக்த்வேன பஹுதா விச்வதோ முகம்!!* (15)

## சொற்பொருள்

**அன்யேஅபி** - மேலும் சிலர், **ஞான யக்ஞேன ச** - ஞானயக்ஞத்தினாலும், **யஜந்தன்** - பூசிப்பவர்களாய், **ஏகத்வேன** - (தானே பிரம்மமென்ற) அத்வைத பாவனையுடன், - (கேசித் - மேலும் சிலர்), **ப்ருதக்த்வேன** - (பிரம்மமே பல தேவதாரூபங்களில் உள்ளது எனும்), துவைத பாவனையுடனும், **பஹுதா** - பலவாறாக, **விஸ்வ தேமுகம்** - விஸ்வரூபனான, (ஸர்வாத்மாவான) **மாம்** - என்னை, **உபாசதே** - உபாசிக்கிறார்கள்.

## கருத்துரை

மேலும் சிலர் ஞானத்தினால் வழிபடுபவராய், (தானே பிரம்மம்) எனும் அத்வைத பாவனையுடனும், இன்னும் சிலர் (பிரம்மமே பல தேவதைகளை வடிவாகயுள்ளது. அத் தேவதைகளில் நான் ஒன்றைப் பூசிக்கிறேன்) என்ற துவைத பாவனையுடனும், இவர் இவ்வாறாகப் பலவிதமாக என்னை உபாசிக்கின்றனர்.

## விளக்கம்

மகாத்மாக்கள் ஆனவர் எப்போதும் பரமாத்மாவை பூசிப்பர் என்று இதற்கு முன் சொன்னார். அவர்களில் சிலர் அத்வைத பாவனை, சிலர் துவைத பாவனையும், மேலும் சிலர் பற்பலவிதமாகவும் அவரவர் பண்பிற்கேற்ப இறைவனைச் சேவிப்பர் என்று இங்குச் சொல்லப்பட்டது. நேராகவோ, அல்லது குறுக்காகவோ எவ்வாறு ஓடினாலும் நதிகள் அனைத்தும் எவ்வாறு கடலில் கலக்கின்றனவோ, அவ்வாறே ஆன்மீக வழியில் முயல்வோரும், பலவிதமான

வழிகளில் இறைவனையே அடைவர். ஆயின் இலட்சியத்தை அடைவதில் ஒருமுனைப்பாடு பக்தி அனைவருக்கும் இருத்தல் வேண்டும்.

'ஞான யக்ஞேன' - ஞான யக்ஞமென்றால் என்ன? 'பிரம்ம சத்யம் ஜகன்மித்யா ஜீவோ பிரஹ் நா பர ஹ'' - பிரம்மமொன்றே உண்மைப்பொருள், காட்சிப் பொருளான இவ்வுலகமனைத்தும் பொய்யானவை. ஜீவன் உண்மையில் பிரம்மமேயன்றி வேறல்ல என்னும் நிச்சயத்துடன் இருத்தலே ஞானயக்ஞமாகும். 'தத்வமஸி' என்னும் மகா வாக்கியத்தில் சிந்தனை, 'சோஹம்', 'பாவம்' ஆகியவை. இத்தகைய ஞான யக்ஞத்தைச் செய்வோன், அத்வைத எண்ணத்துடன் தானே பிரம்மம் என்ற சிந்தனையுடன் இருப்பான். இந்த ஞானயக்ஞத்தின் சிறப்பினைக் குறித்து, அவசியத்தைப் பற்றி ஸ்ரீ கிருஷ்ணர் கீதையில் அங்கங்கு வலியுறுத்திக் கொண்டே போகிறார். இறுதியில் முடிவாக, ''ஞானயக்ஞேன தேனாஹமிஷ்டஸாஸ்யமிதி மேமதிஹ -'' ஞான யக்ஞத்தினால் நான் ஆராதிக்கப்பட்டவன் ஆவேன் - என்று சொல்லி ஞானயக்ஞத்தின் மகிமையைக் குறித்துப் புகழ்கிறார். அனைத்தும் இறைவடிவமேயென்றும், அவ்வடிவம் ஆத்மாவைத் தவிர வேறில்லையென்றும், ஒவ்வொருவரும் ஏதோவொரு காலத்தில் அதனை அறிந்து முக்தியடைவர். இதுவே ஞான யக்ஞம்.

'விஸ்வதோ முகம்' - உலகமனைத்தும் முகமுடையவன் - ஸர்வாத்மா வடிவினன் என்று இங்கு பகவான் வர்ணிக்கப்படுகிறார். இவ்வுண்மையை உணர்ந்தால் எவரும், எந்தப் பாவச் செயல்களையும் செய்ய முடியாது. ஏனெனில் எல்லாவிடத்தும் பகவானின் முகம், பார்வை, இருப்பு உள்ளது. அவர் அனைத்தையும் கண்டு கொண்டேயிருக்கிறார். எனவே 'விஸ்வதோ முகம்' என்ற இப்பதத்தினை மக்கள் அவ்வப்போது நினைவிற்குக் கொணர்ந்து கெட்ட காரியங்களினின்றும் விலகுதல் வேண்டும்.

**வினா :** மக்கள் இறைவனை எவ்வெவ்வகையில் வணங்குகின்றனர்?

**விடை :** சிலர் ஞான யக்ஞத்தினால், அத்வைத பாவனையால், மேலும் சிலர் துவைத பாவத்தினாலும் அவரவர் பண்பிற்கேற்ப பலவிதமாக வணங்குகின்றனர்.

## முன்னுரை

இவ்வுலகில் அனைத்தும் பரமாத்மாவேயென்று இனிவரும் நான்கு சுலோகங்களில் கூறுகிறார்.

*அஹம் க்ர தூரஹம் யக்ஞுஹ ஸ்வதாஹ மஹ மௌஷதம்!*
*மந்த்ரோ அஹமஹமேவாஜ்யமஹமக்னிரஹம் ஹுதம்!! (16)*

## சொற்பொருள்

அஹம் - நான், க்ரநுஹ் - கிரது, (வேதாந்தமான வைதிககர்மம்), அஹம் யக்ஞுஹ - நான் யக்ஞும், அஹம் மந்த்ரா - மந்த்ரமும் நானே, அஹம் ஆஜ்யம் - நானே ஹோம த்ரவ்யம் (அவிசு), அஹம் அக்னிஹ் - நானே அக்னிஹோதரி, அஹமேவ - நானே ஹுதம் - (அஸ்மி) - ஹோமகர்மமும் நானே ஆக இருக்கிறேன்.

## கருத்துரை

நானே கிரது என்ற வைதிக கர்மம்; யக்ஞும் நானே; மந்திரமும் நானே; ஔஷதம் நான்; ஹோமம் செய்யப்படும் நெய் (அவிசும்) நான், நானே அக்னி; ஹோமகர்மமும் நானே ஆக இருக்கிறேன்.

## விளக்கம்

பரமாத்மா எங்கும் வியாபித்திருப்பவனாய், எங்கும் முகமுடையவனாய், எல்லாப் பொருட்களிடத்தும் இருக்கிறான் என்ற வாக்கியத்தை நிரூபிக்க உதாரணமாக யக்ஞகிரியை எடுத்துக் கொண்டு அதில் உள்ள எல்லாமும் இறைவடிவே என்று கூறுகிறார். அவ்வாறே உலகில் உள்ள எல்லாமும் இறைவனே என அறிந்து அனுபவபூர்வமாக உணர்தல் வேண்டும்.

*பிதாஹமஸ்ய ஜகதோமாதா தாதாபிதாமஹஹ்!*
*வேத்யம் பவித்ரமோம்காரஹ ருக்ஸாமயஜுரேவச!! (17)*

## சொற்பொருள்

அஸ்யஜகத் - இவ்வுலகிற்கு, அஹம்ஏவ - நானே, பிதா - தந்தை, மாதா - தாய், தாதா - காப்பாற்றுபவன் (அல்லது கர்மபலனைக் கொடுப்பவன்), பிதாமஹஹ் - பாட்டனார், வேத்யம் - அறியத்தக்கவன், பவித்ரம் - தூய்மை செய்பவன், ஓம்காரஹ - ஓம்காரமாய் இருப்பவன், ருக்ஸாமயஜுஃச - ரிக்ஸாமம் யஜுர் வேதங்களுமாக இருக்கின்றேன்.

**கருத்துரை**

இந்த ஜகத்தின் தந்தை, தாய், பாட்டனார் ஆனவனும் கர்மபல னைக் கொடுப்பவனும், அறியத்தக்கவனும், தூய்மை செய்பவ னும், ஓம்காரம், ரிக்யஜுர் ஸாம வேதங்கள் ஆகின்றவனும் நானே.

**விளக்கம்**

உலகியலுடன் ஜீவனின் உறவு தற்காலிகமானதே. ஸ்தூலசரீரம் இருக்கும் வரையே உறவினருடன் அவனுக்குத் தொடர்பு உண்டு. அதன் அழிவுடன் அவனுக்கு அத்தொடர்பு அற்றுப் போகிறது. தாய், தந்தை, தாத்தா, சகோதரர்கள் அனைவரும் அவ்வாறே. ஆயின் இறைவனின் தொடர்பு அத்தகையது அல்ல. இறைவன் தாய், தந்தை, தாத்தாவாக எப்போதும் நம்முடனேயே இருப்பான். ஸ்தூல சரீரம் அழிந்த பின்பும் தெய்வத்துடன் நமது தொடர்பு அற்றுப் போவதில்லை. இறைவன் நிலையானவன் ஆதலால் நித்ய உறவின னான அவனையே ஜீவன் சேர்தல் வேண்டும். இறைவனையே தாயா கவும், தந்தையாகவும், காப்பாற்றுபவனாகவும் நம்பி உள்ளவன் பயம் இன்றி எப்போதும் ஆனந்தத்துடன் இருக்க முடியும். ஏனெ னில் நிலையான அமைதியை பந்தத்தினினும் விடுதலையைப் பக்த னான அவனுக்குப் பகவான் அளிப்பதால், அவனைச் சரணடைந்த வர்களுக்குக் கைவல்யபதம் அளித்து உதவுவார்.

''வேத்யம்'' - என்று சொல்வதால் இவ்வுலகில் பல பொருள் இருப்பினும் அறியத்தக்கது அப்பரமாத்மா ஒன்றே. எதனை அறிந் தால் ஜீவனுக்கு பேரமைதி பிறவி இன்மை கிடைக்குமோ அத னையே அறிதல் வேண்டும். அவனை அறியாது எதனை அறிந்தா லும் மனிதன் ஒன்றும் அறியாதவனே. அவனை அறிந்து விட்டால் ஏனையவற்றை எதனையும் அறியாதிருந்தாலும், அனைத்தும் அறிந் தவனே ஆகிறான்.

''ஓம்காரஹ'' - ப்ரணவம் இறைவனின் நாமமாகையால் அதனை உச்சரித்து அதன் பொருளை நினைத்து வந்தால் அற்புதமான பலன் கிட்டும். எல்லா மந்திரங்களையும் விட பிரணவ மந்திரம் மிகச் சிறந்தது. இவ்வாறாக உலகம் அனைத்தும் இறைவடிவமே என்பதை உணர்ந்து பக்தியுடன் ஒழுகுதல் வேண்டும்.

**வினா :** இவ்வுலகில் அனைவர்க்கும் தந்தை, தாய், தாத்தாவாகக் காப்பாற்றுபவன் யார்?

**விடை :** இறைவனே.

**வினா :** அனைத்தையும் விட தூய்மையான பொருள் எது?

**விடை :** பரமாத்மாவே.

**வினா :** இன்னும் சிறப்பாக எவ்வடிவில் பரமாத்மா ஒளிர்கிறார்?

**விடை :** ப்ரணவமாக, ருக், சாம, யஜுர், வேத வடிவமாக விளங்குகிறார்.

*கதிர்பர்தா ப்ரபுஹ சாக்ஷிநிவாஸக சரணம் ஸுஹ்ருத்!*
*ப்ரபவஹ ப்ரளயஹ ஸ்தானம் நிதானம் பீஜபவ்யயம்!!* (18)

**சொற்பொருள்**

கதிஹ் - புகலிடமாகவும், பர்தா - தாங்குபவனாகவும், ப்ரபு -தலைவனாகவும், சாக்ஷி - சாட்சியாகவும், நிவாஸஹ - இருப்பிடமாகவும், சரணம் - அடைக்கலமாகவும், சுஹ்ருத் - பிரதிபலனை எதிர்பாராது நன்மை செய்பவனும், ப்ரபவஹ்தானம் ப்ரலயஹ -ஸ்ருஷ்டி ஸ்திதிலயத்திற்குக் காரணமானவனும், நிதானம் - களஞ்சியமாகவும், அவ்யயம் - அழிவற்ற, பீஜம் - வித்தாகவும் (மூலகாரணமாகவும்) நானே இருக்கின்றேன்.

**கருத்துரை**

அடையக்கூடிய மேன்மையான இலக்காகவும், தாங்குபவனாகவும், தலைவனாகவும்,சாக்ஷியாகவும், இருப்பிடமாகவும், அடைக்கலமாகவும், நன்மை செய்பவனாகவும், ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயகர்த்தாவாகவும், களஞ்சியமாகவும், அழியாத வித்தாகவும் (மூலகாரணமாகவும்) நானே இருக்கிறேன்.

**விளக்கம்**

கதிஹ் - ஜீவர்களின் புகலிடம், அடையக்கூடிய லட்சியம் இறைவனே. அழிவற்ற ஸத்வஸ்துவான ஆத்மாவே எல்லா ஜீவர்களுக்கும் பரமகதியாய் உள்ளது.

பர்தா - அனைவரையும் தாங்குபவன், காப்பாற்றுபவன் பரமாத்மா. பெண்கள், ஆண்கள் அனைவருக்கும் இறைவன் பர்தா. பெண்கள் தம்பதி சேவை செய்துவரினும் ஜகத்பதியின் மீது கூட மாறாத பக்தி கொள்ள வேண்டும். விதவையான பெண்கள் கூட துக்கத்தில் ஆழ்ந்து விடாமல் இறைவனே தன் பர்தாவாகக் கருதி தியானித்து பூஜித்து வருதல் வேண்டும்.

*ப்ரபு - உலகின் தலைவன் மஹாசக்ரவர்த்தி பிரம்மாண்ட நாயகன் பரமாத்மா. எனவே சின்னச்சின்ன கிராமங்கள் ராஜ்யங்கள் பூலோகம் அனைத்திற்கும் தலைவனாய் இருப்பினும் கர்வப்படாது மஹாப்ரபுவான இறைவனிடம் பக்தி பூண்டிருத்தல் மேலானது.*

*சாக்ஷி - பகவான் மக்கள் செய்யும் பாவ புண்யங்களை சாக்ஷியாக இருந்து கவனிக்கின்றார். ஆகையால் அனைவரும் தர்ம மார்க்கத்தையே பின்பற்ற வேண்டும்.*

*நிவாஸஹ - பிரம்மாண்டம் அனைத்தும் இறைவனின் வயிற்றினின்றே பிறக்கின்றன. எனவே எல்லா உயிர்களுக்கும் அவனே இருப்பிடம்.*

*சரணம் - நிலையான மோக்ஷத்தினை அளிக்கவல்ல சர்வேஸ்வரனையே அடைக்கலம் அடைதல் வேண்டும்.*

*சுஹ்ருத் - பரமாத்மா அனைவருக்கும் நெருங்கிய தோழன். பிரதிபலனை எதிர்பாராது நன்மை செய்பவன். எக்காலத்தும் நீங்காத தோழமையைப் பூண்டு அவனிடத்துப் பக்தி செய்தல் வேண்டும்.*

*ப்ரபவஹ ப்ரளயஸ்தானம் - உலகின் ஸ்ருஷ்டி, ஸ்திதி லயம் இவற்றின் காரணன் பரமாத்மாவே. அவனது அருளினாலேயே இவ்வுலகமனைத்தும் காந்தத்தின் முன் ஊசியைப் போலச் செயல்படுகிறது.*

*நிதானம் - இறைவன் அனைவருக்கும் களஞ்சியம் போன்றவன் (Store House) ஏனெனில் ப்ரளய காலத்தில் அனைத்தும் அவனுள்ளே ஒடுங்குகின்றன.*

*பீஜ மவ்யயம் - எல்லா உயிர்களுக்கும் காரணமான வித்து பரமாத்மாவே. செடி வேறு வித்து வேறு அல்ல. எனவே ஜீவனானவன் தன் வித்தான பரமாத்மாவின்றும் வேறுபட்டவன் அல்ல. எனவே ஜீவன்தான் அற்பமானவன் என்றும் சக்தி அற்றவன் என்றும் கருதாது தன் வித்தான இறைவனை எண்ணி தைரியத்துடன் இருத்தல் வேண்டும். 'அவ்யயன் பீஜன்' என்பதால் அனைத்திற்கும் காரணமான வித்து அழியாதது என்பது தெளிவு.*

**வினா :** ஜீவர்களுக்கு அடைக்கலம் யார்? இருப்பிடம் யார்? சாட்சி யார்? தோழன் யார்? கணவன் யார்? ச்ருஷ்டி ஸ்திதி லய காரணன் யார்?
**விடை :** பரமாத்மாவே.

*தபாம்யஹமஹம் வர்ஷம் நிக்ருஹ்ணாம் யுத் ச்ருஜாமிச!*
*அம்ருதம்சைவ ம்ருத்யுஸ்ச சதசச்சாஹமர்ஜுன!! (19)*

## சொற்பொருள்

*அர்ஜுனா! அஹம் - நான், தபாமி - (சூர்ய கிரணங்களினால்) வெப்பத்தை அளிக்கிறேன், அஹம் - நான், வர்ஷம் - மழையை, உத்ஸ்ருஜாமி - பெய்விக்கிறேன், நிக்ருஹ்ணாமீச - (மழையை) நிறுத்துகிறேன், அம்ருதம் ச - இறவாமையையும், ம்ருத்துஹ்ச - மரணத்தையும், சத்அசத்ச - சத்தாகவும், அசத்தாகவும் அஹம் ஏவ (அஸ்மி) - நானே ஆகிறேன்.*

## கருத்துரை

*அர்ஜுனா! சூரிய கிரணங்களினால் நான் வெப்பம் தருகிறேன்; மழையைப் பெய்விக்கிறேன், தடுக்கிறேன். மரணம் இன்மையை யும் (மோக்ஷத்தையும், மரணத்தையும் அளிக்கிறேன். அவ்வாறே சத்தாகவும், அசத்தாகவும் நானே இருக்கிறேன்.*

## விளக்கம்

*இவ்வுலகத்திற்கும், உலகின் செயல்களுக்கும் ஆதாரமாய் உள்ளது இறைவனே ஆகையால் எல்லாம் அவனாலேயே நடைபெறுகிறது என்று சொல்லப்பட்டது. எடுத்துக்காட்டாக 3 செயல்கள் விளக்கப்படுகிறது. 1) வெய்யில் அளிப்பது, 2) மழை பெய்வது, 3) மழையைத் தடுப்பது. எனவே அதிக மழையோ, வறட்சியோ, அல்லது எவ்விதமான துன்பங்கள் நேர்ந்தாலும் இறைவனைத் தவிர நிவாரணம் அளிப்பவர் வேறெவரும் இல்லை என்பது தெளிவு.*

*பாம்பு கயிறு உதாரணத்தில் பாம்பு கயிற்றை விட வேறானது அல்ல. அதுபோன்றே கற்பிதமான இவ்வுலகம் அதிஷ்டானமான பரமாத்மாவை விட வேறல்ல. எனவேதான் அமிர்தம், மரணம், சத், அசத் அனைத்தும் தெய்வ வடிவாகவே இங்கு வர்ணிக்கப்படுகிறது. உண்மையில் இறைவன் சத்பொருளே அன்றி அசத் வடிவினன் அல்ல. அமிர்த வடிவினனே அன்றி மரணத்தோடு கூடியவன் அல்ல என அறிதல் வேண்டும்.*

**வினா :** வெப்பம், மழை, எவரால் ஏற்படுகிறது?
**விடை :** பரமாத்மாவால் ஏற்படுகிறது.

### முன்னுரை

காம்ய எண்ணத்துடன் ஸ்வர்க்கம் முதலியவற்றை அடைய செய்யப்படும் யக்ஞங்கள் நன்மை தருபவை அல்ல எனினும் அத்த கையோர் பிறப்பிறப்பினின்றும் தப்பித்துக் கொள்ள இயலாது என் றும் இனிவரும் 2 சுலோகங்களில் கூறுகிறார்.

*த்ரைவித்யா மாம் ஸோமபாஹ பூதபாபா யக்ஞை ரிஷ்ட்வா ஸ்வர்கதிம் ப்ரார்தயந்தே!*
*தேபுண்யமாஸாத்ய ஸுரேந்த்ரலோக மச்நந்தி திவ்யான் திவிதேவபோகான்!!* (20)

### சொற்பொருள்

த்ரிவித்யா - 3 வேதங்களையும் அத்யயனம் செய்தவர்களை, ஸோமபாஹ - ஸோமபானம் செய்தவர்களை, பூதபாபாஹ் - பாபத்தி னின்றும் விடுபட்டவர்களை, யக்ஞை - யக்ஞத்தினால், மாம் இஷ்ட்வா - என்னை பூஜித்தவர்களை, ஸ்வர்கதிம் - சுவர்க்கத்தை அடைவதற்காக, ப்ரார்த்தயந்தே - வேண்டுவோர்களும், தே - அவர் கள் புண்யம் - புண்யபலத்தினை, சுரேந்த்ரலோகம் - இந்திரலோ கத்தை, ஆஸாத்ய - அடைந்து, திவி - ஸ்வர்கத்தில், திவ்யான் - திவ்யமான, தேவயோகான் - தேவபோகங்களை, அச்நந்தி - அனுப விக்கிறார்கள்.

### கருத்துரை

3 வேதங்களை அறிந்தவர்களும், ஸோமபானம் செய்தவரும், பாபத்தினின்றும் விடுபட்ட வரும், யாகங்களால் என்னை பூஜித்து ஸ்வர்க்கத்தினை வேண்டுகின்றனர். அவர்கள் தேவலோகத்தை அடைந்து அங்கு திவ்யமான தேவபோகங்களை அனுபவிக்கின்ற னர்.

### விளக்கம்

வேதங்களைச் சிலர் அப்யசித்தாலும், அதில் சொல்லப்பட் டுள்ள கர்மங்களை மாத்திரமே (அதாவது முதற்பகுதியையே) பின் பற்றி யக்ஞங்கள், யாகங்கள் முதலியவற்றால் இறைவனை அர்ச் சித்து அதன் பலனாக சுவர்க்கம் முதலிய புண்ணிய உலகங்களை அடைகின்றனர். அங்குப் புண்ணிய பலன்களை அனுபவித்தபின் மறுபடியும் இவ்வுலகில் பிறக்கிறார்கள். அத்தகைய சகாம பக்தர்க

ளைக் குறித்து இங்குச் சொல்லப்பட்டது. இவர்கள் மோட்சத்திற்காக முயற்சி செய்யாது சுவர்க்கம் முதலான போகங்களுக்காக முயல்கின்றனர். எனவே இறைவனின் பார்வையில் இவர்கள் முழுமையான அறிவு பெற்றவர்கள் ஆகார். ஏனெனில் சுவர்க்கமாயினும், அல்லது ஏனைய புண்ய உலகங்கள் ஆயினும் மறுபடியும் பிறத்தல் என்பது அடங்கியுள்ளதே என பகவான் இதற்கு முன்பே கூறியுள்ளார்.

ஆப்ரஹ்மபுவனாலோகாஹ புனராவருத்தினோ அர்ஜுன, எனவே அத்தகைய பிறப்பு இறப்பு எனும் சம்சார சக்கரத்தினின்று தப்பிக்க இயலாது. பொன்னால் ஆன விலங்கு பூட்டப்பட்டவர்கள் என அவர்களைச் சொல்லமுடியும். ஏனெனில் அவர்கள் சம்சாரமெனும் சிறையில் அடைந்து இருப்பவர்களேயாவர். எது ஜனன மரணத்தினின்றும் தப்பிக்க ஏதுவாகின்றதோ அதுவே அனைவர்க்கும் ஏற்றது, சிறந்தது. முமுட்சுக்களுக்குத் தகுந்தது. அதுவே ஆத்மபதம், பிரம்மபதம்.

*"மாமுபேத்யது கௌந்தேய புனர்ஜன்ம நவித்யரே"*

அத்தகைய பிரம்ம பதவியடைந்தவர்க்கு இனிப் பிறவியென்பதில்லை. பண்பு இல்லை. எனவே அந்த பரமாத்ம பதத்தையடைவதற்கே அறிஞன் முயல வேண்டுமே தவிர மறுபிறவியுடன் கூடிய சொர்க்க போகங்களை அடைவதற்கல்ல, வேதங்களில் சகாம, நிஷ்காம கர்மங்களைக் குறித்துச் சொல்லப்படினும், அவர்கள் அனைவரும் சகாம கர்மத்தையே, செய்து சம்சார பந்தத்தை மறுபடியும் தேடி, விரும்பி அடைகின்றனர். அவர்களது பாவம் ஓரளவு நீங்கினாலும், அதனை அவர்கள் பயன்படுத்தி சித்த சுத்தியடைந்து மோட்சத்தைத் தேடுதலுக்குப் பயன்படுத்திக் கொண்டால் அவர்கள் எத்துணையோ மேன்மையடைவர். ஆயின் அவர்கள் அங்ஙனம் செய்யாது மறுபடியும் அழியக்கூடிய சுவர்க்கம் முதலான போகங்களுக்கே ஆசைப்படுகின்றனர். இத்தகைய சகாம திருஷ்டியுடையவர்களின் நடவடிக்கையை இரண்டாம் அத்தியாயத்திலேயே கீதாச்சாரியன் கண்டிக்கிறார்.

*"காமா த்மாஙஹ ஸ்வர்க்கபரா...*
*... ஸமாதௌ ந வீதீயதே"* (-2-43,44)

சுவர்க்க போகங்கள் பூலோக லோகங்களைவிடச் சிறந்ததாயினும், அவற்றினால் சம்சார பந்தம் விலகுவதில்லை யாதாலாலும், இன்னும் திடமாக நிலைப்பதாலும், மோட்சத்திற்குத் தடையாவதாலும் அறிஞர்களுக்கு அவை தகாதது.

'ப்ரார்த்தயன்தே' - என்று சொல்வதால் அவர்கள் சுவர்க்க பத விக்காக எத்துணையோ ஆசையுடன் பிரார்த்திக்கின்றனர் என்றும், கோருகின்றனர் என்றும் வெளிப்படுகின்றது. ஆயின் இந்த யக்ஞ, யாகங்கள் ஏன் வேதங்களில் சொல்லப்பட்டன என்றால் பாவகாரி யங்களின்றும் மாற்றி ஆன்மீக வழியில் திருப்புவதற்காகவே யாகும் புண்ணியங்களின் மீது விருப்பம் ஏற்பட வேண்டுமென்பதற்காகத் தான். ஆயின் அதனையும் மீறி அதற்கும் மேலான பரமாத்மாவைச் சேரும் வரை சாதனைகளை அபிவிருத்தி செய்து கொண்டே போக வேண்டும். எனவே சகாம கர்மாவைத் தாண்டி நிஷ்காமகர்மாவை மேற்கொள்ளுதல் வேண்டும். எனவேதான் சகாம கர்மங்களை சுவர்க்க போகங்களைப் பற்றி பகவான் கீதையில் குறைவாக மதிப் பிட்டு, நிஷ்காம கர்மங்களைப் போற்றுகின்றார்.

**வினா :** சகாம வடிவான கர்மங்கள் யக்ஞங்கள் யாகங்களை இவற் றைச் செய்வதால் ஏற்படும் பலன் என்ன?

**விடை :** சுவர்க்க லோகத்தைப் பெறுதல் அதன் பலன்.

*தே தம் புக்த்வா ஸ்வர்க லோகம் விசாலம் க்ஷீணே புண்யே மர்த்ய லோகம் விசந்தி!*
*ஏவம் த்ரயீதர்ம மனு ப்ரபன்னா கதாகதம் காமகாமா லபந்தே!!* (21)

## சொற்பொருள்

தே - அவர்கள், தம் - அந்த, விசாலம் - விசாலமான, சுவர்க்க லோகம் - சுவர்க்க லோகத்தை, புக்த்வா - அனுபவித்து, புண்யே - புண்ணியத்தினை, க்ஷீனோ - (ஸதி) - அழிந்த பின்பு, மர்த்ய லோகம் - (இந்த) மானிடவுலகில், விசந்தி - புகுகின்றனர்; ஏவம் - இவ்வாறாக, த்ரயி தர்மம் - மூன்று வேதோக்தமான தர்மத்தை, அனுப்ரயன்னசிஹ் - (பலனைக் கருதி) செய்து வருபவரான, காமகாமஹ் - காம பித்தர்களாக, கதாகதம் - வருவதும் போவதுமான வாழ்க்கையை (பிறப்பு இறப்பினை) லபந்தே - அடைகிறார்கள்.

## கருத்துரை

அவர்கள் (சுவர்க்கத்தை விரும்புவோர்) விசாலமான சுவர்க்க லோகத்தை அனுபவித்து புண்ணியம் தீர்ந்த பின்பு மானிடவுலகில் பிறக்கின்றனர். இவ்வாறாக (சகாம) வேத நெறிகளைப் பின்பற்றி போகப் பித்தர்கள் பிறப்பு இறப்பு எய்துகின்றனர்.

**விளக்கம்**

அவ்வாறு சகாமமாக வேதகர்மங்களான யக்ஞங்கள் யாகங்களைச் செய்வோர் சுவர்க்க லோகத்தினை அடைந்து, தேவ போகங்களை யனுபவித்து, புண்ணியங்கள் தீர்ந்த பின் மறுபடியும் பூவுலகில் திரும்பத் திரும்ப பிறப்பு இறப்பு எய்துகின்றனர். புண்ணியமோ, பாவமோ, அனுபவித்தபின் தீர்ந்து விடும். சுவர்க்க முதலான உலகங்களில் ஜீவனுக்கு நிலைத்திருக்க முடியாது என்பது தெளிவாகிறது. 'விசாலம்' என்று சொன்னதால், சுவர்க்க லோகம் பூவுலகை விட அளவில் பெரிது என்பதா! அதுமட்டும் அதன் சிறப்பிற்குப் போதுமா? அங்கு மோட்சத்திற்கு முயற்சித்தல் இயலாது. மேலும் அங்குள்ள போகங்கள் மோட்சத்திற்கு நேர்மாறானது. அவையனைத்தும் கர்மவுலகம். மோட்ச சாதனை பூவுலகிலேயே ஆற்ற முடியும் என்றும், மனிதன் ஒருவனுக்கே அத்தகைய அறிவை பகவான் அளித்திருக்கிறார் என்றும் சாஸ்திரங்கள் கூறுகின்றன. எனவே இந்த விலைமதிப்பற்ற மானுடப் பிறவியை சம்சாரத்திற்கு மட்டுமின்றி மோட்சத்தினைப் பெறுவதற்கும் பயன்படுத்துபவன் மேன்மையடைவான். இல்லையெனில் எவ்வுலகிலும் அவனுக்கு இத்தகைய நல்ல அவகாசம் கிட்டாது.

வேத நெறிகளைப் பின்பற்றுதல் நன்மையேயாயினும் பலனைக் கருதிச் செய்தல் நல்லதல்ல. வேத தர்மங்களிலும் யக்ஞம் முதலான கர்மகாண்டத்தைவிட, உபாசனை காண்டத்தைவிட ஞான காண்டம் உத்தமமானது. இவ்வேத கர்மங்களால் ஜீவனுக்கு முக்தியோ, ஆன்மீக முன்னேற்றமோ இல்லை. எனவே நிஷ்காமமாக தெய்வத்தை அடைவதற்கே முயல வேண்டும்.

'கதா கதம் காமகாமாலபந்தே' - என்று சொல்வதால் ஆசைகள் உடையவர் காமத்திற்கு (போகத்திற்கு) அடிமைகளாதலால் பிறப்பு இறப்பினை அடைந்து இந்த சம்சார சக்கரத்தினின்றும் தப்பித்துக் கொள்ள இயலாமல் அவதியுறுவர் என்பது தெளிவாகிறது. எனவே முமுட்சுக்கள் இவ்வாக்கியத்தை எப்போதும் மனத்தில் இருத்தி ஆசைகளை அறவே ஒழித்தல் வேண்டும். சகாம புத்தியை விடுதல் வேண்டும். இவ்வுலகில் பிறப்பு இறப்பெனும் துக்கத்தினை எவரும் விரும்புவதில்லை. ஆயின் அதனை உண்டாக்கும் செயல்களையே செய்கின்றனர். ஏனெனில் நமது பண்பிற்கும், பிறப்பு இறப்பிற்கும் காரணம் யாது? விஷயங்களின் மீதான ஈடுபாடே, காமமே, போகங்களைக் குறித்த ஆசையே. 'காமாகாமி'யே சம்சாரத்தில்

உழன்று வருவதும் போவதுமாக இருக்கின்றான் என்று பகவான் இங்குச் சொல்லியுள்ளார். எனவே இவற்றினின்றும் விடுபட விரும்புவோர், காமம், சுவர்க்க போக அனுபவம், ஆசைகள் இவற்றை மிகவும் தூரத்தில் வைக்க வேண்டும். காமம் முமுட்சுவிற்கு கோர மான எதிரி என்று ஸ்ரீ கிருஷ்ணர் பலமுறை சொல்லியுள்ளார். அதனையே இங்கு மறுபடியும் தெளிவாக்குகிறார்.

**வினா :** *யாகங்களை, பலனைக் கருதி செய்து சுவர்க்கத்தை அடைவோர் அங்கு எத்துணை காலமிருப்பர்?*

**விடை :** *புண்ணியம் தீரும் வரை.*

**வினா :** *அதன்பின்?*

**விடை :** *பூவுலகில் பிறப்பர்.*

**வினா :** *ஆசைகள், போகங்கள் இவற்றை விரும்புவோருக்குக் கிடைக்கும் பலன் என்ன?*

**விடை :** *பிறப்பு இறப்பு.*

**வினா :** *சுவர்க்க லோகம் எத்தகையது?*

**விடை :** *1) விசாலமானது, 2) போகங்களுடன் கூடியது, 3) புண்யம் தீரக்கூடியது.*

**முன்னுரை**

*நிர்மலமான தூய்மையான பக்தியின் பலனைக் கூறுகிறார்.*

*அனன் யாஸ்சிந்தயந்தோ மாம் யே ஜனாஹ் பர்யுபாஸதே!*
*தேஷாம் நித்யாபியுக்தானாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம்!! (22)*

**சொற்பொருள்**

*யே ஜனாஹ் - எந்த ஜனங்கள், அனன்யாஹ் - வேறு எண்ணங்கள் இல்லாதவராய், சிந்தயந்தஹ - சிந்தித்துக் கொண்டு, பர்யுபாஸதே - இடைவிடாது தியானிக்கிறார்களோ, தேஷாம் - அத்தகைய, நித்யாபியுக்தானாம் - எப்போதும் என்னிடத்திலே நிட்டையுடையவர்களாயிருக்கும் அவர்களின், யோகக்ஷேமம் - யோகக்ஷேமத்தை அஹம் - நான், வஹாமி - வழங்குகிறேன்.*

**கருத்துரை**

எவர் வேறு எண்ணமில்லாதவராய் என்னைப் பற்றியே சிந்தித்த வண்ணம் இடைவிடாது தியானிக்கிறார்களோ, எப்போதும் என்னிடத்திலேயே நிட்டையுடன் இருக்கும் யோகிகளின் யோக க்ஷேமத்தை நான் வழங்குகிறேன்.

**விளக்கம்**

இது கீதையின் மிக முக்கியமான சுலோகம். இது கீதையின் நடுவில் இருப்பதால், கீதையென்னும் மலர் மாலையில், அல்லது கீதையெனும் இரத்தின மாலையில் உள்ள மணியாக இருதயத்தை அலங்கரிக்கின்றது. பக்தர்களுக்கு இச்சுலோகத்தின் மூலம் பகவான் அபயம் அளித்துள்ளார். எப்போதும் இறை சிந்தனையுடன் இருந்தால் தம் தேவைகளை எவர் கவனிப்பர் என்று பக்தர்கள் கவலையுறுவரோ என எண்ணி 'அப்பணியை நானே நிறைவேற்றுகிறேன்' என்று பகவான் இங்குக் கூறுகிறார். யோகம் என்றால் தேவையான பொருட்களைச் சேர்த்தல், 'க்ஷேம' என்றால் அதனைக் காப்பாற்றுதல். இவ்வாறாக, பக்தனின் தேவைகளை அவரேயளித்துக் காப்பாற்றுவார் என்று பகவான் வாக்களிக்கிறார். ஆயின் பக்தன் எவ்வாறிருத்தல் வேண்டுமென்பதையும் சொல்லியுள்ளார். இடைவிடாத பக்தியுடன் தியானித்து வருதல் வேண்டும். இவ்வாறு எப்போதும் பரமாத்மாவுடன் கூடியிருத்தல் வேண்டும்.

'அனன்யாஹ்' - வேற்றுமையில்லாதது அனன்யம் - அதாவது, இறைவனைத் தவிர வேறு எதனினும் மனத்தினைச் செலுத்தாதவர் என்பது பொருள். இதற்கு முன் சுலோகத்தில் சுவர்க்க லோகத்தை விரும்புவோரைக் குறித்துச் சொன்னார். அவர்களுக்கு அனன்ய பக்தர்களுக்கும் எத்துணையோ வேற்றுமைகள் உள்ளன. முதலாமவர், காட்சிப் பொருள்களின் மீது மனத்தைச் செலுத்தி உலக ஆசைகள் உடையவராயிருப்பர். இரண்டாமவர், இறைவனைத் தவிர வேறு எதன்மீதும் ஆசைப்படார். அவர்களது பார்வையில் உலக விஷயங்களனைத்தும் துச்சமாகவே படும். உலகில் மக்கள் மூன்று விதமானவர் - சிலர் இறைவனை அறவே சிந்தியாதவர். உலக விஷயங்களை மட்டுமே சிந்திப்பர். மேலும் சிலர் இறைவனைச் சிறிது நேரம் தியானித்து மற்றைய நேரங்களில் உலக விஷயங்களில் ஈடுபடுவர். இன்னும் சிலர் உலகியல் பார்வையேயின்றி எப்போதும் இறைசிந்தனை, தியானம் இவற்றுடன் இருப்பர். இம்மூன்றாமவரே அனன்ய சித்தர்கள்.

இத்தகைய நிரந்தர தெய்வ தியானம் செய்பவர்களின் நலனை தான் பார்த்துக் கொள்வதாக பகவான் வாக்களிக்கிறார். இறைவனுக் குத் தான் நம்மேல் எத்தகைய கருணை. மஹாபக்தனான அர்ஜுன னுக்கு ஸ்ரீ கிருஷ்ணர் சாரதியாய் இருந்ததும் பகவானின் இக்கருணை யையே காட்டுகின்றது. அர்ஜுனன் தன் இரதத்தின் கயிற்றை ஸ்ரீ கிருஷ்ணரிடம் ஒப்படைத்தான். எனவே அவனது இரதத்திற்கு எத்த கைய குறைவும் இராது. அவ்வாறே எவர் தம் வாழ்க்கைக் கயிற்றை இறைவனின் கையில் ஒப்படைக்கின்றனரோ, அவரது வாழ்க்கைப் பயணத்தில் எத்தகைய குறையும் இராது. எவர் அனைத்தையும் இறைவனிடம் அர்ப்பணித்துவிட்டு இடைவிடாத பக்தியுடன் அவ னைச் சரணடைந்தவரின் வாழ்க்கையைத் தடையின்றி அவர் நடத்து வார். 'யோக க்ஷேமம் மஹாம்யஹம்' என்பதன் பொருள் அதுவே. பக்தனுக்கு எது தேவையோ, உலகியல் பொருள்களோ, அல்லது ஆத்மஞானமோ அவற்றையளித்தல், அளித்தவற்றைக் காப்பாற்று தல், ஆகிய இரண்டையும் பகவான் பக்தனுக்குச் செய்கிறார். ஆயின் அவன் இடைவிடாத பக்தியுடன் அவனைத் தியானித்திருத்தல் வேண்டும்.

பகவானின் இவ்வபய வாக்கியத்தின் மூலம் பக்தர்களுக்கு ஒரு சுமை குறைந்தது. ஏனெனில் சிலர் 'நாம் எப்போதும் இறைவ னையே தியானித்துக் கொண்டிருந்தால் எமது சம்சாரத்தைக் கவனிப் பவர் யார்? அவர்களுக்கு சம்பாதித்துக் கொடுப்பவர் யார்?' என்று கேட்பர். அத்தகையோருக்கு பகவான் இச்சுலோகத்தின் மூலம் நல் வாக்களித்துள்ளார்.

இடைவிடாத இறைபக்தன் ஆக வேண்டுமாயின் அவன் மலைக்குகையிலோ, நாட்டின் மத்தியில் இருப்பினும், அவர்களின் நலனை பகவான் பார்த்துக் கொள்வார். எனவே முமுட்சுக்கள் பய மின்றி அனைத்தையும் அவனுக்கே அர்ப்பணித்து அவனையே எப் போதும் நினைத்துத் தியானித்து வருதல் கூடும். மகா பக்தர்களின் சரித்திரங்களைப் புரட்டிப் பார்த்தால் இச்சுலோகத்தின் உண்மை புலப்படும். அவர்கள் எங்கிருந்தாலும் இறைவன் அவர்கள் பின் செல்வான்.

இங்கு 'யேஜனிஹ்' (எந்த மக்கள்) என்றதால் எவராயினும் ஜாதி, மத, குல பேதமின்றி இறைவனின் அருளுக்குப் பாத்திரமா கின்றனர் என்பது தெளிவாகிறது. ஆயின் அதற்கான தகுதி பெற்றி ருத்தல் வேண்டும். இடைவிடாத பக்தியே அந்தத் தகுதி. ஆஞ்சநே

யர் மிருக இனத்தைச் சேர்ந்திருந்தும் அவரது மாறாத பக்தியினால் அவனது அருளுக்குப் பாத்திரமான போது மானிட ஜாதியில் பிறந்தவரைப் பற்றி வேறாக எப்படி இருக்க முடியும்? மாறாத பக்தியென்னும் கிரயத்தைச் செலுத்தி விட்டால் இறையனுக்கிரகம் என்னும் பொருளையும் அதன் மூலம் யோகக்ஷேமத்தையும் பெறலாம். இச்சுலோகத்தில் செலுத்த வேண்டிய தொகை, அதனால் பெறக்கூடிய பொருள் என்ற இரண்டும் தெரிவிக்கப்பட்டுள்ளது. சாதாரணமான பொருளைப் பெறுவதற்கே அதற்குரிய விலையைச் செலுத்த வேண்டும். அவ்வாறிருக்கையில் ஆன்மீக விஷயத்தில் வேறாக எப்படியிருக்கும்? எனவே இறை அனுகிரஹத்தினை இவ்வாழ்க்கையிலே பெற்றுக் கடைத்தேறுவதற்கு ஒவ்வொருவரும் இடைவிடாத மாறாத தெய்வ சிந்தனையைப் பயிற்சி செய்தல் வேண்டும்.

'பர்யுபாஸதே' - 'உபாஸதே எனாது பர்யுபாஸதே' என்று சொல்வதால் இறைவனை இடைவிடாது தியானித்தல் வேண்டும் மென்பது தெரிவிக்கப்பட்டது.

'யோகக்ஷேமம்' - என்றவிடத்து யோகம் என்பதில் பக்தர்களுக்குத் தேவையான வாழ்க்கை வசதிகள் மட்டுமேயன்றி ஆத்மஞானத்தினைக் கூட சேர்த்துள்ளார். மாறாத தெய்வ சிந்தனையால் இறைவன் திருப்தியடைந்து ஆத்மஞானத்தினைப் பெறச் செய்து அப்பக்தியானது மாறிவிடாமல் காப்பாற்றுவார் (ததாமி புத்தியோகம்).

'நித்யாபியுக்தனாம்' - என்று சொல்வதால் ஏதோ சிறிது நேரமே தியானிப்பவரல்லார் இடைவிடாது தியானிப்பவர் என்பது பொருள்.

**வினா :** இறைவனை எவ்வாறு சிந்தனை செய்தல் வேண்டும்?

**விடை :** மாறாத சித்தத்துடன் - பரமாத்மாவைத் தவிர எதுவும் மனதில் எண்ணாமல் இருத்தல் வேண்டும். வேறெதென் மீதும் ஆசைகளற்று இருத்தல் வேண்டும்.

**வினா :** அவ்வாறு தியானிப்பவர்க்குக் கிடைக்கும் பலன் என்ன?

**விடை :** இறைவனது அருளே. அவர்களின் யோகக்ஷேமத்தை - நலனை இறைவனே கவனித்துக் கொள்வார்.

**வினா :** எனவே இறைவனது அருளைப் பெறுவதற்கு ஜீவன் என்ன செய்தல் வேண்டும்?

**விடை :** *மாறாத சித்தமுடன் இறைவனை எப்போதும் தியானித்திருத்தல் வேண்டும்.*

### முன்னுரை

*சிரத்தையுடன் ஏனைய தேவதைகள் அர்ச்சிப்பவர் (முறை தப்பி) தன்னையே பூசிப்பவர் ஆகின்றார்கள் என்கிறார் -*

*யேஅப்யன்யதேவதா பக்தா யஜந்தே ச்ரத்தயாஅன் விதாஹ!*
*தேஅபி மாமேவ கௌந்தேய யஜந்த்யவிதிபூர்வகம்!! (23)*

### சொற்பொருள்

*கௌந்தேய - அர்ஜுனா! யே அபி - எவர், அன்ய தேவதாபக்தா - ஏனைய தேவதைகளிடத்து பக்தியுடையவராய், ச்ரத்தூன்விதாஹ் - சிரத்தையுடன் கூடியவர்களாய், யஜந்தே - (அத்தேவதைகளை) ஆராதிக்கிறார்களோ, தே அபி - அவர்கள்கூட, மாம்ஏவ - என்னையே, அவிதிபூர்வகம் - வழிதப்பி (முறை தவறி), யஜந்தி - ஆராதிக்கிறார்கள்.*

### கருத்துரை

*அர்ஜுனா! இதர தேவதைகளிடத்து பக்தியுடையவராய், சிரத்தையுடன் ஆராதிக்கிறார்களோ, அவர்களும் என்னை விதி வழுவி (முறை தப்பி) என்னையே வணங்குகிறார்கள்.*

### விளக்கம்

*சிலர் நிராகார நிர்குண பரமாத்மாவையேயன்றி, நாமரூபத்துடன் கூடிய இதர தேவதைகளை ஆராதிக்கின்றனர். அவர்களும் சிரத்தையுடன் பூசித்தால், ஒருவகையில் பார்த்தால், அத்தேவதைகளுக்கு இருப்பிடமாக உள்ள பரமாத்மாவைப் பூசித்தவர்களேயாவார்கள். ஆயின் இது முறையான வழிபாடு அல்ல. முறை தவறிய இறைவழிபாடேயாகும். ஏனெனில் அவர்கள் எங்கும் வியாபித்திருக்கும் பரமாத்மாவை அவ்வாறே சேவிப்பதில்லை. எனவே புண்ய பலன்களில் மாறுபாடிருக்கும். ஏனைய தேவதைகளை அர்ச்சித்தால் ஓரளவு புண்ணியம் கிடைக்கும். ஸர்வ வியாபியான, அனைத்திற்கும் இருப்பிடமான பரமாத்மாவை சேவித்தால் மோட்சத்தையே அடையப் பெறலாம். ஆயின் எந்த தேவதையை ஆராதித்தாலும், பரமாத்மாவையே ஆராதித்தாலும் சிரத்தை மிக மிக அவசியம். மேலும் இதர தேவதைகளை ஆராதித்து அற்ப பலனைப் பெறுவதைவிட சாட்சாத்*

பரமாத்மாவையே சேவித்து மோட்சமெனும் மிக உன்னத பலனை அடைவதே மேன்மை தருவது.

**வினா : இறை ஆராதனை எங்ஙனம் செய்தல் வேண்டும்?**

**விடை : சிரத்தையுடன் செய்தல் வேண்டும்.**

**முன்னுரை**

இதர தேவதைகளை ஆராதிக்கும் பக்தர்கள் ஏன் மோட்ச பதவியை அடைவதில்லை எனத் தெரிவிக்கிறார் -

*அஹம் ஹி ஸர்வயக்ஞானாம் போக்தா ச ப்ரபுரேவச!*
*நது மாமபிஜானந்தி தத்வேனா தஸ்ச்யவந்திதே!!* (24)

**சொற்பொருள்**

ஹி - ஏனெனில், ஸர்வ யக்ஞானாம் - எல்லா யாகங்களுக்கும், போக்தாச - போக்தாவாகவும், ப்ரபுஹ்ஏவச - பிரபுவாகவும் (யஜமானன்), அஹம் ஏவ - நானே (இருக்கிறேன்) மாம் - என்னை, தே - அவர்கள், தத்வேன - உள்ளபடி, ந அபிஜானந்தி - அறிவதில்லை, அதஹ - இதனால், ச்யவந்தி - வழுவுகிறார்கள். (மறுபிறப்பினை அடைகிறார்கள்).

**கருத்துரை**

ஏனெனில் எல்லாவிதமான யாகங்களுக்கும் போக்தாவாகவும் பிரபுவாகவும் (யஜமானன்) நானே ஆகிறேன். அத்தகைய என்னை அவர்கள் உள்ளபடி அறிவதில்லை. இதனால் வழுவிப் போகிறார்கள். (மறுபிறவி அடைகின்றனர்).

**விளக்கம்**

எல்லாவிதமான யாகங்களுக்கும் பரமாத்மாவே போக்தா, பிரபு. இத்தகைய உண்மை ஞானம் இல்லாததால் மக்கள் குறுகிய நோக்குடையவராய், அவ்வத் தேவதைகளைக் கருதியே கிரியைகளைச் செய்து மேலான நிலையினின்றும் வழுவி சம்சாரக் குகையில் பிறப்பு இறப்பெனும் வெள்ளத்தில் விழுந்து விடுகின்றனர். பரமாத்மாவை தியானித்து அவரையே அடைபவரைத் தவிர ஏனையோர் அனைவரும் மறுபிறவி அடைவர். பரமாத்மாவைப் பற்றிய உண்மை ஞானமல்லாதார் அனைவரும் இவ்வாறாகப் பிறப்பு இறப்

பிற்கு உட்பட்டவரேயாவர். இதுவே அழிவு. கீதையில் வழுவுதல். எனவே பரமாத்மாவை நன்கு அறிதல் வேண்டும். 'தத்வேன' என்று சொல்வதால் சாதாரண அறிவு மட்டும் போதாது. உண்மையாக, நேரில் கண்டு உணர்தல் வேண்டுமென்பது பொருள். அதாவது இறைவனை எங்கும் மறைந்து சராசரமனைத்திற்கும் இருப்பிடமாய், ஜீவர்களின் உண்மை வடிவாக ஒளிர்கிறான் என்பதை அனுபவத்தில் உணர வேண்டும். அத்தகையோர் வழுவார். அவர்களுக்கு அழிவு நேர்வதில்லை. அவர்கள் பரமாத்மாவின் மெய்யான ஞானமுடையவராய் மிகவும் எச்சரிக்கையுடன், சுயரூபமான ஆத்மாவினிடத்திலேயே நிஷ்டையுடன் பொய்யான காட்சிவுலகினைக் குறித்து எண்ணம் ஏதும் கொள்ளாதிருப்பர்.

**வினா :** எல்லாவித யாகங்களுக்கும் போக்தா யார்? பிரபு யார்?

**விடை :** பரமாத்மாவே.

**வினா :** மக்கள் ஏன் சம்சாரமெனும் பள்ளத்தில் விழுகின்றனர்.

**விடை :** இறைவனைக் குறித்த மெய்ஞானம் இல்லாமையால்.

**வினா :** எனவே 'சாம்சார அழிவினின்றும் தப்பிப்பதற்கான வழியென்ன?

**விடை :** பரமாத்மாவைப் பற்றிய மெய்ஞானம் பெற்றிருத்தலே. (அதாவது பரமாத்மாவே எல்லா தேவதைகளுக்கும், சராசரம், இவ்வுலமனைத்திற்கும் இருப்பிடமானவன் என்றும், காலத்தைக் கடந்தவன், உண்மை வடிவினன் என்றுமறிதல்).

## முன்னுரை

எவ்வத் தேவதைகளை ஆராதிக்கின்றார்களோ, அவர்கள் அத் தேவதைகளையே அடைவரென்றும், தன்னை ஆதரிப்பவர் தன்னையே அடைவர் என்றும் கூறுகின்றார்.

*யாந்தி தேவவ்ரதா தேவான் பித்ருன் யாந்தி பித்ருவ்ரதாஹ்!*
*பூதானி யாந்தி பூ தேஜ்யா யாந்தி மத்யாஜினோ அபிமாம்!!* (25)

## சொற்பொருள்

தேவவ்ரதாஹ் - தேவதைகளை ஆராதிப்பவர்கள், தேவான் - தேவர்களை, யாந்தி - அடைகின்றனர். பூதேஜ்யா - பூதங்களை

வணங்குபவர்கள் பூதானி யாந்தி - பூதங்களை அடைகின்றனர். பித்ருவ்ரதாஹ் - பிதிர்க்களைப் போற்றுபவர், பித்ரூன் யாந்தி - பிதிர்க்களைப் பெறுகின்றனர். மத்யாஜினஹ் - என்னைப் பூசிப்பவர்களோ, மாம் - என்னையே, யாந்தி - அடைகின்றனர்.

**கருத்துரை**

தேவர்களை ஆராதிப்பவர்கள் தேவர்களையும், பிதிர்களைப் போற்றுவோர் பித்ரு தேவர்களையும், பூதங்களை வணங்குவோர் பூதங்களையும், என்னை பூசிப்பவர்கள் என்னையும் அடைகின்றனர்.

**விளக்கம்**

*மனம் எத்தகைய எண்ணங்களைக் கொண்டுள்ளதோ, அத்தகைய வடிவினையே பெறுகின்றது. எனவே மக்கள் எத்தேவதைகளை ஆராதிக்கிறார்களோ அவ்வரவர்களையேயடைகின்றனர். நிலையற்ற தேவதைகளைப் பூசிப்பவர் அவர்களை அடைகின்றனர். நிலையான பரமாத்மாவை தியானிப்பவர் நிலையான சொரூபத்தையே அடைகின்றனர். எனவே அவரவர் தியானிக்கும், பூசிக்கும் இலட்சிய வடிவினை நிலையானதா, நிலையற்றதா என முதலிலேயே அறிவுடையோர் யோசிக்க வேண்டும். பரமாத்மாவைத் தவிர ஏனைய மனிதர்களோ, உலகமோ ஏதோவொரு காலத்தில் அழியக்கூடியவரே. தேவர்களோ, பூதங்களோ (உபாதி) சரீரத்தையுடையவரேயாதலால் அச்சரீரம் ஏதோவொரு காலத்தில் அழிந்துபடுவதால் அழிவற்ற நிலையை அவர்கள் அடைய இயலாது போகின்றது. பரமாத்மா அவ்வாறல்ல. அவன் அவிநாசி, அழிவற்றவன், சநாதனன், தேசம் காலம் இவற்றிற்குட்படாதவன். அத்தகையோனைப் பூசிப்பவர், தியானிப்பவர் அழிவற்ற பரமாத்ம நிலையையே அடைவர். எனவே அதுவே மிகச் சிறந்த இலட்சியம், இலக்கு, அறிவுடையோர் நிலையற்ற பொருளுக்கு ஆசைப்படார். நிலையானதையே வேண்டுவர். எனவே மறுபிறவியற்ற நிலையான பதவியையளிக்கும் பரமாத்மாவையே மக்கள் விரும்புதல் வேண்டும். அவனையே தியானித்தல் வேண்டும். எந்த விரதமாயினும், நியமங்களாயினும், நிஷ்டைகளை இதர தேவர்களை பூசிப்பதற்குப் பயன்படுத்துகின்றனரோ, அவற்றை பரமாத்மாவை பூசிப்பதில் செலுத்துதல் வேண்டும். தேவர்களை ஆராதிப்பவர்களாயன்றி 'ஆத்ம விரதர்களாக' ஆக வேண்டும்.*

**வினா :** தேவர்களையோ, பித்ருக்களையோ, பூதங்களையோ ஆரா திப்பவர் எதனை அடைவர்?

**விடை :** அவரவர் உபாசிக்கும் அவ்வத்தேவர்களையே அடைவர்.

**வினா :** பரமாத்மாவை பூசிப்பவர் எவரை அடைவர்?

**விடை :** பரமாத்மாவையே அடைவர்.

**முன்னுரை**

பக்தியுடன் எந்த அற்பமான பொருளை ஈந்தாலும் தான் மகிழ்ச் சியடைவதாக பகவான் கூறுகிறார்.

*பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோமே பக்த்யா ப்ரயச்சதி!*
*ததஹம் பக்த்யுபஹ்ருதமச்னாமி ப்ரயதாத்மனஹ!!* (26)

**சொற்பொருள்**

யஹ் - எவன், மே - எனக்கு, பக்த்யா - பக்தியுடன், பத்ரம் - இலையோ, புஷ்பம் - மலர்களோ, பலம் - கனியையோ, தோயம் - நீரோ, ப்ரயச்சதி - அளிக்கிறானோ, ப்ரயதாத்மனஹ - (அத்தகைய) தூய மனத்தையுடைவனுடைய, பக்தியுபஹ்ருதம் - பக்தி பூர்வமான அளிக்கப்பட்ட, தந் - அவற்றை, அஹம் - நான், அச்னாமி - (பிரியத் துடன்) அங்கீகரிக்கிறேன் (அனுபவிக்கிறேன்).

**கருத்துரை**

எவன் எனக்கு பக்தியுடன், இலையையே, மலர்களையோ, கனியையோ, நீரையோ சமர்ப்பித்து வணங்கும் தூய்மையான மனத் தினையுடையவனுடைய பக்திபூர்வமாக அளிக்கப்பட்ட அவற்றை நான் விருப்பமுடன் ஏற்கிறேன்.

**விளக்கம்**

மேற்சொன்ன மலர், கனி, இலைகள் ஏழைகளுக்கும், தனவான் களுக்கும், பண்டிதர், பாமரர் யாவர்க்கும் எளிதாகக் கிடைக்கக்கூ டிய பொருள். இறைவனின் அன்பைப் பெறுவதற்கு சாதாரணமான பொருளாயினும் அன்புடன், பக்தியுடன் அளித்தால் போதுமென் பது இச்சுலோகத்தினால் தெரிய வருகிறது. சக்தியற்றவர் நாங்கள், பெரிய அளவில் நைவேத்தியங்கள் இறைவனுக்கு அளிக்க முடிய வில்லையே என வருந்த வேண்டாம்.ஏனெனில் இறைவன் பக்

தியை, இதயத் தூய்மையை வேண்டுகிறாரேயன்றிப் பொருள்களை யல்ல. உண்மையில் சொல்லப் போனால் எந்தப் பொருளுமே இறை வனுக்குத் தேவையில்லை. பிரம்மாண்டம் அனைத்தும் அவனது வயிற்றிலேயே அடங்கியிருக்கையில் அவனுக்குத் தேவை என்பது என்ன இருக்க முடியும். ஆயினும் தூய்மையான மனத்துடனும், பக்தியுடனும் அளிக்கும் எதுவாயினும் அவன் ஏற்றுக் கொள்வான். எப்பொருளாயினும் ஏற்றுக் கொள்வதற்கு பகவான் இரண்டு நியதி களை ஏற்படுத்தியுள்ளார். அவையெவையெனின் -

1) அளிப்பவன் தூய்மையானவனாயிருத்தல் வேண்டும்.

2) அளிப்பதை மிகுந்த பக்தியுடன் அளிக்க வேண்டும்.

தூய்மையற்ற சித்தத்தையுடையவன் எதனை அளித்தாலும் பெரிய இராஜ்யத்தையே அளிப்பினும், மேரு மலையைப் போன்று பொன்னை அளித்தாலும் இறைவன் ஏற்றுக் கொள்ளான். தூய்மை யான சித்தமுடையவன், நிர்மலமான இதயத்துடன் ஒரு சிறு இலை யையளித்தாலும் மலர், பழம் இவற்றையளித்தாலும் உடனேயே மிகுந்த அன்புடன் ஏற்றுக் கொள்வான். பக்தியின்றி இரத்தினங் களை அளிப்பினும் ஏற்க மாட்டான். பக்தியுடன் ஒரு சிறு காசு ஈந்தாலும் விருப்புடன் ஏற்பான்.

பக்தியோ, அன்போ இல்லாத துரியோதனனிடத்து அதிதியாக இருப்பதற்குச் சம்மதியாது, கருணை, அன்பு இவற்றோடு கூடிய விதுரனின் விருந்தோம்பலை ஸ்ரீ கிருஷ்ணர் ஏற்றமை அனைவரும் அறிந்ததேயல்லவா! மேலும் குசேலரின் அவலை மிகவும் விருப்ப முடன் ஏற்றமையையும் அனைவரும் அறிந்ததே!

இதனால், இறைவனின் அருளை மனிதன் அளிக்கும் பொரு ளின் சிறப்பிலோ, மதிப்பிலோ அன்றி அவனின் மனநிலையை அடிப்படையாகக் கொண்டது என்பது தெளிவாகிறது. அவனது நிர் மலமான பக்தி, களங்கமற்ற இதயம் - இதன்மீதே சர்வேசுவரனின் கருணை அடங்கியுள்ளது. எனவே எத்துணை கோடீஸ்வரன் ஆயி னும், அரசனாயினும், மகாபண்டிதன் ஆயினும், இறைவனின் அரு ளைச் சிலர் பெற இயலாமை, அவனது அருளுக்குப் பாத்திரமாகாது இருப்பது.

கௌபீனத்துடன் இருப்பவர் பரமாத்மாவின் அபார கருணைக் குப் பாத்திரர்களாவதை நாம் சரித்திரத்தில் காணலாம். பக்தி, சித்தத் தூய்மை - இவை இரண்டே பகவானின் பார்வையில் முக்கியமேத

விர ஏனையவை அல்ல. 'அச்னாமி' என்று சொல்வதால் பக்தியுடன் அளிக்கப்பட்டவற்றை பரமாத்மா ஏற்றுக் கொள்வதேயன்றி, அனுப விக்கிறார், உண்கிறார் என்பது தெளிவாகிறது. இறைவனுக்குத்தான் பக்தர்களின் மீது எத்துணை கருணை!

'ப்ரியதாத்மனஹ்' - என்ற சொல்லிற்குக் களங்கமற்ற அந்தக் காரணத்தைக் கொண்டவன் என்றும், முயற்சியில் ஈடுபட்டவர் என் றும் பொருள் உண்டு.

'யஹ்' என்று சொல்வதால் எவராயினும் சரியே - ஜாதி, மதம், குல பேதமோ, செல்வமோ, ஆண், பெண் இன பாகுபாடோயின்றி - பக்தியுடன் கூடிய களங்கமற்ற சித்தம் இருந்தால் அவன் அளிப்பது சர்வேசுவரன் ஏற்பான் என்பது தெரிகிறது.

பக்தியென்பது, இதயத்தூய்மையென்பது மோட்சப்பிரயாணத் திற்குப் பயணச்சீட்டு போன்றது. பயணச்சீட்டு கையிலிருப்பின் எத் தனை ஏழையாயினும், அற்ப குலத்தோராயினும் இரயில் பெட்டி யில், பயமின்றி, பிரயாணம் செய்து சேர வேண்டிய இடத்தைச் சேர முடியும். அவ்வாறின்றிப் பயணச்சீட்டு இன்றி எத்துணை செல்வந்த ராயினும், அதிகாரிகளாயினும், பண்டிதர்களாயினும் அவர்களை இரயில்பெட்டியினின்றும் இறக்கி விட்டுவிடுவர். அவர்கள் சேர வேண்டிய இடத்தைச் சேர்தல் இயலாது. அவ்வாறே மோட்சப் பிர யாணமும். எனவே இறைவனின் அருளைப் பெறுவதற்கு, மோட் சத்தை அடைவதற்கு பக்தி, சித்தத்தூய்மை இவை மிகவும் முக்கிய மானவை. இவ்விஷயத்தினை பகவான் இச்சுலோகத்தின் மூலம் தெளிவுபடுத்தியுள்ளார். முக்திக்கு தகுதி, யோக்யதை (Merit) முக்கிய மானதேயன்றிப் பிற விஷயங்களல்ல என்று இங்கு நிரூபிக்கப்பட் டுள்ளது. இத்தகைய போதனைகளால் உலகில் ஒவ்வொரு மனித னும் ஆன்மீக வழியில் முயல்வதற்கு அவகாசம் ஏற்படுகின்றது. இறைவனின் குழந்தைகள் என முத்திரை வேயப்பட்டவர் எவரும் இல்லை. மாறாத பக்தியுடையவரே, களங்கமற்ற சித்தமுடையவரே இறைவனின் குழந்தைகள். அத்தகையோரையே அவன் கருணையு டன் நோக்குவான். அவர்களுக்கு அவன் ஆத்மஞானத்தை அளிப் பான்.

*"யமேவைஷவ்ருணுதே தேனலப்ய*
*ஸ்தஸ்யைஷஆத்மா விவ்ருணு தே தனூம் ஸ்வாம்"*

என்று உபநிஷத் வாக்கியம் இந்த வுண்மையையே தெரிவிக்கின்றது.

இறைவனுக்கு - இலை விதுரன், திரௌபதி, மலர் - கஜேந்திரன், பழம் - சபரி, நீர் - ரந்திதேவன் பக்தியுடன் அளித்து மேன்மையுற்றவர்.

**வினா :** இறைவன் எதனை ஏற்றுக் கொள்வான்?

**விடை :** பக்தியுடனும், களங்கமற்ற சித்தத்துடனும் அளிக்கப்பட்ட சிறிய பொருளாயினும் (இலை, மலர், பழம், நீர் ஆகிய எவையாயினும்) பக்தியுடன் அளித்தால் ஏற்றுக் கொள்வான்.

**வினா :** எனவே இறைவனின் அருளைப் பெற வேண்டுமாயின் எது அவசியம்?

**விடை :** (1) பக்தி, (2) சித்தசுத்தி என்ற இரண்டும் அவசியம்.

### முன்னுரை

எந்தக் காரியத்தைச் செய்தாலும் இறைவனுக்கு அர்ப்பித்தல் வேண்டுமென்கிறார் -

*யத்கரோமி யதச்னாமி யஜ்ஜுஹோமி ததாமி யத்!*
*யத்தபஸ்யாமி கௌந்தேய தத்குருஷ்வ மதர் பணம்!!* (27)

### சொற்பொருள்

கௌந்தேய - அர்ஜுனா! யத் - எதனை, கரோமி - செய்யினும், அச்னாமி - புசித்தாலும், யத்-ஜு ஹோமி - எதனை ஹோமம் பண்ணினாலும், யத்ததாமி - எதனை தானம் செய்தாலும், யத்தபஸ்யாமி - எந்த தவத்தைச் செய்தாலும், தத் - அதனை, மதர்பணம் - எனக்கு அர்ப்பணமாக, குருஷ்வ - செய்.

### கருத்துரை

அர்ஜுனா! நீ எதனைச் செய்தாலும், புசித்தாலும், ஹோமம் செய்தாலும், தானம் செய்தாலும், தவம் செய்தாலும், அதனை எனக்கு அர்ப்பணம் செய்வாயாக!

### விளக்கம்

மனிதன் தான் செய்யும் எல்லாக் காரியங்களையும் ஈசுவரார்ப்பண புத்தியுடன் செய்தல் வேண்டும். பலனைக் கருதாது இறைவனுக்கு அர்ப்பணம் செய்தல் வேண்டும். அவ்வாறு செய்வதால் ஏற்ப

டும் பலனை அடுத்து வரும் சுலோகம் விவரிக்கின்றது. அத்தகை யோன் அக்கர்ம பந்தங்களினின்றும் விடுபட்டு பரமாத்மாவையே அடைகிறான். அவனது இதயம் களங்கமற்று இருப்பதுடன் பரபிரம் மத்தையே நேரில் உணர்கிறான். எனவே இவ்வாறாக எல்லாவித கர்மங்களையும் பகவத் அர்ப்பணம் செய்தல் மோட்சத்தை அடைவ தற்கு இறைவனை நேரில் காண்பதற்கு எளிதான வழியாக இருக்கின் றது.'எதைச் செய்தாலும்' என்பதால் பாவ காரியங்களைச் செய்தா லும் என்பது பொருளல்ல. ஏனெனில் இறைவனுக்கு எவரும் அர்ப் பணம் செய்வதில்லை 'என்ன புசித்தாலும்' என்றவிடத்து விலக்கப் பட்ட மாமிச உணவை சேர்த்துக் கொள்ளக்கூடாது.

செயலாற்றாது எந்த ஜீவனும் இருத்தல் முடியாது. காலையில் எழுந்தது முதல் இரவு படுக்கும் வரை பல காரியங்களைச் செய்கி றோம். அக்காரியங்களை 'கிருஷ்ணார்ப்பணமஸ்து', 'பிரம்மார்ப்ப ணமஸ்து' என்று ஏன் செய்தல் கூடாது? அவ்வாறு செய்வதால் இறைவனின் அருள் கிடைப்பதுடன், கர்ம பந்தங்களும் விலகும். எனவே மோட்சத்திற்கு இது எளிதான உபாயமாகவுள்ளது. முக்கிய மாக வேலை செய்யும் கிருஹஸ்தனுக்கு இவ்வழி எத்துணையோ எளிதாக இருக்கும்.

''யத்யத்கர்முகரோடு தத்தகிலம் சம்போ தவாராதனம்! - ஓபரம சிவா!'' நான் (நடப்பினும், இருப்பினும், உண்பினும்) எதனைச் செய்தாலும் அவையனைத்தும் உன் ஆராதனையே!' என்ற ஒரு பக் தன் சொன்ன வாக்கியங்கள் இங்கு நினைவுகூரத்தக்கது.

**வினா :** ஜீவனானவன் எவ்வாறு கர்மங்களைச் செய்தல் வேண்டும்?

**விடை :** தான் எதனைச் செய்தாலும், உண்டாலும், ஹோமம் செய்தா லும், தானம் செய்தாலும், தவம் செய்தாலும், அனைத்தும் இறை அர்ப்பணமாகச் செய்தல் வேண்டும். ஈசுவராப்பண புத்தியுடன் கர் மங்களைச் செய்தல் வேண்டுமென்பது பொருள்.

**வினா :** அதனால் ஏற்படும் பலன் என்ன?

**விடை :** பந்த விமுக்தி, இறைவனை அடையும் பாக்கியம்.

**முன்னுரை**

**அவ்வாறு அனைத்தையும் பகவத் அர்ப்பணம் செய்வதால் ஏற் படும் பலன் என்ன என்பதைக் கூறுகிறார் -**

*சுபாசுப பலை ரேவம் மோக்ஷ்யஸே கர்மபந்தனைஹ்!*
*ஸந்யாஸ யோகயுக்தாத்மா விமுக்தோ மாமுபைஷ்யஸி!!* (28)

### சொற்பொருள்

ஏவம் - இங்ஙனம், ஸந்நியாஸ யோக யுக்தாத்மா - 'கர்ம ஸமர்ப் பண' யோகத்துடன் கூடியவனாய், சுபாஅசுபபலைஹ் - நன்மை தீமைகளை (அல்லது புண்ய பாவங்களை)ப்பலனாகத் தருகின்ற, கர்மபந்தனைஹ் - கர்மபந்தங்களினின்றும், மோக்ஷயஸே - விடுப டக்கூடும், விமுக்தஹ - (அவ்வாறு) விடுபட்டு, மாம் - என்னை, உபைஷ்யஸ் - அடைவாய்.

### கருத்துரை

இவ்வாறாக 'கர்மசமர்ப்பன' யோகத்துடன் கூடியவனாய், புண்ய பாவங்களைப் பலனாகக் கொண்ட கர்ம பந்தங்களினின்றும் நீ விடுபடுவாய். அவ்வாறு விடுபட்டவனாய் என்னை அடைவாய்.

### விளக்கம்

இதற்கு முன் சுலோகத்தில் சொல்லப்பட்ட எல்லா கர்மங்களின் பலனையும் தியாகத்திற்கும், இறைவனுக்கும் அர்ப்பணம் செய்வ தற்குமான பலன் இங்குச் சொல்லப்படுகின்றது. 'சந்நியாசம்' என் றால் கர்ம பல சந்நியாசம் என்று பொருள். 'கர்மங்களைச் செய்த வண்ணம் அவற்றை எனக்கு அர்ப்பணம் செய்வதற்குமான பலன் இங்குச் சொல்லப்படுகின்றது. 'சந்நியாசம்' என்றால் கர்ம பல சந்நி யாசம் என்று பொருள். 'கர்மங்களைச் செய்த வண்ணம் அவற்றை எனக்கு அர்ப்பணம் செய்வாயாக' என்று பகவான் சொல்வதால் சந்நியாசத்திற்கு இங்குப் பலனைத் தியாகம் செய்வதே என்று பொருள்படுமேயன்றி, கர்மத்தியாகமல்ல. இவ்வாறாக எல்லா கர்ம பலன்களையும் பகவத் அர்ப்பணம் செய்வதால் ஜீவன் நன்மை தீமைகளைப் பலனாகக் கொண்ட கர்ம பந்தங்களினின்றும் விடு பட்டு இறைவனைச் சேர்வான் என்று சொல்லப்பட்டது. 'முக்தன்' என்னாது 'விமுக்தன்' என்றதால் அவன் கர்மபந்தங்களினின்றும் முழுமையாக விடுபடுவான் என்பது பொருள்.

சாதாரணமாக மக்கள் 'மோட்சம்', 'மோட்சம்' என்கின்றனர். 'மோட்சம்' என்பதன் பொருள் என்ன? பந்த விமோசனமே மோட் சம். அதாவது கர்மபந்தம். எவ்விதமான கர்மங்கள்? நன்மை தீமைக ளின் பலனையளிக்கும் கர்மங்கள். அத்தகைய கர்மங்களின் பந்தத்தி

னின்றும் விடுபடுதலே மோட்சம். சந்நியாச யோகத்தினால் அதாவது கர்ம பலனை ஈசுவரார்ப்பணம் செய்வதால் கிடைக்கின்றது. இதனையே நிஷ்காம கர்மயோகமென்பர். ஆயின் நன்மை தீமை இவற்றின் பலன்கள் இரண்டும் இங்கு பந்தங்களாக வர்ணிக்கப்படுதல் கவனிக்கத்தக்கது. தீமைகளின் பலன் தீமையென்பது அனைவர்க்கும் தெரிந்ததே. ஆயின் அதீத ஆன்மீக திருஷ்டியில் காட்சிப் பொருளோ அல்லது அவற்றிற்காகச் செய்யப்படும் எந்த கர்மமாயினும், எந்தவிதமான பலனும் பொய்யானவையேயாதலால், நன்மை நற்பலனை அளித்தாலும் அதிலேயே அடங்குவதால் அதுவும் பந்தமென்று இங்குத் தெரிவிக்கப்பட்டுள்ளது. எனவே அதனையும் தாண்டி உண்மைப் பொருளான பரமாத்மாவைச் சேர்தல் வேண்டுமென்பது கருத்து. (ஆயின் நன்மையில் வரும் பந்தம் முமுட்சுவிற்கு ஆபத்தானதல்ல. முதலில் அதனைப் பின்பற்றிப் படிப்படியாக அதனையும் தாண்டி, நிர்விகல்ப ஆத்ம நிலைக்குப் போக வேண்டும்), இவ்வாறாகப் பந்தங்களினின்றும் விடுபட்டு பரமாத்மாவைச் சேர்கின்றான். பலனைக் கருதாது காரியங்களைச் செய்வதால், அல்லது இறையர்ப்பணமாகச் செய்வதால் கர்மங்களின் தோஷங்கள் விலகுகின்றன. அதனால் ஜீவன் கர்ம பந்தங்களினின்றும் விடுபட்டு சாயுஜ்ய பதவியை யடைகின்றான்.

**வினா :** கர்ம பந்தம் எத்தகையது?

**விடை :** நன்மை தீமைகளைப் பலனாகக் கொண்டது.

**வினா :** அத்தகைய கர்ம பந்தத்தினின்றும் ஜீவன் எவ்வாறு முக்தி அடையக்கூடும்.

**விடை :** தான் செய்யும் எல்லாவிதமான செயல்களையும் ஈசுவரார்ப்பணம் செய்வதால், அதனால் கர்ம பந்த விமுக்தி, பரமாத்மாவைச் சேர்தல் - என்னும் இரண்டு பலனும் அவனுக்கு ஏற்படும்.

**முன்னுரை**

எல்லா ஜீவர்களிடத்தும் தனக்குச் சமமான பாவனையே உண்டு என்றும், அவரவர் பக்தியினால் அவர்கள் மேன்மையடைகின்றனர் என்றும் பகவான் கூறுகின்றார் -

*ஸமோ அஹம் ஸர்வபூதேஷு நமே த்வேஷ்யோ அஸ்தி நப்ரியஹ!*
*யே பஜந்தி து மாம் ப்க்தியாமயிதே தேஷு சாப்யஹம்!! (29)*

## சொற்பொருள்

அஹம் - நான், ஸர்வபூதேஷு - எல்லா உயிர்களிடத்தும், ஸமஹ் - சமமாகவே இருப்பவன், மே - எனக்கு, த்வேஷ்யஹ - வெறுக்கத்தக்கது என ஒன்றுமில்லை, நஅஸ்திர நப்ரியஹ் - பகைவனுமில்லை, நண்பனுமில்லை, யேது - எவர், மாம் - என்னை, பக்தியா - பக்தியுடன், பஜந்தி - பூசிக்கிறார்களோ, தே - அவர்கள், மயி - என்னிடத்து, (வர்தந்தே - இருக்கின்றான்), தேஷுச - அவர்களிடத்து, அஹம்அபி - நானும் உள்ளேன்.

## கருத்துரை

நான் எல்லா உயிர்களிடத்தும் சமமாக இருப்பவன். எனக்கு ஒருவன் வெறுப்பதற்குரியவனாகவோ, இன்னொருவன் பிரியத்திற்குரியவனாகவோ இருப்பதில்லை. எவர் என்னை பக்தியுடன் பூசிக்கிறார்களோ அவர்கள் என்னிடத்தும் நான் அவர்களிடத்தும் இருக்கிறேன்.

## விளக்கம்

எல்லா சராசரங்களிலுள்ள உயிர்களிடத்தும் இறைவன் சமானமாகயிருக்கிறான். அவனது பார்வையில் அனைவரும் சமமே. அவனுக்கு ஒருவன் அன்புக்குரியவனாகவோ, இன்னொருவன் அல்லாதவனாகவோ இருப்பதில்லை. அனைவரும் அவனது குழந்தைகளே; அனைவரிடமும் அவனுக்குச் சமமான அன்பும் கருணையும் உண்டு. ஆயின் உலகில் சிலர் சுகவான்களாகவும், சிலர் துக்கத்தை அனுவிப்பவர்களாகவும் இருப்பதற்குக் காரணமென்ன? இறைவனுக்கு வேறுபாடு உள்ளதா? என்று கேட்கக்கூடும். பகவானிடத்து எவ்வித வேறுபாடில்லை. ஆயின் ஜீவர்கள் அவரவர் செய்யும் கர்மங்களினால் இன்ப துன்பங்களின் பலன்களை அடைகின்றனர். இறைவன் அனைவரிடமும் சமமாகயிருப்பினும், இறைவனிடத்து அனைவரும் சமமாக இருப்பதில்லை. சிலர் புண்ணியத்தையும், சிலர் பாவத்தினையும் செய்வதால் அதன் பலனாக சுக துக்கங்களை அனுபவிக்கின்றனர். ஒருவனுக்கு நன்மை செய்தவன், இறைவனைப் பக்தியுடன் பூசிப்பவன், சித்தத் தூய்மைக்கு சுயமுற்சி செய்பவன், சுகத்தினையடைவர். பிறருக்குத் தீமை செய்பவர், இறைவனைப் பூசிக்காதவர், களங்கத்துடன் கூடிய சித்தமுடையவர் துக்கத்தினை அனுபவிக்கின்றனர். இது இயற்கையின் மாற்றவியலாத நியதி. இதன்படி மக்களின் துன்பங்களில் இறைவனுக்கு எந்தவிதமான

பொறுப்பும் இல்லை என்பது தெளிவாகிறது. சூரியனது ஒளி எங்கும் சமமாகப் பரவினும், மண்ணின் மீது பிரகாசிப்பதில்லை. கண்ணாடியில் நன்கு பிரகாசிக்கிறதல்லவா? அவ்வாறே இறைவனது கருணை எங்கும் வியாபித்திருப்பினும் எவர் பக்தியுடன் அவனைப் பூசிக்கிறார்களோ அவர்களே அக்கருணையைப் பெறுதல் இயலும். கடலில் காற்று எங்கும் வீசினும், எவர் பாய்மரத்தை எடுக்கின்றார்களோ அவர்களது படகே நகருமல்லவா! எனவே இறைவனின் கருணையென்னும் காற்று எங்கும் வீசினும் அவரவர் இதயமெனும் திரையை விலக்கி இறைவனின் திசையில் திருப்பினால் மோட்சமெனும் இலக்கினை விரைவில் சேர முடியும். எல்லாச் சுகங்களையும் விட இறைவனை அடையும் சுகமே பெரியது. அதுவோ, எவர் எப்போதும் மாறாத பக்தியுடன் இறைவனைப் பூசிக்கிறார்களோ அவர்களே அடைய முடியும். அவ்விஷயம் இச்சுலோகத்தில் தெளிவாக நிரூபிக்கப்பட்டுள்ளது. 'எவர் என்னை பக்தியுடன் ஆராதிக்கிறார்களோ, அவர்கள் என்னிடத்தும், நான் அவர்களிடத்தும் உள்ளேன்' - என்று பகவான் இங்குக் கூறியுள்ளான். ஆகா! பக்தியின் மகிமைதான் எத்தகையது! சாட்சாத் இறைவனைக் காணல் என்னும் பெரும் பலன் பக்தியினில் கிட்டுகின்றது. எனவே ஒவ்வொரு மனிதனும் இறைவனிடம் பெரும் பக்தி பூண்டு அவனைப் பூசித்தல் வேண்டும். 'பஜந்தி' என்ற சொல்லுடன் 'பக்தியா' என்ற சொல்லைச் சேர்ப்பதால், சாதாரணமான பூஜையோ, ஆராதனையோ போதாது, பக்தியுடன் பூசித்தல் மிகமிக அவசியம் என்பது தெரிகிறது.

மேலும் 'மயதே தேஷு சாப்யஹம்' என்று சொல்வதால் அத்தகைய பக்தர்கள் இறைவனிடத்தும், இறைவன் பக்தனிடத்தும், இருக்கின்றனர் என்பது தெரிகிறது. இறைவன் குடியிருப்பதால் அத்தகைய பக்தனின் சரீரம் கோயிலாக மாறிப் போகின்றது. அவர்கள் தேவர்களாகின்றனர். அதன்பின் ஜீவன் சிவனாகிறான். தேகம் தேவாலயமாகின்றது. எவர் இறைவனிடத்து வசிக்கின்றாரோ அவர்களிடத்து இறைவன் வசிக்கிறான். எனவே எனக்குத் துன்பம் ஏற்படுகின்றதே என்று சொல்வதில் பயனில்லை.

அதற்கான நிவாரணமொன்று உளது. இறைவனைத் தன் இதயத்தில் வைப்பதேயாகும். எங்கு பரமாத்மா இருக்கிறானோ அங்கு சுகம், ஐசுவரியம், வெற்றி இவை தவறாது இருக்கும்.

*" யத்ரயோகேஸ்வரஹ க்ருஷ்ணோ யத்ரபார்த்தோ தனுர்த்ரஹ*
*தத்ரச்ரீரிவ ஜயோபூதிர்த்ருவா நீதிர்மதிர்மம்" (-18-78)*

எனவே சுகத்தினை வேண்டுவோர் மாறாத பக்தி பூணுதல் வேண்டும்.

**வினா :** *பிற ஜீவர்களிடத்து இறைவனின் பார்வை எவ்வாறிருக்கும்?*

**விடை :** *சமானமாக இருக்கும்.*

**வினா :** *அப்படியாயின் ஜீவர்களில் சிலர் சுகத்தினையும், மேலும் சிலர் துக்கத்தினையும் ஏன் அடைகின்றனர்?*

**விடை :** *அவரவர் கர்ம பலனால் அவர்கள் அடைகின்றனர். எவர் இறைவனிடத்து பக்தி பூண்டு சேவிக்கின்றனரோ அவரிடத்து இறைவன் உள்ளான். எனவே அத்தகையோர் சுகமடைகின்றனர். ஏனையோர் அல்லர்.*

**வினா :** *இறைவனை எவ்வாறு சேவித்தல் வேண்டும்?*

**விடை :** *பக்தியுடன்*

**வினா :** *இறைவன் எவரிடத்துச் சிறப்பாகக் குடியிருக்கிறான்?*

**விடை :** *மாறாத பக்தியுடன் சேவிப்பவரிடத்தும் (அனைவரிடத்தும் இறைவன் குடியிருப்பினும் தன்னைச் சேவிக்கும் பக்தர்களிடத்து குறிப்பாக வெளிப்பட்டு அவர்களுக்கு மோட்ச சுகத்தினை அளிப்பான் என்பது பொருள்).*

**முன்னுரை**

*பாவியாயினும் மனதை மாற்றிக் கொண்டு தன்னை பக்தியுடன் சேவித்தால் அவன் புண்ணியாத்மாவேயாவான் என்கிறார் -*

*அபி சேத்ஸுதுராசாரோ பஜதே மாமனன்யபாக்!*
*ஸாதுரேவ ஸ மந்தவ்யஹ ஸம்யக்யவஸிதோ ஹிஸ:!! (30)*

**சொற்பொருள்**

*ஸுதுராசாரஹ் அபி - மிக்க கெட்ட நடவடிக்கை உடையவனாயினும் கூட, அனன்ய பாக் - மாறாத பக்தியுடன், மாம் பஜதே சேத் - என்னைப் பூசிப்பானானால், ஸஹ் - அவன், ஸாதுஹ் ஏவ -*

சாதுவென்றே (நல்லவன் என்றே) மந்தவ்ய - கருதப்பட வேண்டும், ஹி - ஏனெனில், ஸஹ் - அவன், ஸம்யக் - நிலையான (அல்லது உத்தம), வ்யவஸிதஹ - தீர்மானத்திற்கு வந்தவன்.

**கருத்துரை**

மிக்க கேடு கெட்டவனாயினும், வேறு எதனையும் எண்ணாமல் என்னையே பூசிப்பானானால், அவனை சாது என்றே கருத வேண்டும். ஏனென்றால் அவன் நல்ல தீர்மானத்திற்கு வந்தவனாகிறான்.

**விளக்கம்**

மிக்க கேடு கெட்டவன் ஆயினும், மனதை மாற்றிக் கொண்டு தெய்வ மார்க்கத்தில் ஈடுபடுவான் ஆயின், பரமாத்மாவே நிலையான கதியென்று கருதி, வேறெதனையும் சிந்தியாது, அவனையே எப்போதும் இடைவிடாது பூசித்து வருவானாயின் அவன் உத்தமனே என்று சொல்ல வேண்டும். அவன் இதற்கு முன் கெட்டவனாயினும் அவனை மாறியபின் சாதுவாகவே கருத வேண்டும். 'துராஹி' எனாது 'சதுராசாரி' என்றதால் மஹாபாவியாயினும் மனதை மாற்றிக் கொண்டு இறைவனை சரணடைந்தால் அவன் புண்யாத்மாவே ஆகிறான். ஏனெனில் அவன் உண்மையை உணர்ந்தவன். நல்ல வழிக்கு மாறியவன். மனத்தில் திடமான எண்ணம் கொண்டவன். உலகில் இறைவன் ஒருவனே சத்யவஸ்து. எனவே அழியக்கூடிய காட்சிப் பொருள்களை விட்டு உண்மையான, நிலையான பரமாத்மாவையே அடைதல் வேண்டும் என்ற திடமான எண்ணத்தைக் கொண்டவன் (ஸம்ஸக் - நல்ல தத்துவம்).

'அனன்ய பாக்' - இறைவனைத் தவிர வேறெதெனையும் எண்ணாதவன் எப்போதும் தெய்வத்தை மாத்திரமே சிந்திப்பவன். அத்தகைய மாறாத பக்தனின் முன் பிறவியின் பாவமனைத்தும், அவனது சேவையினால் ஒரு கணத்தில் சாம்பலாகிப் போக அவன் தூய்மையான இதயம் கொண்டவனாகிறான். பல கோடிக் கணக்கான வருடங்களாகக் குவியல்குவியலாகச் சேர்ந்துள்ள மரக்கட்டைகள் எவ்வாறு ஒரு சிறிய நெருப்பினால் ஒரு கணத்தில் சாம்பலாகி விடுமோ, அவ்வாறே பரம பக்தனின் முன்பிறவிகளில் செய்த பாவமனைத்தும் ஒரு கணத்தில் நீங்கி விடுவதால் அவன் புண்ணியாத்மாவாகிறான். வால்மீகியே இதற்கு உதாரணம். குகையின் அடர்ந்த இருளை ஒரு சிறிய நெருப்புக்குச்சி எவ்வாறு நீக்கிவிடுமோ அவ்வாறே தான்

அஞ்ஞானத்தினால் செய்த பாவங்களனைத்தும் இந்தப் பிறவியில் இறை பக்தியுடன் இருந்தால் தொலைந்து அவன் சாதுவாகிறான். அரக்கன் தேவனாகிறான். இத்தகைய மகத்தான மாற்றத்தை ஏற்படுத்தியது எது? இறைபக்தியே நல்ல ஞானமே இதனையே,

*"அபி சேதஸி பாப்யேப்யஹ ஸர்வேப்யஹ பாபக்ருத்தம்ஹ!*
*ஸர்வம் ஞானபலவேனைவ வ்ருஜூனம் ஸந்திரிஷ்யஸி"* *(4-36)*

என்ற சுலோகத்தில் கீதாச்சாரியார் வெளிப்படுத்துகிறார். இதனின்றும், மனிதன் எக்காலத்தும நான் ஒரே மாதிரியாகத்தான் இருப்பேன் என்று சொல்வதோ அல்லது அவ்வாறிருப்பதோ தகாது என்பதும், நல்ல முயற்சியினால் மேன்மையான நிலையை அடைய முடியுமென்பதும், அதுவே நன்மையானது என்பதும் தெளிவாகிறது. பாவியை, 'நீ எப்போதும் பாவியே' என்பதும் மிக்க பாதகத்தைத் தருவது என்பதும் தெளிவு.

மேலும் பாவி கூட இறைபக்தியினால் புண்ணியாத்மா ஆகக்கூடும் என்பதால் அதன் பொருள், பாவம் செய்யக்கூடும் பின்னர் அதனை மாற்றக் கூடுமென்பதல்ல, இதுவரை அறியாது செய்த பாவங்கள், இப்போது நன்னெறியைக் கடைபிடிப்பதால் இடைவிடாத மாறாத பக்தியினாலும், களங்கமற்ற ஞானத்தாலும் சாம்பலாகி, மனிதன், சுத்தாத்மாவாக ஆகிவிடுவான் எனச் சொல்லப்பட்டது. பகவானின் இவ்வாக்கியம் அனைவருக்கும் தைரியத்தை அளித்து அனைவரும் மேன்மையடைவதற்கான அவகாசத்தை அளிக்கவல்லது.

தெய்வ மார்க்கத்தை 'சம்யம் மார்க்க'மென்று சொல்வதால் அதனை அனுசரிப்பவன் 'சாது' என்றும் சொல்வதால், உலகியல் வழிகளை விட அம்மார்க்கம் உயர்ந்ததென்பதும், அனுசரிப்பதற்கேற்றது என்றும் சொல்லப்பட்டுள்ளது. எனவே கெட்ட வழியில் (காட்சியே உண்மையென நம்பி அதனைப் பின்பற்றுதலை) ஒதுக்கி, நன்னெறியையே (சம்யக்மார்க்கத்தையே) பின்பற்றுதல் வேண்டும்.

இங்கு 'ஸாது' என்றால் சடைமுடிதரித்து, காஷாயம் அணிந்தவன் என்பது பொருளல்ல. 'சாது' வென்றால் உத்தமன். அதாவது நன்னெறியில் செல்வோன் என்பது பொருள்.

**வினா : துன்மார்க்கன் எவ்வாறு சன்மார்க்கன் ஆவான்?**

**விடை :** இறைவனை அனன்ய பக்தியுடன் சேவிப்பவன்.

**வினா :** உலகில் மேன்மையான திடமான உண்மை எது?

**விடை :** இறைவனையே உண்மையென நம்பி அவனைப் பின்பற்றுதலே.

## முன்னுரை

தெய்வபக்தன் எந்நாளும் கெடுவதில்லை. (கீழ்நிலையையடைவதில்லை) என்கிறார் -

*க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா சச்வச்சாந்திம் நிகச்சதி!*
*கௌந்தேய ப்ரதிஜாணீஹி நமே பக்தஹ ப்ரணச்யதி!!* (31)

## சொற்பொருள்

ஸ(ஹ் - அவன்) க்ஷிப்ரம் - விரைவில், தர்மாத்மா - தர்மபுத்தியுடையவனாய், பவதி - ஆகிறான், சச்வத் - நிலையான, சாந்திம் - அமைதியை, நிகச்சதி - அடைகிறான், கௌந்தேய - அர்ஜுனா! மே - என்னுடைய, பக்தஹ் - பக்தனானவன், ந ப்ரணச்யதி - அழிவடைவதில்லை, நாசமடைவதில்லை (என்று), ப்ரதிஜாணீஹி - அறிவுறுத்துக.

## கருத்துரை

(என்னை அடைக்கலமடைந்த பாவாத்மா) அவன் விரைவில் தர்மபுத்தியுடையவனாய் ஆகிறான். மேலும் நிலையான அமைதியைப் பெறுகிறான். அர்ஜுன! 'என் பக்தன் எப்போதும் நாசமடைவதில்லையென்று நன்கு அறிவுறுத்துக!

## விளக்கம்

மேற்சொன்ன விதத்தில் பரமாத்மாவாயினும் பரமனையே கதியென்று நம்பி பூசித்தால் விரைவில் தர்மாத்மாவாக, புண்யாத்மாவாக ஆகிறான். மேலும் நிலையான பேரமைதியையும் அடைகிறான். 'க்ஷிப்ரம்' - விரைவில் என்று தெரிவிப்பதால் அத்தகைய அமைதி இறைவனை அடைக்கலமடைந்தவுடனேயே கிட்டுமென்பது தெளிவாகிறது. விளக்கினை ஏற்றிய மறுகணமே இருள் விலகுவதைப் போன்று உடனேயே அமைதி கிட்டும். சிலர் தெய்வ மார்க்கத்தில் ஈடுபட்டவுடனேயே எங்களுக்கு எப்போது மோட்சம் கிட்

டும் என்று ஐயப்படுகின்றனர். அத்தகைய கவலைக்கிடமில்லாது பகவான் இங்குத் தெளிவாகக் கூறியுள்ளார். 'அனன்ய பக்தியினால் என்னை பூசித்தால் மிக விரைவில் மோட்சத்தின் வடிவான பேரமைதியை அடையச் செய்வேன்' என பக்தர்களுக்கு இங்கு அபயமளித்துள்ளார்.

இறைவனைச் சேவிப்பதால் மனிதனுக்கு இரண்டு நற்பலன்கள் கிட்டும் என இங்குக் கூறப்பட்டது. (1) அவன் தர்மாத்மாவாகிறான், (2) நிலையான பேரமைதியை அடைகிறான். அவன் தர்மாத்மாவாக நன்னெறியாளனாக மாறுகிறான். எந்த அணுவினும் அவனுக்கு அதர்மம் என்பதே தலைகாட்டாது. மேலும் அவன் பேரமைதியையும் அடைகிறான்.

தேஷாம் சாந்தி, சரஸ்வதீ நேதரேஷாம், என்று உபநிஷத்தும் இவ்வுண்மையையே கோஷிக்கின்றன. காட்சிப் பொருள்களை நெருங்கினால் அமைதி விலகிப் போகும். இறைவனை நெருங்கினால் அமைதி மிக அருகில் வரும்.

இச்சுலோகத்தில் இரண்டாவது பாதத்தில் 'நமேபக்தஹப்ரணஸ்யதி' (என் பக்தன் எந்நாளும் அழிவதில்லை, துர்க்கதியடைவதில்லை) என்ற பேருண்மையை, பகவான் வெளிப்படுத்துகிறார். இவ்வஷ்டாக்ஷரீ மந்திரத்தை (எட்டெழுத்து) முமுட்சுக்கள் எப்போதும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். அதைரியம் உற்சாகமின்மை, ஏற்படும் போதெல்லாம் அதனை மனனம் செய்தல் வேண்டும். ஆன்மீக அரங்கில் நுழைவதற்கு முன் சிலருக்குச் சில ஐயங்கள் ஏற்படும் - பக்தியினால் என்ன பயன்? அதனால் நற்கதி கிடைக்குமா கிடைக்காதா என்பது போன்ற ஐயங்கள் எழலாம். அத்தகைய ஐயங்களைப் போக்கும் வண்ணம் இச்சுலோகத்தில் தெளிவுறுத்தியுள்ளார். 'தெய்வ'த்தை அண்டியவன் எந்நாளும் அழிவதில்லை. அவன் நற்கதியையே அடைவான் என்று ஐயத்திற்கிடமின்றிச் சொல்லியுள்ளார். கல்பதருவினை அண்டியவர்க்கு வறுமை எவ்வாறு ஏற்படும்? கங்கா நதியையண்டியவர்க்குத் தாகம் எவ்வாறு ஏற்படும்?

'ப்ரதிஜானீஹி' - 'பிரதிக்ஞையிடு' - வலியுறுத்துக என்று அர்ஜுனனுக்கு ஆணையிடுவதன் மூலம் தன் பக்தர்கள் நாசமடைவதில்லை என்ற வாக்கியம் எத்துணை உண்மையானது என்பது தெள்ளத்தெளிவாகிறது. இது அசைக்க முடியாத உண்மை என பகவான் சொல்வதன் உண்மை நமக்கு நன்கு புலப்படுகின்றது. பக்தர்களின் நற்கதியைக் குறித்து பகவான் எத்துணை நம்பிக்கை யளிக்கிறார்!

எனவே பக்தர்கள் இறைவனின் இவ்வாக்கில் முழு நம்பிக்கை வைத்து இதயத்தில் எவ்வித ஐயமும் இன்றி சர்வேசுவரனை இடைவிடாது சேவித்துப் பயனடைவாராக!

**வினா :** இறைவனை அண்டினால் எத்தகையவனாக மாறுவான்?

**விடை :** தர்மாத்மாவாக மாறுவான்.

**வினா :** எத்துணை நாட்களில்?

**விடை :** மிக விரைவில்.

**வினா :** அத்தகைய ஆராதனையால் கிடைக்கும் பலன் என்ன?

**விடை :** பேரமைதி.

**வினா :** பேரமைதிகிட்டுவதற்கான உபாயம் எது?

**விடை :** இடைவிடாத பக்தியுடன் இறைவனைப் பூசிப்பதே.

**வினா :** இறைபக்தனுக்கு துர்க்கதி எப்போதேனும் நேருமா?

**விடை :** ஒருகாலும் இல்லை. இவ்வுண்மையை முரசறைந்து சத்தியம் செய்து சொல்ல முடியும்.

**முன்னுரை**

இறைவனை அண்டினால் மேலோர் கீழோரின்றி அனைவரும் தன்யமடைதல் கூடும் என்கிறார் -

*மாம்ஹி பார்த்த வ்யபாச்ரித்ய யேஅபி ஸ்யுஹ பாபயோனயஹ!*
*ஸ்த்ரியோ வைச்யாஸ்ததா சூத்ராஸ்தேஅபி யாந்திபராம்கதிம்!"* (32)

**சொற்பொருள்**

பார்த்த - அர்ஜுனா! யே - எவர், பாபயோனயஹஅபி பாவ ஜன்மம் (கீழான பிறவியராய்), ஸ்யுஹ் - ஆகின்ற, தே அபி - அவர்களும், ஸ்த்ரியஹ் - பெண்டிரும், வைஸ்யாஹ் - வைசியர்களும், ததா - அவ்வாறே, சூத்ராஹ் - சூத்திரர்களும், மாம் - என்னை, வ்யபாச்ரிதஹ - சார்ந்திருந்து, பரம்கதிம் - மேலான கதியினை (மோட்சத்தினை), யாந்திஹி - நிச்சயமாக அடைகின்றார்கள்.

**கருத்துரை**

*அர்ஜுனா! எவர் பாவப்பிறவியை உடையவராயினும், அவர்களும், பெண்டிரும், வைசியர், சூத்திரர் எவராயினும் என்னைச் சார்ந்திருந்தால் மேலான பதவியை (மோட்சத்தினை அடைகின்றார்கள்).*

**விளக்கம்**

*கீழான பிறவியையுடைவராயினும், அல்லது பெண்டிர், வைசியர், சூத்திரர்களானாலும், இறைவனைச் சார்ந்து தியானம் முதலானவற்றில் ஈடுபட்டிருப்பின் அவர்களும் மேலான கதியான மோட்சத்தினை அடைய இயலும் என்று இங்குக் கூறப்பட்டது. அத்தகையோரே பக்தியினால் மோட்சத்தினை அடைகையில் இனி ஏனையோரது விஷயம் எவ்வாறு வேறாக இருக்க முடியும் என்பது பொருள். இங்கு 'பாப்யோனயஹ' என்னும் பதத்தினை, 'ஸ்திவைசிய சூத்திரர்கள்' என்பதற்குக் கொண்டு கூட்டிப் பொருள் சொல்வது சரியல்ல. அதனை வேறாகக் கொண்டு, பாவப்பிறவியரும் மேலும் ஸ்திரீ வைசிய சூத்திரர்களும் இறைவனைச் சார்ந்திருந்தால் கடைத்தேறிவிடுவர் என்று பொருள் சொல்வதே சிறந்தது. ஸ்ரீதரன், சங்கராச்சாரியார், முதலானோர் அவ்வாறே பொருள் கொண்டுள்ளனர். ஏனெனில் பெண்டிரையும் பாவஜன்மங்கள் என்று கூறினால் அவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகளும் பாவப்பிறவியே ஆகிவிடும். அது தவறு. எனவே ஆண்களைப் போலப் பெண்களும் பிரம்மவித்தையை அறிவதற்கு அதிகாரமுடையவர்கள் என்பது இச்சுலோகத்தின் மூலம் தெளிவாக நிருபிக்கப்பட்டுள்ளது. மருந்தையுண்பதற்கு வியாதியுடைவர் அனைவரும் தகுந்தவரே. அவர்கள் ஆண், பெண், ஜாதி, மதம் என்ற பேதம் அங்கில்லை. அவ்வாறே பவரோகத்தினால் பீடிக்கப்பட்ட, அனைவரும் பிரம்மவித்தையினை அறியக்கூடும், எனவேதான் பகவான் சுலோகத்தின், வைசிய சூத்திரர்களைப் பற்றிக் கூறி ஜாதி பேதத்தினையும், பெண்டிரைக் கூறிப் பால் பேதத்தினையும், பாவாத்மாக்களைக் கூறி குண பேதத்தினையும் ஆன்மீக அரங்கில் அறவே ஒழிக்கக்கூடியது என்பதை தெளிவுறுத்தியுள்ளார். எத்தகையோராயினும் இறைவனைச் சார்ந்திருந்தால் போதும் என்பதைத் தெளிவுபடுத்தியுள்ளார். இத்தகைய பரந்த நோக்கினை வெளிப்படுத்துவதில் கீதைக்கு நிகர் வேறெதுவுமில்லை. தகுதிக்கு முதன்மையளித்து கீதை செல்கிறது.*

எவர் கண்ணாடியை நன்கு துடைக்கின்றனரோ அவர்களது முகம் அதில் தெளிவாகத் தெரியும். அதனை எவராயினும் செய்தல் கூடும். மேன்மையான குலத்தில் பிறந்திருப்பினும் கண்ணாடியைத் துடைக்காவிடில் அவனது முகம் சரிவரத் தெரியாது. அற்ப குலத்தில் பிறந்திப்பினும் கண்ணாடியைத் துடைத்திருந்தால் முகம் தெளிவாகத் தெரியும். இறைவனைச் சார்ந்திருந்து மேன்மையடைந்தோரில் கீழ்சாதியினரில் குகன் முதலானோர், பெண்டிரில் சபரி கோபிகள் முதலானோர், வைசியர்களில் ஸமாதி, (ஸமாதி என்னும் வைசிய பக்தனைக் குறித்து மார்க்கண்டேய புராணத் (81-96)தில்; பிரம்மவைவர்த்த புராணம் (62-68)லும் உள்ளது. முதலானோர், சூத்திரர்களில் சஞ்சயன் முதலானோரைக் கூறலாம்.

'பராம்கதிம்' - மேலான கதியாக தெய்வப் பதவியை வர்ணிப்பதால் உலகில் உள்ள எல்லாப் பதவிகளையும் விட, கதிகளையும் விட பரமாத்மா பதவி மிகவும் சிறந்தது என்பது நிச்சயமாகிறது. எனவே அழியக்கூடிய கணநேர உலகியல் பதவிகளுக்காக வாழ்நாளை வீணாக்காமல் பக்தி நெறியில் ஈடுபட்டு நிலையான பதவிக்கு அனைவரும் முயற்சி செய்தல் வேண்டும்.

**வினா :** தெய்வ பதவி எத்தகையது?

**விடை :** உலகியல் பதவிகளைவிட, மிகவும் உயர்ந்தது.

**வினா :** அதனை எவர் அடையக்கூடும்?

**விடை :** இறைவனைச் சார்ந்திருந்து தூய்மையான பக்தியுடன் தியானம் முதலானவற்றைச் செய்வதால் அடைய முடியும்.

**வினா :** இம்மோட்ச மார்க்கத்தில் சாதி, மத, இன வேறுபாடு உள்ளதா?

**விடை :** இல்லை. பாவப்பிறவி, மேலும் பெண், வைசியர், சூத்திரர் எவராயினும் இறைவனைச் சார்ந்திருந்தால் முக்தி அடையக்கூடும்.

*கிம் புனர்ப்ராஹ்மணாஹ் புண்யாபக்தா ராஜரிஷயஸ்ததா!*
*அநித்யமஸுகம் லோகமிமம் ப்ராப்ய பஜஸ்வ மாம்!!* (33)

**சொற்பொருள்**

புண்யாஹ் - புண்ணியவான் ப்ராஹ்மணாஹ் - பிராம்மணர்களும், ததா - அவ்வாறே, பக்தாஹ் - பக்தர்களுமாகிய, ராஜர்ஷயஹ்

- ராஜரிஷிகளும், இம் புனஹ் - (வந்த்வ்யம்) - இறைவனைச் சார்ந்தி ருப்பதன் மூலம் மேலான கதியையடைவர் என்று) மறுபடியும் சொல்வானேன்? அநித்யம் - நிலையானதல்லாததும், அசுகம் - சுக மற்றதும் ஆன, இமம் - இந்த உலகம் - உலகத்தினை (அல்லது சரீரத்தினை), ப்ராப்ய - அடைந்து, மாம் - என்னை, பஜஸ்வ - பூசிப்பாயாக!

**கருத்துரை**

இனி புண்யாத்மாக்கள் ஆன பிராம்மணர்களைப் பற்றியும், பக்தர்கள் ஆன ராஜரிஷிகளைப் பற்றியும் மறுபடியும் சொல்வா னேன்? (இறைவனைச் சார்ந்து அவர்களும் தவறாது முக்தியடைவர் என்பது பொருள்). எனவே நீ என்னைப் பூசிப்பாயாக!

**விளக்கம்**

பாவாத்மாக்களே இறைவனைச் சேவித்தால் முக்தியடைய இனி புண்ணியாத்மாக்களைப் பற்றியும், பக்தர்களைப் பற்றியும் சொல்வானேன்? என்கிறார். மேலும் பெண்பாலார், வைசியர், சூத் திரர்கள் கூட இறைவனைச் சார்ந்து மேலான கதியையடைகையில் பிராம்மணர்கள், க்ஷத்திரியர்கள் பற்றி மறுபடியும் சொல்வானேன் என்கிறார். எவராயினும் புண்யத்தினையும், பக்தியையும் சம்பாதித் துக் கொண்டால் மாத்திரமே நற்கதி அடைய முடியும் என்று, 'புண் யஹ் பக்தாஹ்' என்ற இரண்டு பதங்களின் மூலம் வெளிப்படுத்துகி றார். எனவே மோட்சத்தினை அடைய விரும்புவோர் அனைவரும் (1) புண்யம், (2) பக்தி என்ற இரண்டையும் தவறாது சேகரித்துக் கொள்ள வேண்டும்.

'ராஜர்ஷயஹ்' - ரிஷித்வம் (இந்திரியக் கட்டுப்பாட்டினை) அடைந்த அரசர்கள் என்று பொருள். இராஜ்ய பரிபாலனத்தால் பல அரசாங்க காரியங்களிலும், உலகவியல் விவகாரங்களிலும் ஈடுபட் டிருக்கும் அரசர்களே இந்திரியக் கட்டுப்பாடு, பக்தி முதலான நற்கு ணங்களைப் பெற்று உயர்ந்திருக்கையில், இனி சாதாரண குடும்ப விவகாரங்களில் ஈடுபட்டுள்ள தனிமனிதன் இந்திரியக் கட்டுப்பாட் டினை ஏன் பெறுதல் இயலாது. முயற்சி செய்தால் தவறாது பெற முடியும்.

'அநித்யமசுகம் லோகம்' - இவ்வுலகினை (இப்பிறவியினை, இச்சரீரத்தினை) பகவான் நிலையற்றதாகவும், சுகமற்றதாகவும் வர்

ணிக்கிறார். இவ்வாக்கியத்தினை அனைவரும் நன்கு நினைவில் இருத்திக் கொள்ளுதல் வேண்டும். வாழ்க்கை கணநேரமேயிருப் பது. சரீரமானது பிறக்கும் போதே அழிவதற்குத் தயாராகவேயிருக்கி றது. இச்சரீரம் ஏதோவொரு சமயத்தில் மண்ணோடு மண்ணாகிவி டும். அவ்வாறே இவ்வுலகமோ, தேகமோ, அவற்றின் காரணமான ஐம்பூதங்களில் காலக்கிரமத்தில் கலந்து விடும். எனவேதான் இவ்வு லகம் நிலையற்றது என வர்ணிக்கப்பட்டது. தேகமும் நிலையற்றதா கையால் அவற்றால் செய்யக்கூடிய, செய்ய வேண்டிய ஆன்மீக செயல்களை, மிக விரைவில் செய்துவிட வேண்டும். நாவாய் நன் குள்ள போதே அதன் உதவியால் கடலைத் தாண்டிவிட வேண்டும். உலகம், தேகம் இவற்றை நிலையென்றெண்ணி பெருமை கொள் வோருக்கு கண்களைத் திறப்பதற்காகவோ, என்னவோ பகவான் 'இவையனைத்தும் நிலையற்றவை' என்று எச்சரிக்கிறார். (இறப் பைப் பற்றியோ, அழிவைப் பற்றியோ நினைத்திருந்தால்தான் மனி தன் அதனின்றும் கடைத்தேறும் வழியைப் பற்றிச் சிந்திப்பான்), அதுமட்டுமன்றி இவ்வுலகம் 'அசுகம்' - சுகமற்றது என்று கூறுகிறார்.

'நாப்லே சுகமஸ்தி பூமா வை தத்சுகம்' என்ற உபநிஷத் வாக்கி யம் போதிப்பதைப் போல் அற்பமான காட்சிப் பொருள்களில் உண் மையான இன்பமில்லை. முடிவற்ற ஆன்மாவிலேயேயுள்ளது. அழி யக்கூடிய பொருள்களில் சுகம் எவ்வாறிருக்க முடியும்? சாதாரண மாக போக விஷயங்களுக்கு இருப்பிடமாக இவ்வுலகை வர்ணிக் கையில் 'இது மிகவும் ஆனந்தகரமானது' என்பர். ஆயின் பகவான் இதற்கு எதிர்மாறாகவே சொல்கிறார். இதனைச் சுகமற்றதாக வர் ணிக்கிறார். இவான்மாவொன்றே இன்பத்தின் இருப்பிடம். அநாத் மாவான காட்சிப் பொருள்கள் அனைத்தும் சுகமற்றவை.

இவ்வுலகினை இவ்வாறாக 'அநித்யம்' 'அசுகம்' என்று வர்ணித் தது சரி. ஆயின் அதனின்றும் தப்பித்துக் கொள்வதெங்கனம் என்ற கேள்வி சாதாரணமாக எழும். அதற்கான பதில் இங்கு, 'பஜஸ்வ மாம்' என்னைப் பூசிப்பாயாக என்கிறார். பவரோகத்திற்கு, துக்கத்தி னின்றும் விடுபடுவதற்கு இதுவே பரமஔஷதம் - இறைவனை பூசித்தலே, அவனை தியானிப்பதே. 'அநித்யத்தினின்றும் தப்ப நித்ய வஸ்துவையே நாட வேண்டும். அவ்வாறே துக்கத்தினின்றும் மீள்வதற்கு 'சுக' வஸ்துவையே கொள்ள வேண்டும். அத்தகைய நித்யவஸ்து பரமாத்மாவே, வெளிப்பார்வைக்கு அழகுடன் தோன் றும் இவ்வுலகின் போகங்களில் மோகமடைந்து விடாமல் சத்தியசி வசுந்தரமான பரமாத்மாவையே சார்ந்திருந்து மேன்மையுறுதல்

வேண்டும். இவ்வாறாக வியாதி, வியாதிக்கான மருந்து இரண்டி னையும் இச்சுலோகத்தில் ஸ்ரீ கிருஷ்ணர் விவாதித்துள்ளார்.

**வினா :** இறைவனை யடையத் தேவையானவை என்ன?

**விடை :** (1) புண்ணியம் (2) பக்தி

**வினா :** இவ்வுலகம் எத்தகையது?
**விடை :** (1) நிலையற்றது (2) சுகமற்றது

**வினா :** இந்தப் பிறப்பு இறப்புடன் கூடிய சம்சார பந்தத்தினின்றும் தப்பிப்பதற்கு வழியென்ன?

**விடை :** இறைவனைப் பூசிப்பதே.

**முன்னுரை**

இறைவனை அடையும் மார்க்கத்தைக் கூறுகிறார் -

*மன்மனா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு!*
*மாமேவைஷ்யஸி யுக்த்வைவ மாத்மானம் மத் பராயண!!* (34)

**சொற்பொருள்**

மன்மனா - என்னிடத்தேயே மனத்தை வைத்தவனாய், மத்பக் தாஹ் - என்னிடத்து பக்தியுடைவனாய், மத்யாஜீ - என்னையே பூசிப்பவனாய், பவ - ஆகுக, மாம் - என்னையே, நமஸ்குரு - வணங்கு, ஏவம் - இங்ஙனம், ஆத்மானம் - மனத்தினை, யுக்த்வா - என்னிடத்தேயே நிறுத்தி, மத் ப்ராயணஹ - என்னையே மேலான கதியாகக் கொண்டு, மாம்ஏவ - என்னையே, ஏஷ்யஸி - அடைவாய்.

**கருத்துரை**

என்னிடத்தேயே மனம் வைத்தவனாய், என் பக்தனாக, என் னைப் பூசிப்பவனாக ஆகுக. என்னையே வணங்கு. இங்ஙனம் சித் தத்தை என்னிடத்தேயே நிறுத்தி என்னையே மேலான கதியாக எண் ணியவனாய் இறுதியில் என்னையே அடைவாய்.

**விளக்கம்**

சாதனையில்லாவிடில் அடையக்கூடிய பொருள் கிடைப்ப தில்லை. இச்சுலோகத்தில் பிரம்மஅப்யாசம் நன்கு விவரிக்கப்பட்

டுள்ளது. பிரம்மத்தினை தெய்வத்தினை அடைவதற்கு முன் வழி இங்குச் சொல்லப்பட்டுள்ளது. 'தத்கதனமன்யோன்யம் தத்ப்ர பாஷணம்' என்றவாறு, இலட்சியமான இறைவனைக் குறித்தே எண்ணுதல், அவனைக் குறித்தே பேசுதல், அவனைக் குறித்தே தியானித்தல் ஆகிய கிரியைகளின் மூலம் மனிதன் அந்த பரமாத்மாவையே இறுதியில் அடைய முடியும். இத்தகைய பயிற்சியே இச்சுலோகத்தில் கூறப்பட்டுள்ளது. எப்போது இறைவனை, மனோ, வாக்கு, காயம் ஆகிய திரிகரணங்களை அவனிடத்தேயே ஐக்கியப்படுத்தி ததேக நிட்டையில் இருப்பவன் இலக்கினை எளிதாக அடைய முடியும். சாதாரணமாக மக்களின் மனம் காட்சிப் பொருள்களின் மீதே அதிகமாக ஈடுபாடு கொள்ளும். அதனை அதனின்றும் திருப்பி பரமாத்மாவிடத்தில் நிலைநிறுத்த வேண்டும். அதற்கோ பக்தி மிக மிக அவசியம். ஒரு பொருளின் மேல் அன்பு, நம்பிக்கை, பக்தி இவை ஏற்பட்டால்தான் மனம் அதன் மீது நிலைக்கும். எனவே இறைவனின் நிலையான தன்மை, இன்பம் இவற்றை நன்கறிந்து, அவன் மீது பக்தி, நம்பிக்கை இவற்றை வளர்த்துக் கொள்ள வேண்டும். அப்போது இயல்பாக மனம் பரமாத்மாவிடம் திரும்பும். அவனையே ஆதரித்துக் கொண்டு அவனையே வணங்கும்.

'யதாபவம் தத்பவதி' என்பதைப் போல் மனம் எதனைக் குறித்து எப்போதும் சிந்தனை செய்கிறதோ அதன்படியே மாறிப் போகும். எனவே மனம் இடைவிடாது இறைவனைக் குறித்து விசாரணை, தியானம் முதலானவற்றைச் செய்து வந்தால் அப்பரமாத்மாவினிடத்திலேயே லயித்து அதனைப் போன்றே மாறிவிடும். அதுவே ஜீவ பிரம்ம ஐக்கியம். 'மாமே வைஷ்யஸி' என்பதன் பொருள் இதுவே. இந்நிலையை மேற்சொன்ன பயிற்சிகளினால் தான் அடைய முடியும்.

இதனால் இறைவனை அடைவதற்கு இடைவிடாத இறைசிந்தனையைத் தவிர வேறெதுவும் வழியில்லை என்பதும் தெளிவாகிறது. எனவே துக்கத்தில் ஆழ்ந்து, நிலையற்ற இச்சம்சாரத்தினின்றும் தப்பித்து, நிரதிசயானந்த ரூபமான கைவல்யத்தை அடைவதற்கு ஜீவன் தன் மனத்தைக் காட்சிப் பொருள்களின் மீதினின்றும் திருப்பி, தெய்வத்தின் மீது ஆத்ம சுகத்தின் மீது ஈடுபடச் செய்தல் வேண்டும். அவ்வாறின்றி நிலையற்ற சுகபோகங்களில் ஈடுபட்டால் ஆத்மாவை அடைதல் என்ற வார்த்தைக்கே இடமில்லை. எனவே இறைவனை அடைய வேண்டுமானால் கீழ்வரும் வினாக்களை நீங்களே கேட்டு விசாரணை செய்து கொள்ள வேண்டும்

*1. உன் மனம் எதன் மீது லயிக்கிறது? காட்சிப் பொருள்களின் மீதா? பரமாத்வினிடத்தா?*

*2. நீ எதனிடத்து பக்தி கொண்டுள்ளாய்? காட்சிகளின் மீதா, இறைவனின் மீதா?*

*3. எதனை ஆராதிக்கின்றாய்? அழியக்கூடியவைகளையா? நிலையான தெய்வத்தினையா?*

*4. எதனை வணங்குகிறாய்? நாமரூபங்களை உடையவர்களையா? பரமாத்மாவினையா?*

*5. எதனிடத்தே புலன்களைச் செலுத்துகிறாய்? சப்தாதி விஷயங்களின் மீதா? இதயத்தினுள் இருக்கும் ஆத்மாவினிடத்தா? - என்று வினவி நிச்சயித்துக் கொள்ள வேண்டும். காட்சிப் பொருள்களின் மீது மனம் செல்கிறது என்றால் அதனைத் திருப்பி ஸ்ரீ கிருஷ்ணர் இச்சுலோகத்தில் சொல்லிய வண்ணம் தெய்வத்தின் மீது நிலைக்கச் செய்தல் வேண்டும். அதுவே மோட்சத்திற்கான வழி.*

**வினா :** ஜீவன் இறைவனை எங்ஙனம் அடைதல் கூடும்? இறைவனை அடைவதற்கு எவ்வச் சாதனைகளை மேற்கொள்ள வேண்டும்?

**விடை :** *(1)* மனத்தினை பரமாத்மாவிடத்தே லயிக்கச் செய்தல் வேண்டும். *(2)* அவனிடத்தே பக்தி கொள்ளுதல் வேண்டும். *(3)* அவனையே ஆராதித்தல் வேண்டும். *(4)* அவனையே வணங்குதல் வேண்டும். இங்ஙனம் எப்போதும் மாறாது இறைவனையே சிந்தித்த வண்ணம் இருத்தல் வேண்டும்.

ஓம்

*இது உபநிஷத்தோடு கூடிய பிரம்ம வித்தை, யோக சாஸ்திரம் இவற்றுடன் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன சம்வாதமாக வந்துள்ள ஸ்ரீமத் பகவத்கீதையின் ராஜவித்யா ராஜகுஹ்ய யோகமெனும் ஒன்பதாவது அத்தியாயம்.*

**ஓம் தத்ஸத்**

